ஸ்ரீ:

# ஸ்ரீபாகவதம்.



ப்ரதம த்விதீய ஸ்கந்தங்கள்

## தமிழ் வசனம்.



இவை

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசார்யரால்

இயற்றப்பெற்று



சென்னை

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு,

வெளியிடப்பட்டன.

1927

ஸ்ரீ:

# ஸ்ரீ பாகவதம்

## விஷயங்கள்.

---

### ப்ரதம ஸ்கந்தம்.

---

அத். பேஜ்.

## த்விதீய ஸ்கந்தம்.

# படங்களின் விவரம்.

---



ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

ஸ்ரீ வேதவ்யாஸாய நம:

ஸ்ரீ சுகமஹாமுனயே நம:

# ஸ்ரீபாகவத மாஹாத்ம்யம்

முன்பு ஒரு காலத்தில் சௌனகமாமுனிவர் நைமி சாரண்யத்தில் ஸூத பௌராணிகரைப் பார்த்து நமஸ்கரித்து இங்ஙனம் வினவினர்:—'வாரீர் மஹானுபாவரே! செவிக்கினிய கதைகளில் சிறந்தது எதுவோ அதை எனக்குச் சொல்வீராக. அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞான பக்தி வைராக்யங்களை வளர்த்துக்கொள்வதற்கு வழி யாது? இந்தக் கலிகாலத்தில் ஸமஸ்த ஜீவராசிகளும் ராக்ஷஸ ப்ரக்ருதிகளாய்க் கெட்டுத் திரிகின்றனர்கள். இந்த ஜீவராசிகளைத் திருத்துவதற்கு உபாயம் யாது? எது எல்லா நன்மைகளிலும் சிறந்த நன்மையோ, எது பரிசுத்தமான எல்லாவற்றிலும் மிகவும் பரிசுத்தமோ, ஸ்ரீ க்ருஷ்ணனைப் பெறுதற்கு எது மேலான உபாயமோ, அதை எனக்கு மொழிவீராக. ஆசார்யன் மனக்களிப்புறுவானாயின், மஹா யோகிகளுக்கும் கிடைக்கமுடியாத மோக்ஷத்தையும் கொடுப்பானல்லவா? ஆகையால் நீர் என்மேல் அருள் புரிந்து எனக்கு இதை மொழியவேண்டும்' என்றனர்.

ஸூதர் சொல்லுகிறார்:—வாரீர் முனிஶ்ரேஷ்டரே! இந்தக் கலியுகத்தில் ஸ்ரீ சுகமுனிவர், ப்ராணிகளின்

ஸம்ஸார தாபங்களெல்லாம் தீரும்படி ஸ்ரீ பாகவத மஹா புராணத்தை மொழிந்தார். ஸம்ஸார தாபங்களால் கலங்கின மனத்தைத் தெளிவிப்பதற்கு இந்த ஸ்ரீ பாகவதத்தைக் காட்டிலும் மற்றொன்றும் இல்லை. ஸமஸ்த ஸித்தாந்த ரஹஸ்யங்களும் இந்தப் புராணத்தில் அடங்கியிருக்கின்றன. இது ஸம்ஸார பயத்தைப் போக்க வல்லது; பக்தியை ப்ரவாஹம்போல் கரைபுரண்டு வளரச் செய்யும். இந்தப் பாகவதத்தைக் கேட்கில், ஸ்ரீக்ருஷ்ணன் ஸந்தோஷம் அடைந்து அவரவருடைய விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பான். அதை நான் உமக்குச் சொல்லுகிறேன், மனவூக்கத்துடன் கேட்பீராக. ஜன்மாந்தர ஸுக்ருத முடையவனுக்கே இந்த ஸ்ரீ பாகவதத்தைக் கேட்க நேருமன்றி மற்றவனுக்கு நேராது. இந்த ஸ்ரீ பாகவத கதையை ஸ்ரீ சுகமுனிவர் பரீக்ஷித்து மஹாராஜனுக்குச் சொல்லத் தொடங்கும் பொழுது தேவதைகள் அம்ருத கும்பத்தை எடுத்துக்கொண்டு அவ்விடம் வந்து ஸ்ரீ சுகமுனிவரை நமஸ்கரித்து 'மாமுனியே! நாங்கள் தேவாம்ருதம் கொண்டு வந்திருக்கின்றோம். நீர் இதை வாங்கிக் கொண்டு எங்களுக்கு ஸ்ரீபாகவத கதையாகிற அம்ருதத்தைக் கொடுப்பீராக. இங்ஙனம் நாமிருவரும் மாற்றிக்கொள்வோம். மன்னவனுக்குச் சொல்லும் கதையை நாங்களும் கேட்டு உஜ்ஜீவிக்கின்றோம்' என்றார்கள். அதைக் கேட்டுச் சுகமுனிவர் தனக்குள் 'கதை எங்கே? அம்ருதம் எங்கே? பாலமணிக்கும் சிறந்த ரத்னத்திற்கும் எவ்வளவு பேதம் உண்டோ, பாகவத கதைக்கும் அம்ருதத்திற்கும் அவ்வளவு பேதம் உண்டே. அம்ருதத்திற்காக ஸ்ரீபாகவத கதையைச் சொல்லலாகுமோ, என்று சிந்தித்துத் தேவதைகளைப் பார்த்துச் சிரித்து அவர்கள் பகவத்பக்தரல்லரென்று தெரிந்துகொண்டு

உங்களுக்கு ஸ்ரீபாகவதகதையைச் சொல்லமுடியாது, போங்கள்' என்று மொழிந்துவிட்டார். ஆகையால் இந்த ஸ்ரீ பாகவத கதை தேவதைகளுக்கும் கிடைப்ப தரிது. இந்த ஸ்ரீ பாகவத கதை கேட்டதனால் பரீக்ஷித்து மன்னவன் மோக்ஷம் அடைந்தமை கண்டு, முன்பு ப்ரஹ்மதேவன் ஆச்சர்யப்பட்டு ஸத்யலோகத்தில் தராசைக்கட்டி அதில் மோக்ஷ உபாயங்களை யெல்லாம் ஒரு பக்கத்திலும் ஸ்ரீ பாகவதத்தை ஒரு பக்கத்திலும் வைத்து நிறுத்துப் பார்த்தான். அப்பொழுது மற்ற மோக்ஷ உபாயங்களெல்லாம் அஸாரங்களாகையால் மிகவும் லேசாயிருந்தன. இந்த ஸ்ரீ பாகவதம் ஸாரமாகையால் எல்லாவற்றிலும் மிகுந்த பளுவுடையதாயிருந்தது. அக்காலம் அங்குக் கூட்டங்கூட்டமாயிருந்த ரிஷிகளெல்லோரும் மிகுதியும் வியப்படைந்தார்கள். ஸ்ரீ பகவானே பூமியில் ஸ்ரீ பாகவத சாஸ்த்ரமாக அவதரித்தானென்று நினைத்தார்கள். இந்த ஸ்ரீ பாகவதம், படிக்கினும் படிக்கிற இடத்திலிருந்து கேட்கினும் உடனே மோக்ஷலோகமாகிய ஸ்ரீவைகுண்டலோகத்தைக் கொடுப்பது. வாரீர் சௌனகரே! இந்த ஸ்ரீ பாகவத கதையை ஏழு நாட்களில் கேட்பார்களாயின், எப்படிப்பட்டவர்க்கும் மோக்ஷம் கைகூடும். இவ்விஷயத்தை முன்பு பரம தயாளுக்களாகிய ஸனகாதிகள் நாரதருக்கு மொழிந்தார்கள். அதற்கு முன்னமே நாரதர் நான்முகனிடத்தில் இந்தப் புண்ய கதையைக் கேட்டிருப்பினும், இந்த [1] ஸப்தாஹ ப்ரவணமென்னும் விதியை மாத்ரம் அவருக்கு ஸனகாதிகள் உபதேசித்தார்கள்.

சௌனகர் சொல்லுகிறார்:— வாரீர் ஸூதரே! நாரதர் உலகத்தில் நடக்கும் யுத்தங்களைப் பார்ப்பதில்

1. ஏழு நாட்களில் கேட்கை.

ப்ரீதி யுடையவராகி ஓரிடத்திலும் நிலே நிற்காமல் ஆங் காங்கு ஓடித் திரியுந் தன்மையர். அப்படிப்பட்ட லோக ஸஞ்சாரியான நாரதருக்கு இந்த ஸப்தாஹச்ரவண விதியின்படி ஸ்ரீ பாகவத கதையைக் கேட்கும்படியான ப்ரீதி எப்படி உண்டாயிற்று? ஸனகாதிகளோடு அவர்க்கு எப்படி ஸமாகமம் நேரிட்டது?

ஸ்ரீ ஸூதர் சொல்லுகிருர்:—இவ்விஷயத்தில் உமக்கு ஓர் இதிஹாஸம் சொல்லுகிறேன் கேளும். ஸ்ரீ சுகர், சிஷ்யனுகிய என்னிடத்தில் ப்ரீதி கொண்டு ஏகாந்தத்தில் எனக்கு இந்த வ்ருத்தாந்தத்தை மொழிந்தார். முன்பு ஒரு காலத்தில் ஸனகாதி மஹர்ஷிகள் ஸாதுக்களின் ஸஹவாஸத்திற்காக விசாலா நகரத்திற்கு வந்தார்கள். அங்கு நாரதரைக் கண்டு, அவர் வருத்தமுற்று முகம் வாடி நிற்பதை அறிந்து இங்ஙனம் வினவினுர்கள். 'வாராய் நாரதனே! நீ ஏன் முகம் வாடப்பெற்றிருக்கின்றனே? நீ சிந்தையில் ஆழ்ந்திருக்கின்றனே யேன்? மிகவிரைவுடன் எங்குப் போகின்றனே? எங்கிருந்து வருகின்றனே? நீ பணத்தை இழந்தவன்போல் மனவருத்தமுற்றிருக்கின்றனே. ஸம்ஸார ஸங்கங்களை யெல்லாம் துறந்த உனக்கு இந்த அவஸ்தை எங்ஙனம் நேரிட்டது? இது உனக்குத் தகுந்ததன்றே? இதற்கு என்ன காரணம்?' என்றுர்கள்.

நாரதர் சொல்லுகிருர்:—நான் பூமி தர்மத்திற்கு உரிய இடமாகையால் மற்ற லோகங்களெல்லாவற்றிலும் மேன்மை யுடையதென்று இந்தப் பூலோகத்திற்கு வந்தேன். புஷ்கரம் ப்ரயாகம் காசி கோதாவரி ஹரிக்ஷேத்ரம் குருக்ஷேத்ரம் ஸ்ரீரங்கம் ஸேது முதலிய புண்யதீர்த்தங்களில் இங்குமங்கும் திரிந்துகொண்டு எவ்விடத்திலும் மனத்திற்கு ஸந்தோஷம் உண்டாகப் பெற்றிலேன். இப்பொழுது இந்தப் பூலோகம் அதர்

டத்திற்கு நண்பனுகிய கலியினுல் மிகவும் பீடிக்கப்பட் டிருக்கின்றது. ஸத்யம் தவம் ஆசாரம் தயை தானம் ஆகிய இவற்றில் எதுவாயினும் சிறிதும் புலப்படவில்லே. ஜனங்களெல்லோரும் வயிற்றை நிறைப்பதே முக்யமாகக் கொண்டு பொய் பேசுவதே தன்மையா யிருக்கின்ருர் கள். மற்றும் மந்தமதிகளும் மந்தபாக்யர்களுமாகித் தர்மத்தில் சிறிதும் கண் வைக்காமல் பாஷண்டராகவே யிருக்கின்ருர்கள். வீடுகள் தோறும் பெண்டிர்களுக்கே ப்ரபுத்வம் நடக்கின்றது. மைத்துனன் புத்தி சொல்லு கிறவனு யிருக்கின்ருன். மைத்துனன் சொல்லுவதே ஹிதமாகக்கொண்டு ஜனங்கள் நடக்கின்ருர்கள். தந்தை தாய் தம்பி தமையன் இவர்களது வார்த்தை யைக் கேட்பவரே இல்லே. ஜனங்கள் பணத்தாசையால் கன்னிகைகளே விக்ரயம் செய்கின்ருர்கள். தம்பதிகள் ஒருவரையொருவர் வஞ்சிக்கின்ருர்கள். புண்யாப்ர மங்களும் புண்ய தீர்த்தங்களும் புண்ய நதிகளும் துருஷ் கர்களால் கைக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கோவில் களெல்லாம் துஷ்டர்களால் ஆக்ரமணஞ் செய்யப்பெற் றுப் பெரும்பாலும் பாழடைந்தன. ஒரு யோகியாவது ஒரு ஸித்தனுவது ஒரு ஜ்ஞானியாவது ஒரு நற்கார்யம் செய்பவனுவது புலப்படவில்லே. நன்னடத்தைகளெல்லாம் கலியாகிற காட்டுத் தீயால் பஸ்மம் செய்யப் பெற்றன. தேசங்களெல்லாம் சோற்றை விற்று ஜீவிப்பனவாயிருக் கின்றன. ப்ராஹ்மணர்கள் வேதத்தை விற்பனே செய்து ஜீவிக்கின்ருர்கள். மடந்தையர் வ்யபிசாரத்தினுல் ஜீவிக்கின்ருர்கள். இந்தக் கலியில் இப்படிப்பட்ட விப ரீதங்களெல்லாம் உண்டாகின்றன. இங்ஙனம் கலியின் தோஷங்களேப் பார்த்துக்கொண்டே பூமிமுழுவதும் திரிபவனுகி ஸ்ரீக்ருஷ்ண லீலேகள் நடந்த யமுனநதியின்

வருத்தமுற்றிருக்கின்றேன். நான் யௌவனப் பருவமுடையவளாயிருப்பதென்? இந்தப் புதல்வர்கள் மாத்ரம் கிழத்தன்மை அடைந்திருப்பதென்? நாங்கள் மூவரும் ஒத்துத் திரியுந் தன்மையர்களாயிருக்க, எங்களுக்கு இப்படி விபரீதம் வந்ததேன்? உலகத்தில் தாய் கிழத்தன்மை அடைவதும் புதல்வர் யௌவனப் பருவமுடையராயிருப்பதும் பொருந்தும். தாய் யௌவனத்திலிருப்பதும் புதல்வர் கிழத்தன்மையிலிருப்பதும் எங்கேனும் பொருந்துமா? இதனால் நான் வியப்புற்றவளாகி என்னைப்பற்றி வருந்துகிறேன். யோகீஸ்வரனே! மிகுந்த மதியுடையவனே! இதற்குக் காரணம் எதுவாயிருக்கும்? சொல்லுவாயாக.

நாரதர் சொல்லுகிறார்:—பாபமற்றவளே! நீ சொன்னதெல்லாம் ஸத்யமே. நான் என்ஜ்ஞான சக்ஷுஸ்ஸினால் தெரிந்து கொண்டேன். ஆயினும் நீ வருந்தவேண்டாம். உனக்கு ஸ்ரீமஹாவிஷ்ணு க்ஷேமம் செய்வான்.

ஸூதர் சொல்லுகிறார்:—அங்ஙனம் அப்பெண்மணிக்கு ஸமாதானம் சொல்லி, இதற்குக் காரணம் எதுவாயிருக்குமென்று தன்மனத்தில் ஆலோசித்து க்ஷணத்தில் தெரிந்துகொண்டு அம்முனிவர் பக்தியைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—பெண்மணி! சொல்லுகிறேன். ஊக்கத்துடன் கேட்பாயாக. இப்பொழுது கலியுகம் நடக்கின்றது. அது மிகவும் பயங்கரமாயிருப்பது. அந்தக் கலியினால் ஸதாசாரமும் யோகமார்க்கமும் தவங்களும் பாழாயின. இப்பொழுது ஜனங்கள் ஆஸுரப்ரக்ருதிகளாகிக் கபடமும் துஷ்டச்செயல்களும் செய்கையே தன்மையராயிருக்கின்றார்கள். இந்தக் கலியில் ஸாதுக்கள் வருந்துகின்றார்கள். துஷ்டர்கள் ஸந்தோஷிக்கிறார்கள். பூமி துஷ்டர்களால் வரவரப் பெரும்

பாரமுடையதாயிற்று. மங்களமென்பது சிறிதும் புலப்படுகிறதில்லை. இப்பொழுது உன்னையாவது உன்புதல்வர்களையாவது எவனும் கண்ணெடுத்துப் பார்ப்பவனுமில்லை. ஜனங்கள் ராகாதி தோஷங்களால் கண்தெரியாமல் உன்னை உபேக்ஷிக்கின்றார்கள். ஆகையால் நீ சரீரம் சிதிலமாயிருந்தனை. பிறகு ப்ருந்தாவனம்போய்ச் சேர்ந்தபின்பு மீளவும் புதியவள்போல் யௌவனப்பருவம் நிறைந்தவளாயினை. ப்ருந்தாவனம் புண்யமயமான தேசம். ஆகையால் அவ்விடத்தில் பக்தி நர்த்தனஞ் செய்கின்றது. இந்தப் புதல்வர்களும் அவ்விடம்போய்ச் சேருவார்களாயின் கிழத்தனம் நீங்கி ஸுகப்படுவார்கள். இவர்களுக்கு அங்குப் போகும் சக்தியில்லாமையாலும் கொண்டுபோய்ச் சேர்ப்பவரில்லாமையாலும் இங்கு ஆதரிப்பவரில்லாமையாலும் இவர்கள் கிழத்தனம் மாறாதிருக்கின்றார்கள்.

ஸ்ரீபக்தி சொல்லுகிறாள்:—வாராய் முனிவனே! பரீக்ஷித்து மன்னவன் கலியைச் சிக்ஷிக்க முயன்று, அபரிசுத்தமான அந்தக் கலியைக் கொல்லாமல் ஏன் ஸ்தாபித்து விட்டான்? கலி வந்தபின்பு ஸமஸ்த வஸ்துக்களின் ஸாரமும் எங்கோ போய்விட்டதே. அழிக்கப் பார்க்கிலும் அழியாதிருந்த வஸ்துக்களின் மேன்மையெல்லாம் இந்தப் பாபிஷ்டமான கலியுகம் வந்தபின்பு பாழாய்விட்டதே. தயாளுவான பகவானும் இந்த அதர்மத்தை ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறான்? எனக்கு இது பெரிய ஸந்தேஹமாயிருக்கின்றது. இதைப் போக்குவாயாக. உன் வார்த்தையைக் கேட்கக் கேட்க எனக்கு ஸுகமாயிருக்கின்றது.

நாரதர் சொல்லுகிறார்:—பெண்ணே! நீ கேட்டதற்குச் சொல்லுகிறேன், கேள். உன் வ்யஸனமெல்லாம் தீரும். ஸ்ரீக்ருஷ்ணன் பூமியைத் துறந்து தன்னுடைய

லோகத்திற்குப் போனதினம் தொடங்கி ஸமஸ்த தர்ம ஸாதனங்களையும் அழிக்குந்தன்மையனை கலி இவ்விடம் வந்தான். பரீக்ஷித்து மன்னவன் திக்விஜயஞ் செய்யும் போது அவனுக்கு அவன் புலப்பட்டுத் தீனன்போல் அம் மன்னவனைச் சரணம் அடைந்தான். அப்பொழுது அம் மன்னவனும் தனக்குள் 'நான் இந்தக்கலியைக் கொல்ல லாகாது. மற்ற யுகங்களில் தவம் யோகம் ஸமாதி இவைகளாலும் கிடைக்க அரிதான பலன் இந்தக் கலி யுகத்தில் பகவானுடைய நாமத்தைச் சொன்ன மாத்ரத் தில் அனைவர்க்கும் கிடைக்கின்றது. பலதோஷங்க ளுக்கு இடமாயிருப்பினும் கலியிடத்தில் இது பெரிய குணம். ஆகையால் இந்தக்கலியை நாம் வதிக்கலா காது' என்று ஆலோசித்துக்கொண்டு கலிகாலத்தி லுள்ள மனிதர்களின் க்ஷேமத்திற்காகவே அம்மன்ன வன் கலியைக் கொல்லாமல் விட்டு விட்டான். பிறகு கலியின் ப்ரவேசம் உண்டாகி அனைவரும் பாபகர்மங் களை ஆசரிக்க, இப்பொழுது எல்லா இடங்களிலும் வஸ் துக்களின் ஸாரம் போய்விட்டது. வஸ்துக்களெல்லாம் தோலுரித்த விதைகள் போல் பயன்படாதவையாயின. ப்ராஹ்மணர்கள் அற்பத்ரவயத்திற்கு ஆசைப்பட்டு வீடு கள்தோறும் நுழைந்து ஒவ்வொரு ஜனத்தையும் குறித் துப் பகவானுடைய கதையைச் சொல்லத் தொடங்கினார் கள். ஆதலால் பகவத் கதையின் மேன்மை பரமாய் விட்டது. ஜனங்களெல்லோரும் நாஸ்திகராகி மிகவும் பயங்கரமான பாபகர்மங்களைச் செய்துகொண்டு நாம் ரௌரவாதிநகரங்களே வடிவங்கொண்டு வந்தாற்போல் பயங்கரமானார்கள். இப்பொழுது புண்யதீர்த்தங்களில் அ வர்களே வாஸஞ்செய்கின்றார்களாகையால் புண்யதீர்த் தங்களின்மஹிமையும் ஒழிந்தது. காமம் கோபம் லோபம் இவைகளால் மனக்கலக்க முற்றவர்களும் அப்படியே

தவஞ்செய்யத் தொடங்குகிறார்களாகையால் தவத்தின் மஹிமையும் போயிற்று. மனத்தை அடக்கிவெல்லாமையாலும் பணத்தாசையாலும் பாஷண்ட ஸஹவாஸத்தினாலும் சாஸ்த்ரங்களை அப்யஸிக்காமையாலும் த்யான யோகத்தின் பலனும் போயிற்று. பண்டிதர்கள் கடாக்கள்போல் பார்யையோடு படுத்து க்ரீடிப்பவராகிப் பிள்ளைகளைப் பெறுவதில் வல்லராயிருக்கின்றார்களேயன்றி மோக்ஷத்தை ஸாதிப்பதில் வல்லராயில்லை. அதில் முயற்சி கொள்ளாமலே கேவலம் பசுக்கள்போல் ஆஹார நித்ரா பய மைதுனங்களே பொழுது போக்காயிருக்கின்றார்கள். வைஷ்ணவத்வமென்பது எங்கிருக்கின்றது? போயிற்று. வைஷ்ணவ ஸம்ப்ரதாயமே பாழாய்விட்டது. இடங்கள்தோறும் இங்ஙனமே வஸ்துக்களின் ஸாரம் பாழாய்விட்டது. இது கலியுகத்தின் தர்மம். இதற்காக யாரை நாம் தூஷிக்கலாகும்? ஆனதுபற்றியே ஈஶ்வரன் அருகிலிருந்தும் இதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருக்கின்றான்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் நாரதர் மொழிந்த வசனத்தைக் கேட்டு பக்தி மிகவும் வியப்புற்று மீளவும் நாரதரைப் பார்த்து மொழிந்தனள். அதையும் சொல்லுகிறேன், கேள்.

பக்தி சொல்லுகிறாள்:—வாராய் தேவரிஷியே! நீ பெரும்பாக்யமுடையவன். நீ என் பாக்யத்தினால் எனக்கு நேர்பட்டனை. ஸாதுக்களின் தர்சனம் ஸமஸ்த ஸித்திகளையும் கொடுக்கும். ப்ரஹ்லாதன் உன் வார்த்தையைக் கேட்டு மாயையை வென்றான், த்ருவன் உனது அனுக்ரஹத்தினால் ஶாஶ்வதபதம் பெற்றான். நீ ப்ரஹ்மாவின் புதல்வனல்லவா. நீ ஸமஸ்த க்ஷேமங்களுக்கும் இருப்பிடம். ஆகையால் உனக்கு நமஸ்காரம்' என்று பக்தி நாரதரை நமஸ்கரித்தாள்.

நாரதர் மீளவும் பக்தியைப் பார்த்துச் சொல்லுகிறார்:—பெண்ணே! நீ ஏன் வீணுக்கு வருந்துகின்றனை? ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை நினைப்பாயாக? உன் துக்கம் பறந்துபோம். முன்பு கௌரவர்களால் நேர்ந்த ஆபத்தினின்று இந்த ஸ்ரீக்ருஷ்ணன் த்ரௌபதியைப் பாதுகாத்தானல்லவா. பக்தி! நீ அவனுக்கு மிகவும் ப்ரியமானவள். எப்பொழுதும் உன்னை அவன் ப்ராணன்களைக்காட்டிலும் மேலாகப் பாவித்துக் கொண்டிருக்கின்றான். நீ அழைப்பாயாயின், மிக நீசர்களுடைய வீடுகளுக்கும் அவன் வருவான். மற்ற யுகங்களில் ஜ்ஞான வைராக்யங்கள் இருந்தால் தான் மோக்ஷம் உண்டாகும். கலியுகத்தில் அந்த நிர்ப்பந்தமில்லை. பக்தி ஒன்றிருக்குமாயின், அதுவே பரப்ரஹ்ம ஸாயுஜ்யத்தை (மோக்ஷத்தை) விளைத்துவிடும். இங்ஙனம் நிச்சயித்தே ஸச்சிதாநந்த ஸ்வரூபனாகிய அந்தப் பரமபுருஷன் உன்னை இவ்வுலகத்தில் படைத்தான். ஒருகால் நீ கை கூப்பிக்கொண்டு 'நான் செய்யவேண்டிய கார்யம் என்' என்று கேட்டதற்கு அம்மஹானுபாவன் 'என் பக்தர்களைப் போஷித்து ஈடேற்றுவாய்' என்று உனக்கு ஆஜ்ஞாபித்தான். நீயும் அப்படியே ஆகட்டுமென்று அதை அங்கீகரித்தனை. அதற்கு மேல் பகவான் உன்னிடத்தில் மிகவும் அனுக்ரஹம் கொண்டு அந்தக் கார்யம் நிறைவேறும் பொருட்டு உனக்கு முக்தியைத் தாஸியாகவும் (வேலைக்காரியாகவும்) இந்த ஜ்ஞான வைராக்யங்களைப் புதல்வர்களாகவும் ஏற்படுத்தினான். வாராய் மங்களஸ்வபாவமுடையவளே! நீ உன்னை வைகுண்டலோகத்தில் நிஜஸ்வரூபத்துடன் போஷித்துக் கொண்டிருக்கின்றனை. பூமியில் பக்தியைப் பரவச்செய்யும் பொருட்டு, சாயாரூபத்துடன் முக்தியோடும் ஜ்ஞான வைராக்யங்களோடும் இந்தப்பூலோகத்திற்கு வந்தனை. நீ க்ருத த்ரேதா

த்வாபரயுகங்களில் ஸமஸ்த பூமண்டலத்திலும் நிறைந்து மஹாநந்தத்துடன் வாழ்ந்திருந்தனே. கலியுகம் வந்தவுடனே பாஷண்டர்கள் தலையெடுத்துப் பீடிக்கையில், உன் தாஸியாகிய முக்தி அந்தப் பாஷண்டர்களாகிற வ்யாதியால் வருந்தி க்ஷீணகதியை அடைந்தனள். அது கண்டு நீ வைகுண்டலோகம் போகும்படி ஆஜ்ஞாபிக்கையில், அவளும் உனது ஆஜ்ஞையின்படி வைகுண்டலோகம் போய்ச் சேர்ந்தாள். அந்த முக்தி நீ நினைத்த க்ஷணத்தில் வருவதும் உடனே புறப்பட்டுப்போவதுமாயிருக்கின்றாள். ஜ்ஞான வைராக்யங்களென்கிற இவ் விருவரையும் உனக்குப் புத்ரர்களாகக் கொண்டு உன் பக்கத்திலேயே வைத்துப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றனை. கலியுகத்தில் இவர்களை ஆதரியாதிருப்பது மாத்ரமேயன்றி அனைவரும் உபேக்ஷித்து வருகையால் இந்த உன் புதல்வர்கள் ஜீர்ணதசையை அடைந்து உத்ஸாஹமற்றிருக்கின்றனர். ஆயினும் நீ இதற்காகச் சிந்திக்கவேண்டாம். நான் இதற்குத் தகுந்த உபாயம் சிந்தித்துச் சொல்லுகிறேன். வாராய் அழகிய முகமுடையவளே! கலியுகத்திற்கு ஈடானயுகம் மற்றொன்றும் இல்லை. அத்தகைய கலியுகத்தில் உன்னை நான் ஒவ்வொரு வீட்டிலும் வீடுகளிலுள்ள ஒவ்வொரு ப்ராணிகளிடத்திலும் ஸ்தாபிதஞ் செய்கிறேன், காண்பாய். இதர தர்மங்களை யெல்லாம் அழித்து மஹோத்ஸவங்களை முன்வரச்செய்து உன்னை உலகமெங்கும் நிரம்பச்செய்யேனாயின், அப்பொழுது ஹரிதாஸனல்லேன். பெண்மணீ! என் வல்லமையைக் காண்பாய். உன்னை ஆதரிப்பவரோடு ஸம்பந்தமுடையவர் எவரெவர் உளரோ, அவர்கள் எப்படிப்பட்ட பாபிஷ்டராயினும் பயமின்றி ஸ்ரீ க்ருஷ்ணனுடைய வாஸஸ்தானமாகிய பரமபதம் போய்ச் சேருவார்கள். ப்ரீதி ஸ்வ

ரூபையான பக்தி எவருடைய மனத்தில் எப்பொழுதும் மாருதிருக்குமோ, நிர்மலசரீரர்களான அவர்கள் ஸ்வப்னத்திலுங்கூட யமனைப் பார்க்கமாட்டார்கள். பூதம் ப்ரேதம் பிசாசம் ராக்ஷஸன் அஸுரன் இவர் முதலிய எவரேனும் பகவானிடத்தில் பக்தி நிறைந்த மனமுடையோர்களைத் தீண்டவல்லராகமாட்டார்கள். ஸ்ரீ பகவானைத் தவங்களாலாவது வேதாத்யயனங்களாலாவது ஜ்ஞானத்தினுலாவது கர்மத்தினுலாவது ஸாதிக்க முடியாது. பக்தியால் மாத்ரமே ஸாதிக்க முடியும். இவ்விஷயத்தில் கோபஸ்த்ரீகளை நிதர்சனமாகக் காணலாம். மற்ற யுகங்களில் மனுஷ்யர்கள் அனேகமாயிரம் ஜன்மங்களெடுத்ததற் பின்னே, அவர்க்கு பக்தியிடத்தில் ப்ரீதி உண்டாகும். கலிகாலத்தில் அந்த வருத்தம் இல்லை. முதலே பிடித்தே பக்தி உண்டாகும். கலியில் பக்தியே முக்யம். பக்தி மாத்ரத்தினுல் ஸ்ரீக்ருஷ்ணன் எதிரே வந்து நிற்பான். பக்திக்கு த்ரோஹஞ் செய்பவர் மூவுலகங்களிலும் துக்கம் அடைவார்களேயன்றி ஸுகம் பெறமாட்டார்கள். முன்பு துர்வாஸமுனிவர் பக்தியை நிந்தித்தமையால் துக்கம் அடைந்தார். வ்ரதங்களும் புண்யதீர்த்த ஸ்னானங்களும் அஷ்டாங்க யோகங்களும் ஜ்ஞானயோகமும் மற்றுமுள்ள நல்வ்ருத்தாந்தங்களும் வேண்டியதில்லை. இக்காலத்தில் பக்தியொன்றே மோக்ஷங்கொடுக்கும்.

ஸூதர் சொல்லுகிருர்:—இங்ஙனம் நாரதர் நிர்ணயித்துச் சொன்ன வசனத்தைக் கேட்டு அந்த பக்தியானவள் ஸந்தோஷத்தினுல் ஸமஸ்த அங்கங்களும் புஷ்டி யடையப்பெற்று அம்முனிவரைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்.

பக்தி சொல்லுகிருள்:—வாராய் நாரதனே! நீ மிகுந்த பாக்யமுடையவன். உனக்கு என்னிடத்தில்

ப்ரீதி அழியாதிருக்கின்றது. நான் உன்னை எப்பொழுதும் விடமாட்டேன். எப்பொழுதும் உன் மனத்தில் மாறாதிருப்பேன். நீ தயாளுவாகையால் என் வருத்தத்தை ஒரு க்ஷணத்தில் போக்கினை. இந்த என் புதல்வர்கள் ப்ரஜ்ஞை தவறியிருக்கின்றனர் இவர்களைச் சீக்ரம் ப்ரஜ்ஞை தெளியச் செய்து எழுப்புவாயாக.

ஸூதர் சொல்லுகிறார்:—நாரதர் அந்த பக்தியின் வசனத்தைக் கேட்டு மிகவும் காருண்யத்தை அடைந்தார் (மன இரக்கம் உண்டாகப்பெற்றார்.) உடனே அந்த ஜ்ஞான வைராக்யங்களைக் கையால் தட்டி எழுப்பத் தொடங்கினர். அம்முனிவர் அந்த ஜ்ஞான வைராக்யங்களுடைய காது ஸமீபத்தில் முகத்தை வைத்துக்கொண்டு 'ஓ ஜ்ஞானமே! சீக்ரம் எழுந்திருப்பாய். கண் விழித்துக் கொள்வாய். வைராக்யமே ! சீக்ரம் எழுந்திருப்பாய். கண் விழித்துக் கொள்வாய்!' என்று உரக்கச் சொல்லி எழுப்பினர். அவர் மீளவும் வேதகோஷங்களையும் வேதாந்த கோஷங்களையும் செய்து அடிக்கடி பாட்டுக்களையும்பாடி பலாத்காரமாக எழுப்புகையில், மிகவருத்தத்துடன் அவர்கள் விழித்துக்கொண்டு எழுந்தார்கள். எழுந்திருந்தும் அவ்விருவரும் கண் திறந்து பாராமல் கொட்டாவி விடுவதும் சோம்பல் முறிப்பதுமாகி மீளவும் உலர்ந்த காஷ்டம்போல் பூமியில் விழுந்தார்கள். அவர்கள் பசியினுல் இளைத்து மீளவும் உறங்க விரும்பிப் படுத்தமை கண்டு 'இதற்கு நான் என் செய்யலாம்? இந்தத் தூக்கம் எங்ஙனம் கழியும்? இந்தக் கிழத்தனம் எங்ஙனம் மாறும்?'' என்று சிந்தித்துக்கொண்டு கோவிந்தனை மனத்தில் நினைத்தார். அப்பொழுது ஆகாசத்தில் இங்ஙனம் ஓர் அசரீரி வார்த்தை உண்டாயிற்று. 'ரிஷீ! வருந்தவேண்டாம். உன் ப்ரயத்னம் ஸபலமாம்.

ஸந்தேஹமில்லை. தேவர்ஷீ! ஆனால் நீ இதற்காக ஒரு ஸத்கார்யம் செய்ய வேண்டும். அந்த ஸத்கார்யந்தான் யாதெனில், ஸத்செயல்களைச் செய்கையே பூஷணமாக வுடைய ஸாதுக்களை அடுத்துக் கேட்பாயாயின், அவர்கள் அந்த ஸத்கார்யம் இன்னதென்று உனக்கு மொழிவார்கள். அவர்கள் சொல்லுவதை அப்படியே நீ செய்வாயாயின், இவர்களுடைய உறக்கமும் கிழத்தனமும் ஒரு க்ஷணத்தில் பறந்துபோம். இவர்கள் உறக்கமும் கிழத்தனமும் தீர்ந்து எழுந்திருக்கையில் பக்தி எங்கும் தடையின்றி நிரம்பப்பரவி நிற்பாள்'. இங்ஙனம் ஆகாச வாணி உண்டாயிற்று. அது எல்லோர்க்கும் ஸ்பஷ்டமாகச் செவிப்பட்டது. இதென்ன ஸத்கார்யமோ தெரியவில்லையே யென்று நாரதர் வியப்புற்றார். மீளவும் அம்முனிவர் தன் மனத்தில் 'இந்த ஆகாசவாணியும் மறைத்து மொழிந்ததேயன்றி ஸ்பஷ்டமாக மொழியவில்லையே. அந்தக் கார்யம் எதுவோ தெரிய வில்லையே. இந்த ஸத்கார்யத்தைச் சொல்லும்படியான ஸாதுக்கள் எங்கே இருக்கின்றார்களோ? இதற்கு நான் என்செய்ய வேண்டுமோ தெரியவில்லையே' என்று சிந்தித்தார். பிறகு அங்கேயே அவர்களை நிறுத்திவிட்டு அம்முனிவர் புறப்பட்டுப்புண்ய தீர்த்தங்கள் தோறும் சென்று ஆங்காங்கு வழியிலுள்ள முனிவர்களுக்கு அந்த வ்ருத்தாந்தத்தை மொழிந்து அந்த ஸத்கார்யம் எதுவா யிருக்குமென்று வினவிக்கொண்டே சென்றார். அவர்களெல்லோரும் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்கிறார்களேயன்றி அந்த ஸத்கார்யம் இன்னதென்று நிச்சயித்துச் சொல்லுவார் எவரும் அகப்படவில்லை. சிலர் இது அஸாத்யமென்றார்கள். சிலர் இது அறியமுடியாதென்றார்கள். சிலர் ஒன்றுமே பேசாதிருந்தார்கள். சிலர் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு மறுமொழி கூற முடி-

யாமல் ஓடிப்போனார்கள். மூன்று லோகங்களிலும் இந்த வ்ருத்தாந்தம் நிரம்பி 'இதென்ன ஆச்சர்யம்? வேதவேதாந்த கோஷங்களாலும் கீதாபாடங்களாலும் பக்தியும் ஜ்ஞான வைராக்யங்களும் எழுந்திருக்கவில்லை யென்றால், இனி மற்றோருபாயம் என்னிருக்கின்றது?' என்று ஜனங்கள் ஒருவர்க்கொருவர் காதோடு சொல்லிக்கொண்டிருந்தார்கள். ரிஷிகளும் கூட்டங்கூட்டமா யிருந்து 'மஹாயோகியாகிய நாரதனுக்கும் தெரியாத விஷயத்தை மற்ற மனிதர்கள் எங்ஙனம் அறிந்து சொல்லப்போகிறார்கள்' என்று நிச்சயித்து மொழிந்தார்கள். அப்பால் அம்முனிவர் மனக்கவலையுடன் பதரிகாஶ்ரமத்திற்கு வந்து 'நான் இவ்விடத்தில் இவ்விஷயம் ஏற்படுவதற்காகத் தவம் செய்யலாமே' என்று ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டிருக்க, அவ்வளவில் ஸனகாதி முனீஶ்வரர்கள் எதிரே வந்திருக்கக் கண்டு அவர்களைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்:—'இப்பொழுது என் பாக்யத்தினால் நீங்கள் எனக்குப் புலப்பட்டீர்கள். குமாரர்களே! என்மீது க்ருபை செய்து நான் கேட்பதை மொழிவீர்களாக. நீங்களெல்லோரும் மஹாயோகிகள்; மிகவும் புத்திசாலிகள்; பல சாஸ்த்ரங்களையும் கற்றறிந்தவர்; நீங்கள் எப்பொழுதும் ஐந்து வயதுடையவர்; முதன்மையான மரீசி முதலியவர்களுக்கும் முன்னமே உண்டானவர். நீங்கள் எப்பொழுதும் வைகுண்டத்திலேயே வாஸஞ் செய்பவர். பகவத் கீர்த்தனத்தில் மிகவும் ஊக்கமுடையவர். உங்கள் முகத்தில் 'ஸ்ரீ ஹரியே சரணம்' என்னும் வார்த்தை எப்பொழுதும் மாறாதிருக்கும். ஆகையால் காலத்தினால் வரக்கூடிய கிழத்தனம் உங்களைப் பாதிக்கிறதில்லை. நீங்கள் முன்பு புருவ நெரிப்பு மாத்ரத்தினால் வைகுண்டத்திலுள்ள த்வார பாலகர்களைப் பூமியில் விழத்தள்ளினீர்கள். மீளவும்

அவர்கள் உங்கள் கருணையாலேயே தமது பதம்பெற்றார்கள். ஆ! என் பாக்யமஹிமையால் உங்கள் தர்சனம் இப்பொழுது எனக்குக் கிடைத்தது. நீங்கள் தயாளுக்களாகையால் தீனனாகிய என்னிடத்தில் அனுக்ரஹம் செய்ய வேண்டும். அசரீரவாக்கு இங்ஙனம் மொழிந்தது. அந்த நற்கார்யமாவது யாது? அதை எங்ஙனம் அனுஷ்டிக்க வேண்டும்? இதை எனக்கு ஸவிஸ்தரமாகச் சொல்லவேண்டும். பக்திக்கும் ஜ்ஞான வைராக்யங்களுக்கும் எவ்வகையால் ஸுகம் உண்டாகக்கூடும்? அந்த ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் மூன்றையும் ஸமஸ்த வர்ணங்களிலும் ப்ரீதியுடன் ப்ரயத்னப்பட்டு நிலைநிறுத்த வேண்டும். இதற்கு உரிய உபாயத்தை மொழிவீர்களாக' என்றார்.

ஸனகாதிகள் சொல்லுகிறார்கள்:—வாராய் தேவரிஷீ! நாரதனே! நீ சிந்திக்கவேண்டாம். நீ ஸந்தோஷம் அடைவாயாக. நீ சொன்ன விஷயத்தில் ஸுகமாக ஸாதிக்கக்கூடிய உபாயம் முன்னமே ஏற்பட்டிருக்கின்றது. வாராய் நாரதனே! நீ மிகுந்த பாக்ய முடையவன். நீ வைராக்யமுடையவர்களில் சிறந்தவன். நீ க்ருஷ்ணனுடைய தாஸர்களில் தலைவன். நீ யோகிகளுக்கு ஸூர்யன் போன்றவன். நீ இங்ஙனம் பக்தியின் அபிவ்ருத்திக்காக ப்ரயத்னப்படுவது ஓராச்சர்யமன்று. க்ருஷ்ண தாஸனாகிய நீ பக்தியை நிலைநிறுத்தப் பார்ப்பது உனக்குத் தகுந்ததே. ரிஷிகள் பலரும் பலவகையான மார்க்கங்களை வெளியிட்டிருக்கிறார்கள். அவையெல்லாம் ச்ரமஸாத்யங்களே; பெரும்பாலும் ஸ்வர்க்கமாகிற பலனையே விளைப்பவை. வைகுண்டமென்று கூறப்படுவதான பரமபதத்தை ஸாதித்துக்கொடுக்கும் வழி ஒன்றுண்டு. அதை மறைத்துக்கொண்டிருக்கிறார்களேயன்றி, மற்றவழிகளைப்போல் வெளியிடவில்லை. அதை உபதேசிக்கும் புருஷன் அனேக

மாய் பாக்யத்தினுல் கிடைக்கவேண்டுமேயன்றி ஸாதாரணமாய்க் கிடைப்பவனல்லன். ஆகாசவாணி முன்பு உனக்கு நற்கார்யமென்று எதை மொழிந்ததோ, அதைச் சொல்லுகிறேம்; அதை மனவூக்கமுடையவளுகித் தெளிந்தமதியுடன் கேட்பாயாக. உலகத்தில் யாகங்களென்றும் தவங்களென்றும் யோகங்களென்றும் வேதாத்யயனங்களென்றும் பல யஜ்ஞங்கள் உண்டு. அவற்றைக்காட்டிலும் ஜ்ஞானயஜ்ஞமே மேலானதென்று பண்டிதர்களால் புகழப்பட்டு வருகின்றது. இந்த ஜ்ஞானயஜ்ஞமாவது முன்பு சுகாதிமஹர்ஷிகளால் மொழியப் பெற்ற ஸ்ரீபாகவத க்தா ப்ரஸங்கமேயாம். பக்தி ஜ்ஞான வைராக்யங்களுக்கு அந்தப்பாகவதகதா ப்ரஸங்கத்தின் கோஷத்தினுல் பெரியவலிவு உண்டாகும். இந்தப்பாகவதகோஷத்தினுல் ஜ்ஞானம் வைராக்யம் ஆகிய இவ்விருவரின் வருத்தம் நீங்கும். பக்திக்கும் மேன்மேலும் ஸுகம் உண்டாகும். ஸ்ரீபாகவதத்தின் த்வனி உண்டான மாத்ரத்தில் ஸிம்ஹத்தின் த்வனியைக் கேட்ட செந்நாய்கள் போல், இந்தக் கலிதோஷங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்தோடும். பிறகு பக்தி, ஜ்ஞான வைராக்யங்களுடன் கலந்து ப்ரீதியை வளர்த்திக் கொண்டு ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு ஜனத்தினிடத்திலும் விளையாடலுற்றிருக்கும்.

நாரதர் சொல்லுகிறுர்:—வாரீர் மஹானுபாவர்களே! வேத வேதாந்த கோஷங்கள் செய்யினும் கீதையை ஓயாமல் படிக்கினும் பக்தி ஜ்ஞான வைராக்யங்கள் எழுந்திருக்கவில்லையென்றால், ஸ்ரீ பாகவதகதா ப்ரஸங்கத்தின் த்வனியால் மாத்ரம் அவைகள் எங்ஙனம் எழுந்திருக்கப் போகின்றன? அந்தப்பாகவதத்தின் ஒவ்வொரு ப்லோகங்களிலும் ஒவ்வொரு பதங்களிலும்

வேதத்தின் பொருள்களே அடக்கஞ் செய்யப்பட்டிருக்கின்றனவன்றி வேறொரு விசேஷமும் இல்லையே. ஆகையால் வேதவேதாந்த கோஷங்களும் உபயோகப்படாத இடத்தில் ஸ்ரீபாகவதம் மாத்ரம் எங்ஙனம் உபயோகப்படும்? எனக்குப் பெரிய ஸந்தேஹமாயிருக்கின்றது. இதைப் போக்குவீர்களாக. நீங்கள் சரணம் அடைந்தவரிடத்தில் மிகவும் ப்ரீதியுடையவரல்லவா. ஆகையால், நான் உங்களைச் சரணம் அடைந்தேன். என் விஷயத்தில் விலம்பம் செய்யாமல் என் ஸந்தேஹத்தைத் தீர்ப்பீர்களாக.

குமாரர்கள் சொல்லுகிறார்கள்:— வாராய் நாரதனே! வேதவேதாந்தங்களின் ஸாரங்களால் ஸ்ரீபாகவத கதை உண்டானது. ஆகையால் அந்த வேத வேதாந்தங்களைக் காட்டிலும் மிகவும் மேன்மையுற்றது. ஆனது பற்றியே இதனால் விளையும் பலனும் சிறப்புற்றதாயிருக்கும். ஒரு வஸ்துவில் அடிமுதற்கொண்டு நுனிவரையில் ரஸம் இருப்பினும் அது அவ்வளவு ருசிக்காது. அந்த ரஸத்தை மாத்ரம் ஒன்று சேர்த்துத் தனியே எடுக்கில் அது அனைவர்க்கும் மிக மனோஹரமாயிருக்கும். அது எப்படியென்னில், பாலில் நெய் இருப்பினும், அந்தப் பாலை உட்கொள்ளும்பொழுது நெய்யை உட்கொள்ளும் ருசி உண்டாகாது. அந்த நெய்யையே தனியாக எடுக்கில் அது தேவதைகளுக்கும் ப்ரியமாயிருக்கும். கரும்பில் அடி முதல் நுனிவரையில் சர்க்கரை வ்யாபித்திருக்கின்றது. அதைத் தனியே யெடுத்தால்தான் அது மிகவும் ருசிக்கிடமாயிருக்கும். அங்ஙனமே வேதவேதாந்தங்களில் ஸாராம்சங்கள் இருப்பினும் அவற்றை ஸுகமாக அறிந்து உஜ்ஜீவிக்க முடியாது. அந்த ஸாரங்களை யெல்லாம் தனியே எடுத்து இயற்றப்பெற்ற ஸ்ரீபாகவதமோ என்றால் அனைவரும் ஸுகமாக

அறிந்து உஜ்ஜீவிக்கும்படியிருக்கும். ஆகையால் வேத வேதாந்தங்களைக்காட்டிலும் ஸ்ரீபாகவதகதை மேன்மையுடையது. ஸ்ரீபாகவதமென்னும் புராணம் ப்ரஹ்மாவால் இயற்றப்பெற்றது. ஸாக்ஷாத் பரப்ரஹ்மமே இங்ஙனம் ஒரு வடிவங்கொண்டதோ என்னும்படி பகவானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளெல்லாம் தெளிவாக அமையப்பெற்றிருக்கும். ஜ்ஞான பக்தி வைராக்யங்களை நிலைநிறுத்தும்பொருட்டே இது வெளியிடப்பட்டது. வேத வேதாந்தங்களை நன்கு உணர்ந்தவனும் ஸ்ரீபகவத் கீதையை இயற்றினவனுமாகிய வேதவ்யாஸமஹர்ஷி மனஸ் ஸந்துஷ்டியில்லாமல் அதற்குக் காரணம் இன்னதென்று தெரியாமல் அஜ்ஞான ஸாகரத்தில் மூழ்கிப் பரிதபித்து மோஹித்திருக்கையில், நான்குமுகனாயிருந்த நான் எல்லாவற்றையும் சுருக்கமாயிருந்த இந்த ஸ்ரீபாகவதத்தை அவனுக்கு நீ உபதேசித்தனை. அதைக்கேட்டவுடனே அந்த வ்யாஸனும் பாதைகளெல்லாம் தீர்ந்து ஸந்தோஷம் அடைந்தான். அப்படிப்பட்ட இந்தப் பாகவதத்தைப் பற்றி நீ ஏன் இங்ஙனம் ஆச்சர்யப்பட்டு ஸந்தேஹத்துடன் வினவுகின்றனை? ஸ்ரீபாகவதத்தைக் கேட்டமாத்ரத்தில் துக்கசோகங்களெல்லாம் போமென்பதை நீ மறந்துவிட்டனையோ?

இங்ஙனம் ஸனகாதிகள் மொழிந்ததைக் கேட்டு நாரதர் ஸந்தோஷம் அடைந்து, அவர்களை நமஸ்கரித்துக் கொண்டாடி, மீளவும் வினவினார். 'வாரீர் மஹானுபாவர்களே! இந்தப் பாகவதகதாப்ரவசனமாகிற ஜ்ஞானயஜ்ஞத்தை நான் நடத்தவேண்டுமென்று விரும்புகின்றேன். இந்தப் பாகவதகதை எவ்வளவிருக்கின்றது? இதை எத்தனை நாட்களில் சொல்லமுடியும்? அதை நடத்தவேண்டிய ப்ரகாரம் யாது? அதை எவ்விடத்தில் நடத்தலாம்? இதையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்' என்றார்.

ஸனகாதிகள் சொல்லுகிறார்கள்:—வாராய் நாரதனே! கங்கையின் கரையில் ஆநந்தமென்னும் பேருடைய ஓர் இடம் இருக்கின்றது. அது மிகவும் அழகாகி ஏகாந்தமாயிருப்பதாகையால் அங்குத் தேவதைகளும் ஸித்தர்களும் ரிஷிகளும் நிறைந்திருப்பார்கள். அங்குள்ள ப்ராணிகளுக்கு மனத்தில் வைரமே உண்டாகிறதில்லை. அவ்விடத்தில் இந்த ஸ்ரீபாகவதகதாப்ரஸங்கமாகிற ஜ்ஞானயஜ்ஞம் நடத்துவது யுக்தமாயிருக்கின்றது. நீ ஒரு ப்ரயத்னமும் செய்யாமல் அனாயாஸமாய் நடக்கும். ஜீர்ணமான ஜ்ஞான வைராக்யங்களை அழைத்துக் கொண்டு பக்தியும் அவ்விடம் வந்து சேரும். ஏனென்னில், எவ்விடத்தில் ஸ்ரீபாகவத கதா ப்ரஸங்கம் நடக்குமோ, அவ்விடத்தில் ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் அவச்யம் வந்து சேரும். அம்மூன்றும் அந்தக் கதையின் சப்தத்தைக் கேட்ட மாத்ரத்தில் யௌவனப்பருவம் அமையப்பெறும்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மொழிந்து ஸனகாதிகளும் ஸ்ரீபாகவத கதையைக் கேட்கும்பொருட்டு நாரதருடன் கங்காத்வாரம் போய்ச்சேர்ந்தார்கள். இவர்கள் அவ்விடம் வந்து சேர்ந்தவுடனே இந்த வ்ருத்தாந்தம் தெரிந்து ஸமஸ்த லோகங்களிலும் பெருங் கோலாஹலம் உண்டாயிற்று. கதையைக் கேட்கவேண்டிய குதூஹலத்தினால் வைஷ்ணவர்களான தேவதைகளும் ரிஷிகளும் மனிதர்களும் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். வேத வேதாந்தங்களும் மந்த்ர தந்த்ரங்களும் பதினேழு புராணங்களும் ஆறு சாஸ்த்ரங்களும் கங்காதி புண்ய நதிகளும் ஸமஸ்தமான புண்ய க்ஷேத்ரங்களும் புண்ய வனங்களும் மனுஷ்ய உருவத்துடன் அவ்விடம் வந்து சேர்ந்தன. அவர்களெல்லோர்க்கும் நாரதர் மேலான ஆஸனம் அளித்துக் கௌரவித்தார்.

வந்தவர்களெல்லோரும் ஸனகாதிகளைத் தண்டனிட்டு நின்றார்கள். ஸனகாதிகளும் மற்றுமுள்ள முக்யமான வர்களும் முன்பாகத்தில் உட்கார்ந்தார்கள். அவர்களுக் கெதிரே நாரதரும் உட்கார்ந்தார். ஒரு பக்கத்தில் தேவதைகளும், ஒரு பக்கத்தில் வேத வேதாந்தாதி சாஸ்த்ரங்களும், ஒரு பக்கத்தில் புண்ய தீர்த்தங்களும், ஒரு பக்கத்தில் பெண்டிர்களுமாக உட்கார்ந்தார்கள். ஜயசப்தமும் நமஸ் ஸப்தமும் சங்கம் பேரி முதலிய வாத் யங்களின் கோஷமும் கலந்து பெரு முழக்கமாயிருந் தது. புஷ்பங்களும் பொரிகளும் அக்ஷதைகளும் இறைக் கப்பெற்றிருந்தன. சில தேவதைகள் ஆகாயத்தில் விமானங்களில் வீற்றிருந்து அந்த ஸபையின்மேல் கல்ப வ்ருக்ஷத்தின் புஷ்பங்களை இறைத்தார்கள். இங்ஙனம் எல்லோரும் மனவூக்கத்துடன் உட்கார்ந்தபின்பு நார தரைக் குறித்து ஸனகாதிகள் ஸ்ரீபாகவத கதையைச் சொல்லத் தொடங்கினார்கள்.

ஸனகாதிகள் சொல்லுகிறார்கள்:—வாராய் நாரத னே! சுகமுனிவரால் வெளியிடப்பெற்ற ஸ்ரீபாகவத ஸாஸ் த்ரத்தின் மஹிமையைச் சொல்லுகிறோம், கேட்பாயாக. இதைக் கேட்ட மாத்ரத்தில் மோக்ஷம் கைமேலிருக்கும். ஸ்ரீபாகவத கதையை எப்பொழுதும் பாராயணம் செய்ய வேண்டும். இந்தக் கதையைக் கேட்ட மாத்ரத்தில் ஸ்ரீபகவான் மனத்தில் ஸந்நிதானம் செய்வான். இது பதினெண்ணாயிரம் க்ரந்தங்களுடையது; பன்னிரண்டு ஸ்கந்தங்கள் அடங்கியது; பரீக்ஷித்துக்கும் சுகமுனி வர்க்கும் நடந்த ஸம்வாதமாயிருக்கும். அதைச் சொல்லு கிறோம். கேள், இந்தப் பாகவதத்தைக் கேளாதவரையி லுமே ஆத்மா ஸம்ஸாரத்தில் வருத்தப்படுவான்; இதைக் கேட்டவுடனே ஸம்ஸார ஸ்ரமங்களெல்லாம் தீரப்பெறு வான். பல சாஸ்த்ரங்களையும் பல புராணங்களையும்

கேட்பதனால் என்ன உபயோகம்? அவையெல்லாம் புத்தி ப்ரமத்தை விளைவிப்பவைகளே. ஸ்ரீபாகவத சாஸ்த்ரம் ஒன்றுமாத்ரமே மோக்ஷத்தைக் கொடுக்க வல்லது. தினந்தோறும் ஸ்ரீபாகவத கதை நடையாடப்பெற்ற க்ருஹம் புண்யதீர்த்தத்தோடொத்தது. அதில் வாஸஞ் செய்பவருடைய பாபங்களெல்லாம் தீரும். பலவாயிரம் அஸ்வமேத யாகங்களும் பல நூறு வாஜபேயங்களும் சுகசாஸ்த்ரமாகிய இந்தப் பாகவத கதையின் பதினாறில் ஒரு பங்குக்கும் ஈடாகமாட்டா. ஸ்ரீபாகவத கதையைக் கேட்பவரது சரீரத்தில் பாபமென்பது சிறிதும் இராது. கங்கைமுதலிய புண்ய தீர்த்தங்களும் கயை காசி புஷ்கரம் ப்ரயாகம் முதலிய புண்யக்ஷேத்ரங்களும் பாகவத கதையைக் கேட்பதால் விளையும் பலனை எவ்வகையிலும் விளைக்க வல்லவையாகமாட்டா. நாரதா! உனக்குப்பரகதி வேண்டுமென்று விருப்பம் உளதாயின், ஸ்ரீபாகவதத்தில் பாதிஸ்லோகத்தையாவது ஓர் அடியையாவது தினந்தோறும் உன் வாயால் படிப்பாயாக. மூன்று வேதங்களும் வேதங்களில் சிறந்த புருஷஸூக்தமும் த்வாதசாக்ஷரியும் ப்ரணவமும் அதற்கும் மேற்பட்ட அகாரமும் இவற்றிற்குப் பொருளான புருஷோத்தமனும் ஆகிய இவையெல்லாம் ஸ்ரீபாகவத கதையைக் காட்டிலும் வேறுபட்டவையல்ல. எவன் இந்த ஸ்ரீபாகவத ஸாஸ்த்ரத்தை அர்த்தத்துடன் வாசிக்கிறானோ, அவன் கோடி ஜன்மங்களிற் செய்த பாபங்களும் தீரப்பெறுவான்; இதில் ஸந்தேஹம் இல்லை. இதில் பாதிஸ்லோகத்தையாவது கால் ஸ்லோகத்தையாவது வாசிப்பானாயின், ராஜஸூய அஸ்வமேத யாகங்களின் பலனைப் பெறுவான். சரீராவஸான காலத்தில் இந்தக் கதையைக் கேட்பானாயின், அவனுக்கு ஸ்ரீமந்நாராயணன் தனது வைகுண்டலோகத்தைக் கொடுப்பான். இந்தக் கதையை ஒரு தடவையாவது கேளாதவனுடையஜன்மம்

பயனற்றதே. இந்தக் கதையைக் கேட்கும்படியான பாக்யம் கோடி ஜன்மங்களில் செய்த புண்யங்களால்தான் கிடைக்கும், ஆனபடியால், வாராய் முனிஶ்ரேஷ்டனே! நீ இந்தக் கதையை மிகுந்த ஶ்ரத்தையுடன் கேட்பாயாக. இந்தக் கதை கேட்பதற்கு நாள் கணக்கில்லை. இந்தக் கதையை எப்போதும் கேட்கவேண்டு மென்பதே பெரியோர்களின் அபிப்ராயம். தவறாத ப்ரஹ்மசர்யத்துடன் இதை எப்பொழுதும் கேட்கவேண்டும். இந்தக் கலிகாலத்தில் அப்படிப்பட்ட ப்ரஹ்மசர்யம் முதலிய நியமாசரணங்களெல்லாம் அனுஷ்டிப்பது அஸாத்யமாகையால், இதற்கு ஸப்தாஹ ஶ்ரவணமென்னும் ஒரு ஸுலபமான உபாயம் அந்தச் சுகமஹர்ஷியின் ஆஜ்ஞையினால் ஏற்பட்டிருக்கின்றது. ஶ்ராவண மாக மாதங்களில் (ஆவணி மாசி மாதங்களில், இதை ஶ்ரத்தையுடன் கேட்பவனுக்கு எந்தப்பலன் உண்டோ, அது ஸப்தாஹ ஶ்ரவணத்தினால் உண்டாகும். இந்தக் கலிகாலம் கேவலம் தோஷப்ரசுரமாகையாலும், இக்காலத்தில் மனத்தை அடக்குவது அஸாத்ய மாகையாலும், ரோகபாதை அதிகமாயிருக்கையாலும், மனுஷ்யர்கள் பெரும்பாலும் ஆயுள் க்ஷீணிக்கப் பெற்றிருக்கையாலும் இந்த ஸ்ரீபாகவதத்தை எப்பொழுதும் நியமத்துடன் கேட்பது அஸாத்யமென்று இக்காலத்தில் ஸப்தாஹ ஶ்ரவணமென்கிற நியமம் ஏற்படுத்தப்பட்டது. தவம் யோகம் ஸமாதி இவைகளால் ஶ்ரமப்பட்டு ஸாதிக்க முடியாத பலனையும் இந்த ஸப்தாஹ ஶ்ரவணம் அனாயாஸமாகவே ஸாதித்துக்கொடுக்கும்' என்று ஸனகாதிகள் பாகவத மாஹாத்மயத்தை விவரித்துச் சொன்னார்கள். இங்ஙனம் மொழிந்த ஸூதரைப் பார்த்துச் சௌனகர் 'நீர் சொன்ன வ்ருத்தாந்தம் ஆச்சர்யமாயிருக்கின்றது. ஆயினும் ஜ்ஞானாதி தர்மங்களைக்

காட்டிலும் ஸ்ரீபாகவதத்திற்கு அப்படிப்பட்ட மஹிமை எங்ஙனம் உண்டாயிற்று' என்றார். அதைக் கேட்ட ஸூதபௌராணிகரும் 'வாரீர் ஶௌனக மஹர்ஷீ! ஸ்ரீக்ருஷ்ணன் பூமியைத் துறந்து தன்னுடைய லோகம் போக முயன்ற ஸமயத்தில் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து, 'வாராய் கோவிந்தனே! நீ பக்தி விளையும்படியான பல செயல்களைச் செய்து உனது லோகத்திற்குப் போக முயன்றிருக்கின்றனை. என் மனத்தில் பெருஞ்சிந்தை உண்டாயிருக்கின்றது. அதைப்போக்கி எனக்கு ஸுகம் விளைப்பாயாக. அந்தச் சிந்தையென்னென்னில், சொல்லுகிறேன் கேள். பயங்கரமான கலிகாலம் இதோ வந்து விட்டது. இனி துஷ்டர்களே உண்டாகப்போகின்றார்கள். அவருடைய ஸஹவாஸத்தினால் சிஷ்டர்களும் கொடுந்தன்மையை அடையப்போகிறார்கள். அப்பொழுது இந்தப் பூமியானது மீளவும் பெரும்பார முடையதாகப் போகின்றது. அக்காலத்தில் இது யாரைச் சரணம் அடையும்? வாராய் செந்தாமரைக்கண்ணனே! ஆதிபுருஷனே! உன்னைக்காட்டிலும் மற்றொருவன் ரக்ஷகனில்லை. ஆகையால் ஸத்புருஷர்களிடத்தில் தயை செய்து நீ புறப்பட்டுப்போகாமல் இங்கேயே இருப்பாயாக. நீ பக்தரிடத்தில் வாத்ஸல்ய முடையவனல்லவா? அவர்களை இங்ஙனம் துறந்துபோவது யுக்தமன்றே. நீ இயற்கையில் தேவமனுஷ்யாதி உருவமுடையவனல்லை. நீ கேவலம் ஜ்ஞானைகஸ்வரூபன். உனக்கு ஸத்த்வாதி குணங்கள் கிடையாது. ஆயினும் பக்தர்களுக்காக இங்ஙனம் மானிட உருவத்துடன் அவதாரஞ்செய்தனை. உன் பக்தர்கள் உன்னைப் பிரிந்து எங்ஙனம் இந்தப் பூதலத்தில் இருப்பார்கள்? உன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை உபாஸித்து உஜ்ஜீவிக்கப் பார்க்கில் அதை அறிந்து உபாஸிப்பது ஸாத்யமன்று. ஆகையால் இதற்குத் தகுந்தவழி ஆலோசிப்பாயாக'

என்று உத்தவர் வினவினார். இங்ஙனம் வினவப் பெற்ற ஸ்ரீபகவானும் 'நான் பக்தர்களின் விஷயமாக என் செய்யலாம்' என்று ஆலோசித்து, தன்னுடைய தேஜஸ்ஸை ஸ்ரீபாகவதத்தில் வைத்தான். ஆகையால் இந்த ஸ்ரீபாகவதம் ஸப்தரூபமான பகவானுடைய மூர்த்தியாக நமக்கு ப்ரத்யக்ஷமாயிருக்கின்றது. இதைப் பாராயணஞ் செய்யினும் பாபங்களையெல்லாம்போக்கவல்லது. அதிலும் ஸப்தாஹ ஸ்ரவணமென்பது ஸமஸ்த உபாயங்களைக் காட்டிலும் மேற்பட்டதாக இந்தக் கலிகாலத்தில் ஏற்பட்டிருக்கின்றது. துக்கம் தாரித்ரியம் தௌர்ப்பாக்யம் பாபம் காமம் கோபம் இவற்றையெல்லாம் அழிக்கும் பொருட்டே இந்த ஸ்ரீபாகவதகதா ப்ரஸங்கரூபமான தர்மம் ஏற்பட்டிருக்கின்றது. ஸம்ஸாரம் தேவதைகளாலும் துறக்கமுடியாதது. மானிடவர்களால் எங்ஙனம் துறக்கமுடியும்? ஆனதுபற்றியே இந்த ஸப்தாஹ ஸ்ரவணமென்கிற நியமம் ஏற்படுத்தப்பட்டது. இப்படி இந்த ஸப்தாஹஸ்ரவணமென்கிற நியமத்தை அம்முனிவர்கள் ஏற்படுத்துகையில் அந்த ஸபையில் ஓர் ஆச்சர்யம் உண்டாயிற்று. ஶௌனகரே! அதைச்சொல்லுகிறேன் கேட்பீராக. அப்பொழுது பக்தி, யௌவனப்பருவம் நிறைந்த ஜ்ஞானவைராக்யங்களென்கிற தன் புதல்வர்களை அழைத்துக்கொண்டு 'ஸ்ரீக்ருஷ்ண! கோவிந்தா! ஹரே! முராரே! நாதா!' என்று பகவானுடைய நாமங்களைச் சொல்லிக்கொண்டு அந்த ஸபையினிடையில் திடீலென்று அழகிய வேஷத்துடன் தோற்றினாள். அதைக் கண்டு அங்குள்ளவர் அனைவரும் 'இதென்ன ஆச்சர்யம். இவள் எங்கிருந்து வந்தாள்? எப்படி நுழைந்தாள்?' என்று சிந்தித்துக்கொண்டு மிக வியப்புடன் அதைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஸனகாதிகள்

'ஸ்ரீபாகவத கதையின் ப்ரஸங்கத்தினால் இந்தப் பக்தி இங்ஙனம் புதல்வர்களுடன் தோற்றலாயினள்' என்றார்கள். அதைக் கேட்டு பக்தியும் ஸனத்குமாரரைப் பார்த்து வணக்கத்துடன் 'நான் உங்களால் இப்பொழுது தான் புஷ்டியுடையவளானேன். கலிதோஷத்தினால் நான் இல்லாதவளாகவேயிருந்தேன், இப்பொழுது ஸ்ரீ பாகவதகதா ப்ரஸங்கத்தினால் புஷ்டி அடைந்தேன். நான் எங்கே இருப்பேன்? இதை எனக்கு மொழிவீர்களாக' என்றாள். அதற்கு அந்த ஸனத்குமாரரும் 'பக்தர்களிடத்தில் ஸம்ஸார ரோகத்தைப் போக்கிக் கொண்டு தைர்யத்துடன் வஸித்திருப்பாயாக. வைஷ்ணவர்களின் மனத்தில் நிரந்தரம் வஸித்திருப்பாயாக. உலகங்களையெல்லாம் பாழ்செய்ய வல்லவைகளான கலி தோஷங்கள் உன்னை அசைக்கவும் வல்லவையாகமாட்டா' என்றார். இங்ஙனம் அவர் மொழிந்துகொண்டிருக்கையில் அந்தபக்தி ஸ்ரீநாரதருடைய ஹ்ருதயத்தில்போய் உட்கார்ந்தாள். எவருடைய ஹ்ருதயத்தில் பகவத் பக்தி மாறாதிருக்குமோ, அவர்கள் நிர்த்தனர்களாயினும் தன்யராவார்கள். ஸ்ரீபகவானும் தன்னுடைய லோகத்தைத் துறந்து அவருடைய ஹ்ருதயத்தில் பக்தியென்னும் கயிற்றினால் கட்டுண்டு நித்யவாஸம் செய்வான். இங்ஙனம் பரப்ரஹ்ம ஸ்வரூபமான ஸ்ரீபாகவத கதையின் மஹிமையைச் சொன்னேன். இன்னம் என் சொல்லவேண்டும்? இந்த ஸ்ரீபாகவத கதையைச்சொல்லுகிறவனும் கேட்கிறவனும் ஸ்ரீக்ருஷ்ண ஸாரூப்யத்தைப் பெறுவார்கள். இனி வருந்திச் செய்ய வேண்டியவைகளான மற்ற தர்மங்களால் ஆகவேண்டிய கார்யம் என்னிருக்கின்றது?'

மீளவும் சௌனகரைப் பார்த்து ஸூதர்சொல்லுகிறார்:—'வாரீர் சௌனகரே! பிறகு வைஷ்ணவர்களின்

மனத்தில் அளவில்லாத பக்தி உண்டாயிருப்பதைக் கண்டு தன்னுடைய லோகத்தை விட்டுப் புறப்பட்டு வந்து வனமாலையும் பீதாம்பரமும் மகாகுண்டலங்களும் கௌஸ்துபமணியும் அரைநூல்மாலையும் அணிந்து ஹரிசந்தனம் பூசிக்கொண்டு நீலமேகச்யாமளனும் த்ரிபங்கியால் அழகியனும் கோடி மன்மதலாவண்யமுடையவனுமாகி மதுரமான வேணுகானம் செய்துகொண்டு தனது பக்தர்களின் நிர்மலமான ஹ்ருதயங்களில் ப்ரவேசித்தான். வைகுண்ட வாஸிகளும் உத்தவர் முதலிய வைஷ்ணவர்களும் அந்தக் கதையைக் கேட்கும்பொருட்டு மாறுருவத்துடன் அவ்விடம் வந்து மறைந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது எங்கும் ஜயசப்தங்களைச் சொல்வதும் மஹாநந்தத்துடன் கந்தப்பொடி இறைப்பதும் புஷ்பங்களைப்பொழிவதும் அடிக்கடி சங்கவாத்யங்களை ஊதுவதுமாயிருந்தார்கள். அந்த ஸபையிலுள்ளவர் அனைவரும் தேஹத்தையே மறந்திருந்தார்களென்னில், க்ருஹம் முதலியவற்றைப் பற்றின சிந்தையே அவர்களுக்கு இல்லை யென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? எல்லோரும் அத்தன்மையராயிருப்பதைக் கண்டு நாரதர் குமாரர்களைப் பார்த்து 'வாரீர் முனீச்வரர்களே! ஸப்தாஹத்தின் மஹிமை அற்புதமாயிருக்கின்றது. இதை நான் இப்பொழுது தான் கண்டேன். மூடர்களும் துஷ்டர்களும் பசு பக்ஷயாதிகளும் இவ்விடம் இந்தக் கதையின் ப்ரஸங்கத்தினால் மிகவும் பாபமற்றவையாயின. ஆகையால் மனுஷ்ய லோகத்தில் மனத்தைச் சுத்திசெய்வதான உபாயம் இந்த ஸப்தாஹத்தைக்காட்டிலும் மற்றொன்றும் இல்லை. இது ஸமஸ்த பாபஸமூஹங்களையும் பாழ்செய்ய வல்லது. நீங்கள் பரமதயாளுக்களாகையால் உலகங்களின் ஹிதத்தை ஆலோசித்து இங்ஙனம் புதிதான ஒரு மார்க்கத்தை ஏற்படுத்தினீர்கள். இந்த ஸப்தாஹ

ச்ரவணத்தினால் எவரெவர் சுத்தி அடைவார்கள்? அதை எனக்கு மொழிவீர்களாக' என்றார். அதைக் கேட்ட குமாரர்களும் 'வாராய் நாரதனே! எவரெவ ரென்று நாம் கணக்கிட்டுச் சொல்லுவோம்? எப்படிப் பட்ட பாபிகளும் இதனால் சுத்தி அடைவார்கள். இத னால் கழியாத பாபம் எதுவுமே இல்லை. இவ்விஷயத் தில் முன்பு நடந்த ஓர் இதிஹாஸம் சொல்லுகிறேன் கேட்பாயாக. துங்கபத்ரையின் கரையில் ஒரு பட்டணம் உண்டு. அங்கு ஆத்மதேவனென்று ஒரு ப்ராஹ்மணன் இருந்தான். அவன் வைதிக ச்ரத்தையுடையவன்; வே தங்களெல்லாம் ஓதினவன்; ச்ரௌத ஸ்மார்த்த கர்மங் களில் ஸமர்த்தன்; பணமுடையவன். ஆயினும் அவன் பிக்ஷையெடுத்து ஜீவிப்பவன். அவன் பார்யை துந்துலி யென்பவள். அவள் தான் சொன்னதையே நிலைநிறுத்த வேண்டுமென்னும் பிடிவாத முடையவள்; மிகவும் அழ காயிருப்பாள்; நல்ல குலத்தில பிறந்தவள்; உலகவெம் பளப்பில் மிகவும் ப்ரியமுடையவள்; கொடிய ஸ்வபாவ முடையவள்; ஓயாமல் வாயாடுந்தன்மையள்; க்ருஹகார் யங்களில் ஸாமர்த்ய முடையவள்; கார்ப்பண்யம் குடி கொண்டிருப்பவள்; கலஹத்தில் விருப்பமுடையவள். அவ்விருவரும் யௌவனஸுகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கையில் நெடுநாள் சென்றும் ஸந்தானம் உண்டாகாமையால் அவர்களுக்கு மனத்தில் பெருந்துயர மாயிருந்தது. பிறகு ஸந்தானம் உண்டாவதற்காகப் பலவாறு தர்மங்களைச் செய்துகொண்டிருந்தார்கள். அப்படி நெடுநாள் சென்றும் ஸந்தானம் உண்டாகவில்லை. ஒருகால் அந்த ப்ராஹ்மணன் துக்கத்தினால் வீட்டைத் துறந்து வனத்திற்குப் போனான். மத்யாஹ்ன வேளை யாயிற்று. அவன் பெருந் தாஹம் எடுக்கப்பெற்று ஒரு

குளத்திற்குப் போனான். அங்குத் தண்ணீர் குடித்துப் பிள்ளையில்லாத மனவருத்தத்துடன் இளைப்புற்றிருக்கையில், ஒரு முஹூர்த்தகாலம் கழிந்தபின்பு அவ்விடத்திற்கு ஒரு ஸந்யாஸி வந்தான். அவன் ஜலங் குடித்துக் கரையில் உட்காருகையில் ப்ராஹ்மணன் அவனருகே சென்று பாதங்களில் நமஸ்கரித்துப் பெருமூச்செறிந்துகொண்டு எதிரே நின்றான். அந்த ஸந்யாஸி அந்த ப்ராஹ்மணனைப் பார்த்து, 'வாராய் அந்தணனே! ஏன் அழுகின்றாய்? உனக்குச் சிந்தை பெரிதாயிருக்கின்றதே! அது யாது? அப்பா! உன் துக்கத்திற்கு என்ன காரணமோ அதை மொழிவாயாக' என்றான். அதைக்கேட்ட ப்ராஹ்மணன் 'முனிவரே! என் துக்கத்தை நான என்னென்று சொல்லுவேன்? ஜன்மாந்தர பாபத்தினால் நான் இங்ஙனம் துக்கத்தை அனுபவிக்கின்றேன். எனக்கு ஸந்தானம் இல்லை. அந்த வருத்தத்தினால் நான் ப்ராணன்களை விடலாமென்று இப்படி வந்துவிட்டேன். பிள்ளையில்லாத பிழைப்பு எதுக்கு? அதைச் சுடவேண்டும். பிள்ளையில்லாத க்ருஹம் [1] சூன்யாரண்யமே. பிள்ளையில்லாதவனுடைய பணத்தைச் சுடவேண்டுமேயன்றி அதனால் என்ன பயன்? ஸந்ததியில்லாத குலம் எதுக்கு? நான் வளர்க்கும் பசுவும் மலடாய்விடுகின்றது. நான் வைத்த மரமும் பலிக்கிறதில்லை. என் வீட்டிற்கு வருகின்ற பழம் முதலியவைகளும் சீக்ரத்தில் உலர்ந்துபோகின்றன. இங்ஙனம் பிள்ளையில்லாமல் நிர்ப்பாக்யனாயிருக்கிற நான் ஜீவித்திருந்து என்ன பயன்?'' என்று மொழிந்து, துக்கத்தினால் வருந்தி உரக்க ரோதனஞ் செய்தான். அதைக் கண்ட ஸந்யாஸிக்கு மிகவும் மன இரக்கம் உண்டாயிற்று. அந்த யோகி அவன் தலையெழுத்தை வாசித்

1. பொட்டைக் காடு.

துப் பார்த்தான். எல்லாவற்றையும் தெரிந்துகொண்ட ஸந்ந்யாஸி ப்ராஹ்மணனைப் பார்த்து 'அப்பா! பிள்ளை வேண்டுமென்கிற அஜ்ஞானத்தைத் துறப்பாயாக. கர்ம கதிக்கு விஞ்சி ஒன்றும் நடக்காது. அது எல்லாவற்றிலும் பலிஷ்டமாயிருக்கும். விவேகத்தைப் பற்றி ஸம்ஸார வாஸனையைத் துறப்பாயாக. நான் சொல்லுகிறேன் கேள். ப்ராஹ்மணா! நான் இப்பொழுது உன் தலையெழுத்தை வாசித்துப் பார்த்தேன். உனக்கு ஏழு ஜன்மங்கள் வரையிலும் பிள்ளை இல்லை இல்லை. ஆகையால் குடும்ப ஆசையை விடுவாய். ஸர்வ ப்ரகாரத்தாலும் ஸந்ந்யாஸத்தில் ஸுகம் உண்டு; இல்லறம் விட்டுத் துறவறம் பற்றுவாயாக' என்றான். ப்ராஹ்மணன் அதைக் கேட்டும் அஜ்ஞானம் நீங்காமல் அந்த யோகியைப் பார்த்து 'எனக்கு விவேகத்தினால் என்ன ப்ரயோஜனம்? பலாத்காரமாகவாவது எனக்குப் புதல்வனைக் கொடுப்பாயாக. இல்லையாயின், நான் சோகத்தினால் மூர்ச்சித்து உன்னெதிரிலேயே ப்ராணன்களை விடுவேன். ஸந்ந்யாஸத்தில் என்ன ஸுகம் உண்டு? பிள்ளை பேரன்களோடு வாழும்படியான க்ருஹஸ்தாச்ரமத்திற்கு ஈடாகுமோ? என்றான். யோகியும் ப்ராஹ்மணனுடைய பிடிவாதத்தைக் கண்டு அவனுக்கு எவ்வளவு புத்திசொல்லியும் அவன் கேளாமையால் கடைசியில் ஒரு பழத்தைக் கொடுத்து 'ப்ராஹ்மணனே! இந்தப் பழத்தை உன் பார்யைக்குக் கொடுத்துச் சாப்பிடச் செய்வாய். அதனால் உனக்கு ஸத்புத்ரன் உண்டாவான். பொய்பேசாமையும் ஆசாரமும் தயையும் தானமும் ஒருவேளை போஜனமும் ஆகிய இந்த நியமங்களை ஒரு வர்ஷம் வரையில் உன் பார்யையைக் கொண்டு தவறாமல் நடத்தி வருவாயாக' என்று மொழிந்து ஸந்ந்யாஸி புறப்பட்டுப் போனான். ப்ராஹ்மணனும் தன்வீட்டிற்கு

வந்து, பார்யை கையில் பழத்தைக் கொடுத்து ஸங்கதியைச் சொல்லிவிட்டு வெளியே போனான். அந்த ப்ராஹ்மணபத்னி குடில ஸ்வபாவமுடையவளாகையால் தன் ஸகியைப்பார்த்து 'ஆ! எனக்குப் பெரிய பயமாயிருக்கின்றது. நான் பழத்தைச் சாப்பிடமாட்டேன். இதைச் சாப்பிட்டால் கர்ப்பம் உண்டாகுமாம். கர்ப்பம் உண்டாயின் வயிறு பெரிதாக வளர்ந்துபோம். அப்பால் ஆஹாரம் அற்பமாகவே செல்லும். அதனால் அசக்தி உண்டாகும். பிறகு வீட்டுவேலை எப்படி ஆகும்? எவர் செய்வார்கள்? கர்ப்பிணிக்கு ஓடி நடக்கமுடியாது. மற்றும் அந்தக் கர்ப்பத்திலுள்ள சிசுவை எங்ஙனம் வெளிப்படுத்தமுடியும்? கர்ப்பம் குறுக்கே பிறிக்கொண்டுவருமாயின், அப்பொழுது நான் மரணம் அடைவேனல்லவா? ப்ரஸவிக்கும்போது உண்டாகக் கூடிய துக்கம் பயங்கரமானதல்லவா? அதை ஸுகுமாரியாகிய நான் எப்படி ஸஹிப்பேன்? நான் அசக்தையாயிருக்கையில் என் ஸொத்தையெல்லாம் ஓரகத்தி கொள்ளையிட்டுக்கொண்டு போய் விடுவாள். பொய் சொல்லா திருக்கை முதலிய நியமங்களோ என்னால் எவ்வகையிலும் அனுஷ்டிக்க முடியாதவை. பிறந்த குழந்தையைப் பாதுகாப்பதும் சீராட்டுவதும் பெரிய வருத்தம். இதைவிட மலடியாயிருப்பதே நலம்' என்று குத்ஸித புத்தியுடன் ரோதனம் செய்து அந்தப் பழத்தைச் சாப்பிடவில்லை. கணவன் கேட்டதற்குப் பழத்தைச் சாப்பிட்டேனென்றாள். இப்படியிருக்கையில், ஒருநாள் அவளுடைய உடன்பிறந்தவள் வந்தாள். அவளுடன் இந்த வ்ருத்தாந்தங்களையெல்லாம் சொல்லி 'அம்மா! நான் என்ன செய்வேன்? நாளாய்விட்டதே; கர்ப்பத்திற்கு என்ன வழி? பழத்தைச் சாப்பிட்டதாகப் புளுகிச் சாப்பிடாமலே இருந்துவிட்டேனே. மாதங்கள் ஆய்விட்டனவே. பிள்ளை

பிறக்கவேண்டுமே. இது எனக்குப் பெருந்துக்கமா யிருக்கின்றதே. தங்காய்! நான் என்ன செய்வேன்?" என்றாள். அதைக் கேட்டு அவள் 'எனக்கு கர்ப்பம் இருக்கின்றது. பிறந்தவுடன் அதை நான் உனக்குக் கொடுக்கின்றேன். அதுவரையில் கர்ப்பிணிபோல் வீட்டில் மறைந்துகொண்டு ஸுகமாயிருப்பாயாக. என் பர்த்தாவுக்குப் பணத்தைக் கொடுத்தால் அவனும் குழந்தையைக் கொடுத்து விடுவான். ஆறுமாதத்தில் கர்ப்பம் வெளிவந்து குழந்தை செத்துப்போயிற்றென்று உலகத்தார் சொல்லும்படி அபவாதத்தைக் கிளப்பிவிடுகிறேன். நான் தினந்தோறும் உன் வீட்டிற்குவந்து அந்தக் குழந்தைக்குப் பால் கொடுத்துப் போஷித்துக் கொண்டு வருகிறேன். அந்தப் பழத்தைப் பசுவுக்குக் கொடுத்து விடுவாயாக. அந்தப் பழத்தின் சக்தியைப் பரீக்ஷித்துப் பார்ப்போம்' என்றாள். ஸ்த்ரீகளின் ஸ்வபாவம் ஸாதாரணமாய்க் கோணலாகையால் அவளும் அப்படியே ஒப்புக்கொண்டு செய்துவிட்டாள். பிறகு காலக்ரமத்தில் துந்துலியின் தங்கை பிள்ளையைப் பெற்றாள். அவளுடைய கணவன் அந்தக் குழந்தையை ஏகாந்தமாய்க்கொண்டு வந்து துந்திலிக்குக் கொடுத்துப் போனான். துந்துலியும் வருத்தமின்றியே பிள்ளை பிறந்ததாகத் தன் கணவனுக்குச் சொன்னாள். ஆத்மதேவனும் புத்ரோத்ஸவத்திற்காக ப்ராஹ்மணர்களுக்குப் பலவகை தானங்கள் செய்தான். அப்பொழுது துந்துலி தன் கணவனைப் பார்த்து 'எனக்கு முலைப்பால் இல்லை. பிறருடைய பாலால் என் குழந்தையை எப்படி வளர்ப்பேன்? எனது உடன் பிறந்தவளுக்குக் குழந்தை பிறந்து போய்விட்டது. அவளுக்கு முலைப்பால் இருக்கின்றது. அவளை நம்மகத்திற்கு வரவழைத்து வைத்துக்கொண்டு பாதுகாத்து வருவாயாயின், அவள் நமது குழந்தைக்குப் பால்கொடுத்துப் போஷித்து வருவாள்'

என்ருள். அவள் பர்த்தாவும் பிள்ளையைப்பாதுகாப்ப தற்காக அங்ஙனமே செய்தான். தாய் பிள்ளைக்குத் துந்துகாரி யென்று பேர் இட்டாள். பிறகு மூன்று மா தங்கள் கழிகையில், அந்தப் பசு குழந்தையை ப்ரஸவித் தது. அந்தக் குழந்தை ஸர்வாங்க ஸுந்தரனும் ஸ்வர் ணம்போல் பளபளவென்று தேஜிஷ்டனும் நிர்மலனுமா யிருந்தான். அதைக் கண்டு ப்ராஹ்மணன் ஸந்தோ ஷம் அடைந்து அவனுக்குத் தானே ஸமஸ்த ஸம்ஸ் காரங்களையும் நடத்தினன். அந்த ஆச்சர்யத்தைப் பார்க்கும்பொருட்டு எல்லோரும் அவ்விடம் வந்தார்கள். 'இந்த ப்ராஹ்மணனுக்கு என்ன பாக்யமோ? பசுவுங் கூட இப்படி தேவகுமாரன்போல் அற்புதமான ஒரு பாலனைப் பெற்றதே' என்று ஜனங்களெல்லோரும் சொல்லிக்கொண்டார்கள். தெய்வாதீனமாய் அந்த ரஹஸ்யம் ஒருவர்க்கும் தெரியாமலே யிருந்தது. அந்தக் குழந்தையின் காதுகள் பசுவின் காதுகள் போலிருந்த மையால் அவனுக்குக் கோகர்ணனென்று அவ்வந்தணன் பேர் வைத்தான். சில நாள் கழிந்தபின்பு அந்தப் பிள்ளை கள் இருவரும் யௌவனப்பருவ முடையவரானர்கள். கோகர்ணன் பண்டிதனும் மஹாஜ்ஞானியுமாயிருந் தான். துந்துகாரி மிகவும் அஸத்தாயிருந்தான். அவன் ஸ்நானம் செய்வதும் இல்லை. ஒருவிதமான ஆசாரமும் இல்லை. எவ்விதமான நற்செயலும் அவனிடத்தில் புலப் படாது. அபக்ஷ்ய பக்ஷணம் முதலிய தோஷங்களெல் லாம் அவனிடத்தில் குடிகொண்டிருந்தன. திருடுவதும் பிறர் வீடுகளைக் கொளுத்துவதுமாயிருந்தானகையால் ஸர்வஜனத்வேஷியானன். விளையாட்டிற்காகப் பாலர் களைப் பிடித்துக் கிணற்றில் போகட்டுக்கொன்று கை யில் ஆயுதங்கொண்டு கண்டவர்களையும் ஹிம்ஸிப்பதும் தீனர்களையும் கண் தெரியாதவர்களையும் பீடிப்பது

மாயிருந்தான். அவன் விலைமாதர்களிடம் மோஹங் கொண்டு தமப்பன் ஸம்பாதித்து வைத்த பணங்களை யெல்லாம் அழித்துவிட்டான். ஒருநாள் தாய்தந்தை களை அடித்துப் பாத்ரங்களை யெல்லாம் பிடுங்கிக்கொண் டான். அவனுடைய தந்தையாகிய ஆத்மதேவன் 'ஆ! என்ன வருத்தம்? இதைக்காட்டிலும் பிள்ளையில்லா திருப்பதே மேல். இப்படிப்பட்ட அஸத்து இருந்தும் என்ன உபயோகம்? ஆ! நான் என் செய்வேன்? எங்குப் போவேன்? எங்கே இருப்பேன்? என் துக்கத்தை எவன் போக்குவான்? நான் இந்தத் துக்கத்தினால் ப்ரா ணன்களை விடுகின்றேன். ஆ! எனக்கு என்ன கஷ்டம் நேரிட்டது?' என்று வருந்தி அழுதுகொண்டிருக்கை யில், ஜ்ஞானியாகிய கோகர்ணன் வந்து வைராக்யத் தை உபதேசிக்கத் தொடங்கி, 'ஸம்ஸாரம் ஸாரமற்ற தே; துக்கங்களுக்கெல்லாம் இருப்பிடம்; மதிமயக்கத் தை விளைவிக்கும். யாருடைய பிள்ளை? யாருடைய பணம்? சக்ரவர்த்திக்கும் ஸம்ஸாரத்தில் ஸுகம் இல்லை. ஸம்ஸாரத்தில் வைராக்யமுற்று ஏகாந்த சீலனான முனி வனுக்கே ஸுகம் உள்ளது. பிள்ளையென்கிற இந்த அஜ்ஞானத்தைத் துறந்து வனத்திற்குப் போனால் ஸு கப்படலாம்' என்று தெளியச்சொன்னான். அதைக் கேட்டு ஆத்மதேவனும் அப்படியே வனம் சென்று தேஹத்திலும் அதைப்பற்றின மற்றவைகளிலும் மோ ஹத்தைத் துறந்து வைராக்யமுற்று பகவானுக்குப் பரி சர்யை செய்துகொண்டு ஸ்ரீபாகவதத்தில் தசமஸ்கந்த பாராயணம் பண்ணிக்கொண்டிருந்து கடைசியில் அநா யாஸமாக ஸ்ரீக்ருஷ்ணனை அடைந்தான்.

இங்ஙனம் தமப்பன் காட்டுக்குப் போனபின்பு துந்துகாரி 'பணம் எங்கு வைத்திருக்கிறது? சொல். இல்லையாயின் தடியால் அடிப்பேன்' என்று தாயைவிரட்டு

கையில், அவள் அந்தப் பாதையைப் பொறுக்கமுடியாமல் பயந்து ராத்ரியில் கிணற்றில் விழுந்து மரணம் அடைந்தாள். கோகர்ணன் தீர்த்தயாத்ரைக்காகப் புறப்பட்டுப் போனான். அவனுக்கு துக்கமும் இல்லை, ஸந்தோஷமும் இல்லை. சத்ருவும் இல்லை. பந்துவும் இல்லை. இப்படி பரம விரக்தனாயிருந்தான். துந்துகாரி வீட்டில் ஐந்து விலைமாதர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களைப் போஷிக்கும் பொருட்டுப் பற்பல கொடிய தொழில்களைச் செய்துவந்தான். தினந்தோறும் வெளியிற் சென்று பணங்களையும் ஆபரணங்களையும் ஆடைகளையும் திருடிக்கொண்டு வந்து அவர்களுக்குக் கொடுத்து மீளவும் வெளியிற் சென்று திருடிக்கொண்டு வருவதே கார்யமாயிருந்தான். இங்ஙனம் சில நாள்கள் செல்ல ஆடையாபரணங்களும் பணங்களும் அபாரமாய்க் குவிந்திருப்பது கண்டு, அவ் விலைமாதர்கள் 'இவன் திருடிக்கொண்டிருக்கிறான். ஆகையால் இவன் என்றைக்காவது ஒரு நாள் ராஜனிடம் அகப்பட்டுக்கொள்வது நிச்சயமே. இதில் ஸந்தேஹம் இல்லை. அப்பால் அரசன் இந்தப் பணக்குவியல்களையெல்லாம் பிடுங்கிக்கொண்டு இவனையும் கொன்று விடுவான். பிறகு நமக்கு ஒன்றும் இல்லாமற் போய் விடும். ஆகையால் இவனை நாமே ஏன் கொல்லலாகாது. இவனைக் கொன்றுவிட்டு நாம் பணத்தைப் பங்கிட்டுக்கொள்வோம்' என்று தமக்குள் தாமே ஆலோசனைசெய்து கழுத்தில் உச்சுருக்குப் போகட்டு அவனைக் கொல்ல ஆரம்பித்தார்கள். அவன் வலியனாகையால் சீக்ரத்தில் மரணம் அடையவில்லை. பிறகு நெருப்புத்தணல்களைக் கொண்டுவந்து அவன் முகத்தில் போகட்டார்கள். அக்னிஜ்வாலைகளைப் பொறுக்கமுடியாமல் மிகவும் வருந்தி மரணம் அடைந்தான். அவனுடைய தேஹத்

தை அவர்கள் பள்ளம்வெட்டிப் புதைத்தார்கள். பெரும்பாலும் ஸ்த்ரீகள் ஸாஹஸம் செய்பவர். இந்த ஸங்கதி ஒருவர்க்கும் தெரியவில்லை. கேட்பவர்களுக்கு 'எங்கள் ப்ரியன் தூரதேசம் போயிருக்கிறான். ஒரு வர்ஷம் கழித்து வருவான்' என்று அவர்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஸ்த்ரீகளிடத்தில் விஶ்வாஸம் செய்யலாகாது. அப்படியின்றி எவன் அவர் விஷயத்தில் விஶ்வாஸம் செய்வானோ, அவன் பலவகை துக்கங்களை அநுபவிப்பான். வார்த்தை அம்ருதம்போன்றிருக்கும். ஹ்ருதயமோவென்றால் கூரிய நுனியுடைய கத்தியைப்போன்றதே. ஸ்த்ரீகளுக்கு எவன்தான் இஷ்டமானவன்? ஒரு நாள் ப்ரீதிவைத்த இடத்தில் மற்றை நாள் ப்ரீதி வைக்கமாட்டார்கள். ஆகையால் அவர்கள் அவனைக் கொன்று பணத்தைப் பங்கிட்டுக்கொண்டு போய்ச்சேர்ந்தார்கள். துந்துகாரி தான் செய்த பாபகர்மத்தினால் ப்ரேதரூபம் அடைந்தான். அவன் சுழற்காற்றின் உருவங்கொண்டு பத்துத் திசைகளிலும் பறந்தோடிக் குளிராலும் வெயிலாலும் வருந்தி ஆஹாரமின்றித் தாஹமெடுத்து 'ஆ! தெய்வமே!' என்று அடிக்கடி மொழிந்துகொண்டு எங்கும் சரணம் நேரப்பெறாதிருந்தான். சில காலம் கழிந்தபின்பு கோகர்ணன் லோகத்தார் மூலமாய் துந்துகாரி மரணம் அடைந்ததாகக் கேள்விப்பட்டான். அவன் அநாதனென்பதை நினைத்து அவனுக்குக் கயாஶ்ராத்தம் செய்தான். எந்தெந்தப் புண்யதீர்த்தங்களுக்குப் போனானோ, ஆங்காங்கு அவனுக்கு ஶ்ராத்தம் பண்ணிக்கொண்டு வந்தான். இங்ஙனம் சுற்றிக்கொண்டு கோகர்ணன் தன் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான். ராத்ரி தன் வீட்டில் வந்து ஒருவர்க்கும் தெரியாமல் அங்குப் படுத்து உறங்கினான். தன் பந்துவாகிய கோகர்ணன் அவ்விடம் வந்து படுத்து உறங்குவ

தைக் கண்டு துந்துகாரி அந்த ராத்ரியில் மிகவும் பயங் கரமான தன் உருவத்தைக் காட்டினான். அவன் ஒரு கால் ஆடு போலவும், ஒருகால் யானைபோலவும், ஒரு கால் கடாபோலவும், ஒருகால் இந்த்ரன் போலவும், ஒருகால் அக்னிபோலவும், ஒருகால் புருஷனாகவும் தோற்றினான். இங்ஙனம் மாறிமாறித் தோற்றுவதைக் கண்டு கோகர்ணன் தைர்யசாலியாகையால் 'இவன் எவனோ துர்க்கதி அடைந்தவன்' என்பதை நிச்சயித்து அவனைப் பார்த்து 'நீ யார்? ராத்ரியில் பயங்கரனாகப் புலப்படுகின்றாய். நீ எதனால் இப்படிப்பட்ட தசையை அடைந்தாய்? நீ ப்ரேதனா? அல்லது பிசாசமா? அல்லது ராக்ஷஸனா? உனது உண்மையை எனக்குச் சொல்வாயாக' என்று வினவினான். இங்ஙனம் கோகர்ணனால் வினவப்பெற்ற துந்துகாரியானவன் அடிக்கடி உரக்க அழுதான். வார்த்தையை உச்சரிப்பதற்கு அசக்தனாயிருந்தமையால் கேவலம் ஸம்ஜ்ஞை செய்தானன்றி வாயைத்திறந்து ஒன்றும் சொல்லவில்லை. பிறகு கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு கோகர்ணன் அதை அவன்மேல் ப்ரோக்ஷித்தான். அந்த ஜலம் பட்டமையால் அவன் பாபம் தீர்ந்து நன்றாக மொழியத்தொடங்கி 'வாராய் கோகர்ணனே! நான் உன்னுடைய ப்ராதா; துந்துகாரியென்பவன்; நான் எனது பாபகர்மத்தினால் ப்ராஹ்மண்யத்தைப் போக்கடித்துக் கொண்டேன். நான் மஹத்தான அஜ்ஞானத்தினால் பல பாபகர்மங்களைச் செய்தேன். அவற்றிற்குக் கணக்கே இல்லை. நான் உலகங்கட்கெல்லாம் ஹிம்ஸகனாயிருந்தேன். அத்தகைய நான் ஸ்த்ரீகளால் வருந்திக் கொல்லப்பட்டேன். அதனால் நான் ப்ரேதரூபம் பெற்றேன். துர்த்தசையில் இருக்கின்றேன். நான் என் பாபதோஷத்தினால் வாயுவை ஆஹாரமாகக்கொண்டு ஜீவிக்கின்றேன். ஓ பந்துவே!

தயாநிதி! ப்ராதாவே! என்னைச் சீக்ரமாக இந்த ஆபத்தினின்று விடுவிப்பாயாக' என்றான். அதைக் கேட்டுக் கோகர்ணன் அவனைப் பார்த்து 'உனக்காக நான் விதிப்படி கயாஶ்ராத்தம் செய்தேனே! நீ ப்ரேத உருவத்தினின்று இன்னம் ஏன் விடுபடவில்லை? எனக்கு இது பெரிய ஆச்சர்யமாயிருக்கின்றது. கயாஶ்ராத்தத்தினால் முக்தி உண்டாகவில்லையென்றால், இவ்வுலகில் மற்றொரு உபாயம் இல்லையே. ப்ரேதனே! நான் என்செய்வேன்? அதை எனக்குச் சொல்வாயாக' என்றான். அதற்குமேல் ப்ரேதன் கோகர்ணனைக் குறித்து 'அப்பா! நீ நூறு கயாஶ்ராத்தம் செய்யினும் எனக்கு முக்தி உண்டாகாது. ஆகையால் வேறொரு உபாயம் ஏதேனும் இப்பொழுது நீ ஆலோசிப்பாயாக' என்றான். அதைக் கேட்டுக் கோகர்ணன் ஆச்சர்யமுற்று நூறு கயாஶ்ராத்தம் செய்யினும் மோக்ஷம் உண்டாகாதாயின் உன்னை விடுவிப்பது அஸாத்யமே. நீ இப்பொழுது பயமின்றி உன் இருப்பிடம் போய்ச்சேருவாயாக. உனக்கு மோக்ஷம் உண்டாகக்கூடிய உபாயத்தை நான் ஆலோசித்து நடத்துகிறேன்' என்றான். துந்துகாரியும் அவனால் அங்ஙனம் அனுமதி செய்யப்பெற்று இருப்பிடம் போனான். கோகர்ணன் அன்றிரவெல்லாம் அதைப்பற்றி ஆலோசித்தும் ஒன்றும் தோற்றப்பெற்றிலன். பொழுது விடிந்த பின்பு, அவன் வந்தது தெரிந்து எல்லோரும் ப்ரீதியுடன் அவனைப் பார்க்க வந்தார்கள். அவர்களுக்கு அவன் ராத்ரி நடந்த வ்ருத்தாந்தத்தைச் சொன்னான். வித்வான்களும் யோகிகளும் ஜ்ஞானிகளும் ப்ரஹ்மவாதிகளும் பற்பல ஶாஸ்த்ரங்களை ஆராய்ந்து பார்த்தும் அவனுக்கு மோக்ஷோபாயம் இன்னதென்பதை அறிந்திலர். பிறகு எல்லோரும் ஸூர்யனை உபாஸித்தால் இவனுடைய மோக்ஷோபா

யத்தை அவனே சொல்லவேண்டுமென்று நிர்ணயித்தார்கள். அப்பால் கோகர்ணன் யோக ப்ரபாவத்தினால் ஸூர்யனுடைய வேகத்தை ஸ்தம்பனம் செய்து அந்த ஸூர்யனைப்பார்த்து 'ஜகத்திற்கெல்லாம் ஸாக்ஷியாயிருப்பவனே! என் ப்ராதாவின் முக்திக்கு உபாயம் சொல்வாயாக' என்று வேண்டினான். அதைக்கேட்டு ஸூர்யனும் தூரத்தினின்றே ஸ்பஷ்டமாக மொழியத்தொடங்கி 'ஸ்ரீ பாகவதத்தை ஏழு நாட்களில் வாசித்து முடித்தால் மோக்ஷம் உண்டாகும்' என்றான். இங்ஙனம் ஸூர்யன் மொழிந்த தர்மவார்த்தையை எல்லோரும் கேட்டார்கள். கோகர்ணன் ஸ்ரீபாகவதகதாப்ரவசனம் செய்வதாக நிச்சயித்து முயன்றான். அங்குக் கதை கேட்பதற்காக நானாதேசங்களினின்றும் ஜனங்கள் வந்து சேர்ந்தார்கள். முடவர்களும் குருடர்களும் மூடர்களும் தமது பாபம் கழியுமென்று அவ்விடம் வந்தார்கள். தேவதைகளும் ஆச்சர்யப்படும்படி பெரிய ஸபை சேர்ந்தது. கோகர்ணன் ஆஸனத்தில் உட்கார்ந்து கதை சொல்லத் தொடங்கினவுடனே அந்த ப்ரேதனான துந்துகாரியும் தானெங்கே இருக்கலாமென்று இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தான். ஏழு கணுக்களுடையதும் உயர்ந்திருப்பதுமாகிய ஒரு மூங்கிலைப் பார்த்து அதன் அடியிலிருந்த ரந்த்ரத்தினால் கதையைக் கேட்கும் பொருட்டு அதற்குள் புகுந்துகொண்டான். வெளியில் வாயுரூபத்துடன் இருக்கமுடியாமையால் அவன் மூங்கிற்குள் புகுந்து நின்றான். கோகர்ணன் வைஷ்ணவனான ஒரு ப்ராஹ்மணனைக்கேட்பவர்களில் ப்ரதானனாக ஏற்படுத்திக்கொண்டு ப்ரதமஸ்கந்தம் தொடங்கிக் கதை சொல்லிக்கொண்டு வந்து ஸாயங்காலம் ஆனவுடனே கதையை நிறுத்தினான்.

அப்பொழுது ஓர் ஆச்சர்யம் உண்டாயிற்று. எல்லோ ரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது அந்த மூங்கி லில் ஒரு கணு படீலென்று வெடித்தது. அங்ஙனமே மற்றை நாள் ஸாயங்காலம் கதை நிறுத்தினவுடனே இரண்டாவது கணு வெடித்தது. இங்ஙனம் ஏழுநாட் களிலும் அம்மூங்கிலின் ஏழுகணுக்களும் வெடித்தன. இங்ஙனம் ஸ்ரீபாகவதத்தின் பன்னிரண்டு ஸ்கந்தங்களும் கேட்டமையால் அந்த துந்துகாரி ப்ரேத உருவத்தைத் துறந்து திவ்யரூபம் அடைந்து துளஸிமாலையும் பீதாம் பரமும் அணிந்து நீலமேகம்போல் ச்யாமளவர்ணனுகிக் கிரீடமும் குண்டலங்களும் விளங்கத் தோன்றி உடனே ப்ராதாவான கோகர்ணனை நமஸ்கரித்து இங்ஙனம் மொழியத் தொடங்கி 'அப்பா! பந்துவே! உன்னால் நான் ப்ரேததோஷத்தினின்று விடுபட்டேன். நீ என்னிடம் க்ருபை செய்தனை. பாகவதகதை புண்யமானது. ப்ரே தபீடையையும் போக்கவல்லது. அதிலும் ஸப்தாஹம் மிக மேன்மையுடையது. ஸ்ரீ க்ருஷ்ணலோகத்தைக் கொடுக்கவல்லது. ஸப்தாஹ ச்ரவணத்திற்கு ஸமஸ்த பாபங்களும் நடுங்குகின்றன. இது எத்தகைய க்ரூர மான பாபத்தையும், அக்னி ஸமித்துக்களைக் கொளுத் துவதுபோல் போக்கிவிடும். இந்த ஸ்ரீபாகவத கதை யை ஒரு தடவையாவது கேளாதவனுடைய ஜன்மம் பயனற்றதே. சுகசாஸ்த்ரமாகிய இந்தப் பாகவத கதை யைக்கேளாமல் சரீரத்தைப் போஷித்துக்கொண்டு வரு வதால் என்ன உபயோகம்? சரீரம் நிலையற்றது. தோலே மேல்மூடியிருக்கின்றது. உள்ளே துர்க்கந்தமான மாம்ஸ மே உள்ளது. மலமூத்ரங்களுக்கு இருப்பிடம். கிழத்த னம் சோகம் ரோகம் முதலிய பல ஆபத்துக்களையுடை யது. எவ்வளவு சாப்பிட்டும் மேன்மேலும் ஆஹாரத்தை விரும்புமேயன்றி இதை நிறைத்து விட்டோமென்று

ஒருகாலும் நிச்சிந்தையாயிருக்க முடியாது. இத்தகைய பல தோஷங்களுக்கிடமாயிருப்பது; ஒரு க்ஷணத்தில் நாசம் அடையக்கூடியது. இப்படிப்பட்ட சரீரத்தினால் ஸ்திரமான கார்யத்தை ஏன் ஸாதிக்கலாகாதோ? காலையிற் சமைத்த அன்னம் ஸாயங்காலத்திற்குள் கெட்டுப் போகின்றது. இத்தகைய அன்னரஸத்தினால் வளர்ந்த சரீரத்தை எவன் ஶாஶ்வதமென்று நினைப்பான்? ஸப்தாஹஶ்ரவணத்தினால் ஸ்ரீ விஷ்ணுவை ஸமீபத்தில் பெறலாம். ஆகையால் ஸம்ஸாரம் தீருவதற்கு இதுவே முக்யமான உபாயம். ஜலத்தில் குமிழிகள் போலவும், ஜந்துக்களில் கொசுக்கள் போலவும், பாகவத கதை கேட்காத சரீரங்கள் வீணாகவே மரணத்தை அடைகின்றன: ஜ்ஞான சூன்யமான மூங்கிலுக்கும் கதை கேட்பதனால் கணுக்கள் பிளந்தனவாயின், ப்ராணிகளின் அஜ்ஞானமாகிற கணுக்களெல்லாம் பிளந்து போமென்பதில் என்ன ஆச்சர்யம்? ஸப்தாஹ ஶ்ரவணம் செய்தால் மனத்திலுள்ள அஜ்ஞானமெல்லாம் தீரும். ஸமஸ்த ஸம்சயங்களும் தொலையும்; ஸமஸ்த கர்மங்களும் க்ஷீணித்துப்போம். ஸம்ஸாரமாகிற சேற்றை அலம்பிச் சுத்திசெய்யும் புண்ய தீர்த்தமாகிற ஸ்ரீபாகவத கதை ஹ்ருதயத்தில் இருக்குமாயின் மோக்ஷம் கையிலிருப்பதாகவே பண்டிதர்கள் நிர்ணயித்திருக்கின்றார்கள்' என்றான். அவன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் வைகுண்டவாஸிகளோடு கூடியதும் பளபளவென்று பேரொளியுடன் ஜ்வலிப்பதுமாகிய ஒரு விமானம் வந்தது. அப்பொழுது துந்துலியின் புதல்வனாகிய துந்துகாரி எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கையில் விமானத்தை அடைந்தான். கோகர்ணன் அவ்விமானத்திலுள்ள வைஷ்ணவர்களைப் பார்த்து 'நான் கதை சொல்லக் கேட்டவர் பலரும் பாபமற்றவராயிருக்

கையில், அவர்களுக்கும் ஒரே காலத்தில் விமானங்களை ஏன் கொண்டுவரவில்லை. இங்கு எல்லோரும் ஸமமாக வே கேட்டுக்கொண்டிருந்தார்கள். பலத்தில் மாத்ரம் ஏன் பேதம் உண்டாயிற்று? வாரீர் வைஷ்ணவர்களே! இதை எனக்கு மொழிவீர்களாக' என்றான். அவ் வைஷ்ணவர்களும் அவனைப் பார்த்து 'கேட்டதில் பேதம் உண்டாகையால்தான் பலத்திலும் பேதம் உண் டாயிற்று. எல்லோரும் கேட்டார்களென்பது வாஸ்தவ மே. ஆயினும் அவ்வாறு மனனம் செய்யவில்லை. ஆகை யால் பலத்தில் பேதம் உண்டாயிற்று. இந்த ப்ரேதனு கிய துந்துகாரி இவ்வேழு ராத்ரிகளும் உபவாஸமிருந் தே கதை கேட்டான். ஊக்கமுள்ள மனத்துடன் அதை மனனஞ் செய்தான். மனவூக்கமில்லாமல் கேட்கும் கேள்வியெல்லாம் வீணே! உறுதியில்லாத ஜ்ஞானமும், ஊக்கமில்லாத கேள்வியும், நம்பிக்கையில்லாத மந்த்ர மும், மனநிலைமையில்லாத ஜபமும், வைஷ்ணவரில்லாத தேசமும், ஸத்பாத்ரமில்லாத ப்ராத்தமும், வேதம் ஓதாதவனுக்குக் கொடுத்த தானமும், ஆசாரமில்லாத குலமும் பயனற்றவைகளே. முக்யமாய்க் கதை கேட்ப தற்குக் குருவாக்யத்தில் விஸ்வாஸமும் தன்னிடத்தில் தீனனென்கிற எண்ணமும் (நமக்கு இதையொழிய வேறு கதியில்லையென்கிற எண்ணமும்) மனோதோஷங்களை வென்றிருக்கையும் மனவூக்கமும் ஆகிய இவை குறை வற இருக்கவேண்டும். இந்த நியமத்துடன் கேட்பார் களாயின், அப்பொழுதுதான் கேட்டதற்குப் பலன் உண் டாகும். மீளவும் இவ்வாறு கேட்பார்களாயின், எல்லா ரும் வைகுண்டலோகத்தில் வஸிக்கப் பெறுவார்கள். வாராய் கோகர்ணனே! உனக்கு பகவான் தானே கோ லோகம் கொடுப்பான். இது நிச்சயம்' என்றுமொழிந்து அவர்கள் எல்லோரும் வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்

கள். பிறகு கோகர்ணன் ச்ராவணமாஸத்தில் (ஆவணி மாதத்தில்) ஸப்தாஹ விதியின்படி மீளவும் கதை சொல்லத்தொடங்கினான். முன் கேட்டவர்களே மீளவும் அந்த நியமத்துடன் ஏழு ராத்ரிகள் கதை கேட்டார்கள். நாரதனே! கதையின் முடிவில் நடந்ததைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. விமானங்களோடும் பக்தர்களோடும் ஸாக்ஷாத் பகவான் தானே ஆவிர்ப்பவித்தான். ஜயசப்தங்களும் நமஸ்ஸப்தங்களும் அங்குப் பெருங் கோஷமாயிருந்தன. ஸ்ரீ ஹரி அவ்விடத்தில் வந்து ஸந்தோஷத்தினால் பாஞ்சஜன்ய த்வனி செய்தான். கோகர்ணனை ஆலிங்கனஞ் செய்து அவனுக்குத் தன்னுடைய ஸாரூப்யத்தைக் கொடுத்தான். கேட்ட மற்றவர்களெல்லோரையும் ஒருக்ஷணத்திற்குள் நீலமேகம் போல் கறுத்துப் பீதாம்பரம் உடுத்துக் கிரீடமும் குண்டலங்களும் அணிந்து தன்னோடொத்திருக்கும்படி செய்தான். அப்பொழுது கோகர்ணனுடைய க்ருபையினால் அவ்வூரில் சண்டாலர் வரையிலுமுள்ள ஸகலமான ஜீவராசிகளும் விமானங்களில் ஸ்தாபிக்கப் பெற்றார்கள். அவர்களெல்லோரும் யோகிகள்போய்ச் சேரும்படியான தன்னுடைய லோகத்திற்குப் பகவானால் அனுப்பப்பெற்றார்கள். கோகர்ணனைப் பகவான் தானே கோலோகத்திற்கு அழைத்துக் கொண்டுபோனான். முன்பு ஸ்ரீராமன் அயோத்யையிலுள்ளவர்களெல்லோரையும் அழைத்துக்கொண்டு போனாற்போல், ஸ்ரீ பாகவதம் கேட்ட ஜனங்களெல்லோரையும் ஸ்ரீக்ருஷ்ணன் யோகிகளுக்கும் சந்த்ர ஸூர்யர்களுக்கும் அடைய முடியாத கோலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போனான். நாரதனே! இது ஸ்ரீபாகவத கதையின் மஹிமைக்கு நிதர்சனமான இதிஹாஸம். சித்ரகூடத்தில் வாஸஞ் செய்கின்ற சாண்டில்யமுனிவர் புண்யமான இந்த இதிஹாஸத்தை ப்ரஹ்மாநந்தத்துடன் அவ்வப்பொழுது

படித்துக் கொண்டிருப்பார். இந்த இதிஹாஸத்தை ஒரு தடவை கேட்பராயின், இது அவர்களுடைய ஸமஸ்த பாபஸமூஹங்களையும் பஸ்மம் செய்யும். ஶ்ராத்த காலத்தில் படிப்பார்களாயின், பித்ருதேவதைகளுக்கு இது மேலான த்ருப்தியை விளைக்கும். தினந்தோறும் இதைப் பாராயணம் செய்வார்களாயின், இது மோக்ஷத்தைக் கொடுக்கும்' என்றார்கள். அங்ஙனம் ஸனகாதிகள் நாரதருக்குப் பாகவத கதையின் மஹிமையையும், அதற்கு நிதர்சனமான இதிஹாஸத்தையும் சொல்லி மேல் ஸப்தாஹ ஶ்ரவணம் நடத்தவேண்டிய க்ரமங்களையும், அதற்குவேண்டிய ஸஹாய த்ரவ்யஸம்பத்தியையும் அந்தத் தர்மத்தை நடத்துங் காலத்தில் அனுஷ்டிக்க வேண்டிய வ்ரத உபவாஸாதி நியமங்களையும் க்ரமமாக விவரித்து மொழிந்தார்கள். பாகவத பாராயணம் முடிந்ததற் பின் சாந்திக்காக நடத்தவேண்டிய ப்ராஹ்மண போஜனதானாதி தர்மங்களையும் விவரித்தார்கள். அங்ஙனம் ஸப்தாஹ விதியின்படி ஶ்ரீபாகவத கதையை நாரதருக்கும் அங்குள்ள மற்ற ஜனங்களுக்கும் முதலே பிடித்துக் கடைசி வரையிலும் விடாமல் ஸவிஸ்தரமாகச் சொல்லி முடித்தார்கள். ஏழுநாள் வரையிலும் எல்லோரும் நியமத்துடன் கதை கேட்டபின்பு பகவானை விதியின்படி ஸ்தோத்ரம் செய்தார்கள். அதெல்லாம் முடிந்த பின்பு ஜ்ஞான பக்தி வைராக்யங்களுக்கு நல்லபுஷ்டியும் பரிபூர்ணமான சிறந்த யௌவனமும் உண்டாயின. நாரதரும் தன் மனோரதம் கைகூடப்பெற்று க்ருதார்த்தரானார். அவர் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று மஹத்தான ஆநந்த ஸாகரத்தில் மூழ்கினார். பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய நாரதர் இங்ஙனம் கதை கேட்டு ஸந்தோஷத்தினால் தழுதழுத்த உரை

யுடன் கைகூப்பிக்கொண்டு 'குமாரர்களே! கருணாநிதி களான உங்களால் நான் அனுக்ரஹிக்கப்பட்டு தன்ய னானேன். ஸமஸ்த பாபங்களையும் போக்குமவனாகையால் ஹரியென்னும்பேருடைய பகவான் எனக்கு இப்பொழுது கைப்பட்டான். தவத்தைத் தனமாகவுடையவர்களே! ஸ்ரீபாகவத கதையைக் கேட்பது ஸமஸ்த தர்மங்களைக் காட்டிலும் மேற்பட்டதென்று நினைக்கின்றேன். ஏனென் னில், இதனால் வைகுண்ட நாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கைப்படுகிறான்' என்றார். இங்ஙனம் அந்த வைஷ்ண வோத்தமரான நாரதர் சொல்லிக்கொண்டிருக்கையில், யோகிகளில் சிறந்த சுகமுனிவர் அங்கும் இங்குமாகச் சுற்றிக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தார். அவர் பதினாறு வயதுடைய பாலன் போன்றவர். வ்யாஸ மஹர் ஷியின் புதல்வர். ஜ்ஞானமாகிற ஸமுத்ரத்தைக் கரை புரண்டு வளரும்படி செய்வதில் சந்த்ரன் போன்றவர்; ஆத்மலாபத்தினால் ஸந்தோஷம் அடைந்து ஒன்றிலும் குறையில்லாதவர். அவர் ப்ரீதியுடன் ஸ்ரீபாகவதத்தை மெல்லமெல்லப் படித்துக்கொண்டு கதையின் முடிவில் அவ்விடம் வந்தார். ஸபையிலுள்ளவர் எல்லாரும் தேஜஸ்வியாகிய அம்முனிவர் வந்தவுடனே எழுந்து அவர்க்குச் சிறந்த ஓராஸனம் கொடுத்தார்கள். தேவ ரிஷியான நாரதரும் ப்ரீதியுடன் அவரைப் பூஜித்தார். அவரும் ஸுகமாக உட்கார்ந்து ஸபிகர்களைக் குறித்து நிர்மலமான ஒரு வார்த்தையை இங்ஙனம் மொழியத் தொடங்கி 'வாரீர் பண்டிதர்களே! ரஸிகர்களே! பிழை க்க விருப்பமுடையவர்களே! இந்த ஸ்ரீபாகவதம் வேத மாகிற கல்ப வ்ருக்ஷத்தில் உண்டான பழம். இது அம் ருதம் போன்ற ருசியுடையது. சுகமஹர்ஷியாகிற கிளி யின் முகத்தினின்று நழுவினது. இதன் ரஸத்தை எல் லோரும் ப்ரீதியுடன் பருகிக் களிப்பீர்களாக. இந்த

ஸ்ரீபாகவத புராணத்தில் ராக த்வேஷாதி தோஷங்களற்ற ஸத்புருஷர்கள் ஆசரிக்கும்படியான பரமதர்மம் கூறப்படுகின்றது. ஸம்ஸார தாபங்களைப் போக்குவதும் க்ஷேமங்களைக் கொடுப்பதுமாகிய பரப்ரஹ்மமாகிற உண்மையான வஸ்துவை இந்தப் புராணத்தினால் தெளிவாக அறியலாம். இந்தப் புராணம் ஜ்ஞாநாதிகாரான வ்யாஸமுனிவரால் இயற்றப்பெற்றது. ஆயிரம் சொல்லி என்? இந்த ஸ்ரீபாகவதத்தைக் கேட்பார்களாயின், உடனே பரமபுருஷனை ஸர்வேஶ்வரனை மனத்தில் நிலைநிறுத்திக்கொண்டு அனுபவிக்கப் பெறுவார்கள். இந்த ஸ்ரீபாகவதபுராணம் மற்ற எல்லாப் புரா்ணங்களைக் காட்டிலும் சிறப்புடையது. இது வைஷ்ணவர்களுக்கு நிதி போன்றது. இதில் வைராக்யத்திற்கிடமான தத்த்வஜ்ஞானம் நன்கு வெளியிடப்பட்டிருக்கின்றது. ஜ்ஞான பக்தி வைராக்யங்களோடுகூடிய நிவ்ருத்தி தர்மம் இதில் விசதமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இதைக் கேட்டும் படித்தும் இதன் பொருளை விசாரித்து மனனஞ் செய்பவர் பக்தி விளையப்பெற்று மோக்ஷத்தை அடைவார்கள். ஸ்வர்க்கத்திலாவது ஸத்யலோகத்திலாவது கைலாஸத்திலாவது வைகுண்டத்திலாவது இந்த ரஸம் கிடைக்காது. ஆகையால் பாக்யமுடையீர்களே! இந்த ரஸத்தைப்பானஞ் செய்வீர்களாக. இதைக் கைவிடவேண்டாம். கைவிடவேண்டாம்' என்றார். இங்ஙனம் சுகமுனிவர் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸ்ரீபகவான், ப்ரஹ்லாதன் பலிசக்ரவர்த்தி உத்தவர் அர்ஜுனன் ஆகிய இவர்களுடன் ஆவிர்ப்பவித்தான். நாரதர் அவர்களெல்லோரையும் பூஜித்தார். ஸ்ரீபகவான் பெரிய ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்து அநுக்ரஹத்துடன் திகழ்கின்றமையில் அவனுக்கெதிரில் நின்றுகொண்டு அவர்கள் கீர்த்தனஞ்செய்யத் தொடங்கினார்கள். அதைக்

கேட்கும் பொருட்டு ருத்ரனும் பார்வதியும் ப்ராஹ்மதேவனும் அவ்விடம் வந்தார்கள். ப்ராஹ்லாதன் தாளம்போட்டான். உத்தவர் காம்ஸ்யவாத்யம் வாசித்தார். நாரதர் வீணையை எடுத்துக்கொண்டு பாடினார். அர்ஜுனன் ஸ்வரங்களில் ஸமர்த்தனானகையால் ராகங்களை ஆலாபித்தான். இந்த்ரன் ம்ருதங்கம் வாசித்தான். குமாரர்கள் ஜயசப்தங்களைச் சொன்னார்கள். சுகர் கீர்த்தனைகளின் பாவங்களை எடுத்துரைத்தார். அப்பொழுது ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் மூன்றும் ஸபை நடுவில் நர்த்தனம் செய்தன. இங்ஙனம் ஆச்சர்யமான அந்தக் கீர்த்தனத்தைக் கேட்டு பகவான் மஹாநந்தத்துடன் அவர்களை நோக்கி 'ஓ பாகவதர்களே! நான் இப்பொழுது கதையின் கீர்த்தனத்தினால் ஸந்தோஷம் அடைந்தேன். நீங்கள் என்னிடத்தினின்று வரம் விரும்பிப் பெறுவீர்களாக' என்றான். அதைக் கேட்டு ப்ரீதியினால் மனவுருக்கமுடையவராகிய அம்மஹானுபாவர்கள் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து பகவானைப் பார்த்து 'மஹாப்ரபூ! நாங்கள் அபேக்ஷிக்கத்தக்க அனுக்ரஹம் மற்றொன்றும் இல்லை. இக்கலிகாலத்தில் ஸப்தாஹ ஸ்ரவணம் செய்பவருடைய ஹ்ருதயத்தில் நீ நித்யவாஸஞ் செய்ய வேண்டும். இம்மனோரதத்தை மாத்ரம் நீ நிறைவேற்ற வேண்டும்' என்றார்கள். அந்த பகவானும் 'ததாஸ்து (அப்படியே ஆகட்டும்) என்று மொழிந்து அந்தர்த்தானம் அடைந்தான். அப்பால் நாரதர் ஸனக ஸனந்தனாதிகளையும் சுகாதி மஹர்ஷிகளையும் நமஸ்கரித்தார். பிறகு அங்கு வந்தவரெல்லோரும் அந்த ஸ்ரீபாகவத கதையாகிற அம்ருதத்தைப் பானஞ்செய்து மதிமயக்கமெல்லாம் தொலையப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து தந்தமது இருப்பிடங்களுக்குப் போனார்கள். இங்

னம் பக்தி தன் புதல்வர்களான ஜ்ஞான வைராக்யங் களோடு சுகமுனிவரால் தன் சாஸ்த்ரமாகிய பாகவதத் தில் பாதுகாக்கப்பட்டது. ஆகையால் பாகவதத்தைப் பாராயணம் பண்ணுவோர்களின் மனத்தில் பக்தியும் ஜ்ஞான வைராக்யங்களும் குடிகொள்கின்றன. அது முதல் அவ்வைஷ்ணவர்களின் மனத்தில் பகவான் நித்ய வாஸஞ்செய்கின்றான். தாரித்ரியதுக்கமாகிற ஜ்வரத்தி னால் பீடிக்கப்பட்டவர்களும் மாயையாகிற பிசாசுகளால் தொந்தரவு செய்யப் பெற்றவர்களும் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கிப் பரிதபிக்கின்றவர்களுமாகிய ப்ராணிகளின் க்ஷேமத்தின் பொருட்டே இந்த ஸ்ரீபாக வதம் கர்ஜனை செய்கின்றது' என்றார். இங்ஙனம் மொழிகின்ற ஸூதரைப்பார்த்துச் சௌனகர் இவ்வாறு வினவத்தொடங்கி, 'வாரீர் ஸூதரே! சுகமுனிவர் பரீ க்ஷித்து மன்னவனுக்கு இந்த ஸ்ரீபாபவத கதையை எப் பொழுது மொழிந்தார்? கோகர்ணன் துந்துகாரிக்கு மொழிந்தது எப்பொழுது? நாரதருக்கு ஸனகாதிகள் மொழிந்தது எப்பொழுது? எனக்குள்ள இந்த ஸந்தே ஹத்தைத் தீர்ப்பீராக' என்றார். அதைக்கேட்ட ஸூத பௌராணிகரும் சௌனகரைக் குறித்து 'வாரீர்மா முனிவரே! ஸ்ரீக்ருஷ்ணன் பூலோகத்தை விட்டுப் புறப் பட்டுப்போன நாள் முதல் முப்பது வர்ஷங்கள் சென்ற பின்பு புரட்டாசிமாதத்தில் நவமியினன்று தொடங்கிச் சுகர் பரீக்ஷித்துக்கு இந்தக்கதையை உபதேசித்தார். பரீக்ஷித்து கேட்டதற்குமேல் கலியில் இருநூறு வர்ஷங் கள் சென்றபின்பு ஆனிமாதத்தில் சுக்லபக்ஷத்து நவமி யினன்று தொடங்கி கோகர்ணன் சொன்னான். அது முதல் நூற்றுமுப்பது வர்ஷங்கள் சென்றபின்பு கார்த் திகைமாதத்தில் சுக்லபக்ஷத்து நவமியினன்று தொடங்கி

ப்ரஹ்மகுமாரர்கள் நாரதருக்குச் சொன்னார்கள். நீர் கேட்டதையெல்லாம் உமக்கு இங்ஙனம் மொழிந்தேன். கலிகாலத்தில் ஸம்ஸாரமாகிற ரோகத்தைப் போக்கும் மருந்து ஸ்ரீபாகவதகதை யொன்றே யென்று நிச்சயிக்கப் பட்டிருக்கின்றது. இது ஸ்ரீக்ருஷ்ணனுக்கு மிகவும் ப்ரிய மாயிருக்கும்; ஸமஸ்த பாபங்களையும் போக்கும்; மோக்ஷத்திற்கு முக்ய ஸாதனம்; பக்தியை வளர்க்கும். இத் தகையதான இந்த ஸ்ரீபாகவத கதையை ப்ரீதியுடன் கேட்பீர்களாக. மற்ற உபாயங்களை ஆசரிப்பதனால் பயன் என்ன? லோக ஸம்ஹாரகனான யமனும் தன் தூதர் களைக் குறித்து அவருடைய காதோடு ஏகாந்தமாக 'வாரீர் தூதர்களே! பகவானுடைய கதைகளைக் கேட் பதில் மனவூக்கமுடைய மஹானுபாவரிடம் போகவேண் டாம். அவர்களைக் கண்டால் கையும் பாசமுமாயிருக் கும் பயங்கரவேஷத்தைத தவிர்ந்து பக்தி ஶ்ரத்தை யுடன் பணிந்து செல்வீர்களாக. நாம் மற்றவர்க்கு ப்ர புக்களே யன்றி வைஷ்ணவர் விஷயத்தில் நாம் ப்ரபுக் களல்லோம். அவர்களே நமக்கு ப்ரபுக்களாவார்' என் றான். ஆகையால், எவன் இந்த ஸ்ரீபாகவத கதையை ப்ரீதியுடன் படிப்பானோ, எவன் பக்தியுடன் கேட்பானோ, அவனுக்கு எப்படிப்பட்ட மனோரதமும் கைகூடாத தன்று. எல்லாம் கைகூடும்' என்று ஸூதபௌராணி கர் ஶௌனக முனிவர்க்குச் சொன்னார்.

---

* இந்த ஸ்ரீ பாகவத மாஹாத்ம்யம் ஸ்ரீபாத்ம புராணத்தில் உத் தரகண்டத்தில் ஆறு அத்யாயங்களால் கூறப்பட்டிருக்கின்றது.



ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## ப்ரதம ஸ்கந்தம்.

---

ஜந்மாத்யஸ்ய யதோऽந்வயாதிதரத
ஶ்சார்த்தேஷ்வபிஜ்ஞஸ் ஸ்வராட்
தேநே ப்ரஹ்ம ஹ்ருதா ய ஆதிகவயே
முஹ்யந்தி யத்ஸூரய: ।
தேஜோவாரி ம்ருதாம் யதா விநிமயோ
யத்ர த்ரிஸர்கோ ம்ருஷா
தாம்நா ஸ்வேந ஸதா நிரஸ்தகுஹகம்
ஸத்யம் பரம் தீமஹி ॥

இந்த ஸகல ப்ரபஞ்சத்திற்கும் பிறத்தல் இருத்தல் மறைதல் ஆகிய இவற்றை விளைவிப்பவனும் இந்த ப்ரபஞ்

---

ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸகல வேதரஹஸ்யங்களை உணர்ந்தவரும்* பராசரமஹர்ஷியின் புதல்வரும் ஸத்யவதியிடத்தில் பகவானுடைய அம்சமாய் அவதரித்தவருமான பாதராயணரென்னும் வ்யாஸபகவான் ஸமஸ்தகல்யாண

சத்திலுள்ள எல்லாப்பொருள்களிலும் அமைந்திருக்கை

குணாத்மகனான ஸர்வேச்வரன் படைத்ததும், ப்ரஹ்மதேவன் முதல் க்ரிமி கீடாதி பர்யந்தமாயிருப்பதுமான ஜகத்திலுள்ளவர் அனைவரும் பரமபுருஷன் தன்னை ஆராதிக்கும்பொருட்டுக் கரண களேபரங்கள் கொடுக்கப்பெற்றும், நான்முகன்முதல் பரம்பரையாக வருவதும், தர்ம அர்த்த காம மோக்ஷங்களை அறிவிப்பதுமான வேதங்களை அத்ய யனஞ் செய்தும், தந்தமது கர்மங்களைத் தொடர்ந்த மதியுடையவரா கையால் அதனடியாக வந்த ஜன்ம ஜராமரணாதியான ஸம்ஸாரதுக் கங்களால் அடியுண்டு வேதப்பொருள்களை உணராமல் வருந்துவதைக் கண்டு, மனஇரக்கங்கொண்டு, அவர்களை உஜ்ஜீவிக்கச் செய்யவிரும்பி, அறிய அரியதும் ஜன்மந்தோறும் ஹிதோபதேசஞ் செய்கையால் அனேகமாயிரம் மாதாபிதாக்களைக் காட்டிலும் பேரன்புடையதும் பூர் வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இருவகைப்பட்டதுமானவேதத் துக்கு வ்யாக்யானஞ் செய்யமுயன்று தமது சிஷ்யரான ஜைமினி மஹர்ஷியைக் கொண்டு பூர்வபாகத்துக்கு வ்யாக்யானஞ் செய்வித் துத் தான் உத்தரபாகத்தைப் பிழையில்லாத சாரீரக ந்யாயங்களைக் கொண்டு வ்யாக்யானஞ் செய்து, பெரும்பாலும் வேதத்தின் பூர்வபா கார்த்தத்தைத் தெளிவுடன் உரைப்பதும் பஞ்சம வேதமென்று ப்ர ஸித்தி பெற்றதுமான ஸ்ரீமஹாபாரதமென்னும் இதிஹாஸத்தை நிர்மித்து முக்யமாக வேதப் பொருள்களை விசதமாகக் கூறுவதான ஸ்ரீபாகவதமென்னும் புராணரத்னத்தை நிர்மிக்கத் தொடங்கி முத லில் மங்களஞ் செய்கின்றார்:—ஜந்மாத்யஸ்ய—இத்யாதியான முதல் ஸ்லோகத்தினால்.

பதம்—ஜந்மாதி, அஸ்ய, யத:, அந்வயாத், இதரத:, ச, அர்த்தே ஷு, அபிஜ்ஞ:, ஸ்வராட், தேநே, ப்ரஹ்ம, ஹ்ருதா, ய:, ஆதிகவ யே, முஹ்யந்தி, யம், ஸூரய:, தேஜோவாரிம்ருதாம், யத:, விநிமய:, யத்ர, த்ரிஸர்க:, ம்ருஷா, தாம்நா, ஸ்வேந, ஸதா, நிரஸ்த குஹகம், ஸத்யம், பரம், தீமஹி.

இதன் தாத்பர்யம்—(அஸ்ய)— இந்த ப்ரபஞ்சத்திற்கு, (யத:) எந்த பரப்ரஹ்மத்தினின்று, (ஜந்மாதி) ஜன்மம் முதலியது, ஜன்ம ஸ்திதி லயங்கள்—பிறத்தல் இருத்தல் மறைதல் ஆகிய இவை, [஭வதி] விளைகின்றதோ, இங்கு ஸ்திதியிலாவது லயத்திலா

யால் இதற்கு உபாதானகாரணமும் ஸ்வரூபத்தாலும்

---

வது மோக்ஷம் அடங்கியதென்றுணர்க. ஸ்திதியாவது — ரக்ஷணம். இதையே இருத்தலென்றும் கூறுவர். இருத்தல் க்ஷேமமாயிருத்தல், அதாவது—அனிஷ்டங்கள் தொலையப் பெற்று இஷ்டங் கைகூடப்பெற்றிருக்கை. இதுவே மோக்ஷம். அல்லது—ஸம்ஸாரத்தினின்று கடந்து ப்ரக்ருதியினின்று விடுபட்டு ஈச்வரன் திருவடி சேரப் பெறுதலாயின், லயமெனப்படுகிற ப்ரளயத்தில் சேரும். இதனால் ஜகத்திற்கு உபாதான காரணமும் நிமித்தகாரணமும் ஈச்வரனே யென்றமை ஏற்பட்டது. உபாதான காரணமாவது:—குடத்திற்கு மண்போல் தானே கார்யமாக மாறுந்தன்மையுடைய வஸ்து. நிமித்தகாரணமாவது—குடத்திற்குக் குயவன்போல் கார்யத்தை விளையச்செய்யும் வஸ்து. ஆனால் உலகத்தில் குடத்திற்கு மண் உபாதான காரணமாகவும் குயவன் நிமித்த காரணமாகவும் இருப்பதைக் கண்டிருக்கின்றோம். ஆகையால் உபாதான காரணமும் நிமித்த காரணமும் வேறுபட்டிருக்க வேண்டியிருக்க, இங்குப் பரப்ரஹ்மம் ஒன்றே ஜகத்திற்கு உபாதான காரணமும் நிமித்த காரணமுமாயிருக்கை எங்ஙனே கூடுமென்னில் (அந்வயாதிதரதச்சார்த்தேஷு) அர்த்தேஷு—கார்யமான தேவமனுஷ்யாதி வஸ்துக்களில் (அந்வயாத்) அனுவ்ருத்தியால்—தொடர்ந்திருக்கையால், எல்லாப்பொருள்களிலும் தான் அமைந்திருக்கையால், இந்த ப்ரபஞ்சத்திற்கு எவன் உபாதான காரணமோ என்று பொருள். (இதரதঃ) அப்படியில்லாமையால், தொடர்ந்திராமையால், ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டு அவற்றை நியமித்துக்கொண்டு தனியே யிருக்கையால் எவன் இந்த ப்ரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமோ என்று பொருள். ஈச்வரன் ஜகத்தெல்லாம் தானே யென்னும்படி எல்லாவற்றிலும் அமைந்திருக்கையால் ஜகத்திற்கு உபாதான காரணமும், ஜகத்தைக் காட்டிலும் வேறுபட்டு அதை நியமித்துக்கொண்டிருக்கையால் அதற்கு நிமித்தகாரணமும் ஒருவனே ஆவானென்று கருத்து. ஸர்வசக்தியனாகாத குயவன் மண்ணின் கார்யமான குடங்களில் அமைந்திராமையால் குடத்தைப்பற்றி அவன் உபாதான காரணமாக மாட்டான். அசேதனமான மண் குடத்திற்கு உபாதான காரணமாயினும் குடத்தைக் காட்டிலும் வேறுபட்டிருக்கை நேராமையால் நிமித்த காரணமாகாது.

ஸ்வபாவத்தாலும் இந்த ப்ரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் வேறுபட்டிருக்கையால் இதற்கு நிமித்தகாரணமும், வேதாந்தங்களில் சொல்லப்படும் குணங்கள் தன்னிடத்தில் பொருந்துகையாலும் மற்ற ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் பொருந்தாமையாலும் இந்தப்ரபஞ்சத்திற்கெல்லாம் காரணமாயிருக்க உரியவனும் என்றும் எங்கும் எல்லாவற்றையும் அறிந்தவனும் சேதனர்களைப்

---

பரப்ரஹ்மமோ என்றால்—ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் அறியப் பெறாததும் வேதாந்தங்களால் மாத்ரமே அறியக்கூடியதும் சேதன அசேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதும் இருவகைக் காரணங்களுமாயிருக்கைக் குரிய ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்கள் அமைந்திருப்பதுமாகையால் இரண்டு காரணங்களும் தானே ஆகக்கூடுமென்று கருத்து. வேதாந்தங்களில் 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' 'ஐததாத்ம்யமிதம் ஸர்வம்' 'அயமாத்மா ப்ரஹ்ம' 'தத் த்வமஸி' இத்யாதியான சில பாகங்கள் பரப்ரஹ்மம் தானே ஜகத்தென்னும்படி எல்லாவற்றிலும் உட்புகுந்து நிறைந்திருக்குந் தன்மையைச் சொல்லுகின்றன. 'தஸைக்ஷத' 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன் ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ சரீரம் ய ஆத்மனி திஷ்டன் ஆத்மனோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா சரீரம்' இத்யாதியான சில பாகங்கள் எல்லாவற்றிலும் வேறுபட்டு அவற்றுள் எங்கும் மறைந்து நின்று நியமித்துக்கொண்டிருக்கின்றமையைச் சொல்லுகின்றன. அல்லது-(அந்வயாத்) இருவகைக் காரணங்களும் பரப்ரஹ்மமே யென்று கூறுகின்ற 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்' இத்யாதியான வேதாந்த வாக்யங்கள் பரமபுருஷனிடத்தில் பொருந்துகையாலும், (அர்த்தேஷு) மற்றப்ரக்ருதி புருஷர்களில் (இதரத:) பொருந்தாமையாலும் பரமபுருஷனே இருவகைக் காரணங்களுமென்று பொருள். ப்ரஹ்மத்தின் ஸ்வரூப குணாதிகள் எப்படி சாஸ்த்ரத்தினால் அறியத்தக்கவைகளோ, அப்படியே இருவகைக் காரணங்களும் பரப்ரஹ்மமேயென்றும் ப்ரதானமும் ஜீவனும் அப்படி ஆகமாட்டா என்றும் சாஸ்த்ரத்தினால் ஏற்படுகிறதென்று கருத்து. காரணமாயிருக்கைக் குரிய ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களமைந்தவனென்கிறது மேல்—(அபிஜ்ஞ:) எல்லாக் காலங்களிலும்

போல் கர்மத்திற்குட்படாமல் ஸ்வதந்த்ரனாயிருப்பவனும் இயற்கையாகவே எல்லாவற்றையும் அறியுந்திறமை

எல்லா இடங்களிலும் எல்லாவற்றையுமறிந்தவன்; ஸர்வஜ்ஞன். இது நிமித்த காரணமாயிருக்கைக்கு வேண்டியது. இது உபாதானகாரண மாயிருக்கைக்குரிய ஸர்வசக்தித்வத்திற்கும் உபலக்ஷணம். ஸர்வஜ்ஞ னும் ஸர்வசக்தியனுமாகையாலே இருவகைக் காரணங்களுமாயிருக் கை அவனுக்குப் பொருந்துமென்று கருத்து. இந்த ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்கள் ஸுக்ருதத்தினால் விளைந்திருக்குமாயின் கர்மத் திற்குட்பட்டவனென்று த்யானஞ்செய்வதற்குரியனல்லனேயென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் (ஸ்வராட்) ஸ்வதந்த்ரன். கர்மத்திற்குட் பட்டவர்களைத் தூண்டுமவன். அல்லது—ஸர்வஜ்ஞத்வாதிகுணம் ஸுக்ருதத்தால் விளைந்ததாயின், அது அளவிடலாயிருக்குமாகை யால் எல்லா உலகங்களுக்கும் காரணமாயிருக்க நேராது. அதனால் 'காரணந்து த்யேயஃ' என்னும ஶ்ருதிக்கு விரோதமாகக் காரணமல் லாத வஸ்துவை த்யானஞ்செய்தல் உசிதமன்றே யென்று சங்கித்துச் சொல்லுகிறார்—(ஸ்வராட்) ஸ்வேநைவ ராஜதே ப்ரகாஶதே ஸர்வம் விஷயீகரோதீதி ஸ்வராட்—தானே ப்ரகாசிப்பவன்—எல்லாவற்றை யும் அறியுந்தன்மையன். இது இயற்கையேயன்றிக் கர்மத்தினால் வந் ததன்றென்று கருத்து. ஈஶ்வரன் உலகத்தை யெல்லாம் படைக்க வல்லவனே ஆயினும் அவன் ஜகத்தைப் படைப்பதற்கு ப்ரயோ ஜனம் சொல்லவேண்டும். ப்ரயோஜனமில்லாமல் தெரியாதவனும் ஒருகார்யத்தில் முயற்சி கொள்ளமாட்டானல்லவா? உலகம் படைப் பதில் ஈஶ்வரனுக்கு ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை. புத்திபூர்வமாக ஒருவன் ஒருகார்யத்தைச் செய்யத்தொடங்குவதற்கு இருவகை ப்ர யோஜனங்கள் உண்டு. தன் ப்ரயோஜனமாவது, பிறர் ப்ரயோஜன மாவது. ஈஶ்வரன் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்றவனாகை யால் ஜகத்தைப் படைப்பதனால் அவனுக்கு இல்லாத ப்ரயோஜன மொன்று பெறவேண்டியதில்லை. ஆகையால் தன் ப்ரயோஜனத்திற் காக ஜகத்தைப் படைக்கிறானென்று சொல்லமுடியாது. இங்ஙன மே பிறர் ப்ரயோஜனத்திற்காகப் படைக்கிறானென்பதும் சேராது. நிறைவாளனான ஈஶ்வரன் பிறர்க்காகப் படைப்பதாவது—பிறரை அனுக்ரஹிக்கும் பொருட்டுப் படைக்கையாம். கர்ப்பத்தில் இருத்தல்

யுடையவனும் ப்ரஹ்மதேவனுக்காகத் தன் ஸங்கல்பத்தினால் மறையை விரித்தவனும் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் அளவிடமுடியாதிருக்கையால் பண்டிதர்களும்

ஜன்மித்தல் கிழத்தன்மை மரணம் நரகம் முதலிய பலவகை துக்கங்கள் நிறைந்த உலகத்தைப் படைப்பது பிறரை அனுக்ரஹிக்கைக்காகவென்று மொழியலாகாது. பிறரை வாழ்விக்க வேண்டுமென்னும் நினைவுடன் படைப்பானாயின் ஸுகமே வடிவாயிருக்கும்படி ஜகத்தைப் படைக்கவேண்டும். அதில்லாமையால் பிறர் ப்ரயோஜனத்திற்காகவென்று சொல்லமுடியாது. இங்ஙனம் ப்ரயோஜனமில்லாமையால் ப்ரஹ்மம் ஜகத்திற்குக் காரணமென்று கூறலாகாது, என்னும் சங்கையில் சொல்லுகிறார் (தேநே ப்ரஹ்ம ஹ்ருதா ய ஆதிகவயே) எவன் ப்ரஹ்மதேவனுக்காகத் தன் ஸங்கல்பத்தினால் மறையை விரித்தானோ. இங்கு 'யோ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் யோவை வேதாம்ச ப்ரஹிணோதி தஸ்மை' என்னும் ஸ்ருதி ப்ரமாணம். இங்ஙனம் வேதரூபமான சாஸ்த்ரத்தை வெளியிட்டது ஹிதத்திற்காகவென்பது வெளிச்சமே. இங்ஙனமே ஜகத்தைப் படைப்பதும் ஹிதத்திற்காகவே. ஈஸ்வரன் தயையினால் சேதனர்கள் மோக்ஷம் பெறுதற்கு வேண்டிய ஜ்ஞானலாபத்திற்கு மூலமான கரண களேபரங்களைக் கொடுக்கும் பொருட்டு ஜகத்தைப் படைக்கிறான். கர்ப்பவாஸம் ஜன்மித்தல் கிழத்தனம் முதலிய துக்கங்கள் அவரவர் கர்மத்தினால் விளைபவையாகையால் அது ஈஸ்வரனுடைய குற்றமன்று. வேதசாஸ்த்ரத்தை வெளியிட்டதற்கு ப்ரயோஜனம் இதுவென்று தெரிவிக்கும் பொருட்டு அதை வெளியிடாத பக்ஷத்தில் வரும் கெடுதியைக் காட்டுகிறார். (முஹ்யந்தி யம் ஸூரயঃ) ஜ்ஞானமுடைய உபாஸகர்கள் எதன் விஷயத்தில் மதிமயக்கம் பெறுகின்றார்களோ. அளவிடமுடியாத வைபவமுடையதாகையால் பரப்ரஹ்மத்தை அறியமுயன்று வ்யாகுலப்படுகிறார்களென்று கருத்து. அளவிடக்கூடாத பரப்ரஹ்மத்தை உள்ளபடி அனுஸந்திக்கையே சாஸ்த்ரத்தை வெளியிட்டதற்கு முக்யப்ரயோஜனம். இந்த வேதமென்னும் சாஸ்த்ரத்தை வெளியிடாத பக்ஷத்தில், அளவிடக்கூடாத ஸ்வரூபரூபகுண விபூதிகளை வேறு ப்ரமாணங்களால் அறிய முடியாமையால் பரமபுருஷார்த்தங்களான அவற்றை அறிய நேராமல் பண்டிதர்கள் மதி மயங்கப் பெறு

**அறியமுயன்று மதிமங்கப் பெறும்படி திகழ்கின்றவனும் தேஜஸ்ஸு ஜலம பூமி ஆகிய இவற்றிற்கு ஒன்றோ டொன்று கலந்திருத்தலை விளைப்பவனும் ஸத்வம் ரஜஸ் ஸு தமஸ்ஸு என்னும் இக்குணங்கள் அமைந்த ப்ரக்**

---

வார்கள். ஆகையால் இவர்க்கு மதிமயக்கம் விளையாதிருக்கவேண்டு மென்று மறையை விரித்தானென்று கருத்து. ப்ரக்ருதியும் புருஷ னும் ஜகத்காரணமாக மாட்டார்கள். ப்ரஹ்மமே ஜகத்காரணமென்று நிலைப்படுத்துவதற்குக் காரணஞ் சொல்லுகிறார் (தேஜோவாரிம்ருதாம் யதோ விநிமய:) தேஜஸ்ஸு ஜலம் பூமி ஆகிய இவற்றிற்கு ஒன்றோ டொன்று கலந்திருத்தல் எவனால் உண்டாகின்றதோ, த்ரிவ்ருத்கர ணம் செய்தவன் எவனோ என்று பொருள். இந்த த்ரிவ்ருத்கரணம் அண்ட ஸ்ருஷ்டிக்கு முன்பே நடந்ததாகையாலும் அண்ட ஸ்ருஷ்டி க்குப் பின்பு நான்முகன் பிறந்தானாகையாலும் மற்ற தேவ மனுஷ்ய யாதிகள் அனைவரும் நான்முகன் மூலமாய்ப் படைக்கப்பட்டவராகை யாலும் ஈஶ்வரனையொழிந்த மற்ற சேதனருடைய கார்யமாகமாட் டாது. சேதனகார்யமான இது அசேதனமான ப்ரக்ருதிக்குப் பொருந்தாது. ஆகையால் இது பரமபுருஷனுடைய கார்யமே யென்று கருத்து. 'பரப்ரஹ்மம் ஒருவிதமான விகாரமும் இல் லாததென்று ஶ்ருதி சொல்லுகிற்று. ஒன்று ஒன்றாக மாறும் வஸ்து வே உபாதான காரணமாம். அத்தன்மை எவ்விதத்திலும் மாறுந் தன்மையற்ற பரப்ரஹ்மத்திற்கு எங்ஙனே' யென்னில் சொல்லு கிறார் (யத்ர த்ரிஸர்கோ ம்ருஷா) (த்ரிஸர்க:) ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற இம்மூன்று குணங்களால் இயற்றப் பெற்ற ப்ரபஞ் சம், (யத்ர ம்ருஷா) எவனிடத்தில் பொய்யோ, இல்லையோ. ப்ரபஞ் சம் ஸத்த்வ ரஜஸ் தமோ குணங்களைப்பற்றினதாகையால் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைப் பற்றினதன்று. ஆகையால் ப்ரஹ்மத்திற்கு விகார மில்லை. விகாரத்திற்கிடமான காரணத்வமும் விகாரமில்லாமையும் ஒன்றோடொன்று சேராதவையாகையால் அவை யிரண்டும் பரப் ரஹ்மத்தினிடத்தில் எங்ஙனே பொருந்து மென்னில்—ஈஶ்வரன் சேதனாசேதனங்களைச் சரீரமாக வுடையவனாய்க் கொண்டு ஜகத்திற் குக் காரணமாகிறானாகையால் காரணமாயிருக்கையைப்பற்றி வரும் விகாரங்களெல்லாம் சரீரமான சேதனாசேதனங்களைப்பற்றினவை

ருதியால் இயற்றின ப்ரபஞ்சத்தன்மை இல்லாதவனும் தன் ஜ்ஞானமென்னும் ப்ரகாசத்தினால்தான் அறியாதது ஒன்றுமே இல்லையென்னும்படி எல்லாம் அறிந்து அஜ்ஞானமற்றிருப்பவனும் விகாரங்களின்றி என்றும் ஒரு வகைப்பட்டவனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுபவனு

களே. பரப்ரஹ்மம் விகாரமற்றதே. ஆகையால் விரோதமில்லை. மேல் சேதனனுக்குள்ள ப்ரமம் முதலியவைகளும் மற்றுமுள்ள எல்லாத் தோஷங்களும் பரப்ரஹ்மத்திற்கு இல்லையென்கிறார் (யாம்நா ஸ்வேந ஸதா நிரஸ்தகுஹகம்) என்றும் ஸங்கோசமில்லாததும் ஸ்வாபாவிகமுமான ஜ்ஞானத்தினால் தான் அறியாத வஸ்து ஒன்றுமேயில்லையென்னும்படி எல்லாம் அறிந்தவன். இதனால் முக்தரைக்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கை சொல்லப்பட்டது. முக்தர் ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு ப்ரக்ருதிஸம்பந்தமற்றுப் பரமபதம்பெற்றவர். அவர்க்கு மோக்ஷதசையில் ஜ்ஞானஸங்கோசமில்லையாயினும் ஸம்ஸாரதசையில் ஜ்ஞானஸங்கோசமுண்டாகையாலும் மேல்வந்திருக்கும் ஜ்ஞானவிகாஸம் பகவத்கடாக்ஷத்தினால் வந்ததாகையாலும் என்றும் ஸ்வாபாவிகமாயிருப்பதன்று. (ஸத்யம்) ஸ்வாபாவிகமான நிலைமையுடையது. இதனால் விகாரங்களுக்கிடமான அசேதனத்திலும் அதன் ஸம்பந்தமுடைய சேதனனைக்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கை தெரிவிக்கப்பட்டது. ப்ரக்ருதி ஒன்று மற்றொன்றாக மாறுவதும், சேதனன் ஜ்ஞானஸங்கோசம் முதலிய ஸ்வபாவமாற்றங்களைப் பெறுவதுமாயிருக்கையாலே ஸ்வாபாவிகமான நிலைமை அவ்விரண்டிற்கும் இல்லை. (பரம்) தேசகால வஸ்து பரிச்சேதங்களற்ற ஸ்வரூபமுடையது. இதனால் பரிச்சின்ன ஸ்வரூபரான நித்யர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருக்கை அறிவிக்கப்பட்டது. இங்குள்ள ஸத்யபதத்தினால் 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்கிற ச்ருதிவாக்யம் நினைவூட்டப்படுகிறது. ஆகையால் இங்கு 'ப்ரஹ்ம' என்னும் பதத்தைக் கூட்டிக்கொள்வது. இங்ஙனம் ஜகத்காரணமான ப்ரஹ்மம் தன்னையொழிந்த எல்லாவற்றிலும் விலக்ஷணமாயிருக்குமென்று சொல்லப்பட்டது. இங்ஙனம் எவ்விதத்திலும் அளவிட முடியாத ஸ்வரூபமுடைய பரப்ரஹ்மத்தை (தீமஹி) த்யானிப்போமாக. உபாஸிப்போமாக. உபாஸனத்தை ஆசம்ஸிக்கையால் ஆசீர்வாதரூபமான மங்களம் செய்யப்பட்

மாகிய பரமபுருஷனை த்யானஞ் செய்வோமாக. [1] மா
முனிவர் இயற்றினதும் அழகியதுமான இந்த ஸ்ரீ பாக

டது. 'ஆஶீர் நமஸ்க்ரியா வஸ்து நிர்தேஶோவாபி தந்முகம்' என்று ப்ரமாணம். இதில் 'ஜந்மாத்யஸ்ய யத:' என்று ஶாரீரகமீமாம்ஸையின் இரண்டாவது ஸூத்ரத்தை முதலில் எடுக்கையால் அங்குச் சொல்லுகிற நிர்ணயங்களெல்லாம் இந்த ப்ரபந்தத்தில் தெளிவாக வெளியாமென்று தெரிவிக்கப்பட்டது. இங்கு 'தீமஹி' என்னும் சப்தத்தாலும் மற்ற அர்த்தங்களாலும் காயத்ரியின் ஸ்வரூபம் ஸங்க்ரஹிக்கப்பட்டது (சுருக்கமாகச் சொல்லப்பட்டது). இந்தப்புராணம் காயத்ரி தொடக்கமாயிருக்குமென்பது—

ग्रந்தோऽஷ்டாதஶஸாஹஸ்ரோ த்வாதஶஸ்கந்தஸம்மித: ।
ஹயக்ரீவ ப்ரஹ்மவித்யா யத்ர வ்ருத்ர வதஸ்ததா ।
காயத்ர்யாச ஸமாரம்போ யத்ர ஸாபவதம் விது:'

என்று ஸ்காந்த புராணத்தில் உத்தரகண்டத்தில் கூறப்பட்டது. அங்ஙனமே மாத்ஸ்ய புராணத்திலும்—

'ஆரப்ய யத்ர காயத்ரீம் வர்ண்யதே தர்மவிஸ்தர: ।
வ்ருத்ராஸுரவதோபேதம் தத்பாகவதமிஷ்யதே'

என்று சொல்லப்பட்டது.

1. இங்கு -

'தர்ம: ப்ரோஜ்ஜித கைதவோऽத்ர பரமோ நிர்மத்ஸராணாம் ஸதாம்
வேத்யம் வாஸ்தவமத்ர வஸ்து ஶிவதம் தாபத்ரயோந்மூலநம் ।
ஸ்ரீமத்பாகவதே மஹாமுநிக்ருதே கிம்வா பரைரீஶ்வர: (ஸத்யோ)
ஸத்யோ ஹ்ருத்யவருத்யதேऽத்ர க்ருதிபிஶ்ஶுஶ்ரூஷுபிஸ்தத்க்ஷணாத்'

என்பது மூலம். இந்த ஶ்லோகத்தினால் இந்த ப்ரபந்தத்தில் சொல்லுகிற விஷயம் இன்னதென்றும், இதற்கு ப்ரயோஜனம் இன்னதென்றும், இந்த ப்ரபந்தத்திற்கு அதிகாரி இன்னானென்றும் சொல்லுகிறார். விஷயமாவது முக்யமாய் நிரூபிக்கப்படும் பொருள். அந்த விஷயம் இங்கு தர்மம். அது ஸாத்யமென்றும் ஸித்தமென்றும் இருவகைப்பட்டிருக்கும். ஸித்தமான வஸ்துவே தர்மமென்பது

'யேசவேதவிதோ விப்ரா யேசாத்யாத்ம விதோ ஜநா:।
தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்'

என்ற பாரத வசனத்தில் காணலாம். (வேதவித்துக்களான

வதமென்னும் மஹாபுராணத்தில், பிறர் பெருமையைப்

ப்ராஹ்மணர்களும் ஆத்மஸ்வரூபம் அறிந்த மற்றவரும் மஹாநுபாவனுன ஸ்ரீக்ருஷ்ணனை மேலான தர்மமாகச்சொல்லுகின்றனர்) என்று இந்த வசனத்தின்பொருள். இதில் ஸ்ரீக்ருஷ்ணனைத் தர்மமென்கிறது. க்ருஷ்ணன் ஸித்தவஸ்து வென்பது வெளிச்சமே. அவன் ஸ்வயம்புவாகையால் ஒருவரால் ஸாதிக்கத்தகுந்தவனல்லன். மற்றும் பெரியோர் 'அலௌகிகத்வே ஸதி ஸ்ரேயஸ்ஸாதநத்வம் தர்மலக்ஷணம்' என்று கருதுகின்றனர். லோகாதீதமாய்க்கொண்டு நன்மைகளை நிறைவேற்றிக்கொடுப்பது தர்மமென்று இதன் கருத்து. ஸித்ததர்மமாவது பரமாத்மா. பரமாத்மா லோகாதீதனுய் நின்று நன்மைகளை நிறைவேற்ற வல்லவனென்பது ஸித்தமே. நன்மையாவது ஸம்ஸாரத்தினின்று கடந்து ப்ரக்ருதி ஸம்பந்த மற்று அதன் மூலமான துக்கங்களைத் துறந்து பரமபதஞ்சென்று மஹாநந்தஸ்வரூபனுன பரமாத்மாவை அனுபவித்தல். இதை நிறைவேற்றுவதற்குப் பரமாத்மா ஒருவனே வல்லவன். 'அம்ருதஸ்யைஷ ஸேதுः' என்று ஸ்ருதி இங்கு ப்ரமாணம். அம்ருதம்-மோக்ஷம். மோக்ஷங்கொடுப்பதற்கு இந்தப் பரமாத்மாவே உபாயமென்கை. மோக்ஷமாவது கீழ்ச்சொன்ன பரமாத்ம ப்ராப்தியே. ஸாத்ய தர்மமாவது--பரமாத்மாராதன ரூபமான பக்தி. 'தர்ம:ப்ரோஜ்ஜிதகைதவோऽத்ர பரமோ நிர்மத்ஸராணாம் ஸதாம்' என்பது வரையில் ஸாத்யதர்மத்தைச் சொல்லுகிறது. 'வேத்யம் வாஸ்தவமத்ர வஸ்து ஸிவதம் தாபத்ரயோந்மூலநம்' என்பது வரையில் ஸித்ததர்மத்தைச் சொல்லுகிறது. (ஈஸ்வரஸ் ஸத்யோ ஹ்ருத்யவருத்யதேऽத்ர க்ருதிபி: ஸுஸ்ரூஷுபிஸ் தத்க்ஷணாத்' என்ற இதனுல் ப்ரயோஜனஞ் சொல்லுகிறது. ப்ரயோஜனம், வ்யவஹிதமென்றும் அவ்யவஹிதமென்றும் இருவகைப்பட்டிருக்கும். அவ்யவஹித ப்ரயோஜனமாவது-உடனே விளையும் ப்ரயோஜனம். வ்யவஹித ப்ரயோஜனமாவது—க்ரமத்தில் விளையும் ப்ரயோஜனம். இங்கு அவ்யவஹித ப்ரயோஜனம், அனுயாஸமாக ஈஸ்வரனை மனத்தில் இருத்தியனுபவித்தல். வ்யவஹித ப்ரயோஜனம் - பகவதனுபவம் பண்ணப்பண்ண க்ரமத்தில் விளையும் தாபத்ரயசாந்தி. தாபத்ரயமாவது - ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதெய்விகங்களென்று மூன்று வகைப்பட்ட தாபங்கள். தாபம்—துக்கம். ஆத்யாத்மிகதாபமாவது—ரோகாதிகளால் சரீரத்தில் விளையும் துக்கம். ஆதிபௌதிகதாபமாவது—மற்ற ப்ராணிகளால் விளையும் துக்கம். ஆதிதெய்

**பொறுதிருக்கும் தன்மையாகிய மாத்ஸர்யம் முதலிய தோஷங்களொன்றுமில்லாதபெரியோர்கள் ஆசரிப்பதும்**

விகதாபமாவது - தெய்வாதீனமாய் விளையும் புத்ரகளத்ராதி மரண ரூபமான துக்கம். மோக்ஷத்தில் இச்சையுடையவன் இந்த ப்ரபந்தத்தைக் கற்க அதிகாரியென்பது இந்த ப்ரயோஜனத்தினால் ஏற்படுகின்றது. (ப்ரோஜ்ஜித கைதவ꞉) வஞ்சிக்கவேண்டு மென்னும் நினைவுடன் வெளிப்பட்ட ப்ரபந்தங்களில் சொல்லுகிற சைத்யவந்தனம் முதலியவற்றைப்போலன்று இதில் சொல்லும் பொருளென்றமை ஏற்படுகின்றது. (நிர்மத்ஸராணாம் ஸதாம் தர்ம꞉) மனத்தில் த்வேஷமில்லாத பெரியோர்கள் அனுஷ்டித்து வரும் தர்மமென்கையால் வேதத்தில் சொன்ன அபிசாரம் முதலியவற்றைப் போன்றவையன்றென்று தெரிகிறது. அபிசாரம்-சூன்யம்வைத்தல். இது முதலியவை த்வேஷமுடைய அற்பர்செய்யும் செயல்கள். (பரம꞉) எல்லாவற்றிலும் மேலாயிருப்பது. இதனால் அற்பபலன்களைக் கொடுக்கும் காம்யகர்மங்களைப் போலன்றென்று தெரிவிக்கப்பட்டது. காம்ய கர்மமாவது-ஒரு பலனை உத்தேசித்துச் செய்யுஞ் செயல். ஸ்வர்க்கம் வேண்டுமென்று ஜ்யோதிஷ்டோமாதி யாகஞ்செய்தல் காம்யகர்மம். அல்லது-மத்ஸரமென்று காமம் க்ரோதம் முதலியவற்றிற்கும் உபலக்ஷணம். காமக்ரோதாதி தோஷங்களற்று ஶமதமாதியான நற்குணங்கள் அமைந்து மோக்ஷத்தில் இச்சையுடைய பெரியோர்கள் செய்யும் தர்மமென்கை. இதனால் ஸ்வர்க்கம் முதலிய அற்பபுருஷார்த்தங்களைக்குறித்துச் செய்யுஞ்செயல்களன்று இங்குச் சொல்லுபவையென்று கருத்து. (பரம꞉) 'ஸர்வேஷாமேவ தர்மாணாமுத்தமோ வைஷ்ணவோ விதி꞉' என்கிறபடியே பகவானுடைய முகமலர்த்தியே முக்யபலனாகப்பெற்ற செயலென்கை. ஸ்வார்த்த மோக்ஷமென்றும் பரார்த்த மோக்ஷமென்றும் மோக்ஷம் இருவகைப்பட்டிருக்கும். ஸ்வார்த்த மோக்ஷமாவது—நான் துக்கங்களைத் துறந்து மஹாநந்தத்தைப் பெறவேண்டுமென்று ஸாதிக்கும் மோக்ஷம். பரார்த்த மோக்ஷமாவது-பகவானுடைய முகமலர்த்தியே பலனென்று அவனையே உபாயமாகப் பற்றினவன் அவனுடைய அனுக்ரஹத்தினால் பெறும் மோக்ஷம். இந்தப் பரார்த்த மோக்ஷத்தை விளைக்கும் தர்மமே பரம தர்மம். (பரம꞉) என்றால் மேன்மையுடையதென்று பொருள்.

கபடமற்றதும் மேன்மையுடையதுமான தர்மத்தையே அனைவரும் ஸாதிக்கவேண்டுமென்று கூறப்படுகின்றது. பின்னும், இம்மஹாபுராணத்தில், பெரியோர்கள்

இதற்கு மேன்மையாவது—தான்ஸுகிக்கவேணுடுமென்கிற ஸ்வார்த்த மோக்ஷம் போலன்றிப் பரமபுருஷனுடைய முகமலர்த்தியே பயனென்றிருக்கும் மோக்ஷத்தை விளைக்கையாகிற பெருமையே. இங்ஙனம் ஸாத்யதர்மரூபமான விஷயம் சொல்லப்பட்டது. இனிமேல், மோக்ஷத்தையே பயனாகவுடைய ஸாத்யதர்மத்தினால் ஆராதிக்கப்படுவதும் இந்தப் புராணத்தினால் அறியக்கூடியதுமான பரப்ரஹ்மமாகிற ஸித்த தர்ம மென்னும் மற்றொரு விஷயத்தைச் சொல்லுகிறார்—(வேத்யம் வாஸ்தவமத்ர வஸ்து ஶிவதம் தாபத்ரயோந்மூலநம் ஸ்ரீமத் பாகவதே மஹா முநிக்ருதே) பகவத இதம் பாகவதம்—பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைத் தெளிவுடன் ப்ரதிபாதிக்கையாலே (நிரூபிக்கையாலே) இந்தப் புராணத்திற்கு பாகவதமென்னும் பேர் உண்மையாயிருக்கும். (மஹாமுநிக்ருதே) பெருமையுடைய முனிவர் இயற்றினது. முனிவர்க்குப் பெருமையாவது 'ஸஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:' என்று வேதங்கள் புகழும்படி மிகவும் ஆப்தராயிருக்கும் பெருமை. ஆப்தனாவான் உண்மையை மொழிபவன். இதனால் இந்தப்புராணத்திற்கு வக்த்ருவைலக்ஷண்யம் உண்டென்று தெரிகிறது. வக்த்ருவைலக்ஷண்யமாவது-ப்ரபந்தத்தை இயற்றினவன் விலக்ஷணனாயிருக்கப் பெறுகை. மற்றை தேவதைகள், இல்லாத குணத்தை ஏறிட்டுப்புகழவேண்டியவை. இங்கு நிரூபிக்கப்படும் தேவதை அப்படியன்று. என்பதை அறிவிக்கும்பொருட்டு (வாஸ்தவம்) என்கிறார். வஸ்துநோ பாவ: வாஸ்தவம். வாஸ்தவம் அஸ்யாஸ்தீதி வாஸ்தவம்—ஏறிட்டுச்சொல்ல வேண்டாதபடி ஸ்வாபாவிகமான தர்மங்களை யுடையது. (ஶிவதம்) மங்களத்தைக் கொடுப்பது. இங்கு மங்களமாவது மோக்ஷாநந்தமே. இதனால் இஷ்டங்களைக் கொடுக்குந்தன்மை கூறப்பட்டது (தாபத்ரயோந்மூலநம்) ஆத்யாத்மிகம் முதலிய மூன்று தாபங்களைப் போக்குவது. ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களின் விவரம் முன்னமே கூறப்பட்டது. இதனால் அனிஷ்டங்களைப் போக்குந்தன்மை ஏற்பட்டது, அல்லது (வாஸ்தவம்) என்பதனால் வேறு சாஸ்த்ரங்களில் 'ப்ரக்ருதி ப்ரஹ்மத்திற்குட்படாமல் ஸ்வதந்த்ரமாகி ஜகத்திற்குக் காரணமாயிருக்கும். வேறு

வருந்தி அறிவதும் மங்களத்தைக் கொடுப்பதும் தாபத்ரயத்தைப் போக்குவதும் வாஸ்தவமுமான வஸ்து இன்னதென்று தெளிவாக ஓதப்படுகிறது. மற்ற சாஸ்த்ரங்களாலென்னப்ரயோஜனம்? கேட்கவேண்டுமென்னும் விருப்பமுடைய மஹாபாக்யசாலிகள் இந்தப் புராணங் கேட்டவுடனே பரமபுருஷனை மனத்தில் நிறுத்திக் கொண்டு அனுபவிக்கப் பெறுவார்கள். [1] ரஸத்தை அறிந்தவர்களும் பகவானை ஆராய்ந்தறியுந் தன்மையு

---

ப்ரஹ்மமென்பது கிடையாது' என்று சொல்வது போலன்றியே இது உண்மையான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூப ஸ்வபாவாதிகளை உள்ளபடியே அறிவிக்குமென்று அந்தச்சாஸ்த்ரங்களைக் காட்டிலும் இது விலக்ஷணமாயிருக்கை அறிவிக்கப்பட்டது. ப்ரஹ்மத்திற்குட்படாத ப்ரக்ருதி காரணமென்பது ப்ரமாணங்களுக்குச் சேராது. ஆகையால் அங்ஙனம் ஸ்வதந்த்ரமான ப்ரக்ருதியே காரணமென்று சொல்லும் மற்ற சாஸ்த்ரம் ப்ரமாணமாகமாட்டாது. (ஶிவதம் தாபத்ரயோந்மூலநம்) என்கிற இவ்விரண்டு பதங்களால் அற்பர்களும் பல வருத்தங்களால் வருந்துமவர்களும் அற்பஸுகங்களைக் கொடுப்பவருமான தேவதாந்தரங்களைப் போலன்று இங்குச் சொல்லப்படும் பரவஸ்துவென்று தோற்றுகிறது. ஆக மோக்ஷஸாதனமான தர்மமும் அத்தால் ஆராதிக்கப்படும் தேவதையும் இந்தப் புராணத்திற் சொல்லப்படும் விஷயமென்று சொல்லப்பட்டது. இனி மற்ற சாஸ்த்ரங்களால் ப்ரயோஜனமில்லையென்கிறது (கிம்வா பரைঃ) என்று. மேல் ப்ரயோஜனஞ் சொல்லுகிறது (ஈஶ்வரஸ் ஸத்யோ ஹ்ருத்யவருத்யதேऽத்ர க்ருதிபிঃ ஶுஶ்ரூஷுபிஸ் தத்க்ஷணாத்) ஈஶ்வரன் கேட்போர்களின் காதுவழியாய் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்து நிற்பானென்று கருத்து. 'யத்நேந சித்தே விநிவேஶ்ய' என்கிறபடியே மனத்தினால் நினைக்கமுடியாத ஈஶ்வரனை அநாயாஸமாக மனத்தில் நிலைநிறுத்துவது இதைக் கேட்டவுடனே உண்டாகும் பலன். தாபத்ரயம் நீங்கப் பெறுதல் பகவதனுபவம் பண்ணப்பண்ண நாளடைவில் விளையும் பலன்.

1. இங்கு 'நிகமகல்பதரோர் கலிதம் ஃபலம் ஶுகமுகாதம்ருத த்ரவஸம்யுதம்| பிபத பாகவதம் ரஸமாலயம்முஹுரஹோ ரஸிகா

**டையவருமான மஹானுபாவர்களே! மோக்ஷமாகிற ஸாராம்சத்தோடு கூடியதும் மிகுந்த ருசியுடையதும் சுகமஹர்ஷியாகிற கிளியின் முகத்தினின்று நழுவினதும் பாகவதமென்னும் பேருடையதுமான வேதமென்னும் கல்ப வ்ருக்ஷத்தின் பழத்தை உங்கள் வாழ்நாள் முழுவதும் இப்புவியில் பருகிக் களிப்பீர்களாக.**

---

ஹாவி ஹாவுகா:' என்பது மூலம். இங்ஙனம் விஷய ப்ரயோஜனங்களைச்சொல்லினும் இது ப்ரமாணமென்கிற நிச்சயம் ஏற்படாவிடின் இதைக்கேட்க நேராது. ஆகையால் 'இது வேதங்களின் ஸாரமே' என்று இதன் ப்ராமாண்யத்தைச் சொல்லுகிறார். இந்தப் புராணத்தைக் கல்ப வ்ருக்ஷமாக நிரூபித்துச்சொல்லுவதற்குக் காரணம் இது தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நான்கு புருஷார்த்தங்களையும் அவற்றை ஸாதிக்கும் உபாயங்களையும் அறிவித்து அவ்வழியால் தர்மாதிகளின் பலன்களை விளைவிப்பதாகையே. (வாஊத--சாப்பிடுங்கள்) என்னுமல், (பிவத—பானஞ்செய்வீர்கள்) என்கையால் மாம்பழம் முதலியவை தோலுங் கொட்டையுமாய் அஸாராம்சங்கள் அதிகமாயிருப்பதுபோலன்றிக் கல்பவ்ருக்ஷத்தின் பழம் முழுவதும் ரஸமயமாயிருப்பதுபோல் இந்தப் புராணமும் அஸாராம்சம் சிறிதுமின்றி முழுவதும் ஸாரமாயிருக்குமென்று தோற்றுகிறது. (ஶுகமுவாஜீலிதம்) உயர்ந்த மரத்திலிருக்கும் பழம் கிளியின் மூக்கால் தன்னுண்டு எப்படி ஸுகமாய் எடுத்து அனுபவிக்கக் கூடியதாயிருக்குமோ, அப்படியே வேதமாகிற வ்ருக்ஷத்தின் நுனிக்கிளையான வேதாந்தங்களில் விளையும் ஜ்ஞானமாகிற பழம் சுகமஹர்ஷியாகிற கிளியின் முகத்தினின்று நழுவி ஸுகமாய்க் கிடைக்கக்கூடியதாயிருக்குமென்று கருத்து. 'த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா' என்கிற ஶ்ருதியின்படி சுகமஹர்ஷியைப் பக்ஷியென்கிறது. ஜ்ஞானகர்மங்கள் இரண்டு சிறைகள்போல் கமனஸாதனமாயிருக்கையாலே ஜ்ஞானிகளைப்பக்ஷியென்பது மற்றிடத்திலும் உண்டு. வேதமாகிற வ்ருக்ஷத்தின் பழமென்கையாலே வேதத்தின் ஸாரார்த்தங்களே இதில்சொல்லப்படுகின்றனவென்றும், சுகருடைய மூலமாய் வந்ததென்கையால் சிஷ்டர் பரிக்ரஹித்ததென்றும் ஏற்பட்டது. இங்கு 'ஶுகமுவாஜீலிதம்' என்கையால் இந்தப் புராணத்தைச் சுகர்வெளியிட்ட

[1] நைமிசமென்னும் பேருடைய திவ்ய க்ஷேத்ரத்தில் சௌனகர் முதலிய முனிவர்கள் பேரானந்தம் அளிப்

---

வரென்றும் இதை இயற்றினவர் வ்யாஸ மஹர்ஷியே யென்றும் சிலர் கூறுகின்றனர். சுகரே இதை இயற்றினதாக வேறு சிலர் கூறுகின்றனர்.

1. இங்கு 'நைமிஶேऽநிமிஷக்ஷேத்ரே ருஷய: ஶௌநகாதய: । ஸத்ரம் ஸ்வர்காய லோகாய ஸஹஸ்ரஸமமாஸத' என்பது மூலம். (ஸ்வர்காய லோகாய) இங்கு ஸ்வர்க்க லோகமாவது பரமபதம். 'அநந்தே ஸ்வர்கே லோகே ஜ்யேயே ப்ரதிதிஷ்டதி' என்றும் 'ஸ்வர்கே லோகே அம்ருதத்வம் பஜந்தே' என்றும் ஶ்ருதியில் பரமபதத்தை ஸ்வர்க்கஶப்தத்தால் சொல்லுவதுபோல் இங்கும்சொல்லுகிறது; இல்லையாயின் 'ருஷய: ஶௌநகாதய:' என்பது பொருந்தாது. 'தஶாஶ்வமேதீ புநரேதி ஜந்ம க்ருஷ்ண ப்ரணாமீ ந புநர்பவாய' (பல அஶ்வமேதயாகங்கள் பண்ணினும் மீண்டு ஜன்மித்தல் மாறாது. க்ருஷ்ணனுக்கு ஒரு ப்ரணாமஞ்செய்தவன் மீளவும் ஜன்மம் பெறமாட்டான்) என்று சொல்லும் பரமபாகவதரான ஶௌனகர் அற்பமான ஸ்வர்க்கபோகத்தை விரும்பினரென்பது பொருந்தாது, ருத்விக்குக்களே யஜமானர்களாயிருக்கப்பெற்ற யாகம் ஸத்ரமெனப்படும். அல்லது பகவானுடைய குணங்களைக் குழாங்கூடி அனுபவிக்கையாகிற ப்ரஹ்ம ஸத்ரத்தை இங்கு ஸத்ரமென்கிறது. அதன் ஸ்வரூபம் பத்தாவது ஸ்கந்தத்தில் ஶ்ருதிகீதாத்யாயத்தில் 'துல்யஶ்ருத தப:ஶீலாஸ் துல்யஸ்வீயாரிமத்யமா: । அபி சக்ரு: ப்ரவசந ஏகம் ஶுஶ்ரூஷவோऽபரே' (சாஸ்த்ர ஜ்ஞானமும் தவமும் நன்னடத்தையும் ஒத்திருக்கப்பெற்றுத் தன்னுடையவனென்றும் சத்ருவென்றும் உதாஸீனனென்றும் பேதம் பாராட்டாமல் எல்லாரையும் ஒன்றாகப் பார்க்குந்தன்மை அமைந்து எல்லோரும் மறைப்பொருள் கூறவல்லவரேயாயிருந்தார்கள். ஆயினும் சொல்லுவதற்கு ஸனந்தனரொருவரையே ஏற்படுத்திக்கொண்டார்கள். மற்ற ஸனகாதி மஹர்ஷிகள் ஶ்ரோதாக்களாயிருந்தார்கள். (வெறுமனே கேட்டுக்கொண்டிருந்தார்கள்). எல்லோரும் பரமாத்மாவின் உண்மையை அறிந்தவராயினும் ஒருவரைச் சொல்பவராக ஏற்படுத்திக்கொண்டு மற்றவர் பேசாமல் பகவத் குணங்களைக் கேட்கையே ப்ரஹ்மஸத்ரமென்று

பதான பரமபதம் பெறுதற்காக ஆயிரமாண்டுகள் நடத்தி நிறைவேற்றவேண்டியதான ஸத்ரமென்னும் யாகத்தை அனுஷ்டித்தார்கள். ஒருகால் அம்முனிவர்கள் விடியற்காலத்தில் ஹோமத்ரவ்யங்களைக்கொண்டு அக்னியில் ஹோமஞ்செய்து கடமைகளைத் தீர்த்துக்கொண்டு, உரியபடி வெகுமதிக்கப் பெற்று உட்கார்ந்திருக்கின்ற ஸூதரைப் பார்த்து ப்ரீதியுடன் இங்ஙனம் வினவத் தொடங்கினார்கள்.

---

கருத்து) என்று இங்ஙனஞ் சொல்லப்பட்டது. ஆனது பற்றியே 'ஆஸீநா தீர்க்கஸத்ரேண' என்று மேல் சொல்லுவதும் பொருந்துகின்றது. இங்குச் சிலர் சௌனகர் வினவுதல் முதலிய ச்லோகங்கள் பின்புள்ளார் பண்ணிச்சேர்த்தவை யென்றும் பரீக்ஷித்து முதலியவர் வினவும் ச்லோகங்கள் ஸூதர்பண்ணிச்சேர்த்தவை யென்றும் கூறுகின்றனர். அது பொருந்தாது. த்ரிகாலஜ்ஞரான இந்த ப்ரபந்தத்தைச் செய்த மஹர்ஷியே அவற்றையும் நிர்மித்தாரென்று சொல்லக்கூடும். ஸத்வித்யை ஆநந்தவல்லி ப்ரதர்த்தன வித்யை முதலிய வேதாந்த பாகங்களில் 'ச்வேதகேதுர் ஹாருணேய ஆஸ தம்ஹ பிதோவாச ச்வேதகேதோ' என்றும், 'ப்ருகுர்வை வாருணி:, வருணம் பிதரமுபஸஸார। அதீஹி பகவோ ப்ரஹ்மேதி' என்றும் 'ப்ரதர்த்தநோ ஹவை தைவோதாஸிரிந்த்ரஸ்ய ப்ரியம் யாமோபஜகாம' என்றும் இவை முதலிய வினவிடைகளெல்லாம் பின்னோர் கூட்டினவை யென்பது யுக்தமன்றல்லவா? 'ஆனால் வேதத்திற்கு இயற்றினவரில்லாமையால் அது தானே வினவிடைகளால் சொல்ல வேண்டிய பொருள்களைச் சொல்லுகிறது. இது ஒரு புருஷன் செய்த ப்ரபந்தமாகையால் இதில் பிறர் செய்த வசனங்களும் ஆங்காங்குச் சேர்ந்திருக்கை தோஷமன்றே' என்னில், அம்படி அன்று. அப்படியாயின் இந்த ப்ரபந்தம் முழுவதும் ஒருவரே செய்தாரென்றமை பொருந்தாது. இந்தப் புராணம் முழுவதும் வினவும் விடையுமாகவே யிருப்பதால் 'க்ரந்தகர்த்தாவின் வசனங்கள் இவை, பிறருடைய வசனங்கள் இவை' என்று பிரித்துச் சொல்லமுடியாது; ஆகையால் ப்ரபந்தஞ்செய்த வ்யாஸமஹர்ஷியே கீழ்மூன்று வகை

*ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—'நீர் இதிஹாஸங்களையும் எல்லாப் புராணங்களையும் தர்மசாஸ்த்ரங்களையும் ஓதியுணர்ந்து பிறருக்கும் சொல்லி யிருக்கின்றீர். மற்றும், வேதமுணர்ந்தவர்களில் சிறந்த வ்யாஸ பகவானும் பராவரதத்த்வங்களை அறிந்த அத்தகையரான மற்ற முனிவர்களும் எந்தப் புராணங்களையும் தர்ம சாஸ்த்ரங்களையும் அறிவார்களோ, அவையெல்லாவற்றையும் நீர் அத்யயனஞ் செய்துணர்ந்து பிறர்க்கும் கற்பித்திருக்கின்றீர். நல்லியற்கையுடையவரே!* [1] *நன்மனமுள்ளவரே!*

மங்களங்களைச்செய்து இதில் சொல்லப்படும் விஷயம் இன்னதென்றும் இதனால் விளையும் ப்ரயோஜனம் இன்னதென்றுஞ் சொல்லி த்ரிகாலஜ்ஞராகையால் (வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமென்கிற மூன்று காலங்களிலுமுள்ளவற்றையும் நன்காராய்ந்தறிந்தவராகையால்) வேதார்த்தங்களைத் தெளிய அறிவிப்பதான இந்தப்புராணத்திற்கு, பரீக்ஷித்து சௌனகர் சுகர் ஸூதர் முதலானோர் வினவுதலும் விடை கூறுதலுமாய் வரும் நடத்தையை ஆலோசித்து அதில் அவர்களுடைய வினாக்களையும் விடைகளையும் குறிக்கும்படியான ஶ்லோகங்களைத் தாமே ஆங்காங்கு நிர்மிக்கமுயன்று முதலில் ப்ரபந்தத்தின் முகவுரையான இந்த முதல் ஸ்கந்தத்தில் முதலில் வினவுவோனான பரீக்ஷித்தும் மறுமொழி கூறுவோராகிய சுகரும் ஓரிடத்தில் சேர்ந்ததையும் பரீக்ஷித்து கேட்க முயன்றதையும் ப்ராயோபவேசத்தையும் அதற்கு ஹேதுவான ப்ராஹ்மணஶாபத்தையும் சொல்ல விரும்பி ப்ராயோபவேசத்திற்கு முன்புள்ள பிறத்தல் முதலான பரீக்ஷித்தின் வ்ருத்தாந்தத்தையும், அதற்கு முன்புள்ள அவன் தந்தை முதலியவர்களின் வ்ருத்தாந்தத்தையும், தனக்கும் தேவரிஷிக்கும் நடந்த ஸம்வாதத்தையும், அந்த ரிஷியின் ஆஜ்ஞையால் தான் இந்த ப்ரபந்தஞ் செய்ததையும் ஶௌனகஸூதர்களின் வினாவிடை மூலமாய்ச்சொல்லக் கருதி, முதலில் ஶௌனகாதிகள் வினவின வண்ணத்தைச் சொல்லத் தொடங்குகிறாரென்பதே உண்மையான பொருள்.

1\. *ஶாரீரக ஶாஸ்த்ரத்தில் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்கள்* தவிர மற்றவர்க்கு அதிகாரமில்லை யென்று அபஶூத்ராதிகரணத்

முடையவரான வ்யாஸமஹர்ஷியின் அனுக்ரஹத்தினால் அந்த இதிஹாஸபுராணங்களால் ஓதப்படும் வஸ்துவை நீர் உள்ளபடி அறிவீர். மிகுந்த ப்ரேமமுடைய உம்மைப்போன்ற சிஷ்யனுக்கு ஆசார்யர்கள் சொல்லக்கூடாத ரஹஸ்யத்தையும் சொல்லுவார்கள். ஆகையால் இதிஹாஸபுராணாதி ரஹஸ்யங்களையெல்லாம் நீர் உண்மையாக அறிந்தவரே. வளர்ந்த ஆயுளுடையவரே! புருஷர்களுக்கு எது தவறாமல் நன்மையை விளைக்குமோ, அதை நீர் ஆங்காங்கு ஆராய்ந்து நிச்சயித்திருக்கின்றீர். அதை எங்களுக்குச் சொல்ல நீர் உரியராகின்றீர். (எது சிறந்த நன்மையோ, அதை நிறைவேற்றிக்கொடுக்கும் உபாயம் எதுவோ, அதை எங்களுக்குச் சொல்லவேண்டும்.) பெரியோர்களின் ஸபைகளில் புகழத்தகுந்தவரே! இந்தக் கலியுகத்தில் ஜனங்கள் பெரும்பாலும் ஆயுள் அற்பமாயிருக்கப் பெற்றவர். நூறாண்டுகள் பிழைத்திருக்கின்றார்களென்கிற நியதி இல்லை. (ஆகையால் க்ருதயுகம் முதலிய மற்ற யுகங்களிற்போல் சிலகாலம் போகங்களை அனுபவித்து அப்பால் மோக்ஷத்தில் மனஞ்செலுத்தலாமென்பதற்கு அவகாசமில்லை.) மற்றும், இந்த யுகத்தில் ஜனங்கள் மந்த

---

தில் நிர்ணயித்திருக்கிறது. ஆகையால் சாரீரக ஶாஸ்த்ரத்தில் அதிகாரமில்லாதவனும் இதிஹாஸ புராணாதிகளை ஓதினமையால் உண்டான ஆபாதப்ரதீதியுடையவனுமாகிய நான் ப்ரஹ்மவித்துக்களான உங்களுடைய கேள்விக்கு எப்படி விடைகொடுக்க வல்லனாவேனென்னும் சங்கையைத் தடுத்துச் சொல்லுகிறார்கள்—(நன்மையுடையரான வ்யாஸமஹர்ஷியின் அனுக்ரஹத்தினால்) என்று. நீர் சாரீரக ஶாஸ்த்ரம் கற்காமற் போயினும் பேரறிஞரான வ்யாஸருடைய அனுக்ரஹத்தினால் நீர் எல்லாவற்றையும் உள்ளபடி அறிவீர். உம்முடைய அறிவு ஆபாதப்ரதீதியன்று (ஆபாதப்ரதீதி-உள் நுழையாமல் மேலெழுந்த அறிவு).

ஸ்வபாவராயிருக்கின்றனர்; அன்றியும் மிகுதியும் மந்தபுத்திகள்; மந்தபாக்யர்கள்; தாபத்ரயத்தினாலும் தர்ம அர்த்த காமங்களில் உள்ள விருப்பத்தினாலும் வருத்தமுற்றிருப்பவர். (மந்தபுத்திகளாகையால் நன்மை இன்னதென்றும் அதை நிறைவேற்றும் உபாயம் இன்னதென்றும் விரைவில் அறியுந் திறமையற்றவர்; மந்தஸ்வபாவராகையால் நன்மைக்கு வேண்டிய உபாயத்தைத் தேடுந் திறமையற்றவர்; தாபத்ரயத்தினால் வருந்துந் தன்மையராகையால் ஒருகால் நன்மைக்கு வேண்டும் உபாயத்தைத் தேட முயற்சி கொள்ளினும் பலவகை இடையூறுகள் நேரப் பெறுபவர். ஆகையால் இந்தக் கலிகாலத்திலுள்ள ஜனங்கள் பாக்யமற்றவர்.) ஆனதுபற்றி ஜனங்கள் தாம் தாம் விரும்பும் தர்மாதிகளை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயங்கள் வெவ்வேறாயிருக்கையால் அவர்கள் கேட்கவேண்டிய கர்மங்கள் பலவாயிருக்கும்; மிகுதியும் வருந்திச் செய்யவேண்டியவைகளான அவை பௌண்டரீகமென்றும் வாஜபேயமென்றும் பலவாறு பிரிந்திருக்கும். ஒவ்வொரு கர்மமும் பலவகை அங்கங்களையுடைய தாகையால் மிகுதியும் விரிந்திருக்கும். ஆகையால் கேட்க வேண்டியவை பலவாயிருப்பினும் அவற்றில் எது சிறந்ததோ, எது இஷ்டங்களைக் கொடுத்து அனிஷ்டத்தைப் போக்கவல்லதோ, [1] எதை அறிந்தால் மனம் காம க்ரோதாதியான தோஷங்க

1. இங்கு 'யேநாத்மா ஸம்ப்ரஸீததி' என்பது மூலம். இங்கு ஆத்மசப்தம் மனத்தைச் சொல்லுகிறது. இதனால் மோக்ஷத்தில் இச்சையுடையவர் மனத்தெளிவுக்காக யத்னஞ்செய்யவேண்டும். மனம் தெளியப்பெறில் 'ப்ரஸாதே ஸர்வது:கானாம் ஹாநிரஸ்யோபஜாயதே। ப்ரஸந்நசேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே' என்கிறபடியே துக்கஹானி முதலியதெல்லாம் தானே விளையுமென்று தெரிவிக்கப்பட்டது. அல்லது — ஆத்மசப்தம் பரமாத்மாவைச் சொல்லுகிறது. இதைக் கருதியே (எந்த உபாயத்தினால் பரமாத்மா

ளொன்றுமின்றித் தெளிவுறுமோ, எதனால் பரமாத்மா எம்மிடத்தில் அருள்புரிவானோ, அப்படிப்பட்ட உபாயத்தை வெண்ணெய் திரட்டுவதுபோல், உமது ஸூக்ஷ்ம புத்தியால் ஆராய்ந்தெடுத்துக் கேட்கவேண்டுமென்னும் பெருவிருப்பமுடைய எங்களுக்குச் சொல்வீராக. ஸூதரே! உமக்கு மங்களம் உண்டாகுக.' பக்தர்களைப்

---

எம்மிடத்தில் அருள் புரிவானோ) என்று மேல் சொல்லிற்று. 'கிமலப்யம்பகவதி ப்ரஸந்நே ஸ்ரீநிகேதநே' என்று ஸ்ரியஃபதியான ஸர்வேஸ்வரன் அருள்புரிவானாயின் மற்றதெல்லாம் கைகூடினாற்போலவேயென்று கருத்து. (கேட்கவேண்டியவை பலவாயிருப்பினும் அவற்றில் எது ஸாரமோ அதைச்சொல்லவேண்டும்) என்கையால் பலவகையான கர்மங்கள் கேட்கவேண்டியவை யன்றென்று தெரிகிறது. கர்மங்களும் பலத்தின் மூலமாய் விடத்தக்கவை யென்றும் ஸ்வரூபத்தினால் பற்றத்தகுந்தவை யென்றும் பிரித்து அறிவதற்காகக் கேட்க வேண்டியவைகளே. இல்லையாயின் ஸம்ஸாரத்தை வளர்க்கும் புத்ரபசு அன்னாதியான பலன்களில் வெறுப்பு உண்டாகாதாகையால் அவற்றில் கால் தாழப்பெற்றிருப்பின் மோக்ஷ உபாயங்களை அறிவிக்கும்படியான அத்யாத்ம ஸாஸ்த்ரங்களை (வேதாந்த ஸாஸ்த்ரங்களை)க் கேட்கவேண்டு மென்கிற விருப்பமே உண்டாகாது. 'கர்மங்களின் பலன்களை விரும்பாமல் கேவலம் கர்மங்களைச் செய்யின் அவை பரமாத்மோபாஸனத்திற்கு ஸஹகாரிகளாம்' என்னும் நினைவும் உண்டாகமாட்டாது. ஆகையால் கர்மங்களும் கேட்கவேண்டியவையே. ஆயினும் 'கர்மங்கள் பலத்தின் வழியாய் விடத்தகுந்தவைகளே. பரமாத்மோபாஸனத்திற்கு அங்கமாகச் சக்தி உள்ள வரையிலும் அனுஷ்டிக்கத்தக்கவை' என்று இவ்வளவு மாத்ரமே முமுக்ஷுக்கள் கேட்க வேண்டுமென்னுங் கருத்தினால் இங்ஙனம் சொல்லிற்று. இங்ஙனம் வீரராகவீயம். இது பக்திநிஷ்டனுக்குப் பொருந்தும். ப்ரபத்திநிஷ்டனுக்குக் கர்மங்களை யெல்லாம் அனுஷ்டிக்க வல்லமை யிருப்பினும் அவை ஈஸ்வரனே உபாயமென்றிருக்கும் ஸ்வரூபத்திற்குச் சேராவாகையால் ஸ்வரூபவிருத்தங்கள். ஆகையால் அவை அவர்க்கு ஸ்வரூபேண த்யாஜ்யங்களாம்.

பாதுகாக்குந் தன்மையனான பகவான் வஸுதேவருக்குத் தேவகியிடத்தில் எதைச் செய்ய அவதரித்தானோ, அதையெல்லாம் நீர் அறிவீர். அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய சரித்ரத்தை நாங்கள் கேட்க விருப்பமுற்றிருக்கின்றோம். ஓ ஸூதரே! அதை எங்களுக்குச் சொல்ல வேண்டும். இந்தப் பகவான் ப்ராணிகளின் இஷ்டங்களை நிறைவேற்றுவதற்கும் பாதுகாத்துக்கொடுப்பதற்கும் அவதரித்தான். மற்றும், ஜன்மஜராமரணாதிரூபமாயிருக்கையாலே மிகுதியும் பயங்கரமான ஸம்ஸாரத்தில் ஆழ்ந்தவன் மனக்கருத்தின்றியாயினும் இந்தப் பகவானுடைய நாமத்தை உச்சரிப்பானாயின் அந்த க்ஷணமே அந்த ஸம்ஸாரத்தினின்று விடுபடுவான். [1] இவனுடைய நாமோச்சாரணத்திற்கு ஸம்ஸாரம் தானே பயப்படும். ஓ ஸூதரே! [2] இந்தப் பகவானுடைய பாதங்களைப் பற்றின முனிவர் ஶமதமாதிகுணங்களுக்கிருப்பிடமாகித் தமது பாதங்களைத்

1. இங்கு 'யத் பிபேதி ஸ்வயம் பயம்' என்பது மூலம். இங்கு 'பயம்' என்றும் பாடமுண்டு. அப்பொழுதும் ஜன்ம ஜராமரணாதி பயங்களை விளைக்கையாலே ஸம்ஸாரத்தையே பயமென்கிறது. தேஹாவஸான காலத்திலுண்டான பகவந்நாமோச்சாரணம் நேரே மோக்ஷ ஸாதனமாமென்றும், மற்றைக் காலத்திலுண்டான பகவந்நாமோச்சாரணம் கர்ம ஜ்ஞானயோகாதிகள்போல் பக்தியோகத்திற்கு உபகாரகமாகி அதன் மூலமாய் மோக்ஷஸாதனமாமென்றும் உணர்க. இவ்விஷயம் ஆறுவது ஸ்கந்தத்தில் அஜாமிளோபாக்யானத்தில் தெளிவாய் வெளியாகும். இங்ஙனம் வீரராகவீயம். பகவந்நாமோச்சாரணம் எக்காலத்திலும் மோக்ஷஸாதனமாமென்றும் கர்மஜ்ஞான பக்தியோகங்கள் வ்யாஜோபாயமாமாபோல் இதுவும் வ்யாஜோபாயமென்றும் ஈஶ்வரன் தானே உபாயமென்றும் பேரறிஞர் கூறுவர்.

2. இங்கு யத்பாதஸம்ஶ்ரயாஸ் ஸூத முநய: ப்ரஶமாயநா:॥ ஸத்ய: புநந்த்யுபஸ்ப்ருஷ்டா: ஸ்வர்துந்யா போऽநுஸேவயா' என்பது மூலம். கங்கையின் ஜலம் ஸ்நானபானாதிகளால் புனிதஞ்

தொட்டமாத்ரத்தில் அந்த க்ஷணத்திலேயே அனைவரையும் புனிதஞ் செய்வார்கள். இவனுடைய பாதத்தினின்றுண்டான கங்கையின் ஜலம் ஸ்னானபானாதிகளால் தன்னைப் பணியுமவர்களனைவரையும் புனிதஞ் செய்யும். மற்றும், இவனுடைய யசஸ்ஸு கேட்பவர்களுக்கும் சொல்பவர்களுக்கும் புண்யத்தை விளைக்கும். இவனுடைய சரித்ரம் துதிசெய்யத் தகுந்தது. கலியாலுண்டான தோஷங்களைப் போக்குந் திறமையுள்ள அப்படிப்பட்ட பகவானுடைய கீர்த்தியை மனத்தூய்மை பெறவேண்டுமென்னும் விருப்பமுடைய எவன்தான் கேட்கமாட்டான்? அனைவரும் கேட்பார்கள். சேதனர்களைப்போல் கர்மத்தினாலன்றி லீலையால் பற்பல மூர்த்திகளைக் கொள்கின்ற அந்தப் பகவானுடைய சரித்ரங்களை விருப்பமுடைய எங்களுக்குச் சொல்லவேண்டும். அந்தப் பகவானுடைய சரித்ரங்கள் பரந்திருப்பவைகளும் கேட்டமாத்ரத்தில் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பவைகளுமாயிருக்குமே. அவற்றையெல்லாம் நாரதாதிகளான மஹர்ஷிகள் பாடியிருக்கின்றார்களல்லவா? மிகுந்த மதியுடையவரே! தன்னுடைய ஆச்சர்ய சக்தியால் பலவகை லீலைகளைச் செய்பவனும் எல்லோரையும் அடக்கிக்கொண்டு நிற்பவனும் தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப்போக்குந் தன்மையனுமாகிய பகவானுடைய சுபமான அவதார கதைகள் முழுவதையும் எங்களுக்குச் சொல்வீராக. ப்ரஹ்மாதிகளான சிறப்

செய்யும், பகவத்ஸம்பந்த முடையவர் தமது பாதங்களைத்தொட்ட மாத்ரத்திலேயே புனிதஞ் செய்கிறார்களென்று கங்காஜலத்தைக் காட்டிலும் பாகவதர்களுக்கு மேன்மை யுண்டென்று சிலர் பொருள் கூறுகின்றனர். கங்காஜலம் எப்படி புனிதஞ்செய்யுமோ அப்படியே பாகவதர்களும் புனிதஞ்செய்வார்கள் என்று த்ருஷ்டாந்தமாகவும் கூறலாம். வீரராகவீயம்.

புள்ள தேவதைகள் துதிசெய்யப்பெற்றவனும் சிறந்த புகழுடையவனுமான பகவானுடைய அவதார கதைகளை நாங்கள் பலவாறு கேட்டிருக்கின்றோம். ஆயினும் அவனுடைய சரித்ர விஷயத்தில் எவ்வளவு கேட்பினும் எங்களுக்கு த்ருப்தி உண்டாகவில்லை. அந்தப் பகவானுடைய சரித்ரம் ருசியறிந்தவர்களுக்கு அடிக்கடி மிகுதியும் ருசிகரமாயிருக்கும். (எத்தனை தரம் கேட்கினும் பகவானுடைய சரித்ரம் புதிதுபுதிதாகி மிக்க ருசிகரமாயிருக்குமாகையால் எங்களுக்கு அதில் த்ருப்தியே உண்டாகவில்லை). ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் ப்ரபுவான பரம புருஷன் கபடமானிட உருவம் பூண்டு மறைந்து தன் குணங்களில் சிறிதுங்குறைவின்றித் தமையனை பலராமனுடன் மானிடவர்க்குச் செய்யமுடியாத பல வீரச் செயல்களைச் செய்தானல்லவா? (மானிடருடைய சரித்ரங்கள் ஒருதரங் கேட்கில் மீளவும் கேட்கவேண்டுமென்னும் விருப்பத்தை விளைக்கமாட்டா. பகவானுடைய வீரச்செயல்களோ என்றால் மானிடவர் செயல் போலன்றி விசித்ரமாகி, ஒன்றே எத்தனை தரம் கேட்பினும் புதிதுபுதிதாகி மேன்மேலும் கேட்கவேண்டுமென்னும் விருப்பத்தை விளைக்குமாகையால் நாங்கள் அவற்றைப் பலவாறு செவியுற்றிருப்பினும் த்ருப்தி உண்டாகப்பெறாமல் மீளவும் கேட்க விரும்புகின்றோம்.) 'பகவானுடைய வீரச் செயல்கள் நெடுநாள் கேட்கவேண்டியவை. நீங்களோ தினந்தோறும் தவஞ்செய்பவர். ஆகையால் உங்களுக்கு அவற்றைக் கேட்க அவகாசம் ஏது என்கிறீரோ? தவத்திற்கு விக்னஞ் செய்வதான கலியுகம் வந்ததைக் கண்டு வேறு உபாயத்தினால் கலியை வெல்லுந் திறமையற்ற நாங்கள் கலியின் தோஷங்களைப் போக்குந்திறமையுடைய பகவானுடைய கதையைக் கேட்பதற்காக மற்ற செயல்களை நிறுத்தி ஒழி

வுடையவராகி, விஷ்ணுவின் ஸந்நிதானமுடைய இந்த நைமிச க்ஷேத்ரத்தில், ஆயிரமாண்டுகள் செய்து நிறைவேற்றக்கூடிய தீர்க்கஸத்ரமென்னும் யாகத்தை நடத்த முயன்று உட்கார்ந்திருக்கின்றோம். ப்ராணிகளின் தவம் முதலிய ஸாரங்களைப் போக்குவதும் பகவத்குண கீர்த்தனம் தவிர மற்ற உபாயங்களால் கடக்கமுடியாததுமான கலியைக் கடக்க விரும்புகின்ற எங்களுக்கு, ஸமுத்ரத்தைக் கடக்கவிரும்பும் ஜனங்களுக்குக் [1] கர்ணதாரனைக் காட்டிக்கொடுப்பதுபோல், ஈப்வரன் உம்மைக் காட்டிக்கொடுத்தான். (கலியின் தோஷங்களை நினைத்து வருந்துகின்ற எங்களுக்கு நீர் தெய்வாதீனமாய் நேர்பட்டீர்). ப்ராஹ்மணர்களுக்கு நன்மைசெய்யுந் தன்மையனும் தர்மத்தைப் பாதுகாப்பவனும் பக்தியோகத்தினால் ஆராதிக்கத் தகுந்தவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்னுடைய லோகம் சேர்ந்த பின்பு தர்மம் எவனைச் சரணம் அடையும்? (காப்பவனில்லாமையால் கலியினால் தோல்வி அடைந்து அதை வெல்லுந் திறமையற்றிருக்கின்றது. ஆகையால் கலியைப் போக்குவதான பகவானுடைய சரித்ரத்தையே சொல்வீராக). ஒன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

வ்யாஸர் சொல்லுகிறார்:—ரோமஹர்ஷணரின் புதல்வரான ஸூதர் இங்ஙனம் ப்ராஹ்மணர்களின் அழகான கேள்விகளால் ஸந்தோஷமுற்று அவரது வசனத்தைப் புகழ்ந்து கௌரவித்து மறுமொழி கூறத்தொடங்கினார்.

[2] ஸூதர் சொல்லுகிறார்:—என் குருவாகிய ஸ்ரீசுக முனிவருக்கு நமஸ்காரம். இவர் தன்னுடைய ஜ்ஞானத்

---

1. ஓடம் நடத்துவோன்.

2. ஸூதர் ப்ராஹ்மணர்களின் கேள்விகளுக்கு உத்தரமான இந்தப்புராணத்தைக் கேட்பிக்கவிரும்பி, இந்தப்புராணத்தை வாசித்துக்கேட்பிப்பவர் மற்றவரும் இங்ஙனமே செய்யவேண்டுமென்று



24. ஸூதர் ஸெளனகாதிகளுக்கு பகவானுடைய கதைகளைக் கூறுதல்.

*தினல் ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும் வ்யா பித்திருப்பவர்; பரப்ரஹ்மம் கைகூடப் பெற்றவர்; ஆகை யால் செய்யவேண்டிய செயல் மற்றொன்றும் இல்லாதவர். இவர் தந்தை முதலிய தேஹபந்துக்களைத் துறந்து வை ராக்யத்தினல் தேஹஸம்ரக்ஷணத்திற்குரியஸஹாயமாக*

---

தெரிவிக்கும் பொருட்டு இதை முதலில் வெளியிடுகையால் மஹோப காரஞ்செய்த தன் குருவான சுகரை நமஸ்கரித்துச் சரணமடைகை யாகிற மங்களஞ்செய்கிருர். சுகர், யோகிகளில் சிறப்புற்றவர். அவர் ப்ரஹ்மோபாஸன வித்தியுடையவர். ஆகையால் அவர் செய்யவேண் டிய கார்யம் மற்றொன்றும் இல்லாதிருக்கப்பெற்று தேஹஸம்பந்தி களான தந்தை முதலானுரைத் துறந்து ஸந்ந்யாஸியாய்த் தனியே போகத்தொடங்குகையில், அதைக் கண்டு, வ்யாஸர் மிகுந்தகுண முடைய பிள்ளையைப் பிரிந்திருக்கப் பொருமல் அவரைப் பின்தொ டர்ந்து 'பிள்ளாய்! பிள்ளாய்!' என்றழைத்தார். சுகர் தன்னுடைய ஞானத்தினல் ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருக்கையால், அப் பொழுது அவருடைய ஜ்ஞானத்தினல் நிரம்பின அங்குள்ள வ்ருக்ஷங்கள் 'நாங்கள் சுகஸ்வரூபர்களே' என்று ப்ரதித்வனி செய்தன. அதற்குக் காரணம் சுகர் தன் ஞானத்தினல் ஸமஸ்த வஸ்துக்களின் ஹ்ருதயத்தில் வ்யாபித்திருக்கையேயாகும். அப்படிப் பட்ட சுகமுனிவரை நமஸ்கரிக்கிறேன் என்று கருத்து. ஈஸ்வ ரன் ஸமஸ்த வஸ்துக்களிலும் ஸ்வரூபத்தினல் நிறைந்திருப்பது போல் ஜீவாத்மாக்கள் அணுஸ்வரூபர்களாகையால் ஸ்வரூபவ்யாப்தி சொல்ல அமையாது. 'ஏஷோ(அ)ணுராத்மா' என்றும் 'ஆராக்ர மாத்ரோ ஹ்யவரோ(அ)பி த்ருஷ்ட:' என்றும் ஸ்ருதியில் ஜீவாத்மா அணுஸ்வரூபனென்று சொல்லப்பட்டது. ஆத்மா ஜ்ஞானஸ்வரூப னும் ஜ்ஞானமே குணமாகப்பெற்றவனுமாயிருப்பான். அந்த ஜ்ஞா னத்திற்கு மோக்ஷதசையில்தான் முழுவதும் வ்யாபிக்குந்தன்மை உண்டாமென்று 'ஸ(அ)நந்த்யாய கல்பதே' என்ற ஸ்ருதி சொல்லு கிறது. ஆயினும் சுகர் ப்ரஹ்மோபாஸனம் கைகூடப்பெற்றவராகை யால் முக்தர்களைப்போல ஜ்ஞானஸங்கோசத்தை விளைக்கும் கர்மம் தீர்ந்து தர்மபூதஜ்ஞானம் அளவின்றி மலரப்பெற்றிருக்கையால் அந்த ஜ்ஞானமூலமாய் வ்ருக்ஷங்களில் வ்யாபித்திருந்தமை பொருந்தும்.

ஒருவரையும் எதிர்பாராமல் புறப்பட்டார். அப் பொழுது ஸ்ரீவ்யாஸபகவான் ஜ்ஞானாதிகரான இவ்வருமைப் புதல்வரை இம்மஹானுபாவரைப் பிரிந்திருக்கப் பொறுமல் 'பிள்ளாய்' என்றழைத்தார். அப்பொழுது, வ்ருக்ஷங்களெல்லாம் இவருடைய ஜ்ஞானத்தினால் நிறைந்து 'இவையெல்லாம் அவரே' என்னும்படி யிருந்தமையால் 'நாங்கள் எல்லோரும் சுகஸ்வரூபர்களே' என்று ப்ரதித்வனி செய்தன. இவர் இப்படிப்பட்ட மஹானுபாவர். இவருடைய ஜ்ஞானபூர்த்தியை வர்ணிக்கமுடியாது. இம்மஹர்ஷியை வணங்குகின்றேன். முனிவர்களே! பாகவதம் வேதாந்தங்களில் ஓதப்படும் பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபாதிகளை அறிவிப்பது மாத்ரமன்றி வேதத்தின் பூர்வபாகங்களில் பரக்கச் சொன்ன கர்மங்களையும் பகவானுடைய ஆராதனமாக ஆங்காங்கு நிரூபித்துச் சொல்லுகையால் ஸமஸ்த வேதங்களின் ஸாரமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் இந்தப் புராணம் போன்றது மற்றொன்றும் இல்லை. இது எல்லாப் புராணங்களிலும் மேன்மையுடையது. இது ஜீவாத்ம ஸ்வரூபத்தையும் உள்ளபடி அறிவிப்பதில் தீபம் போன்றிருக்கும். இருள் மூடப்பெற்றுக் கண்ணுக்குப் புலப்படாத வஸ்துக்களை எப்படி விளக்கொளி உள்ளபடி அறிவிக்குமோ, அப்படியே இந்தப் புராணம் ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிவிக்க வல்லது. இது ஸம்ஸாரத்தைக் கடக்கவேண்டு மென்னும் விருப்பமில்லாதவர்களுக்கு இந்த ஸம்ஸாரத்தில் ருசியை விளைக்கும்படியான அஜ்ஞானத்தைப் போக்கும். இப்படி மிகுந்த மேன்மையுடைய இந்தப் பாகவதத்தை அந்தச் சுகமுனிவர் தாமே முன்னம் வ்யாஸரிடத்தினின்று உபதேசம் பெற்று அனுபவித்தார். அம்மஹானுபாவர் ஒருவர்க்கும் வெளியிடக் கூடாத ரஹஸ்யமான இந்தப்புராணத்தை ஸம்ஸாரத்தில் ஆழ்ந்து வருந்தும் ப்ராணி

களிடத்தில் தயை கூர்ந்து வெளியிட்டனர். வேதங்களைப் பிரித்து ப்ராணிகளுக்கு மஹோபகாரஞ் செய்த வ்யாஸ மஹர்ஷியின் அருமைப் புதல்வரும் முனிவர்களனைவர்க்கும் குருவுமாகிய அந்தச் சுகமஹர்ஷியைச் சரணமடைகின்றேன். [1] நாராயணனையும் மனிதர்

1, இங்கு 'நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் | தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்' என்பது மூலம். ஈஸ்வரன், நரனென்றும் நாராயணனென்றும் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் அவதரித்து பதரிகாஸ்ரமத்தில் இருந்து 'யோவை பாரதவர்ஷேஸ்மிந் க்ஷேமாய ஸ்வஸ்தயே ந்ருணாம் | தர்மஜ்ஞாந ஸமோபேத ஆகல்பாதாஸ்யிதஸ் தப:' என்று மேற் சொல்லுகிறபடியே தனது அனுஷ்டானத்தின் மூலமாய் தர்மத்தை நடத்துகையாலும் நாரதாதிகள் மூலமாய் ஸமஸ்தமான வேதாந்த சாஸ்த்ரங்களையும் வெளியிட்டமையாலும் பரமாசார்யனும் மஹோபகாரகனுகையாலும் அவனை அவஸ்யம் நமஸ்கரிக்க வேண்டுமென்று கருத்து. வாக்குக்கு அதிஷ்டான தேவதையாகையால் ஸரஸ்வதியையும் நமஸ்கரிக்கவேண்டுமென்று (ஸரஸ்வதீம்) என்றது. (தேவீம்) தேவஸ்ய சதுர்முகஸ்ய பத்நீ தேவீ-தாம்-இங்கு ஸரஸ்வதிக்கு ப்ரஹ்மதேவனுடைய பத்னியென்று அவனுடைய ஸம்பந்தத்தைக்காட்டுகையால் ப்ரஹ்மதேவனையும் நமஸ்கரிக்க வேண்டுமென்று தெரிவிக்கப்பட்டது. அந்த ப்ரஹ்மதேவன் பகவானுடைய நான்காவது வ்யூஹாவதாரமான அநிருத்தனுடைய நாபீகமலத்தில் உண்டாகித் தவத்தினுல் அந்த அநிருத்த பகவானை ஸந்தோஷிக்கச்செய்து அவரால் இந்தப் புராணத்திற்கு மூலமான பாகவத சதுஸ்ஸ்லோகி உபதேசிக்கப்பெற்று அதை நாரதருக்கு உபதேசித்தான். ஆகையால் அவன் பெரிய உபகாரகனும் ஆசார்யனுமாகையால் நமஸ்கரிக்கத் தகுந்தவனென்று கருத்து. இதனுல் அநிருத்த நாரதர்களையும் நமஸ்கரிக்கவேண்டுமென்பது ஏற்பட்டது. நான்முகன் அநிருத்தனிடத்தினின்று பாகவத சதுஸ்ஸ்லோகியைப் பெற்றதும் அதை நாரதருக்கு உபதேசித்ததும் இரண்டாம் ஸ்கந்தத்தில் வெளியாகும். நாரதரிடத்தினின்று சதுஸ்ஸ்லோகியைப்பெற்று இந்தப்புராணம் முழுவதும் இயற்றி மிகுதியும் மஹோபகாரஞ் செய்தாராகையால் வ்யா

களிற் சிறந்த நரனையும் ப்ரஹ்மதேவனது பத்னியான ஸரஸ்வதியையும் வ்யாஸரையும் நமஸ்கரித்து, அப்பால் ஸமஸ்த பாபங்களையும் வெல்லுவதாகையால் ஜயமென்னும் பேருடைய இந்தப்புராணத்தைவாசிக்கவேண்டும். [1] முனிவர்களே! நீங்கள் ஜகத்தின் மங்களத்தைப்பற்றி என்னை நன்றாக வினவினீர்கள். மங்களஸ்வரூபனை க்ருஷ்ணனைப்பற்றி வினவினீர்களல்லவா? க்ருஷ்ணனை எவ்வகையில் நினைப்பினும் மனம் நன்றாகத் தெளிவுறும். வினவிடைகளால் ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்வரூப ரூப குண விபூதிகளோடு நினைப்போமாயின், மனமாசெல்லாம் தீரும். மாசறவே, மனம் தெளிவுபெறும். மனம் தெளியின், ஸமஸ்த மங்களங்களும் தானே விளையும். [2]ஒரு கார

ஸரை நமஸ்கரிக்க வேணடுமென்னும் அபிப்ராயத்தினுல் (வ்யாஸம்) என்கிறது. அதில் இங்ஙனம் க்ரமம் கண்டுகொள்க—முதலில் சுகரையும், பிறகு வ்யாஸரையும், அப்பால் நாரதரையும், அப்பால் ஸரஸ்வதியையும், அப்பால் ப்ரஹ்மதேவனையும், அதன் பிறகு அநிருத்தனையும், அதன் பிறகு நரநாராயணர்களையும் வணங்கவேண்டும்.

1. இங்ஙனம் 'மங்கலாசாரயுக்தாநாம் நித்யஞ்ச ப்ரயதாத்மநாம்। ஜபதாஞ் ஜுஹ்வதாஞ் சைவ விநிபாதோ நவித்யதே' என்கிற ப்ரமாணத்தின்படி குருதேவதா நமஸ்காரரூபமான மங்களஞ்செய்து அந்த ப்ராஹ்மணர்களின் கேள்விபைப் புகழ்ந்து கொண்டாடுகிருர் ஸூதர்.

2. 'நீர் ப்ராணிகளுக்கு எது மேலான நன்மையென்று நிச்சயித்திருக்கிறீரோ அந்த நன்மையைக் கைகூடுவிக்கும் உபாயம் எதுவோ' என்று கேட்டதற்கு, கர்ப்ப ஜன்ம ஜரா மரணுதியான அனர்த்தங்கள் அமைந்த ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு ப்ரஹ்மாநந்தததைப் பெறுகையாகிற மோக்ஷமே மேலான நன்மையென்றும், அதற்குப் பகவத்பக்தியே உபாயமென்றும், அந்தப் பக்தி பலாபிஸந்தி யில்லாமல் செய்யும் வர்ண ஆஸ்ரம தர்மங்களாலும் ஜ்ஞானயோக சமதமாதிகளாலும் ஸத்துக்களின் ஸஹவாஸம் முதலியவற்றின் மூலமாயும் பகவானுடைய குணங்களைக் கேட்கவேண்டுமென்னும் விருப்பம்

ணத்தைப்பற்றி விளையாததும் இடையூறுகளால் தடைபடாததும் மனத்தெளிவை விளைவிப்பதும் வேறு நினைவுகளால் மறையாததும் பரமபுருஷனைப் பற்றினதுமான பக்தி, ப்ராணிகளுக்கு எந்த தர்மத்தினால் உண்டாகுமோ, ஒரு பலனைக் குறித்துச் செய்யாத அந்த தர்மமே சிறப்புற்றது. 'சப்தாதி விஷயங்களில் மனம் தாழப் பெற்றவனுக்கு வேறு நினைவுகளால் மறையாத பக்தி எங்ஙனம் விளையும்? சப்தாதி விஷயங்களில் நெடுநாள் பழகினமையால், இப்போது வேண்டாமென்று விருப்பமற்றிருப்பினும் அவை இடையிடையில் வந்து மனத்தை இழுக்குமே' என்கிறீர்களோ? அப்படி அன்று. எல்லாவற்றிலும் தான் நிறைந்திருப்பவனும் எல்லாம் தன்னிடத்தில் இருக்கப்பெற்றவனும் ஜ்ஞானம் முதலிய ஆறு குணங்கள் அமைந்தவனுமாகிய பகவானிடத்தில் பக்தியோகஞ் செய்யின், அது சப்தாதிவிஷயங்களில் மனஞ்செல்லப்பெறுமையாகிற வைராக்யத்தை விரைவில் விளைவிக்கும். ஈச்வரன் அந்தராத்மாவாகையாலும் உலகத்தில் நமக்குப் புலப்படுகின்ற சப்தாதி விஷயங்களைக் காட்டிலும் மிகுந்த செம்மையுடையவனாகையாலும் அவனிடத்தில் பக்திசெய்யின், அது மிகுதியும் இனிதாயிருக்கும். ஆகையால் அது வேறு விஷயங்களில் செல்லாதபடி மனத்தை அடக்கிப் பரமபுருஷனிடத்தில் நிலைநிறுத்தும். உலகத்தில் ஒருவனுக்கு அழகான ஒரு வஸ்துவில் ப்ரீதி விளையுமாயின், அது அவனது மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்

---

உண்டாகி அதன்வழியாய் விளையுமென்றும் மொழியத் தொடங்கி முதலில் பக்தியோகத்திற்கு உபகாரகமான வர்ண ஆச்ரமதர்மமே சிறந்தது, பாலாபிஸந்தியோடு செய்கிற மற்றதெல்லாம் ஸம்ஸாரத்தை மேன்மேலும் வளர்க்குமாகையால் அனர்த்தத்தையே விளைக்குமென்கிறார்.

டாமல் தடுக்குமென்பது வெளிச்சமே. இனி எல்லா வற்றிலும் மேன்மையுற்ற பகவானிடத்தில் ப்ரீதி உண்டாகுமாயின் அது விரைவில் மனத்தை விஷயாந்தரங்களில் செல்லவொட்டாமல் தடுக்குமென்பது சொல்ல வேண்டுமோ? ஆகையால் மற்ற நினைவுகளால் மறையாத பக்தி உண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. தன்னைத் தவிர மற்ற காரணங்களால் கிடைக்க அரிதான ஜ்ஞானத்தையும் இதுவே விளைக்கும். ப்ராணிகள் நன்றாகவே அனுஷ்டித்ததர்மம் பகவானுடைய கதைகளில் ப்ரீதியை விளைக்காது போமாயின் வீண்ஶ்ரமமே அல்லவா? ஆகையால் தர்மங்களை அனுஷ்டிக்கும்போது வேறு பலன்களைக் கருதி அனுஷ்டிக்கலாகாது. அப்படியாயின் அவை மேன்மேலும் ஸம்ஸாரத்தையே வளர்ப்பவையாம். பலனைக் கருதாமல் செய்யும் தர்மமே பகவானுடைய குணங்களில் விருப்பத்தை விளைத்து அடைவில் பக்தி யோகத்தையும் விளைக்குமாகையால் சிறந்ததாம். பலனைக் கருதிச்செய்யுந் தர்மமெல்லாம் வீண்ஶ்ரமத்தையே பயனாகப் பெற்றது. அன்றியும் மஹத்தான துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தை வளர்க்குமாகையால், அவை மிகுதியும் அதர்மங்களேயாம். தர்ம அர்த்த காமங்களில் தர்மத்திற்குப் பலன் அர்த்தமென்றும், அர்த்தத்திற்குப் பலன் காமமென்றும், காமத்திற்குப் பலன் இந்த்ரியங்களின் த்ருப்தி யென்றும், இந்த்ரிய த்ருப்திக்கு ஜீவனமே பலனென்றும், ஜீவனத்திற்கு மீளவும் தர்மமே பலனென்றும் உலகத்தவர் நினைத்திருப்பார்கள். அது உண்மை அன்று. பலனைக் கருதாமல் செய்யுந் தர்மம் மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியை விளைக்குமாகையால் மோக்ஷமே பலனாகப் பெற்றது. ஆகையால் அதற்கு அர்த்தமே பலனென்று நினைக்கலாகாது. அர்த்தத்தை விளைக்குமாகையால் தர்

மம் சிறந்த புருஷார்த்தமென்று உலகத்தவர் நினைப்பதும் பிசகே. தானம் யாகம் முதலிய ஒருவகையான தர்மமே பலனைக் கருதி அனுஷ்டிக்கில் அற்ப பலன்களை விளைக்கும். பலனைக் கருதாமல் அனுஷ்டிக்கில் மேலான பலனை விளைக்கும். இப்படி யிருக்க, பலனைக் கருதாமல் தர்மங்களைச் செய்யும் வழியை அனுஸரித்து 'அர்த்தத்தை விளைக்குமாகையால் தர்மம் புருஷார்த்தம்' என்று அற்ப புருஷார்த்தமான அர்த்தத்தைக் கருதும் உலகத்தவர் செல்லும் வழியை விவேகமுள்ளவர் ஆதரிக்கலாகாது. மற்றும், தர்மத்தைப் பயனாகவுடைய அர்த்தத்திற்குக் காமம் பலனென்பதும் பொருளன்று. அன்னபானாதியான காமமே அர்த்தத்திற்கு (தனத்திற்கு)ப் பலனென்று உலகத்தவர் நினைத்திருப்பர்கள். தனத்திற்கு தர்மஞ்செய்தலே ப்ரயோஜனம். அந்த தர்மத்மத்தைச் செய்யும் பொழுதும் பலனைக் கருதாமல் செய்யவேண்டும். அது மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியை விளைக்கும். மற்றும், காமத்திற்கு இந்த்ரியங்களின் த்ருப்தியே பலனென்று உலகத்தவர் நினைப்பர்கள். ப்ராணிகள் விரும்புகிற உண்ணும் சோறு பருகு நீர் முதலியவற்றைக் காமமென்பர்கள். அதற்கு இந்த்ரியங்களின் த்ருப்தியே பலனென்பது உண்மையன்று. தேஹத்தின் தாரணமே காமத்திற்குப் பலன். தேஹத்தைத் தரித்துப் பிழைத்திருப்பதற்குப் பலன் தத்த்வத்தை ஆராய்ந்தறிதலே. பிழைத்திருக்கைக்கு ப்ரயோஜனம், நற்செயல்களைச்செய்து அதன்மூலமாய் தர்மத்தைப் பெறுகையேயென்று நினைக்கலாகாது. 'தத்த்வத்தை அறியவேண்டுமென்றீர். அந்தத் தத்த்வம் இன்னதென்று எங்களுக்குத் தெரியவில்லையே' என்னில் சொல்லுகிறேன். ஜ்ஞானத்தையே ஸ்வரூபமாக வுடையதும் ஜ்ஞானமே குணமாகப்பெற்றதும் தன்னைப் போன்ற மற்றொரு வஸ்துவும் தனக்கு

மேற்பட்ட வஸ்துவுமின்றி விளங்குவதும் அவயவங்களின்றி அளவற்றிருப்பதும் ஜாதிமுதலிய பேதங்களில்லாததும் 'பரப்ரஹ்மம் - பரமாத்மா - பகவான்' இவை முதலிய சப்தங்களால் ஆங்காங்கு ஓதப்படுவதுமானவஸ்துவே [1] வேததத்த்வமென்று தத்த்வமறிந்தவர் சொல்லுவார்கள். பக்தியோகத்தை வளர்க்கும் தர்மமே சிறந்ததாகையாலும் தர்ம அர்த்த காமங்களும் மோக்ஷத்தை நிறைவேற்றுவதற்கே யாகையாலும் மோக்ஷத்தைக் காட்டிலும் வேறுசிறந்த புருஷார்த்தமில்லாமையாலும் விருப்பமுடையவர் பக்தியினால் ஜீவாத்மாவினிடத்தில் அந்தராத்மாவாயிருக்கின்ற பரதத்த்வமான பரம புருஷனைப் பேராவலுடன் ஸாக்ஷாத்காரஞ் செய்கின்றனர். வேதங்களில் விதித்த யாகம் முதலிய கர்மங்களால் அந்த பக்தியை மேன்மேலும் வளர்க்கவேண்டும். முதலில் ஜீவாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகையே அந்த பக்திக்கு முக்ய காரணம். மற்றும் வைராக்யம் அதற்கு அவஶ்யமாய் வேண்டும். மற்ற விஷயங்களில் மனப்பற்றில்லாதிருக்கையே வைராக்யமாம். ஜீவாத்மஜ்ஞானமும் வைராக்யமும் வேதங்களில் விதித்த யாகாதி கர்மங்களும் ஆகிய இந்த அங்கங்களோடுகூடின பக்தியினால் ஜீவனுக்கு அந்தராத்மாவாயிருக்கும் பரம புருஷனை முனிவர்கள் மிக விருப்பத்துடன் நேரே காண்கின்றார்கள். சிறந்த அந்தணர்களே! இங்ஙனம் பக்தியே மோக்ஷத்திற்கு உபாயமாகையால் ப்ராஹ்மண க்ஷத்ரியாதி வர்ணங்களைப் பற்றியும் ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தன் முதலிய ஆஶ்ரமங்களைப் பற்றியும் பிரித்திருக்கின்ற தர்மங்களைச் சிறிதும் தவறாமல் அனுஷ்டிப்பதற்குப் பலன் பகவானை ஸந்தோஷிக்கச் செய்கையேயாகும். தர்மத்தை நன்கு நடத்துவானாயின் அதனால் பகவானுக்கு மனக்களிப்பு விளைகின்றது.

---

1. வேததத்த்வம்-வேதங்களால் அறியக்கூடிய தத்த்வம். தத்த்வமாவது உண்மையான பொருள்.

அதனால் பகவானுக்கு இவனிடத்தில் அநுகூல ஸங்கல்பம் (நல்ல நினைவு) உண்டாகின்றது. அதனால் பக்தி யோகத்தைத் தடுக்கும்படியான பாபங்களெல்லாம் தொலைகின்றன. அனந்தரம் பக்தியோகம் தானே விளையும். ப்ராபக ப்ரதிபந்தகமென்றும் ப்ராப்தி ப்ரதிபந்தகமென்றும் ஜீவனுக்குப் பாபம் இருவகைப்பட்டிருக்கும். அதில் பக்தி விளைவதற்குத் தடையான பாபம் ப்ராபகப்ரதிபந்தகம். அது தர்மங்களைச் செய்வதனால் தீரும். பகவானை அடைவதற்குத் தடையான பாபம் ப்ராப்திப்ரதிபந்தகம். அதை பக்தியோகம் தீர்க்கின்றது. ஆகையால் பக்தி உண்டாவதற்குத் தடையான பாபங்களையெல்லாம் தர்மானுஷ்டானத்தினால் போக்கி, பக்தியை விளைத்து அதனால் பகவானை அடையவேண்டும். ஆகையால் மனத்தை வேறுவிஷயங்களில் போகவொட்டாமல் தடுத்து நிலைநிறுத்திக்கொண்டு பக்தர்களைப் பாதுகாக்குந் தன்மையனான பகவானை எக்காலத்திலும் செவிகளாரக் கேட்பதும் வாயாரவாழ்த்துவதும் மனமார த்யானிப்பதும் கைகளாரப் பூஜிப்பதுஞ் செய்யவேண்டும். இந்த பகவானை த்யானஞ் செய்கையாகிற பக்தியென்னுங் கத்தியைக் கொண்டு அவிழ்க்கமுடியாத முடிச்சுபோல் கடக்க முடியாத கர்மமென்னும் பந்தத்தைப் பண்டிதர்கள் அறுக்கின்றார்கள். அப்படிப்பட்ட பகவானுடைய கதைகளில் எவனுக்குத்தான் பக்தி உண்டாகாது? (பகவானிடத்தில் பக்தி பண்ணினால் அனர்த்தங்களை விளைக்கின்ற ஸம்ஸாரத்தைக் கடக்கலாமாகையால் அந்த பக்தியை விளைக்கவல்ல அவனுடைய கதைகளைக் கேட்க எல்லோரும் விருப்பமுறுவர்.) அந்தணர்களே! தர்மானுஷ்டானத்தினால் கேட்கவேண்டுமென்னும் விருப்பத்தைத் தடுக்கின்ற

பாபங்களைப் போக்கிக் கேட்க விருப்பமுண்டாகப்பெற்று ச்ரத்தையுமுடையவனுக்கு வாஸுதேவனுடைய (பகவானுடைய) கதைகளில் ப்ரீதி உண்டாவதற்குப் பெரியோர்களைப் பணிவதும் கங்கைமுதலிய புண்ய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வதுமே காரணம். எவனைக் கேட்கிலும் சொல்லிலும் மஹத்தான புண்யம் உண்டாகுமோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணன் தன் கதையைக் கேட்கும் தன்மையரான ஸாதுக்களுடைய மனத்துள் புகுந்து நிலை நின்று நண்பனாகி பக்தி உண்டாவதற்குத் தடைசெய்யும் பாபங்களைப் போக்குவான். பகவானிடத்தில் பக்தியுடையரான பெரியோர்களைப் பணிந்து அவரிடம் பகவானுடைய குணங்களையும் சரித்ரங்களையும் தினந்தோறும கேட்பதனால் பாபங்களெல்லாம் தொலைந்து போகையில், உத்தமச்லோகனான பகவானிடத்தில் திடமான பக்தி உண்டாகும். 'பாபங்கள் தொலைந்தால் பக்தி எப்படி உண்டாம்' என்கிறீர்களோ? சொல்லுகிறேன் கேளுங்கள். பெரியோர்களைப் பணிவதே தர்மம். அதனால் பாபங்கள் தொலைந்து போகையில், ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகிய இவற்றின் கார்யங்களான காமக்ரோத லோபாதிகள் எவ்வெவை உண்டோ அந்த தோஷங்களெல்லாம் தாமே கழிகின்றன. இந்த தோஷங்கள் தொலையப் பெறின், மனம்சுத்தமான ஸத்த்வகுணத்தில் நிலைநின்று தெளிவுபெறுகின்றது. மனம் தெளிந்தால் திடமானபக்தி விரைவில் விளையுமென்பதற்கு ஸந்தேஹம் உண்டோ? இங்ஙனம் மனம் தெளியப்பெற்று பகவானிடத்தில் பக்தியோகம் விளைந்து அதன் மூலமாய் மற்ற விஷயங்களில் மனப்பற்றற்று விளங்கும் புருஷனுக்கு பகவத் விஷயமான தத்த்வஜ்ஞானம் உண்டாகும். (பகவானுடைய ஸ்வரூபத்தையும் குணங்களையும் விபூதிகளையும் நேரே கண்டாற்போல் உள்ளபடியே அறியுந் திறமை உண்டாம்.)

பரமாத்மாவான ஈச்வரனைக் கண்டமாத்ரத்தில், பகவானை அடைவதற்குத் தடையான கர்மங்களெல்லாம் தொலைகின்றன. பாபங்கள் தொலையவே அதன் மூலமான ஸந்தேஹங்களும் தொலைகின்றன. அன்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களும் போகின்றன. அப்பால் மனத்தில் முடிச்சுபோன்ற அஹங்கார மமகாரங்கள் தொலையும். அஹங்கார மமகாரங்களே ஸம்ஸாரத்திற்கு வேராகையால் அவை தொலைந்தால் ஸம்ஸாரத்தினின்றும் கடந்தாற்போலவே. பிறகு ப்ராஹ்மப்ராப்தி யத்னமில்லாமலே ஸித்திக்கும். மோக்ஷமே புருஷார்த்தம். அதற்கு உபாயம் பக்தியே யாகையால், இதை அறிந்த பண்டிதர்கள் மிகுந்த ஸந்தோஷத்துடன் பகவானை வாஸுதேவனிடத்தில் மனத்தெளிவை விளைக்கும்படியான பக்தியைச் செய்கின்றனர். 'உலகங்களைப் படைப்பது ப்ராஹ்மதேவனும் அவற்றை ஸம்ஹரிப்பது ருத்ரனுமாயிருக்கையில் வாஸுதேவனிடத்தில் பக்தி செய்கையே மோக்ஷத்திற்கு உபாயமென்பது எப்படி' என்கிறீர்களோ?, சொல்லுகின்றேன் கேளுங்கள். ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் இவை ப்ரக்ருதியின் குணங்களே. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் அவை கிடையா. அந்த ஸத்த்வாதிகுணங்களைக் கொண்டு பரமபுருஷன் இந்த லோகத்தைக்காப்பது படைப்பது அழிப்பது ஆகிய இவற்றிற்காக [1] ஹரி என்றும், விரிஞ்சி (ப்ராஹ்மதேவன்) என்றும், ஹரன் என்றும் பேர்களை ஏற்றுக் கொள்கிறான். அதில் ஸத்த்வகுணத்தைக் கைப்பற்றி

1. ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் மூவரும் ஒரே வஸ்துவென்று சிலர் சொல்லுகிறார்கள். சிலர் இம்மூன்று வஸ்துக்களைக் காட்டிலும் மேலான பரதத்த்வமொன்றுண்டென்று கூறுகிறார்கள். அவ்விரண்டு பக்ஷங்களும் அழகல்ல. ஏனென்னில் — ஶ்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் ப்ரஹ்ம ருத்ரர்களைப் பரமபுருஷன் படைத்தானென்றும், இவர்கள்

ஹரியென்னும் பேர்பெற்ற விஷ்ணுவினிடத்தினின்றே ப்ராணிகளுக்கு ஸமஸ்த நன்மைகளும் விளையும். தனை யும் ஈஸ்வரனையும் உள்ளபடி அறிதலும் ஸம்ஸாரத்தைக் கடத்தலும் பரமபுருஷனைப் பெறுதலுமாகிய இவையே ஸம்ஸாரிகளுக்கு நன்மைகளாம். எல்லாவற்றிற்கும் காரணமாகையாலும் எல்லாவற்றிலும் மேன்மையுற்றவனாகையாலும் நல்லறிவை விளைக்கும்படியான ஸத்த்வகுணத்தை நடத்துவோனாகையாலும் வாஸுதேவனே தன்னைப் பணியுமவர்களுக்கு இந்நன்மைகளை விளைப்பான். அவனிடத்தில் பக்தி செய்தலே மோக்ஷத்தைக் கொடுக்கும். ஆகையால் ஸத்த்வ ரஜஸ் தமோ குணங்களில் ஸத்த்வகுணமே மோக்ஷத்திற்கு ஹேதுவாம். 'இம்மூன்றும் ப்ரக்ருதியின் குணமாயிருக்க, ஸத்த்வகுண மொன்று மாத்ரமே மோக்ஷத்திற்கு ஹேதுவென்றும், மற்றவை இரண்டும் மோக்ஷ ஹேதுக்களன்றென்றும் சொல்லுவது எப்படி' என்கிறீர்களோ? பூமியின் வேற்றுமையான கட்டையினின்று முதலில் புகையும் பிறகு அக்னியும் உண்டாகின்றன. இரண்டும் ஒரு கட்டையினின்று உண்டாயிருப்பினும் புகை வெளிச்சங் கொடுப்பதன்று; மற்றும் ஸ்வர்க்க ஸித்திக்கு உபாயமுமன்று. அக்னியோ வென்றால்—வெளிச்சங் கொடுப்பதும் ஸ்வர்க்கங் கொடுப்பதுமாயிருக்கும். இங்ஙனம் ஒன்றிலுண்டான இரண்டு

---

அவனுக்குச் சரீரமாயிருப்பவரென்றும் அவன் இவர்களுக்கு அந்தராத்மாவென்றும், அவனே இவர்களைக் கொண்டு ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துகிறானென்றும் சொல்லுகையால் மூவரும் ஒரே வஸ்து வென்பது பொருந்தாது. அம்மூவரில் ஒருவனாகிய ஸ்ரீவிஷ்ணுவே பரதத்த்வமென்றும் அவனுக்கு மேற்பட்ட வஸ்து எதுவுமே இல்லை யென்றும் ஸ்ருதி ஸ்ம்ருதிகள் முறையிடுகின்றமையால் மூவரைக்காட்டிலும் மற்றொரு தத்த்வமுண்டென்பது சிறிதும் பொருந்தாது.

வஸ்துக்களுக்கு ஸ்வபாவம் ஒன்றோடொன்று வேறுபட்டிருப்பதை உலகத்தில் கண்டிருக்கின்றோமல்லவா? இங்ஙனமே, ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்ற இம்மூன்றும் ஒரு ப்ரக்ருதியின் குணங்களேயாயினும் ஒன்றோடொன்று வெவ்வேறான தன்மையுடையவைகளாயிருக்கும். தூங்கின புருஷனுக்குத் தமோகுணம் சென்றபின்பு செயல்களில் தூண்டுவதான ரஜோகுணமும், அதன் பிறகு மனக்கலக்கமில்லாமைக்கு ஹேதுவும் பரம புருஷனுடைய காட்சிக்கு உபாயமுமான ஸத்த்வ குணமும் தோன்றும். இங்ஙனம் ஸத்த்வகுணமே பரப்ரஹ்மத்தைக் காண்பதற்கு உபாயமாகையாலும், ஸத்த்வத்தை நடத்துகின்ற விஷ்ணுவினிடத்தினின்றுமே நன்மைகள் விளைகின்றமையாலும் முற்காலத்தில் முனிவர்கள் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலசப்பெறாமல் சுத்த ஸத்த்வமே சரீரமாகப் பெற்று அதை நடத்துவோனும் ஷாட்குண்யபரிபூர்ணனும் கண் காது முதலிய இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளைக் கடந்தவனுமாகிய விஷ்ணுவையே பணிந்தார்கள். இவ்வண்ணமே இந்த ஸம்ஸாரத்தில் அந்த முனிவர்களை அனுஸரித்து, ஸத்த்வகுணமே சரீரமாகப்பெற்ற பகவானை எந்த ப்ராணிகள் பணிகின்றார்களோ, அவர்கள் க்ஷேமம் பெறுவார்கள். ரஜோகுணமே முக்யமாகப்பெற்ற ப்ரஹ்ம தேவனையும் தமோகுணமே தலையெடுக்கப்பெற்ற ருத்ரனையும் பணிகிறவர்கள் க்ஷேமம் பெறமாட்டார்கள்; விரைவில் அழியுந்தன்மையுள்ள பயன்களைப்பெற்று மீளவும் ஸம்ஸாரத்தில் ஆழ்ந்து நிற்பார்கள். விஷ்ணுவைப் பணிவோர் ஶாஶ்வதமான மோக்ஷமென்னும் பெருநன்மையைப் பெற்று வாழ்வார்கள். மோக்ஷத்தில் இச்சையுடையவர் ஸத்த்வமே தலையெடுக்கப்பெற்று அஸூயையில்லாதவராகி, பயங்கரமான உருவமுடையவரும்

தமோகுணம் அமைந்தவருமான ருத்ராதி தேவதைகளைத் துறந்து சுத்த ஸத்த்வமயமான விஷ்ணுவின் அவதாரங்களை உபாஸிக்கின்றார்கள். ரஜோகுணமும் தமோகுணமும்ஸ்வபாவமாயிருக்கப்பெற்றப்ராணிகள் ரஜஸ்ஸ்வபாவர்களும் தமஸ்ஸ்வபாவர்களுமான பித்ருக்களையும்ருத்ராதிகளையும் ப்ரஹ்மாதிகளையும், ஸம்பத்து ஆதிபத்யம் ஸந்தானம் முதலிய பலன்களைப்பெற விரும்பி உபாஸிக்கின்றார்கள். (ஸத்த்வகுணமே ஸ்வபாவமாயிருக்கப்பெற்றவர்களோ என்றால், சுத்த ஸத்த்வஸ்வபாவனை விஷ்ணுவினிடம் பக்தி செய்பவராகி வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் அழிவின்றி நிலைநின்ற மோக்ஷமென்னும் பெரும் பயனைப் பெறுகின்றார்கள். மற்ற ஸம்பத்து முதலிய பலன்களெல்லாம் அழியுந்தன்மை யவைகளே). பூர்வபாக மென்றும் உத்தரபாக மென்றும் இருவகைப்பட்ட வேதங்களெல்லாம் வாஸுதேவனையே உட்கருத்தாக வுடையவை. 'அக்னிமுதலிய தேவதைகளை உத்தேசித்த யாகாதி கர்மங்களை விதிக்கின்ற வேதத்தின் பூர்வபாகங்கள் எப்படி வாஸுதேவனைச் சொல்லும்' என்கின்றீர்களோ? அக்னி முதலிய தேவதைகளின் ஆராதன ரூபமான யாகங்களும் அவர்க்கு அந்தராத்மாவான வாஸுதேவனுக்கே சேருகின்றன. யாகாதி கர்மங்களில் முக்யமாக ஆராதிக்கப் பெறுமவன் அக்னி முதலிய தேவதைகளைச் சரீரமாகவுடைய வாஸுதேவனே. கேவலம் அக்னி முதலிய தேவதைகளையே ஆராதிக்கிறோமென்கிற எண்ணத்துடன் யாகாதி கர்மங்களைச் செய்பவர்க்கும் அவர் விரும்பின பலன்களை இவனே அந்த அக்னிமுதலான தேவதைகளுக்கு அந்தராத்மாவாகையால் அவர் மூலமாய்த் தானே ஆராதிக்கப்பெற்று அவர்க்குத் தெரியாமல் நிறைவேற்றிக் கொடுக்கின்றான். இங்ஙனம் அவரவர் செய்யுங்கர்மங்களுக்குப் பலன் கொடுப்பவன் வாஸுதேவனே யாகை

யால் அந்தக் கர்மங்களால் ஆராதிக்கப்படுமவனும் அவனே. ஆகையால் வேதத்தின் பூர்வபாகங்களும் இந்த்ராதி தேவதைகளின் மூலமாகவும் நேராகவும் அவனையே சொல்லுகின்றன. 'வேதாந்தங்களில் சில இடங்களில் இந்த்ரன் முதலான தேவதைகளே உபாஸிக்கத் தகுந்தவரென்பதாகத் தெரியவருகின்றதே' என்கிறீர்களோ? அப்படி அன்று. பெரும்பாலும் வேதாந்தங்களில் விதிக்கப்பெற்றயோகங்கள் (த்யானயோகங்கள்) வாஸுதேவனைப் பற்றினவைகளே. சிலவற்றில் மேலுக்கு ருத்ராதிதேவதாந்தர விஷயம்போல் தோற்றினும் முன்பின் ஸந்தர்ப்பங்களிலுள்ள அடையாளங்கள் ருத்ராதியான தேவதாந்தரங்களுக்குப் பொருந்தாமையால் அந்தருத்ராதிகளைச் சரீரமாகக்கொண்டு அவர்க்கு அந்தராத்மாவாயிருக்கும் வாஸுதேவனைப் பற்றினவைகளே யென்று நிச்சயிக்கவேண்டும். மற்றும், ஸ்ம்ருதிகளிற் சொல்லும் கர்மங்காளல் ஆராதிப்பதும் வாஸுதேவனையே. கபிலாதிஸ்ம்ருதிகளில் சொல்லும் ப்ரக்ருதிபுருஷர்களின் ஜ்ஞானமும் அவர்களைச் சரீரமாகவுடைய வாஸுதேவனைப்பற்றினதே. (அந்த ஸ்மருதிகளை இயற்றின கபிலாதிகள் மாத்ரம் அங்ஙனம்தெரிந்து கொள்ளவில்லையாயினும் ப்ரக்ருதியையும் புருஷனையும் (ஜீவாத்மாவையும்) பற்றி அவர்கள் சொன்னதெல்லாம் அவற்றிற்கு நிர்வாஹகனான வாஸுதேவனுடைய பெருமையைச் சொன்னாற் போலவே யன்றி வேறில்லை.) வேதாந்தங்களின் உட்கருத்தை உள்ளபடி அறிந்து வெளியிடும் மனுமுதலியமஹர்ஷிகள் இயற்றினஸ்ம்ருதிகளில் சொல்லுகிற க்ருச்ச்ரம் சாந்த்ராயணம் முதலான தவங்களும் வாஸுதேவனுடைய ஆராதனங்களே. ஆயிரம் சொல்லியென்? வேதங்களிலும் ஸ்ம்ருதிகளிலும்

விதித்திருக்கும் கர்மங்களெல்லாம் வாஸுதேவனுடைய ஆராதனங்களே. அவற்றால் பெறக்கூடிய நற்கதிகளும் வாஸுதேவனுடைய அதீனங்களே. பெயரும் உருவமுமாகப்புலப்படுகிற இவ்வுலகமெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்பு வாஸுதேவனாகவே இருந்தது. (வாஸுதேவனை விட்டுப் பிரித்துச்சொல்ல முடியாமல் அவனிடத்திலேயே லயம்பெற்றுப் பேரும் உருவமுமில்லாமல் ஸூக்ஷ்மமாயிருந்தது). அத்தகையனான அந்த பகவானே, ஸத்த்வம் முதலிய குணங்கள் நிறைந்ததும் ஸத்தும் அஸத்துமாய் இருவகைப்பட்டிருப்பதும் தனக்குச் சரீரமாயிருப்பதுமான மாயையென்னும் ப்ரக்ருதியால், தான் அந்தந்த வஸ்துக்களில் உள் புகுந்து எங்கும் நிறைந்து நிற்பினும் அவற்றின் குணங்கள் தனக்குப் படியாதபடி நின்று இவ்வுலகத்தை யெல்லாம் படைத்தனன், (இங்ஙனம் ஸமஷ்டி ரூபமாயும் வ்யஷ்டிரூபமாயுமுள்ள அசித்துக்கு அந்தர்யாமியாய் அதற்குக் காரணமாயிருப்பவன் வாஸுதேவனாகையால் அவனல்லாத வஸ்து ஒன்றுமே இல்லை). அவ்வாஸுதேவன் அத்தகையதான தன்மாயையால் இயற்றப்பெற்றவைகளும் இதோ புலப்படுகின்றவைகளும் பிரமன் முதற்கொண்டு பூச்சி புழுவரையிலுள்ளவைகளுமான சரீரங்களில், தான் உள் புகுரப்பெற்றுத் தனக்குச் சரீரமான ஜீவாத்மாவுடன் உள்புகுந்து அந்தந்த தேவமனுஷ்யாதி சரீரங்களையுடையவன்போலவும் அந்தந்த சரீரங்களையுடைய ஜீவாத்மாவின் குணங்களையுடையவன் போலவும் தோற்றுகின்றான். அக்னி ஒருவகைப்பட்டதேயாயினும் எப்படி காஷ்டத்தில் வேறுபட்டு வெளித்தோற்றித் தன் தோற்றத்துக்கிடமான காஷ்டங்களில் பற்றி எரிகின்றதாகிப் பலவாறு புலப்படுகின்றதோ (புல் இலை கிளை முதலிய பேதங்களையுதடயதாகத் தோற்றுகின்றதோ),

இங்ஙனமே மாயை யெனப்படும் ப்ரக்ருதியின் வேற்று மையரன தேவமனுஷ்யாதி தேஹங்களில் புகுந்து, ஜீவன், ஜ்ஞானாநந்த ஸ்வரூபனாகையாலே ஒரு வகைப் பட்டிருப்பினும், 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்னும்படி பலவாறு பிரிவினையுடையவனாகத் தோற்று கின்றான். (ஜகத்தை யெல்லாம் தனக்குச் சரீரமாகக் கொண்ட பரமாத்மா ஜீவாத்மாவினுள் புகுந்து ஜீவனே யென்னும்படியாகி தேவமனுஷ்யாதி சரீரங்களில் புகுந்து தானொருவனே யாயினும் 'இவன் தேவன், இவன் மனுஷ்யன்' என்னும்படி பலவாறு தோற்றுகின்றான்). விஶ்வாத்மாவான இந்த வாஸுதேவன் ஸத்த்வ ரஜஸ் தமோகுணங்களின் வேற்றுமையாகையால் அக்குணங் கள் நிறைந்த பூமி ஜலம் தேஜஸ்ஸு காற்று ஆகாயம் என்கிற ஐம்பூதங்களும், ஓசை நாற்றம் தோற்றம் சுவை உறல்களென்கிற ஐந்து பூத ஸூக்ஷ்மங்களும், செவி வாய் கண் மூக்கு முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களும் வாக்கு பாணி பாதம் முதலிய கர்மேந்த்ரியங்களும் மனமும் (அல்லது=ஜீவனும்) ஆகிய இவற்றைக் கொண்டு தானே நிர்மித்த தேவமனுஷ்யாதி தேஹங்களில் ஜீவன் மூல மாய் உள்ளே புகுந்து அவற்றின் குணங்களான நாற்றம் முதலிய விஷயங்களை அனுபவிக்கின்றான். இந்த லோ கேஶ்வரன் ஸம்ஸாரத்தினின்று உலகங்களைக் கரை யேற்ற முயன்று சுத்தஸத்த்வ மயமான வடிவங் கொண்டு திர்யக்கு மனுஷ்யன் தேவன் முதலிய லீலாவதாரங்க ளில் விருப்புறுகின்றான். இரண்டாவது அத்யாயம் முற் றிற்று.

---

### ஸூதர் பகவானுடைய இருபத்தொரு அவதாரங்களைக் கூறுதல்.

ஸூதர் சொல்லுகிறார்.—பகவானான வாஸுதே வன் முதலில் ப்ரஹ்மாண்டத்தையும் அதற்குள்ளுண்

டான வஸ்துக்களையும் படைக்க விரும்பி, புருஷர்களெனப்படும் ஜீவாத்மாக்களோடு கூடியதும் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்தும் மற்றும் ஆகிய பதினொரு இந்த்ரியங்களும் நிலம் நீர் தீ விசும்பு கால் (காற்று) ஆகிய ஐம்பூதங்களும் ஆகிய பதினாறு தத்த்வங்களையும் பதினாறு கலைகளாகவுடையதும் மஹத்து முதலிய தத்த்வங்களால் விளைந்ததுமான உருவத்தை ஏற்றுக் கொண்டான். தனது சரீர அவயவங்களின் வேற்றுமைகளால் தேவர் மனுஷ்யர் முதலிய ப்ராணிகள் நிறைந்த உலகத்தையெல்லாம் படைப்பவனும் மரீசி முதலான ப்ரஜாபதிகளுக்கு ப்ரபுவுமான நான்முகன், பேராழியில் படுத்து யோகநித்ரை செய்கின்ற எந்த பகவானுடைய நாபியாகிற பெருந்தடாகத்திடையிலுள்ள தாமரைப் பூவினின்று உண்டானனோ, அத்தகையனான அநிருத்தனெனப்படும் பகவானுடைய உருவம் திடமும் பரிசுத்தமுமாகிச் சுத்தஸத்த்வமயமாயிருக்கும். இவ்வுருவம் அநிருத்தனென்னும் பேருடையது. இவ்வுருவத்தை மிகுந்த அறிவுடைய மனத்தினால் காண்கின்றார்கள். இவ்வுருவம் ஆயிரம் பாதங்களும் ஆயிரம் துடைகளும் ஆயிரம் புஜங்களும் ஆயிரம் முகங்களும் அமைந்து, ஆனதுபற்றியே அற்புதமாகி ஆயிரம் தலைகளும் ஆயிரம் காதுகளும் ஆயிரங்கண்களும் ஆயிரம் மூக்குகளும் உடையதாகி ஆயிரம் கிரீடங்களாலும் பீதாம்பரங்களாலும் திருக்குண்டலங்களாலும் விளக்கமுற்றிருக்கும். இந்த அநிருத்த உருவம் பலவகை அவதாரங்களுக்கு மூலகாரணமாயிருக்கும். இதுவே, ஸமஸ்த லோகங்களையும் படைக்கின்ற நான்முகனுக்கும் உத்பத்தி ஸ்தானமாகையால் ஸமஸ்த லோகங்களுக்கும் பீஜம் போலிருக்கும். இது மாறுதல் முதலிய விகாரங்களெவையுமில்லாதது; அப்ராக்ருதமாயிருக்கும். இந்த அநிருத்த பகவா



42, ஸ்ருஷ்டி காலத்தில் மஹா ஜலத்தில் சயனித்துக்
கொண்டிருக்கும் பகவானுடைய நாபி கமலத்தி
னின்று ப்ரஹ்மதேவன் உண்டாதல்,

னுடைய சரீரமான சேதனுசேதனங்களின் ஒரு பாகத்திலுல் தேவதைகளும் திர்யக்கெனப்படும் பசுபக்ஷி முதலியவைகளும் மனுஷ்யர்களும் மற்றவைகளும் உண்டாகின்றன. அந்தப் பரமபுருஷனே நான்முகனைச் சரீரமாகக்கொண்டு அவனுள் புகுந்து கௌமாரமென்கிற உருவத்தை அடைந்து (ஸனத்குமாராதிகளாய் அவதரித்து) நிர்விக்னமான ப்ரஹ்மசர்யத்தை நடத்தினான். இதுவே முதலவதாரம். பாதாளத்தில் சென்ற பூமியை இவ்வுலகத்தின் க்ஷேமத்திற்காக எடுக்க முயன்று, யஜ்ஞங்களுக்கு ப்ரபுவான பகவான் வராஹ உருவத்தைக் கொண்டான். இது இரண்டாவது அவதாரம். மூன்றுவது அவதாரம் ருஷிஜன்மம். அந்த மூன்றுவது அவதாரத்தில் பகவான் தேவரிஷியான நாரத உருவத்தை அடைந்து (நாரதனென்கிற ஜீவனுக்குள் புகுந்து) பாஞ்சராத்ரசாஸ்த்ரத்தை மொழிந்தான். இந்த மாஸ்த்ரத்திலுல் நிவ்ருத்தி தர்மநிஷ்டர்கள் ப்ரவ்ருத்தி தர்மங்களை அனுஷ்டிக்கவேண்டியதில்லையென்று தெரியவருகின்றது. தர்மனென்கிற தகப்பனிடத்தினின்று ஜீவனிடத்தில் அனுப்ரவேசிக்காமல் தன்னுடைய அஸாதாரண அம்சமான உருவத்துடன் தோற்றங்கொண்ட நான்காம் அவதாரத்தில் நர நாராயணர்களெனப்படும் ரிஷிகளாகப் பிறந்து "இந்த்ரியங்களையெல்லாம் அடக்கி மற்ற எவர்க்கும் செய்யமுடியாத கடுந்தவத்தை நடத்தினுன். ஐந்தாமவதாரம் கபிலரென்று ப்ரஸித்தம். இந்தக் கபிலாவதாரத்தில் ஈஸ்வரன் உயிரின் உண்மையை உணர்கையாகிற யோகத்தின் மஹிமையால் தன் தன்மையை அடைந்த ஸித்தர்களுக்கு அதிபதியாகி, அந்த ஸித்தர்களில் தலைவரான ஆஸுரி யென்பவர்க்கு, காலத்திலுல் மறைந்தப்ரக்ருதிமஹத்து முதலிய தத்த்வ ஸமூஹத்தின் உண்மையை நிச்சயித்து அறிவிப்பதான

ஸாங்க்ய யோகத்தை உபதேசித்தான். பிறகு 'நீ எனக்குப் பிள்ளையாகப் பிறக்கவேண்டும்' என்கிற அத்ரி மஹர்ஷியின் விருப்பத்தை நிறைவேற்ற முயன்று அம் மஹர்ஷிக்கு அனஸூயையிடத்தில் தத்தாத்ரேயராகப் பிறந்து அலர்க்கருக்கும் ப்ரஹ்லாதன் முதலியவர்க்கும் அத்யாத்மவித்யையை உபதேசித்தான். இந்த தத்தாத்ரேயரே பகவானுடைய ஆறாவது அவதாரம். பிறகு ருசியென்பவர்க்கு அவருடைய ஆகூதியென்னும் பார்யையிடத்தில் யஜ்ஞனென்னும் பேர்பூண்டு பிறந்தான். இது பகவானுடைய ஏழாவது அவதாரம். அந்த யஜ்ஞன், யாமன் முதலிய தேவகணங்களோடுகூடி ஸ்வாயம்புவ மன்வந்த்ரத்தைப் பரிபாலித்து வந்தான். ஸ்வாயம்புவ மனுவின் பேரனாகிய நாபியென்பவருக்கு அவரது பத்னியாகிய மேருதேவியிடத்தில் ருஷபனென்பவனாகப் பிறந்தான். இது பகவானுடைய எட்டாவது அவதாரம். அவன் யோகீஶ்வரர்கள் அனுஷ்டிக்கத் தகுந்ததும் ஆஶ்ரமதர்மமார்க்கங்களில் சிறந்ததாகையால் ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தன் முதலிய ஸமஸ்த ஆஶ்ரமஸ்தர்களும் புகழத்தகுந்ததுமான தர்மமார்க்கத்தை வெளியிட முயன்று அவதரித்தான். ஹூங்காரங்களால் வேனனைப் பாழ்செய்த முனிவர்கள் உலகங்களைக் காக்கும்பொருட்டு வேண்டுகையில் ப்ருதுவின் உருவத்தை அடைந்தான் (ப்ருதுசக்ரவர்த்தி யென்னும் ஜீவனிடத்தில் ஆவேசித்து ப்ருதுவாக அவதரித்தான்). ஓ அந்தணர்களே! அவன் பசுவின் உருவந்தரித்த இந்த பூமியினின்று ஓஷதிகளைக் கறந்தான். ஆகையால் இவன் அனைவர்க்கும் மிகவும் அன்பிற்கிடமாயிருந்தான். இதுவே பகவானுடைய ஒன்பதாவது அவதாரம். சாக்ஷுஷமன்வந்தரத்தின் ப்ரளயத்தில் பகவான் மத்ஸயத்தின் உருவத்தைக் கொண்டான். இது பத்தாவது

அவதாரம். அந்த மத்ஸ்யாவதாரஞ்செய்த பகவான் வைவஸ்வத மனுவாய் ஜனிக்கப்போகிற ஸத்யவ்ரதனை, பூமியாகிற ஓடத்தில் ஏற்றிக்கொண்டு ரக்ஷித்தான். தேவாஸுரர்கள் ஸமுத்ரங்கடையும்பொழுது ப்ரபுவாகிய பகவான் கூர்மாவதாரஞ்செய்து மத்தாக ஏற்பட்டிருந்த மந்தரபர்வதத்தைப் பின்புறத்தில் தரித்தான். இது பதினொன்றாவது அவதாரம். பிறகு தன்வந்தரியாய் அவதரித்தான். (தன்வந்தரி யென்னும் ஜீவனிடத்தில் ஆவேசித்தான்). இது பன்னிரண்டாவது அவதாரம். பின்பு பகவான் மோஹினி யென்னும் பெண்ணின் உருவங்கொண்டு அஸுரர்களை மதிமயங்கச் செய்து தேவதைகளை அம்ருதபானஞ் செய்வித்தான். இது பகவானுடைய பதின்மூன்றாவது அவதாரம். அப்பால் அவன் நரஸிம்ஹ உருவங் கொண்டு பலிஷ்டனாகிய ஹிரண்யகசிபுவைத் துடையிலிட்டுக் கொண்டு, பாய் முடைகிறவன் கோரைகளைக் கிழிப்பது போல், மார்பைப் பிளந்தான். இது பகவானுடைய பதினான்காவது அவதாரம். பின்பு பகவான் பலிசக்ரவர்த்தி அபஹரித்துக்கொண்டுபோன லோகங்களை மீட்க விரும்பிக் கஶ்யபருக்கு அதிதியினிடத்தில் வாமனனாய்ப் பிறந்து மூன்றடிகள் இரப்பவனாகி, பலிசக்ரவர்த்தியின் யாகபூமிக்குப் போயினான். இது பதினைந்தாவது அவதாரம். பதினாறாவது அவதாரத்தில் பகவான் ராஜாக்களெல்லாரும் ப்ராஹ்மத்ரோஹஞ் செய்வதைக் கண்டு இருபத்தொரு தடவைகள் ராஜாக்களை ஸம்ஹரித்து பூமியில் க்ஷத்ரியர்களே இல்லாதிருக்கும்படி செய்தான். (ராஜாக்கள் ப்ராஹ்மணத்ரோஹஞ் செய்வது கண்டு தனது அம்சத்தினால் பரசுராமனென்னும் ஜீவனிடத்தில் ஆவேசித்து, பூமியில் க்ஷத்ரியர்களே இல்லாதபடி செய்தான்.) இது பதினாறாவது அவதாரம். பின்பு பதினேழாவது அவதாரத்தில் பராசரரிடத்தி

னின்று ஸத்யவதியிடத்தில் வேதவ்யாஸராய்ப் பிறந்து, ப்ராணிகள் அனைவரும் வேதங்களை யெல்லாம் ஓதி அவற்றின்பொருள்களை உள்ளபடி அறிதற்குப் போதுமான புத்தியற்று மந்தபுத்தியுடையவர்களா யிருக்கக் கண்டு வேதமாகிற வ்ருக்ஷத்திற்குப் பல கிளைகளை ஏற்படுத்தினான். (வேதத்திற்கு ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் முதலிய பிரிவுகளை ஏற்படுத்தினான்.) பின்பு பதினெட்டாம் அவதாரத்தில் ராவணனை வதிக்கையாகிற தேவ கார்யத்தைச் செய்ய முயன்று க்ஷத்ரிய குலத்தில் ஸ்ரீராமனாய்ப் பிறந்து ஸமுத்ர நிக்ரஹம் முதலிய பல வீரச் செயல்களைச் செய்தான். பத்தொன்பதாம் அவதாரத்தில் பகவான் யாதவர்களில் பலராமனென்றும் க்ருஷ்ணனென்றும் இரண்டு ஜன்மங்களை எடுத்து பூமியின் பாரத்தைப் போக்கினான். (பலராமன் பத்தொன்பதாம் அவதாரம் ஸ்ரீக்ருஷ்ணன் இருபதாம் அவதாரம்). பின்பு கலியுகம் உண்டாகையில், தேவத்வேஷிகளை மதிமயங்கச் செய்யும்பொருட்டு பகவான் கீகடதேசத்தில் புத்தனென்னும் பேர் பூண்டு ஜினனுக்குப் பிள்ளையாகப் பிறக்கப் போகின்றான். (இது இருபத்தொன்றும் அவதாரம்). பின்பு ஜகத்பதியான பகவான் இந்தக் கலியுகத்திற்கும் க்ருதயுகத்திற்கும் இடையில் அரசர்கள் அதர்மத்தில் முயன்று கேவலம் திருடர்களாயிருக்கையில் அவர்களை வதிக்கும்பொருட்டு விஷ்ணுயசஸ்ஸென்பவனுக்குப் பிள்ளையாய் அவதரிக்கப் போகின்றான். அவன் பெயரினால் கல்கியென்று ப்ரஸித்தி பெறுவான். ஓ அந்தணர்களே! இந்த அவதாரங்களும் கணக்கில்லாத மற்றும் பல அவதாரங்களும் சுத்த ஸத்த்வமயனான அநிருத்த பகவானிடத்தினின்றுமே உண்டாகின்றன. உலராத ஜலாதாரத்தினின்று பல வகைக் கால்வாய்கள் பெருகி

வருவதுபோல் இந்த அவதாரங்களும் மற்றும் பல அவதாரங்களும் அநிருத்தனிடத்தினின்று உண்டாகின்றன. மந்த்ரங்களை ஸாக்ஷாத்கரித்த வஸிஷ்டாதிகளும் ஆத்மஸ்வரூபத்தையும் பரமாத்மஸ்வரூபத்தையும் உள்ளபடி மனனஞ் செய்யுந் தன்மையரான சுகாதி முனிவர்களும் இந்த்ராதி தேவதைகளும் ப்ரியவ்ரதன் முதலிய மனுபுத்ரர்களும் மஹானுபாவர்களான தக்ஷர் முதலிய ப்ராஜாபதிகளும் ஆகிய இவர்களனைவரும் பகவானுன விஷ்ணுவின் அம்சத்தினுல் உண்டானவர்களே. இவர்களனைவரும் அநிருத்தனென்னும் பரமபுருஷனுடைய 1 அம்சத்தின் ஓர் அம்சத்தினுல் உண்டானவர்கள். க்ருஷ்ணுவதாரமோ வென்றுல் ஷாட்குண்ய பரிபூர்ணனுன (ஜ்ஞான சக்தி பல ஐஶ்வர்யவீர்ய தேஜஸ்ஸுக்களென்கிற ஆறுகுணங்களும் நிறைந்திருக்கிற) அநிருத்த பகவானுடைய பூர்ணுவதாரமே. இத்தகைய அவதாரங்களெல்லாம் யுகந்தோறும் அஸுராதிகளால் வ்யாகுலஞ்செய்யப்பெற்ற லோகத்திற்கு ஸுகம் விளைப்பதற்காகவே. (இங்ஙனம் பகவான் யுகந்தோறும் அவதாரஞ்செய்து அஸுரர்களால் நலிவுண்ட உலகத்

1 கீழ்ச்சொன்ன ஸனகாதி அவதாரங்களில் வராஹ நாராயண மத்ஸ்ய கூர்ம மோஹினி நரஸிம்ஹ வாமன ஸ்ரீராம அவதாரங்கள் பூர்ணுவதாரங்களே யாயினும் இவ்விடத்தில் அம்சாவதாரங்கள் பலவும் கலந்திருக்கையால் எல்லாவற்றையும் அம்சாவதாரமென்கிறது. ஆகையால் வராஹாதி அவதாரங்கள் பூர்ணுவதாரங்களென்பதற்கு விரோதமில்லை. அதில் பூர்ணுவதாரமாவது—ஷாட்குண்யம் நிறைந்த ஸ்வரூபத்துடன் பகவான் நேரே செய்யும் அவதாரம். அம்சத்துடன் அவதரிக்கையாவது—ஷாட்குண்ய பரிபூர்ணனுன பகவான் அந்தந்த ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருந்து ஐஶ்வர்ய வீர்யாதி குணங்களில் ஏதேனுமொன்றை ஜீவன் மூலமாய் வெளியிட்டுக் கொண்டு அவதரித்தல். வராஹாதி அவதாரங்கள் பூர்ணுவதாரங்களென்பது அந்தந்தப் புராணங்களால் தெரிய வருகின்றது.

தை வாழ்விக்கின்றான்). எவனேனும் ஒரு மனிதன் பகவானுடைய இந்த அவதார ரஹஸ்யத்தைக் காலை யும் மாலையும் மனவூக்கமுற்று, பக்தியுடன் கீர்த்தனஞ் செய்வானாயின் துக்கஸமூஹத்தினின்று விடுபடுவான். (ஸமஸ்த துக்கங்களுக்கும் இடமான ஸம்ஸாரத்தி னின்று விடுபடுவான்) (பகவானுடைய ஜன்மம் ஜீவனு டைய ஜன்மத்தைப்போல் கர்மத்தினால் வந்ததன்று; அவனுடைய ஸங்கல்பத்தினால் உண்டானது.) ஜ்ஞான ஸ்வரூபனும் உருவமற்றவனுமாகிய பகவானுடைய மாயையென்கிற ப்ரக்ருதியின் குணபரிணாமரூபங்களான மஹத்து முதலிய தத்த்வங்களால் ஆதாரமாயிருக்கிற தன்னிடத்தில் நிர்மிக்கபட்ட இந்த ஜகத்தெல்லாம் பகவானுடைய உருவமே. உலகத்திலுள்ள தேவமனுஷ் யாதி உருவங்களெல்லாம் பகவானுடைய உருவங்களே யாயிருக்க, ஜீவாத்மாக்கள் 'நான் தேவன்' 'நான் மனுஷ் யன்' என்று நினைப்பது ப்ரமமே. ஆகாயத்தின் உண் மையை அறியாதவர்கள் மேகஸமூஹங்களை ஆகாயத் தில் ஏறிடுகின்றார்கள். காற்றின் உண்மை தெரியாதவர் பூமியின் தூளைக் காற்றில் ஏறிடுகின்றார்கள். இங்ஙன மே ஜீவாத்மாவின் உண்மையை அறியாதவர்கள் த்ர ஷ்டாவான ஜீவனை த்ருஶ்யமென்று ப்ரமிக்கின்றார்கள். (த்ருஶ்யமாவது கண்ணால் காணத்தகுந்த வஸ்து. த்ரஷ்டாவானவன் காண்பவன். ஜீவாத்மாவுக்கு உருவ மில்லை. ஜ்ஞானமே அவனுக்கு ஸ்வரூபம். ஆகையால் அவன் கண்ணால் காணத்தகுந்தவனன்று. ஆனது பற்றி யே அவன் த்ரஷ்டாவெனப்படுவான். கண்ணால் கண்ட றியக்கூடிய தேவமனுஷ்யாதி சரீரங்களே த்ருஶ்யமெ னப்படும். ஜீவாத்மாவின் உண்மையறியாதவர் தேவாதி சரீரங்களையே ஆத்மாவாக ப்ரமித்து ஆத்மாவை த்ருஶ்ய மென்று ப்ரமிக்கின்றார்கள். ஆகையால் தேவாதி

சரீரங்கள் ஜீவஸ்வரூபமாகமாட்டா. தேவாதி சரீரத்தை அதற்கு அபிமானியான ஜீவன் தரிக்கின்றானாகையால் அந்த தேவாதி சரீரம் அந்தந்த அபிமானி ஜீவனுக்கு உருவமே ஆயினும் பரமபுருஷனே அந்த ஜீவனுக்கும் உள்ளே இருந்து அந்தந்த ஜீவராசிகளையும் தேவாதி சரீரங்களையும் தரிக்கின்றானாகையால் அந்த ஜீவாத்மாக்களும் தேவாதி சரீரங்களும் பரமாத்மாவின் உருவங்களே. தேஹத்தையும் ஆத்மாவையும் பரமபுருஷனே தரிக்கின்றானென்கிற ஜ்ஞானம் ப்ரமமன்று. ப்ரக்ருதியும் புருஷனும் பரமாத்ம ஸ்வரூபமன்றென்றும், ப்ரக்ருதியே ஆத்மாவென்றும், தான் ஸ்வதந்த்ரனென்றும், ப்ரக்ருதியை ஜீவாத்மாவே தரிக்கின்றானென்றும் உண்டாகிற இந்நினைவுகள் அஜ்ஞானத்தினால் உண்டாகின்றவை). 'ஜீவன் த்ருஶ்யனன்றாகில் அவன் ஸ்வரூபம் என்?' என்கிறீர்களோ? சேதனாசேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்திற் காட்டிலும் அந்த ஜீவன் விலக்ஷணமாயிருக்குந் தத்த்வம். அந்த ஜீவனை வெளியிந்த்ரியங்களால் காணமுடியாது. அந்த ஜீவன் காண்பதற்கும் கேட்பதற்கும் உரியதல்லாத வஸ்து; பலவாறு பிரிவுண்ட குணங்களால் ஸ்தூலமாகுந் தன்மையுடைய வஸ்துவன்று. ப்ரக்ருதியன்றோ காரண தசையில் ஸூக்ஷ்மமாயிருந்து கார்ய தசையில் பலவாறு பிரிவுண்ட ஸத்த்வாதி குணங்களால் ஸ்தூலமாகும். இந்த ஜீவன் அத்தகையனல்லன். ஆனதுபற்றியே காண்பதற்கும் கேட்பதற்கும் உரியதல்லாத வஸ்து. காண்பதற்குரியது கார்ய தசையை அடைந்து ஸ்தூலமாயிருக்கின்ற அசேதனமான ப்ரக்ருதி. கேட்பதற்குரியது காரண தசையையடைந்து ஸூக்ஷ்மமாயிருக்கின்ற அசேதனமான ப்ரக்ருதி. இவ்விருவகைப்பட்ட அசேதனத்தைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டிருப்பான். இத்தகைய வஸ்து

வே ஜீவன். இவன் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் அடிக்கடி பிறப்பதும் சாவதுமாயிருப்பவன். 'ஆனால் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் பிறத்தல் முதலிய துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தை எந்த உபாயத்தினால் கடக்கலாம்? ஸம்ஸாரத்தைக் கடந்த ஜீவாத்மாவின் ஸ்வரூபம் எத்தகையது? என்கிறீர்களோ? பிறத்தலும் சாதலும் ஆகிய இவை அசேதனமான ப்ரக்ருதியின் தர்மங்களே. இவற்றை அஜ்ஞானத்தினால் ஜீவாத்மாவினிடத்தில் ஏறிடுகின்றார்கள். தன்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவைப்பற்றின நல்லறிவினால் அந்தப் பிறத்தலும் சாதலும் தீருகின்றன. இங்ஙனம் உண்மையான ஜ்ஞானத்தினால் பிறத்தல் சாதலாகிய ப்ரக்ருதிஸம்பந்தத்தினால் வருந்தோஷங்கள் தொலையப் பெற்று விளங்கும் ஜ்ஞானஸ்வரூபனான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ப்ராஹ்மமெனப்படும். ப்ரக்ருதி ஸம்பந்தம் தீரப்பெற்று அளவின்றி மலரும் ஜ்ஞானகுணமுடையவனாகையால் ஜ்ஞான ஸ்வரூபனான ஜீவாத்மாவை ப்ரஹ்மமென்கிறார்கள். மஹத்தத்த்வம் முதலிய கார்யங்களின் மூலமாய்ப் பரவி நிற்கின்ற இம்மாயையும் அதன் ஸம்பந்தத்தினால் தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானமும் எப்பொழுது தீருமோ, அப்பொழுதுதான் பரமாத்ம ப்ராப்தியால் வெளித்தோற்றுவதும் தனக்கு இயற்கையாகவே உண்டாயிருப்பதுமான மஹிமையைப் பெற்று (அபஹத பாப்மத்வம்—பாபமற்றிருக்கை முதலிய எட்டுக்குணங்கள் தோற்றப்பெறுகையாகிற மாஹாத்ம்யம் பெற்று) பரப்ரஹ்மத்தை அனுபவிப்பவனாகி வைகுண்ட வாஸிகளால் புகழப்பெற்று வாழ்வானென்று ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை அறிந்தவர் கருதுகின்றார்கள். பாபமற்றிருக்கை முதலிய எட்டுக் குணங்களும் தோற்றப் பெறுகையாகிற மஹிமையானது ப்ரக்ருதிஸம்பந்தத்தி

ஞல் மறைந்திருக்கின்றது. இந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்கினவுடனே அந்தக் குணங்கள் வெளித் தோற்று கின்றன. ஆகையால் அவை ஸ்வபாவஸித்தங்களே. பரமபுருஷன் ஜீவனைப்போல் இங்ஙனம் கர்மத்திஞல் ஜன்மிப்பவனல்லன். அவனைப்போல் புண்யபாபரூபமான கர்மங்களுடையவனுமல்லன். அவன் ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதய கமலத்தின் இடையில் இருந்து அந்த ப்ராணிகளை நியமித்துக்கொண்டிருப்பான். இத்தகையஞன பரமபுருஷனுக்கு இங்ஙனம் கீழ்ச் சொல்லப்பட்ட ஜன்மங்களையும் செயல்களையும் ஜ்ஞாநிகரான பெரியோர்கள் வேத ரஹஸ்யங்களென்று வர்ணிக்கின்றூர்கள். அந்த பகவான் விஞகாத லீலையுடையவன். சேதனர்களும் அசேதனங்களுமான இந்த ஜகத்தையெல்லாம் படைப்பவனும் பாதுகாப்பவனும் ஸம்ஹரிப்பவனும் அவனே. அவன் இந்த உலகத்தில் பற்றுடையவனல்லன். அவன் இவ்வுலகத்தைப் படைப்பது முதலியவைவெல்லாம் லீலைக்காகவே (விளையாட்டிற்காகவே). ஆகையால் அவன் ஜீவனைப்போல் ஜன்மாந்தர வாஸனையின்படி புத்தி செல்லப் பெற்று ஸுகதுக்காதிகளை விளைக்கும்படியான கர்மங்களைச் செய்பவனல்லன். மற்றும், ஜீவனைப் போல் பலவகை இடையூறுகளால் செயல் தடைபடப் பெருமல் நினைத்ததை யெல்லாம் தடை யொன்றுமின்றி நிறைவேற்றுந் தன்மையன். இவனைப்போல் அற்பச்செயல்களைச் செய்கையின்றி உலகங்களைப் படைப்பது முதலிய பெருஞ் செயல்களையுடையவன். தான் படைத்த உலகத்தில் பற்றற்றவஞகையால் ராகம் த்வேஷம் முதலிய உண்டாகப் பெறுமவனல்லன். ஆனதுபற்றியே வைஷம்யமும் (பக்ஷபாதமும்) தயையில்லாமையும் அவனுக்குச் சிறி

தும் கிடையாது. இத்தகையனுகையால் இவையெல்லாம் அமைந்த ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டவனென்று சொல்லவேண்டுமோ? மற்றும், சேதனுசேதனரூபமான வஸ்துக்களில் அந்தராத்மாவாய் அந்தந்த வஸ்துக்களுக்குத்தெரியாமல் மறைந்திருப்பான். ஜீவனுவென்ருல் பற்பல அடையாளங்களால் அறியக்கூடியவன். அவன் ஸ்வதந்த்ரன் (ஒருவனுக்குட் பட்டிருப்பவனல்லன்). ஜீவன் காலகர்மாதிகளுக்குட்பட்டிருப்பவன். அவன் ஜ்ஞான பல ஐச்வர்ய வீர்ய சக்தி தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்களுக் கிருப்பிடம். ஜீவன் இவற்றிற்கெதிர்த்தட்டான குணங்களுடையவன். அவன் செவி வாய் கண் மூக்கு உடல் மனம் என்கிற ஆறு இந்த்ரியங்களால் அறியத்தகுந்த சப்தாதி விஷயங்களை (ஒலி சுவை உருவம் நாற்றம் ஊறு ஆகிய இவைகளை) லீலையாக அனுபவிக்கின்ருன். ஜீவன் ஸுகிப்பதும் துக்கிப்பதும் மதிமயங்குவது மாயிருப்பான். ஆகையால் தன் ஸங்கல்பத்தினுலும் வேதவாக்யங்களாலும் தேவாதி நாமங்களையும் தேவாதி உருவங்களையும், நடன் வேஷங்களைக் கொள்வதுபோல், இயற்றுகின்ற இந்த ஈச்வரனுடைய தன்மைகளை எவ்வளவு வல்லமையுடன் அறியப்புகினும் எந்த ப்ராணியும், சப்தாதி விஷயங்களில் மனம் செல்லப்பெற்று உண்மையான அறிவற்றிருக்கையால் உள்ளபடி அறியவல்லனல்லன். ப்ராணிகளனைவரும் அஹங்கார மமகாரங்களால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாதிருக்கின்ருர்கள். ஆகையால் ஈச்வரனுடைய உண்மையை இவர்கள் எப்படி அறிவார்கள்? நடன் பலவகைவேஷங்களைக் கொள்வதுபோல், மத்ஸ்ய கூர்மாதி உருவங்களையும் அந்தந்த நாமங்களையும் கொள்கின்றவனும் உலகங்களைப் படைப்பவனுமாகிய ஈச்வரனுடைய நடத்தைகளை

மனத்தினால் அறியவும் வாயால் மொழியவும், சப்தாதி விஷயங்களில் மனஞ்செல்லப்பெற்ற எந்த ப்ராணியும் வல்லமையற்றதே. சப்தாதிவிஷயங்களில் மனஞ்செல்லப் பெறாதவனும் ஜீவாத்மாவின் உண்மையையும் பரமாத்மாவின் உண்மையையும் அறிந்து மனனஞ்செய்யுந் தன்மையுடையவனுமாயிருப்பவன் எவனோ, அவனே அறிவான். எவன் மாயையெனப்படும் ப்ரக்ருதியின் குணமான காமக்ரோதாதிகளின்றி என்றும் மாறாமல் பகவானைப் பணிந்து தாமரைமலர் போன்ற அந்தச் சக்ரபாணியினது பாதங்களின் பரிமளத்தை அனுபவிப்பானோ, அவனே அந்த பகவானான சக்ரபாணியின் (சக்ராயுதத்தைக் கையிலேந்தின ஸ்ரீ விஷ்ணுவின்) பதவியை அறிவான். மஹானுபாவர்களான ஓ அந்தணர்களே! பகவானுடைய குணங்களை நெஞ்சினால் மனனஞ் செய்யுந் தன்மையரான முனிவர்களே! நீங்கள் மிகுதியும் பூஜிக்கத்தகுந்தவர். நீங்களே தன்யர்கள் (ப்ரயோஜனங் கைகூடப்பெற்றவர்). ஏனென்கிறீர்களோ? சொல்லுகிறேன், கேளுங்கள். இவ்வுலகத்தில் ஸமஸ்த லோகங்களுக்கும் நாதனும் எல்லாவற்றிலும் அந்தராத்மாவாயிருந்து எல்லாம் தனக்குச் சரீரமாகப் பெற்றவனுமான வாஸுதேவனிடத்தில் நீங்கள் பக்தியைச் செய்கின்றீர்களல்லவா? ஆகையால் நீங்கள் மிகுந்த பாக்யசாலிகள். வாஸுதேவனிடத்தில் பக்தி உளதாயின், கர்ப்பவாஸ ஜன்ம ஜரா மரணாதி துக்கங்களுக்கு விளைநிலமாகையால் பயங்கரமான ஸம்ஸாரத்தில் சுழன்று வருந்தப்படுவது மீளவும் உண்டாகாது. இதைவிட மனிதனுக்கு வேறு நன்மை ஒன்றுண்டோ? இப்படிப்பட்ட பக்தியையுடைய நீங்களன்றோ க்ருதார்த்தர்கள் (ப்ரயோஜனங் கைகூடப் பெற்றவர்). பாகவதமென்று பேர்பெற்றதும் வேதத்தோடொத்திருப்பதும் பரப்ரஹ்மத்தை உள்ள

படி அறிவிப்பதும், சிறந்த ப்ரஹ்மாதி தேவர்களால் புகழப்படுந்தன்மையமைந்து சிறந்த புகழுடையவனுமான பகவானுடைய சரித்ரத்தைக் கூறுவதுமாகிய இந்தப் புராணத்தை, வேதங்களையெல்லாம் அறிந்த வ்யாஸமாமுனிவர் இயற்றினர். கேட்போர்களுக்கு நல்லறிவை விளைவித்து அவர்களை தன்யராக (ப்ரயோஜனங் கைகூடப் பெற்றவராக)ச் செய்வதும் சிறந்த மங்களத்தைக் கொடுப்பவையான பகவானுடைய ஸ்வரூபரூபாதிகளை அறிவிப்பதாகையால் மங்களத்திற்கிருப்பிடமும் பெருமையுடையதுமான இந்தப் புராணத்தை உலகத்தின் நன்மைக்காக, ஜ்ஞானிகளில் சிறந்தவரும் தம்புதல்வருமான ஸ்ரீசுகமுனிவர்க்கு உபதேசித்தார். அங்ஙனம் வ்யாஸரிடம் உபதேசம்பெற்ற அந்தச் சுகமுனிவர், பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இருவகைப்பட்ட ஸகல வேதங்களின் உட்கருத்தையும் இதிஹாஸங்களின் கருத்தையும் தொகுத்தெடுத்து ந்யாயங்களால் சீர்திருத்தி அமைத்து வ்யாஸபகவான் இயற்றின இந்தப் புராணத்தை மஹாராஜனை பரீக்ஷித்துக்கு மொழிந்தார். கங்கையின் கரையில் ப்ராயோவேசங்கொண்டு மஹர்ஷிகள் சூழப்பெற்றிருக்கும் பரீக்ஷித்துக்கு இந்தப் புராணத்தைச் சுகமுனிவர் சொல்லிக்கொண்டிருந்தார். அந்தப் பரீக்ஷித்தின் அருகில் மஹாதேஜஸ்வியும் ப்ரஹ்மர்ஷியுமான சுகமுனிவர் இந்தப் புராணத்தைக் கேட்பித்துக் கொண்டிருக்குந் தருணத்தில், ஓ அந்தணர்களே! அங்குப் போயிருந்த நானும் அவருடைய அனுக்ரஹத்தினால் இந்தப் புராணத்தைக் கேட்டேன். அங்ஙனம் கேட்ட நான், கேட்டபடியே என் புத்தியில் பட்டவளவும் உங்களுக்குச் சொல்லுகிறேன்; கேட்பீர்களாக. அந்தப் புராணம் மிகுதியும் அறிய அரிதாயிருக்கும். அதை என் புத்தி

யில் பட்டவளவு சொல்லுகிறேன், கேட்பீர்களாக. பகவானான க்ருஷ்ணன் தர்மஜ்ஞானாதிகளோடு தனது லோகத்திற்குப் போனவுடன், கலி தலையெடுத்துப் பரவலாயிற்று. அதனால் ஜனங்கள் காடாந்தகாரமான ராத்ரியில் கண் தெரியாமல் தடுமாறுவதுபோல் அறிவற்றுத் தடுமாற்ற முற்றிருக்கையில், ஸூர்யோதயமான பின்பு இருள் நீங்கிக் கண் பொருள்களைக் கண்டறியுந்திறமை பெறுவதுபோல், இந்தப் புராணமாகிற ஸூர்யோதயத்தினால் அறிவற்றவர் அனைவரும் அறிவு தெளியப் பெறுகின்றார்கள். இங்ஙனம் கலிதோஷத்தினால் அறிவு கெட்டுத் தடுமாறுகிற ஜனங்களின் நன்மைக்காகவே இந்தப் புராணம் உண்டாயிற்று. கலியிருள் மூடப்பெற்று அறிவென்னும் உட்கண் தெரியாதவர்களுக்கு வெளிச்சங் கொடுப்பதற்காக இப்பொழுது இந்தப் புராணமென்னும் ஸூர்யன் உதித்தான். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ வ்யாஸர் மனக்கலக்கத்துடன் சிந்தித்துக் கொண்டிருக்கையில் நாரதர் வருதல். }

வ்யாஸர் சொல்லுகிறார்:—ஸூதர் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் தீர்க்க ஸத்ரமென்னும் யாகத்தில் (ப்ரஹ்மவிசாரமாகிற பெரும் யாகத்தில்) தீக்ஷையுற்றிருக்கும் முனிவர் கூட்டத்திற்குத் தலைவரும் ஜ்ஞானத்தினாலும் வயதினாலும் முதிர்ந்தவரும் ருக்வேதமோதுந் தன்மையருமான சௌனகமுனிவர் அவரைக் கொண்டாடி, இங்ஙனஞ் சொல்லத் தொடங்கினார். 'ஸூதரே! ஸூதரே! நீர் தத்த்வஜ்ஞானங்களெல்லாவற்றையும் பெற்ற பாக்யசாலி; மற்றும் பேசத்தெரிந்தவர்களில் மேன்மையுற்றவர். ஆகையால், மஹானுபாவரான சுகர் பரீக்ஷித்துக்குச் சொன்ன புண்யமான பாகவதகதையை

எங்களுக்குச் சொல்வீராக. இந்த பாகவதகதை எந்த யுகத்தில் நடந்தது? எந்த இடத்தில் நடந்தது? எந்தக் காரணத்தைப்பற்றி உண்டாயிற்று? [1] க்ருஷ்ணத்வைபாயனர் எவருடைய தூண்டுதலால் இந்த பாகவத ஸம்ஹிதையை நிர்மித்தார்? சுகர் பரீக்ஷித்துக்குச் சொன்னதாகச் சொன்னீர். இது எப்படி பொருந்தும்? அந்த க்ருஷ்ணத்வைபாயனருடைய (வ்யாஸருடைய) புதல்வரான சுகர் யோகிகளில் சிறந்தவர் (மஹாயோகி); எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையர். தேவமனுஷ்யாதி சரீரங்களெல்லாம் ப்ரக்ருதியின் பரிணமங்களாகையாலும் (வேறுபாடேயாகையாலும்) தனக்குத்தான் தோற்றுவதன்றிப் பிறர்க்கே தோற்றுவதாகையாலும் ஒருவகைப்பட்டவை யென்றும், ஜீவராசிகளெல்லாம் ஜ்ஞானமே உருவமாகப் பெற்றவையாகையால் ஒருவகைப்பட்டவையென்றும் பரமபுருஷன் எங்குந் தொடர்ந்து நிறைந்து ஜ்ஞானம் முதலிய கல்யாண குணங்களமைந்து ஒரு வகைப்பட்டவனென்றும் உணர்ந்து எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையர்). எதிலும் விகல்பம் பாராட்டாதவர்; 'தேவன், மனுஷ்யன்' என்கிற பேதமெல்லாம் சரீரத்தைப்பற்றினதேயன்றி எல்லா ஆத்மாக்களும் ஒரு வகைப்பட்டவரென்றுணர்ந்தவராகையால் தேவமனுஷ்யாதி பேதங்களை ஆத்மாக்களிடத்தில் ஏறிடுந்தன்மையரல்லர். ஈஶ்வரன் எங்கும் நிறைந்திருக்கையால் அவனல்லாத வஸ்து ஒன்றுமேயில்லையாகையால் எல்லாவற்றையும் பரப்ரஹ்மமாகவே பார்க்குந் தன்மையர்; அல்லாத வஸ்து உண்டென்னும் ஜ்ஞானமற்றவர்; பகவானிடத்தில் என்றும் மாறுத மதியுடையவர்; எப்பொழுதும் தூக்கமில்லாதவர்; தனது மஹிமையை வெளிப்படுத்தாமல் மறைத்துக்

1. க்ருஷ்ணத்வைபாயனரென்று வ்யாஸருக்குப் பெயர்.



57. ஜலக்ரீடை செய்கின்ற அப்ஸரமடந்தையர் சுகர் வரும்போது வஸ்த்ரமில்லாமலே யிருக்கையும், வ்யாஸர் வரும்போது வஸ்த்ரங்களை உடுத்துக்கொள்கையும்.

கொண்டிருக்குந் தன்மையர்; ஒன்றுந் தெரியாதவர் போல் தோற்றுமவர். ஒரு காலத்தில் வ்யாஸமஹர்ஷி ஆடையுடுத்துத் தன் புதல்வரான சுகரைப் பின்றொடர்ந்தனர். அப்பொழுது ஜலக்ரீடை செய்கின்ற தேவஸ்த்ரீகள் திடீலென்று துணிகளை உடுத்துக்கொண்டார்கள். அரையில் ஆடையின்றி வருகின்றவரும் யௌவனப் பருவமுடையவரும் அவரது புதல்வருமான சுகரைப் பார்த்து அவர்கள் சிறிதும் வெட்கமின்றி ஜலக்ரீடையில் ஆழ்ந்திருந்தார்களேயன்றி ஆடையுடுக்கவில்லை. அந்த ஆச்சர்யத்தைப் பார்த்து, வ்யாஸர் தேவஸ்த்ரீகளை வினவுகையில், அவர்கள் 'உமக்கு ஸ்த்ரீயென்றும் புருஷனென்றும் பேதபுத்தி உண்டு. உமது புதல்வர்க்கு அந்த பேதபுத்தி இல்லை. அவர்க்கும் உமக்கும் வெகுவாசி உண்டு. அவர் ப்ரக்ருதியிலும் ஜீவனிலும் வேறுபட்டிருக்கும் பரமபுருஷனிடத்திலேயே கண் வைத்திருப்பவர். அவர் மற்ற எதிலும் கண் வைப்பவரல்லர். ஆகையால் அவரைக் கண்டும் எங்களுக்கு வெட்கம் உண்டாகவில்லை' என்று வ்யாஸருக்கு மறுமொழி கூறினார்கள். இத்தகையரான அம்முனிவர் பிச்சேறினாற்போலும் ஒன்றுமறியாத மூடன்போலும் உலாவிக்கொண்டிருப்பவரல்லவா? அத்தகையரான அந்தச் சுகமுனிவர் குருஜாங்கல தேசங்களில் திரிந்து ஹஸ்தினாபுரத்திற்கு எங்ஙனம் வந்தார்? பட்டணத்து ஜனங்கள் அவரை எங்ஙனம் கண்டறிந்தார்கள்? பாண்டவர்களது பேரனும் ராஜர்ஷியுமான பரீக்ஷித்துக்குச் சுகமுனிவரோடு எங்ஙனம் ஸம்வாதம் நடந்தது? அவர்களது ஸம்வாதத்திலன்றோ பகவானுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை அறிவிப்பதாகையால்வேதம் போன்ற இந்தப் புராணம் வெளியாயிற்றென்கிறீர். அந்த மஹாயோகியான சுகர் எல்லாவற்றிலும் பற்றற்றவரா

கையால் இல்லறமுடையவரது வீடுகளில் பசு கறக்கிற பொழுதளவுமாத்ரமே எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்; அதற்குமேல் நிற்கமாட்டார். அதுவும் அந்த க்ருஹஸ்தருடைய வீடுகளைப் பரிசுத்தஞ் செய்வதற்காகவேயன்றி வேறு காரணத்தினாலன்று. ஓரிடத்தில் வெகு நேரம் இருக்கமாட்டார். அப்படிப்பட்ட அம்முனிவர் வெகுகாலஞ்சொல்லி முடிக்கவேண்டிய இந்தப் புராணத்தை ஓரிடத்தில் இருந்து எங்ஙனம் மொழிந்தார்? ஸூதரே! அபிமன்யுவின் புதல்வனாகிய பரீக்ஷித்து மஹாபாகவதனென்றும் (பகவானிடத்தில் மிகுந்தபக்தியுடையவனென்றும்) அவனுடைய உற்பத்தியும் செயல்களும் மிகவும் அற்புதங்களென்றும் சொல்லுகிறார்கள், அவற்றையெல்லாம் எங்களுக்குச் சொல்லவேண்டும். பாண்டவர்களின் சிறப்பை வளர்க்குந் தன்மையனும் ஸார்வபௌமனுமாகிய அந்தப் பரீக்ஷித்து எந்தக் காரணத்தைப்பற்றிப் பெரிய ராஜ்ய ஸம்பத்தையெல்லாம் உபேக்ஷித்து, கங்கையின் கரையில் ப்ராயோபவேசஞ் செய்தான்? சத்ருக்கள் தமதுயோக க்ஷேமத்திற்காகத் தனங்களைக்கொண்டு வந்து கொடுத்து எவனுடைய பாதபீடத்தை வணங்குகிறார்களோ, அப்படிப்பட்ட வீரனாகிய அந்தப் பரீக்ஷித்து யௌவனப் பருவமுடையவனாயிருந்தும் துறக்கமுடியாத ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை ப்ராணன்களோடு துறக்கமுயன்று ப்ராயோபவேசஞ் செய்தானென்கிறீர். இது மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. 'பரீக்ஷித்து மிகுந்த பகவத்பக்தி யுடையவனென்று நீரே சொன்னீர். பகவானிடத்தில் பக்தியுடையவர்க்கு தேஹத்திலும் தேஹ ஸம்பந்திகளிடத்திலும் மனப்பற்றில்லாமை இயற்கையில் ஏற்பட்டதே. ஆகையால் இது ஆச்சர்யமன்றே' என்கிறீரோ? அப்படி அன்று. பாகவதர்கள் எல்லாவற்றிலும் மனப்பற்

றில்லாதவரே. ஆயினும், உத்தமஶ்லோகனை பகவானையே முக்யமாகவுடைய ஜனங்கள் (பகவானிடத்தில் பக்தியுடையவர்) தமக்காகப் பிழைத்திருக்கிறார்களல்லர். 'ஆனால் ஏதுக்காக' என்கிறீரோ? உலகத்தினுடைய நன்மைக்காகவும் சிறப்புக்காகவும் அவற்றை மேன் மேலும் வளர்ப்பதற்காகவும் ஜீவித்திருக்கிறார்கள். இங்ஙனம் பிறர்க்கு உபகாரஞ்செய்யுந் தன்மையதான தேஹத்தை எந்தக் காரணத்தினால் துச்சமாக நினைத்து அதைவிட முயன்றான்? இங்ஙனம் நாங்கள் வினவினதற்கெல்லாம் மறுமொழி கூறுவீராக. மற்றும், நாங்கள் கேளாத நன்மை ஏதேதுண்டோ, அதையும் எங்களுக்குச் சொல்லவேண்டும். நீர் வேதவாக்யம்தவிர மற்ற புராண இதிஹாஸாதியான வாக்குக்களின் விஷயத்தில் பாரங்கதரென்று நான் அறிவேன். ஆகையால் அவற்றையெல்லாம் எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்றார்.

இங்ஙனம் வினவின சௌனகாதிகளைப் பார்த்து ஸூதபௌராணிகர் இங்ஙனம் மொழிந்தார். த்வாபரயுகம் நடக்குந் தருணத்தில் அதிலும் யுகங்களில் மூன்றாவதான அந்த யுகம் முடிகிற ஸமயத்தில் பராசரருக்கு ஸத்யவதியிடத்தில் மஹாயோகியான வ்யாஸர் விஷ்ணுவின் அம்சமாகப் பிறந்தார். அவர் ஒரு ஸமயத்தில் ஸரஸ்வதி நதியின் பரிசுத்தமான ஜலத்தை எடுத்து ஆசமனஞ்செய்து நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு ஸூர்யோதயமாகையில் ஸஹாயமின்றித் தாமொருவராகவே ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்தார். ஸமஸ்தவேதங்களின் கரைகண்டவரும் பராவரங்களை அறிந்தவரும் (பரதத்த்வமான ஈஶ்வரனையும் அவனுக்குக் கீழ்ப்பட்ட தத்த்வங்களான ப்ரக்ருதி புருஷர்களையும் உள்ளபடி உணர்ந்தவரும்) ஆகிய அந்த வ்யாஸர் அறிய முடி

யாத வேகமுடைய காலத்தினால் பூலோகத்தில் யுகந் தோறும் தர்மத்திற்கு நேரும் வ்யத்யாஸத்தையும், நிலம் நீர் தீ விசும்பு கால் ஆகிய ஐம்பூதங்களின் பரிணாமங்களான (வேற்றுருவங்களான) தேவாதி சரீரங்களும் அவற்றில் பற்றுடைய ஜீவாத்மாக்களும் சக்தி குறையப் பெற்றிருப்பதையும், ஜனங்கள் தங் தமது வர்ண ஆச்ரமங்களுக்கு ஏற்பட்ட தர்மங்களை அநுஷ்டிப்பதில் ச்ரத்தை யற்றும், ச்ரத்தை உண்டாயினும் அவற்றை அநுஷ்டிப்பதற்கு வேண்டிய பலமற்றும், பலம் உளதாயினும் புத்தி விபரீதமாகப் பெற்றும், தர்மாநுஷ்டானத்திற்கு வேண்டிய ஜ்ஞானமும் ஆயுளும் குறையப் பெற்றும் பாக்யமற்றிருப்பதைக் கண்டு, பரமாத்மாவின் உண்மையை மனனஞ்செய்யுந் தன்மையராகையால் வீணாகாத ஸங்கல்பமுடைய அம்முனிவர் பரிசுத்தமான மனத்தினால் ஸமஸ்த வர்ணாச்ரமங்களுக்கும் (ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ர வர்ணங்களுக்கும், ப்ரஹ்மசாரி க்ருஹஸ்த வானப்ரஸ்த ஸந்யாஸிகளாகிய ஆச்ரமஸ்தர்களுக்கும்) எது நன்மையென்று சிந்தித்து அதைச் செய்ய முயன்றார். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யர்களாகிற ப்ரஜைகளைச் சேர்ந்ததும் நன்மையைக் கொடுப்பதாகையால் அவர்கள் அநுஷ்டிக்க வேண்டியதும் வேதத்தின் முதல்பாகத்தினால் அறிவிக்கப்படுவதும் பரிசுத்தமாயிருப்பதும் சாதுர்ஹோத்ர மென்னும் மந்த்ரத்தினால் வெளிப்படுவதுமான கர்மத்தை ப்ரஜைகள் தமது நன்மைக்காக அநுஷ்டிக்கவேண்டு மென்பதை ஆலோசித்து, முதலில் யஜ்ஞாதிகர்மங்களை அனைவரும் ஸுலபமாக அறியும்பொருட்டு, அவற்றை அறிவிப்பதும் ஒரே விதமாயிருப்பதுமாகிய வேதத்தை ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் அதர்வம் என்னும் பேதங்களால் நான்கு வகையாகப் பிரித்தார். ஒரேவகையாயிருந்த வேதராசியி

னின்று ருக்யஜுஸ்ஸாம அதர்வங்களென்கிற நான்கு வேதங்களையும் பிரித்து எடுத்து ஸுகமாக ஓதும்படி செய்தார். அங்ஙனமே அந்த வேதத்தினின்று இதிஹாஸ புராணங்களையும் எடுத்தார். அவை ஐந்தாம் வேதமென்று வழங்கிவருகின்றன. அந்த ருக்கு முதலிய வேதங்களில் ருக்வேதத்தைப் பைலரென்னும் முனிவர் ஓதி மறவாமல் மனத்தில் நிறுத்திக்கொண்டார். அறிஞராகிய ஜைமினி ஸாமவேதத்தை ஓதினார். வைசம்பாயனரிஷி ஒருவரே பலவாறு பிரிந்த யஜுர் வேதத்தின் கரை யறிந்தவரென்று ஸம்மதராயிருந்தார். தருவின் புதல்வராகிய ஸுமந்துவென்னும் முனிவர் அதர்வமென்கிற அங்கிரஸ்ஸாகையின் கரையை அறிந்தார். என்பிதாவான ரோமஹர்ஷணர் இதிஹாஸ புராணங்களையெல்லாம் ஓதி அவற்றைக் கரை கண்டார். அத்தகையரான இந்த மஹர்ஷிகள் தாம் தாம் ஓதின வேதபாகங்களைத் தமது சிஷ்யர் மூலமாகவும் அவருடைய சிஷ்யர் மூலமாகவும் அவருடைய சிஷ்யர் மூலமாகவும் பலவாறு பிரித்தார்கள். அதனால் அந்த வேதங்கள் பல பிரிவுகளைப்பெற்றன. அவற்றில் ருக்வேதம் இருபத்தொரு சாகைகளாகவும், யஜுர் வேதம் நூற்றொரு சாகைகளாலும், ஸாமவேதம் ஆயிரம்சாகைகளாகவும், அதர்வணவேதம் ஒன்பது சாகைகளாகவும் பிரிந்தன. ஒரே வகையாயிருந்த வேதத்தை ஓதியுணர்ந்து ஜீவிக்குந் திறமையில்லாத ஏழை ஜனங்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடன் வ்யாஸர் அப்படிப்பட்ட இந்த வேதங்களை அத்தகையரான அறிவற்றவரும் ஓதித்தரிக்கும்படி அவற்றைத் தமது சிஷ்யர்களைக் கொண்டும் அவரது சிஷ்யர்களைக்கொண்டும் பலவாறு பிரித்தார். ஆனது பற்றியே இவர்க்கு வ்யாஸரென்னும் பேர் விளைந்தது. 'ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும்

ப்ராஹ்மணர்போலும் க்ஷத்ரியர்போலும் வைஶ்யர் போலும் தோற்றுகிற பலவகைத் தாழ்ந்த ஜாதியர்களுக்கும் ஒருவரிடம் ஒருவர் கேட்டுத் தரிக்கப்பெறுவதாகிய வேதத்தில் அதிகாரம் இல்லை. உபநயனமில்லாமல் வேதம் ஓதுவதற்கு ப்ரஸக்தி இல்லை. உபநயனமென்கிற ஸம்ஸ்காரம் ப்ராஹ்மணக்ஷத்ரிய வைஶ்யர்களுக்கே உள்ளது. ஆகையால் உபநயனமில்லாத ஸ்த்ரீ சூத்ராதிகளுக்கு வேதமோதுவதில் அதிகாரமில்லை. ஆனது பற்றி வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களால் ஸாதிக்கத்தகுந்த நன்மையில் அறிவில்லாத மூடர்களுக்கு வேறுவிதமாக நன்மை உண்டாகாது. இப்படி செய்தால்தான் அவர்க்கு இந்த ஸம்ஸாரத்தில் நன்மை உண்டாகும்' என்று ஆலோசித்து எல்லோரும் பிழைக்க வேண்டுமென்னும் கருணையால் பாரதமென்னும் இதிஹாஸத்தை வ்யாஸ முனிவர் இயற்றினர். ஓ அந்தணர்களே! இங்ஙனம் எல்லாவிதத்திலும் உலகங்களின் நன்மையில் முயன்று பலவாறு ஹிதங்களைச் செய்தும் பாதராயண மஹர்ஷிக்கு (வ்யாஸமாமுனிவர்க்கு) 'உலகத்திற்கு வேண்டிய நன்மைகளெல்லாஞ் செய்தோம்' என்னும்படியான மனக்களிப்பு உண்டாகவில்லை. அப்பொழுது நிரம்பவும் தெளிந்த மனமுடையரல்லாத அம்முனிவர் பரிசுத்தமான ஸரஸ்வதீ நதியின் கரையில் ஏகாந்தமான ஓரிடத்தில் இருந்து 'மனத்தெளிவில்லாமைக்கு நிமித்தம் என்?' என்று விசாரித்து இங்ஙனம் தன்மனத்தில் சொல்லிக்கொண்டார். வ்ரதங்களில் தவறுமல் நின்று சந்தோ தேவதைகளையும் குருக்களையும் (ஆசார்யர்களையும்) அக்னிகளையும் கபடமில்லாமல் பூஜித்தேன். அவற்றின் கட்டளைப்படி நடந்தேன். பாரதமென்னும் வ்யாஜத்தினுல் வேதங்களின் பொருள்களைத் தெளிவாக எடுத்துரைத்தேன். ஸ்த்ரீகளும் சூத்ரர்களும் மற்றுமுள்ள ஸங்கரஜாதியர்களும்

தந்தமக்கு வேண்டிய நன்மைகளை நிறைவேற்றிக் கொடுக்கவல்ல தர்மங்களை ஸுகமாகக் கண்டறியும் படியான அந்த பாரதமென்னும் இதிஹாஸத்தில் பல வாறு தர்மங்களை எடுத்துக்கூறினேன். ஆயினும் என் தேஹத்திலுள்ளவனும் இந்த்ரியங்களின் ப்ரபுவுமாகிய ஜீவாத்மாவும் என் மனமும், நன்னடத்தையாலும் வேதமோதுவதாலும் உண்டான தேஜஸ்ஸினால் பரிசுத் தமாயிருந்தும், அத்தகையதான ப்ரஹ்மவர்ச்சஸமில் லாதவை (நன்னடத்தையாலும் வேதமோதுவதாலும் உண்டான தேஜஸ்ஸில்லாதவை) போல் நிறைவற்ற வையாகத் தோற்றுகின்றன. (என்மனம் நன்னடத்தை யாலும் வேதமோதுவதாலும் என்றும் பரிசுத்தமா யிருப்பதாயினும் இப்பொழுது சுத்தியற்றதுபோல் தெளிவற்றதாகத் தோற்றுகின்றது). நான் பாகவதர் கள் ஆசரிக்குந் தர்மங்களைப் பெரும்பாலும் நிரூபிக்க வில்லையே. அதனால் தான் இங்ஙனம் என் மனம் தெளி யாதிருக்கின்றதோ? எல்லோர்க்கும் அந்தராத்மாவான பகவான் ஸந்தோஷிக்கிலன்றே அவனால் தூண்டப்படுவ தான மனத்திற்கு ஸந்தோஷம் உண்டாகும். அந்த பகவான் தன்னிடத்தில் பக்தியுடைய பாகவதர்கள் ஸந் தோஷித்தால் தான் ஸந்தோஷம் அடைவான். அந்த பாகவதர்களுக்கு ஸந்தோஷத்தை விளைவிப்பவை பாக வததர்மங்களே. அவற்றை நான் உள்ளபடி நிரூபித்துச் சொல்லாமையால் என் மனம் ஸந்தோஷமற்றிருக்கின் றது. இது நிச்சயம்' என்று சிந்தித்தார். இங்ஙனம் தன்னைத்தான் பரிதபித்தவனாக நினைத்தவரும் ஆனது பற்றியே வருந்துகின்றவருமான அந்த வ்யாஸர் வீற் றிருப்பதும் ஸரஸ்வதியின் கரையிலிருப்பதும் முன் சொன்னதுமான அவரது ஆஶ்ரமத்திற்கு நாரதமுனி வர் வந்தார். அங்ஙனம் வந்த முனிவரை அடையாளங்

களால் நாரதரென்றறிந்து, விரைவுடன் எழுந்து தேவதைகளால் பூஜிக்கப்படும் மஹிமையுடைய அந்நாரத முனிவரை முறைப்படி பூஜித்தார். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

வ்யாஸ-நாரத ஸம்வாதமும், நாரதர் தன் சரித்ரத்தைக் கூறுதலும்.

அனந்தரம் (முறைப்படி பூஜித்த பின்பு) ஸுகமாக உட்கார்ந்திருப்பவரும் பெரும்புகழுடையவரும் கையில் வீணை ஏந்திக்கொண்டிருப்பவரும் தேவரிஷியுமாகிய நாரதர், தனது அனுமதியின்படி உட்கார்ந்திருக்கின்ற ப்ரஹ்மரிஷியான வ்யாஸரைப் பார்த்து மொழியத் தொடங்கினர்.

நாரதர் சொல்லுகிறார்:—பராசர குமாரரே! மஹானுபாவரே! உமது சரீரத்திலிருக்கும் ஜீவாத்மா மனத்துடன் ஸந்தோஷமுற்றிருக்கிறதா? நீர் அறிய முயன்றதெல்லாம் நிறைவேறிற்றல்லவா? ஏனெனில்—எல்லாப் பொருள்களையும் தெளிவாக எடுத்துரைப்பதும் பெரியதும் அற்புதமுமான பாரதமென்னும் இதிஹாஸத்தை இயற்றினீரல்லவா? ஆகையால் உமது விருப்பங்களெல்லாம் நிறைவேறியிருக்குமென்று நினைக்கின்றேன். மற்றும், அனாதியான வேதத்தை ஓதினீர், வல்லவரே! அதன் பூர்வபாகப் பொருள்களை எடுத்துரைக்கும் பூர்வமீமாம்ஸையென்னும் க்ரந்தத்தை உமது சிஷ்யராகிய ஜைமினியைக்கொண்டு செய்வித்தும், அதன் உத்தரபாகப் பொருள்களை நிச்சயிப்பதான உத்தரமீமாம்ஸையென்னும் க்ரந்தத்தை நீரே செய்தும் அந்த வேதத்தின் பொருள்களை நன்றாக நிர்ணயித்து இங்ஙனஞ் செய்யவேண்டிய செயல்களையெல்லாம் செய்து நிறைவேற்றியும், செயல் தீரப்பெறாமல் (ப்ரயோஜனங் கை



64. நாரதர் வ்யாஸரிடம் வருதல்.

கூடப் பெறுமல்) வருத்தமுறுபவன்போல் தோற்றுகிறீர்.

வ்யாஸர் சொல்லுகிறுர்:—நீர் ஏதேது சொன்னீரோ, இதெல்லாம் எனக்கு உள்ளதே. ஆயினும் என் மனம் தெளிவில்லாதிருக்கின்றது. அதன் காரணம் எனக்குத் தெரியவில்லை. ஆகையால், ஆழ்ந்த அறிவுடையவரும் ப்ரஹ்மாவின் புதல்வருமான உம்மையே வினவுகின்றேன். 'நான் அறியேன்' என்னலாகாது. நீர் அத்தகைய மஹிமையுடையவரல்லவா? நீர் ஜ்ஞானிகளில் சிறந்தவர். ரஹஸ்யங்களை யெல்லாம் அறிவீர். ப்ராணிகளின் மனத்திலுள்ளதை யெல்லாம் நீர் அறியுந் திறமையுடையவர். ஏனெனில்—ஜகத்திற்கெல்லாம் காரணனும் எல்லாம் அறிந்தவனுமாகிய பரமபுருஷனை உபாஸித்திருக்கிறீர். அந்தப் பரமபுருஷன் ப்ரஹ்மாதிகள் அனைவரும் தனக்குக் கீழிருக்கப்பெற்று எல்லோரையும் நியமிக்குந் தன்மையன். அவன் மனத்தினுலேயே ஜகத்தையெல்லாம் படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாயிருப்பவன். ஆயினும் அவன் ஸத்த்வாதிகுணங்களோடு பற்றுடையவனல்லன். இத்தகையனுன பரமபுருஷன் ப்ராணிகளுடைய மனத்தில் உள்ளதை யெல்லாம் அறியுந் திறமையுடையவன். அவனை உபாஸித்தவரும் அங்ஙனமே ப்ராணிகளின் மனக்கருத்தை அறிவார்களென்பதில் ஸந்தேஹமில்லை. நீரும் எல்லாம் அறிந்த பகவானை உபாஸித்தவராகையால் உமக்குளெல்லாம் தெரியும். நீர் ஸூர்யன்போல் மூன்று லோகங்களிலும் திரிந்து ஆங்காங்குள்ள வஸ்துக்களையெல்லாம் கண்டறிந்தவர்; காற்று எல்லா ப்ராணிகளின் உள்ளே புகுந்திருப்பது போல், நீர் ஜ்ஞானத்தினுல் ப்ராணிகளின் உள்ளே ஸஞ்சரிப்பவர். அவற்றின் மனக்கருத்திற்கு ஸாக்ஷியாயிருப்பவர்; அவற்றின் மனக்கருத்தை

பெல்லாம் நேரே கண்டறிந்தவர். ஆகையால், பர ப்ரஹ்ம விஷயத்திலும் அந்தப் பரப்ரஹ்மத்தை அறி விக்கிற வேதத்திலும் தர்மந்தவறுமல் வ்ரதங்களை ஆசரித்துக் கரையேறியிருக்கிற எனக்கு எந்த விஷ யத்தில் குறையோ, அதை ஆராய்ந்தறிய நீர் வல்லரா கையால் அதை எனக்குச் சொல்லவேண்டும்.

நாரதர் சொல்லுகின்றார் :—கேட்பவர்க்கும் சொல் பவர்க்கும் ஸமஸ்த பாபங்களையும் போக்கவல்லதான பக வானுடைய புகழை நீர் பெரும்பாலும் சொல்லவில்லை. பாரதத்தில் சிற்சில இடங்களில் அந்த பகவானுடைய புகழைச் சிறிதுமாத்ரமே மொழிந்தீர். எதனுல் உமது மனம் தெளிந்து களிப்புறுமோ, அப்படிப்பட்ட பகவா னுடைய புகழை முக்யமாக நீர் எடுத்துரைத்தவரல் லீர். ஆனது பற்றியே உமது மனம் களிப்பற்றிருக்கின் றது. அதற்குக் காரணம் பகவான் களிப்புருமையே. அதற்குக் காரணம் அவனுடைய புகழை முக்யமாக எடுத்துரையாமையே. இங்ஙனம் பகவான் ஸந்தோ ஷம் அடையாமையால் அவனுல் தூண்டப்படுவதான உமது மனமும் தெளிவின்றி ஸந்தோஷம் அடையா திருக்கின்றது. பகவானுடைய ஸ்வரூப குண விபூதி களை உள்ளபடி அறிந்து அவற்றை முக்யமாக எடுத் துக் கூருமையாகிற இந்தக் குறையே உமது மனம் தெளிந்து களிப்புருமைக்குக் காரணமென்று யான் நினைக்கின்றேன். முனிவர்களில் சிறந்தவரே! தர்மம் அர்த்தம் காமம் முதலிய புருஷார்த்தங்களை அவற் றிற்கு வேண்டிய உபாயங்களோடு ஸ்ரீமஹா பாரத மென்னும் இதிஹாஸத்தில் எப்படி நிரம்பவும் எடுத் துக் கூறினீரோ, அங்ஙனம் வாஸுதேவனுடைய மஹிமையைப் பெரும்பாலும் வர்ணிக்கவில்லை. ஒரு

ப்ரபந்தம் பதங்களும் பொருள்களும் அற்புதமாயிருக்கப் பெறினும் ஸ்ரீ விஷ்ணுவின் புகழை ஏதேனுமோரிடத்தி லும் எடுத்து மொழியாதாயின், அது அழகிய மானஸ மென்னும் ஸரஸ்ஸில் வஸிக்குந் தன்மையுடைய ஹம்ஸ பக்ஷிகள் நெஞ்சிலும் நினைக்கப்பெறாத வாயஸதீர்த்தமே யாம் (காக்கை குடிக்கும் குட்டையேயாம்). மானஸ ஸரஸ்ஸில் வஸிக்கும் பக்ஷிகள் ஊர் தெருவினின்று பெருகி வருவதான எச்சில் நீர் நிறைந்ததும் காக்கை கள் நீர் குடித்துக்கொண்டுவரப் பெற்றதுமான சிறு குட்டையை மனத்திலும் நினைக்கமாட்டா. அங்ஙன மே, மிகுதியும் அழகியதான பரப்ரஹ்மத்தையே பற்றி ப்ரஹ்மாநந்தத்தை அனுபவிப்பவரும் தூயமனத் தருமாகிய பெரியோர்கள் பகவானுடைய புகழை மொழியாத செய்யுளை, அது அழகியதாயினும், கண் ணெடுத்துப் பார்க்கவும் விரும்ப மாட்டார்; காக்கை போன்ற காமுகர்களுக்கே உரியதென்று நினைப்பார் கள். அயலார் தூண்டினும் அதைக் கேட்கமாட்டார் கள். ஒரு ப்ரபந்தம் ஶ்லோகந்தோறும் அபத்தங்கள் நிறைந்திருப்பினும் பகவானுடைய புகழை வெளியிடு கிற நாமங்கள் அமைந்திருக்குமாயின், அது ஸமஸ்த ஜனங்களின் பாபத்தைப் போக்குந் திறமையுடைய தாகும். ஸத்புருஷர்கள் அதைப் பிறர் பாடக்கண்டு தாங் கள் ஆதரவுடன் கேட்பார்கள்; கேட்பவர் உளராயின் தாமும் பாடுவார்கள்; அவ்விரண்டும் இல்லையாயின், தமக்குள் தாமே பாடிக்கொண்டிருப்பார்கள். கர்மத் தைக்காட்டிலும் வேறுபட்டதான ஆத்மஜ்ஞானமா னது ராகத்வேஷம் முதலிய தோஷங்களற்றிருப்பினும், தன்னைப்பற்றினரைக் கைவிடாதிருக்குந் தன்மையனான பரமபுருஷனிடத்தில் பக்தி யற்றிருக்குமாயின். அது அவ்வளவு சோபிக்காது. இங்ஙனம் இருக்கையில், செய்

யுங் காலங்களில் பலவகை வ்ரதங்களால் தேஹத்திற்கு ஶ்ரமத்தை விளைப்பதும் அர்த்தம் காமம் ஆகிய இவற்றின் விருப்பத்தினால் செய்யப்படுவதுமான கர்மயோகம் பகவானிடத்தில் பக்தியை உட்கொண்டிராதாயின், அது அழகாயிராது. வேறுபலன்களை விரும்பாமல் நிஷ்காரணமாகச் செய்யப்படுங் கர்மயோகமும் அச்சுதனிடத்தில் (ஆஶ்ரிதர்களைக் கைவிடாத பகவானிடத்தில்) பக்தியற்றிருக்குமாயின், உபயோகமற்றதே. கர்மயோகமும் ஜ்ஞானயோகமும் பகவானிடத்தில் பக்தியற்றிருக்குமாயின், அழகாயிராதென்னில், அர்த்தம் காமம் முதலிய வேறு பலன்களை உத்தேசித்துச் செய்யுங் கர்மங்கள் பகவானிடத்தில் பக்தியற்றிருக்குமாயின், சோபிக்கமாட்டா வென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? மஹாபாக்ய முடையவரே! (பகவானுடைய அம்சாவதாரமாய் வேதங்களை யெல்லாம் ஸாக்ஷாத்காரஞ் செய்யுந்திறமை அமைந்திருக்கையாகிற பெரும்பாக்ய முடையவரே!) நீர் ப்ராணிகளின் ஹிதத்தில் மனவூக்கமுடையவர். அவ்வளவு மாத்ரமே யன்று; அங்ஙனம் ப்ராணிகளின் ஹிதங்களையெல்லாம் உள்ளபடி கண்டறியும்படி அமோகமான அறிவுமுடையவர்; மற்றும் ப்ராணிகளின் ஹிதத்தை நிறைவேற்றுகையாகிற வ்ரதத்தில் திடமாக ஊன்றியிருப்பவர். 'நான் இத்தகையனென்று எப்படி தெரியும்' என்கிறீரோ? 'லோகங்களின் ஹிதத்திற்காகவே வ்யாஸர் அவதரித்தார்' என்கிற பரிசுத்தமான உமது புகழ் எங்கும் நிறைந்திருக்கிற தல்லவோ? இப்படிப்பட்ட நீர், அனர்த்தங்களை விளைப்பனவாகிய தர்ம அர்த்த காமங்களை மாத்ரம் நிரூபித்துச் சொல்லிவிட்டது அழகன்று. ஆகையால் அகன்ற அடிகளால் மூன்று லோகங்களையும் அளந்த பகவானுடைய சரித்ரத்தையே யோகத்தினால் நன்றாக ஆலோ

சித்து ப்ராணிகளின் ஜன்மஜரா மரணாதியான பந்தங்களெல்லாம் தீரும்படி ப்ரபந்தஞ்செய்வீராக. அப்படியில்லையாயின், அவன் எடுத்த உருவங்களோடும் அவற்றிற்கமைந்த நாமங்களோடும் ஸம்பந்த மற்றிருக்கிற பொருள்களை வர்ணிக்கிற உமது மதி தெளிவற்றதாகி எப்பொழுதும் எவ்வகை நிலைமையும் பெறாது; எப்பொழுதும் வ்யாகுலமாகவே யிருக்கும். நீர் ஏதேனுமொன்றைச் சொல்லினும் அது பகவானுடைய செயல்களும் உருவங்களும் நாமங்களும் அமைந்திருக்குமாயின், அப்பொழுதே உமது மனம் தெளிவுற்று நிலைமைபெறும். புத்தி வ்யாகுலமற்றிருக்கையாவது பகவானுடைய செயல்களையும் உருவங்களையும் நாமங்களையும்உட்கொண்டிருக்கையே. இத்தன்மை உமது மனத்திற்கு அப்பொழுதே ஸித்திக்கும்; வேறுவிதமாக இது உண்டாகாது. ஏதேனுமொன்றைச் சொல்ல நினைக்கினும், அதைப் பரமபுருஷனுக்குட்படாமல் அவனைக்காட்டிலும் வேறுபட்ட ஸ்வதந்த்ர வஸ்துவாகச் சொல்லுவீராயின், அந்தப் பரமபுருஷன் செய்த தேவ மனுஷ்யாதி உருவங்களையும் அவற்றிற் கிணங்கின அந்தந்த நாமங்களையும் உள்ளபடி அறியாமல் ப்ரமித்தவராவீர். அப்பொழுது உமதுமதி நன்னிலைமையற்றதேயாம். எப்பொழுதும் முக்யமாகப் பரமபுருஷனுடைய சரித்ரத்தையே வர்ணிக்கவேண்டும். அதற்கிணங்கின ஏதேனுமொன்றைச் சொல்லவேண்டிவரின், அதையும் அவனுடைய விபூதியாகவே (அவனுக்குட்பட்டதாகவே) வர்ணிக்கவேண்டும். அப்படியாயின் மதி வ்யாகுலப்படாமல் தெளிவுற்றிருக்கும். இல்லையாயின், வெள்ளத்தில் காற்றினால்கோணைவழியில் தள்ளுண்ட ஓடம்போல் வ்யாகுலமுற்று நன்னிலைபெறாது. இயற்கையாகவே அர்த்த காமங்களில் விருப்பமுடைய ஜனங்களுக்கு அவற்றைநிறை

வேற்றிக்கொடுக்கும் தர்மத்தின் வழிகளைப் பாரதமென்னும் ப்ரபந்தத்தினால் அறிவித்த நீர், ஜனங்களுக்கு நன்மையைச் செய்ய முயன்று அவற்றிற்குக் கெடுதியே செய்தீர். நீர் செய்ய நினைத்ததற்கு நேர்விபரீதமே நேர்ந்தது. ஆகையால் இது மிகுதியும் நிந்தைக்கிடமாயிருக்கின்றது. 'நான் இப்படி சொல்லினும் ஜனங்கள் தம்மிஷ்டப்படி மோக்ஷமார்க்கத்தில் நடக்கட்டுமே. மற்றும், பாரதத்தில் சில இடத்தில் 'அர்த்த காமங்கள் சிறந்தவையன்று; அவற்றைத் துறந்து மோக்ஷமார்க்கத்தில் நடப்பதே நலம்' என்றும் சொல்லியிருக்கையால் என்மேல் பிசகில்லை' என்கிறீரோ? ஸர்வஜ்ஞராகிய உம்மைத் தவிர மற்ற ஜனங்களெல்லாம் எல்லாமறிந்தவரல்லர். அந்த ஜனங்கள் உமது வார்த்தையைக் கேட்டு அர்த்த காமங்களே மேலான புருஷார்த்தங்களென்றும் அவற்றிற்கு வேண்டிய உபாயங்களை அனுஷ்டிக்கையே மேலான தர்மமென்றும் நினைத்து அந்த தர்ம அர்த்த காமங்களென்கிற த்ரிவர்க்கத்தைத் தடுக்க நெஞ்சிலும் நினைவுகொள்ளாதிருக்கின்றனர். நீர் பாரதத்தில் த்ரிவர்க்கமெனப்படுகிற தர்ம அர்த்த காமங்களைப் பரக்கச் சொல்லியிருக்கையால் அதைக் கண்டு, ஜனங்கள் 'அவற்றைத் துறந்து மோக்ஷமார்க்கத்தில் நடக்கவேண்டும்' என்பதே உமது கருத்தென்று அறியாதிருக்கின்றனர். 'தெரியாத ஜனங்களுக்குத் தெரியாமற் போனால் போகட்டும். எல்லாமறிந்தவன் என் கருத்தை அறிவானல்லவா?' என்கிறீரோ! ப்ரபுவாகிய இந்த பகவானுடைய அபார சேஷ்டிதத்தை, நிவ்ருத்தி தர்மமென்கிற ப்ரபத்திமார்க்கத்தில் இழிந்த பேரறிஞன் ஸுகமாக அறிவானென்பது வாஸ்தவமே. ஆயினும் அத்தகைய மனிதன் கிடைப்பது அரிது; ஆகையால், ரஜஸ்ஸு முதலிய

குணங்களின் மூலமாய் வருகிற ராகாதி தோஷங்களால் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் போகின்றவரும் ஆத்மஜ்ஞான மற்றவருமாகிய மற்ற ஜனங்கள் அந்த விபுவின் சேஷ்டிதத்தை அறியும்படி அதை ஒரு ப்ரபந்தஞ்செய்வீராக. ப்ரபந்தங்களை இயற்றுவது தெரியாத விஷயங்களைத் தெரிவிப்பதற்காகவே. தாமே தெரிந்தவர்க்கு நாம் தெரியப்படுத்தவேண்டிய அவஶ்யமில்லை. தெரியாதவர்களுக்கு நமது ப்ரபந்தத்தினால் உண்மை ஏற்படாதாயின், அது வீணே. ஆகையால் அர்த்தகாமங்கள் துறக்கத்தகுந்தவை யென்றும், பகவானுடைய சரித்ரங்களை அறிதலே மேலான புருஷார்த்தத்தை நிறைவேற்றும் உபாயமென்றும் இவ்விஷயத்தை, அறிஞர் ஸுகமாக அறிவதற்கும் அறிவிலா மனிதர் புதிதாக அறிவதற்கும் ஒரு ப்ரபந்தஞ் செய்வீராக. ஒருவன் தான் விரும்பின பலனை நிறைவேற்றும் பொருட்டு, பகவானிடத்தில் பக்தி யில்லாமல் ஏதேனுமொரு தர்மத்தைச் செய்யுந் தன்மையைத் துறந்து பகவானுடைய பாதாரவிந்தத்தைப் பணிய முயன்று, அந்த முயர்ச்சி நிறைவேறுவதற்கு முன்னமே மரணம் அடைவானாயின், அவனுக்கு எங்காயினும் ஏதேனும் கெடுதி உண்டாகுமோ? உண்டாகாது. (நல்லதைச்செய்பவன் ஒருகாலும் கெடுதி அடையமாட்டான்). அங்ஙனம் பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணியாமல் தான் ஏதேனுமொரு தர்மத்தையே அனுஷ்டிப்பவன் எந்த பலனைப்பெறுவதாகக் கண்டோம்? ஏதும் பெறுவதாகக் கண்டிலோம். (தாம் அனுஷ்டித்த தர்மங்களுக்குப் பலனான ஸ்வர்க்காதி லோகங்களை அடைந்தும், புண்யம் க்ஷீணித்த வுடனே மனுஷ்ய லோகத்தில் வந்து விழுவார்கள். பகவானுடைய பாதங்களைப் பணியுமவன் ஒருகாலும் அங்ஙனம் நழுவமாட்டான்.) மேல் ப்ரஹ்

மாதி லோகங்களிலும் கீழ்பாதாளம் முதலிய லோகங்களிலும் திரிகின்ற ஜீவராசிகளுக்கு எந்த ஸுகம் கிடைக்காதோ, பரப்ரஹ்மத்தை அனுபவிக்கையால் விளைவதான அத்தகைய ஸுகத்தை நிறைவேற்றிக் கொடுக்க வல்ல உபாயத்தை அறிவிப்பதற்காகவே பேரறிஞனை பண்டிதன் ப்ரயத்னம் செய்யவேண்டும். இப்படிச் செய்யில், தான் ப்ராணிகளுக்கு ஹிதஞ் செய்தவனாவான். இல்லையாயின், அது நேராது. அந்த ஸுகமோவென்றால் (மற்ற விஷயங்களால் விளையும் ஸுகமோ வென்றால்) கீழ் பாதாளாதிலோகங்களிலும் மேல் ப்ரஹ்மாதி லோகங்களிலும், அறியமுடியாத ஆழ்ந்த வேகமுடைய காலத்தினாலும் அதனால் பக்வம் அடைந்த ஜன்மாந்தர கர்மத்தினாலும் உழல்கின்ற ஜீவராசிகளுக்கு மற்ற உபாயத்தினாலேயே ஸம்பவிக்கும். அவரவர் வேண்டாதிருப்பினும் ஒரு ப்ரயத்னமுமில்லாமல் தந்தமது கர்மத்தின்படி துக்கங்களை எங்ஙனம் பெறுகின்றார்களோ, அங்ஙனமே மற்ற ஸுகங்களையும் பெறுகின்றார்கள். மற்றும், பலன்களை விரும்பாமல் செய்யும் வர்ணாஸ்ரம தர்மங்களால் விளைகிற பக்தியைத் தவிர மற்ற உபாயங்களால் நெடுநாள் வருந்திப்பெறும் மற்ற ஸுகமெல்லாம் துக்கமே. (துக்கத்தின் கலப்புடையதே). கீழ்ச்சொன்ன உபாயத்தினால் கிடைக்கும் ஸுகமே சிறிதும் துக்கத்தின் கலப்பில்லாதது. ஓ பாதராயணரே! (வ்யாஸமுனீந்த்ரரே!) மோக்ஷ பூமியைக் கொடுக்குந்தன்மையனை பரமபுருஷனைப் பணியுந்தன்மையன் (பக்தியோகம் கைபுகுந்தவன்) ஸம்ஸாரத்தினின்று விடுபடுவானன்றி எவ்விதத்திலும் அதில் கால் தாழமாட்டான், பக்தியோகத்தில் முயன்று அது கைகூடப்பெறாதவனும் கேவல காம்ய கர்மங்களில் முயன்ற மற்றவன்போல்ஸம்ஸாரத்தில்கால்தாழமாட்டான். பக்தி

யோகம் கைகூடாமலே மரணம் அடைவானாயினும் ஜன்மாந்தர வாஸனையால் பகவானுடைய பாதாரவிந்தங்களைத் தவிர மற்ற உபாயமில்லை யென்னும் ப்ரபத்தி மார்க்கத்தை மறவாமல் அதை விடவிரும்பமாட்டான். ஏனெனில், முகுந்தனைப் பணியுந்தன்மையன் நிகரில்லாத ஆநந்தமே வடிவாகப்பெற்ற பரமாத்மாவைக் கைப்பற்றினவனல்லவா? அரிய பெரும் பொருள் கைப்படின் அதை எவன்தான் விட விரும்புவான்? இந்த ப்ரபஞ்சத்திற்கு வளர்தல் மறைதல் பிறத்தல் ஆகிய இவை எவனிடத்தினின்று உண்டாகின்றனவோ, அப்படிப்பட்ட பரமபுருஷன் இந்த உலகத்தில் தான் படைத்த சேதநாசேதன வஸ்துக்களெல்லாவற்றிலும் புகுந்து இவையெல்லாம் அவனே யென்னும்படி எங்கும் அமைந்து ஜகத்ஸ்வரூபனாயிருந்தும் இதைக்காட்டிலும் வேறுபட்டிருப்பவன். இப்படிப்பட்ட பகவானுடைய குணஸமூஹங்களை நீர் ஸ்வயமாகவே அறிவீர். ஆயினும் நீர் கேட்டதற்காகச் சிறிதுமாத்ரம் சொன்னேன். அவனுடைய குணங்கள் ஒவ்வொன்றும் அளவிட முடியாதவை. அது உமக்குத்தெரிந்த விஷயமே. ஆகையால் நீர் இத்தகைய குணஸமூஹங்களை வர்ணிக்க வேண்டும். எல்லாவற்றையும் உள்ளபடி அறியுந் திறமையுடைய நீர் பரமபுருஷனுடைய அம்சாவதாரமும் கர்மத்தினால் விளையும் ஜன்மமற்றவரும் ஆயினும் உலகத்தின் க்ஷேமத்திற்காக ஸ்வேச்சையால் அவதரித்தவருமாக உம்மை நீரே அறிந்துகொள்வீராக. உம்முடைய உண்மை இத்தகையது. ஆகையால் இத்தகைய நீர் மஹானுபாவனான பரம புருஷனுடைய அவதாரம் சரித்ரம் குணம் முதலியவற்றை எடுத்துரைக்கும்படியான ஒரு ப்ரபந்தஞ் செய்வீராக. இப்படியாயின் நீர் க்ருதக்ருத்யராவீர் (செய்யவேண்டியவைகளைச் செய்த

வாரவீர்). அதனால் உமது மனம் தெளிந்து அஸந்துஷ்டியெல்லாம் நீங்கும். பிரமன் முதலிய சிறப்புற்ற தேவதைகளால் புகழப்படுந்தன்மையனும் சிறந்த புகழுடையவனுமாகிய பகவானுடைய குணங்களைக் கீர்த்தனஞ் செய்கையே, ப்ரயோஜனங்களெல்லாம் கைகூட விரும்பும் புருஷன் இயற்றின தவம் (உபவாஸம் முதலிய தவம்) மந்த்ரஜபம் வேதமோதுதல் யாகம் முதலியன செய்தல் குளம் கிணறு முதலியன வெட்டுவித்தல் தத்த்வங்களை உணர்தல் ஈதல் ஆகிய இவற்றிற்கு அழிவில்லாத பயனென்று ப்ரயோஜனத்தின் உண்மை அறிந்த பண்டிதர்கள் நிரூபித்திருக்கிறார்கள், பாரதாதி க்ரந்தங்கள் மிகவும் பரந்திருக்கையால் அதில் ஸாரமான அர்த்தத்தைக் கண்டுபிடிப்பது ஸமுத்ரங்கடைந்து அம்ருதமெடுப்பது போன்றதே. ஆகையால் அது அஸமர்த்தர்களால் செய்யமுடியாது. ஆனதுபற்றி மோக்ஷத்தில் இச்சையுடைய ஜனங்களுக்கு வேண்டிய அரும் பொருள்களை யெல்லாம் சேர்த்து ஒரு ப்ரபந்தமாகச் செய்வீராக. தவம் முதலியன செய்யும் புருஷன், உத்தம ச்லோகனான பகவானுடைய குணங்களைச் சொல்லுவதிலும் கேட்பதிலும் விருப்பம் உண்டாகப்பெறுவானாயின், அப்பொழுது தான் அவன் செய்த தவம் முதலியவை எல்லாம் ஸபலமாம். இல்லையாயின் அவையெல்லாம் வீணே. ஆகையால் நீரும் பரமபுருஷனுடைய குணங்களைக் கீர்த்தனஞ்செய்து உமது தவம் முதலிய செயல்களை யெல்லாம் பயன்பெறச் செய்து பிறரையும் அக்குணங்களைக் கேட்பித்து ப்ரயோஜனங் கைகூடச்செய்வீராக. முனிவரே! நான், முன் கல்பத்தில் நடந்த ஜன்மத்தில் வேதமோதும் ஸந்யாஸிகளுக்கு தாஸியான ஒரு பெண்டிர்க்குப் பிள்ளையாகப் பிறந்திருந்தேன். ஒருகால் வர்ஷாகாலம் வரக் கண்டு

அந்த யோகிகள் சாதுர்யமாஸ்ய தீக்ஷையைக்கொண்டு இருப்பிடத்தை விட்டுப்போகாதிருக்க முயலுகையில், நான் பாலனாயிருக்கும் பொழுதே என்னை அந்த யோகிகள் சுஶ்ரூஷை செய்ய நியோகித்தார்கள். யோகிகள் எல்லோரிடத்திலும் ஒரே விதமான காட்சியுடையவரே, ஆயினும் அவர்கள், நான் ஜிஹ்வாசாபலம் முதலிய சாபலங்களொன்றுமின்றி இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு பாலர்க்கு இயற்கையாகவே ஏற்பட்ட விளையாடல்களிலும் பற்றற்று அனுகூலனாகிச் சொன்னபடி சுஶ்ரூஷை செய்வதும் மிதமாகப் பேசுவதுமாயிருக்கக் கண்டு என்னிடத்தில் கருணைகூர்ந்தார்கள், அவர்கள் எனக்குத் தாங்கள் புசித்து மிகுந்த அன்னாதிகளைக் கொடுத்து என்னை ஸந்தோஷப்படுத்துகையில், நான் அவற்றை ஒருகால் புசித்தேன். அதனால் பாகவதரிடத்தில் ப்ரீதி உண்டாவதற்குத் தடையான பாபங்களெல்லாம் தீரப்பெற்றேன். இங்ஙனம் பகவானிடத்தில் பக்தியுடைய அந்த யோகிகளுக்குச் சுஶ்ரூஷை செய்ய முயன்ற நான் பகவத் பக்தர்கள் ஆசரிக்கிற தர்மங்களில் ப்ரீதி உண்டாவதற்குத் தடையான பாபங்களெல்லாந்தீர்ந்து பரிசுத்தமான மனமுடையவனாகி அந்த தர்மத்திலேயே ருசி உண்டாகப்பெற்றேன். மனத்தில் தர்மருசி உண்டான பின்பு தினந்தோறும் பகவானான க்ருஷ்ணனுடைய கதைகளைப் பாடுகின்ற அந்த யோகிகளின் அனுக்ரஹத்தினால் மனத்திற்கினியவையான அந்த க்ருஷ்ண கதைகளைக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஓ வ்யாஸரே! அந்த க்ருஷ்ணகதைகளைக் காலந்தோறும் (மூன்று காலங்களிலும்) ஶ்ரத்தையுடன் கேட்டுக்கொண்டிருக்கிற எனக்கு, அனைவர்க்கும் ப்ரீதியை விளைக்கவல்ல பெரும்புகழுடைய பகவானிடத்தில் ப்ரீதி உண்டாயிற்று. அப்பொழுது ப்ரியமான புகழுடைய அந்த பகவானிடத்தில் ருசி உண்டாகப்பெற்ற

எனது மதி எவ்வகைத் தடையுமின்றி விளக்கமுற்றது. அந்த மதியால் பரப்ரஹ்மம் உள்ளே புகுந்து தரிக்கப் பெற்ற நான் கார்யகாரண ஸ்வரூபமான ஜகத்தெல்லாம் என்னிடத்தில் இருப்பதாகவும், அந்த ஜகத்தெல்லாம் என்னுடைய மாயையால் கற்பிக்கப்பட்டதாகவும் கண்டேன். ப்ரக்ருதியின் பரிணாமமான தேஹத்தைச் சேதனன் தரிக்கிறனென்றும் சேதனனை ஈஶ்வரன் தரிக்கிறனென்றும் ஆத்மாவும் தேஹமும் வேறுபட்டவையென்றும் ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தம் அழிக்கமுடியாததென்றும் அறிந்தேன். இங்ஙனம் அந்த யோகிகள் பாடுகின்ற பகவானுடைய நிர்மலமான புகழை, சரத்ருது வர்ஷருது ஆகிய இரண்டு ருதுக்கள் முழுவதும் மூன்று காலங்களிலும் கேட்டுக்கொண்டிருந்த எனக்கு மனத்தின் தோஷமான ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகிய இவைகளைப் போக்குந் திறமையுடைய பக்தி உண்டாயிற்று. அங்ஙனம் பக்தி உண்டாகப்பெற்று அனுராகமுடைய நான் பாலனாயினும் மிக்க வணக்க முடையவனாயிருந்தேன்; க்ரமத்தில் பாபங்களெல்லாம் தொலையப் பெற்றேன்; இந்த்ரியங்களை வென்றேன். இத்தகைய நான் அந்த யோகிகளைத் தொடர்ந்து ஶுஶ்ரூஷை செய்து கொண்டிருக்கையில், தீனரிடத்தில் ப்ரீதி செய்யுந்தன்மையரான அம்மஹானுபாவர்கள் முயன்று என்னிடத்தில் கருணைகூர்ந்து பகவான் தானே மொழிந்ததும் மிக ரஹஸ்யமுமான தத்த்வஜ்ஞானத்தை எனக்கு உபதேசித்தார்கள். ஜகத்தையெல்லாம் படைப்பவனும் ஜ்ஞானம் பலம் முதலிய குணங்கள் நிறைந்தவனுமாகிய வாஸுதேவனுடைய மாயையென்னும் ப்ரக்ருதியின் மஹிமையை நான் எந்த ஜ்ஞானத்தினால் அறிந்தேனோ, எந்த ஜ்ஞானத்தினால் யோகிகள் அப்படிப்பட்ட வாஸுதேவனுடைய ஸ்தான

மான பரமபதத்தைப் பெறுகின்றார்களோ, அப்படிப் பட்ட [1]அர்த்த பஞ்சகஜ்ஞானத்தை உபதேசித்தார்கள். ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! பலன்களை விரும்பாமல் செய்யுஞ் செயல்களை ஈஸ்வரனிடத்தில் அர்ப்பணஞ் செய்கையே ஆத்யாத்மிகமென்றும் ஆதிதைவிகமென்றும் ஆதிபௌதிகமென்றும் மூன்றுவகைப்பட்ட ஸம்ஸார தாபங்களைப் போக்கவல்லதென்று ஸ்ருதியும் ஸ்ம்ருதியும் புராணங்களும் தெரிவிக்கின்றன. ஸம்ஸார தாபங்கள் பாபத்தினால் விளைகின்றன. அந்தப்பாபம் பலன்களை விரும்பாமல் செய்யப்படும் தர்மத்தினால் தொலையும். அப்பால் பக்தியோகம் உண்டாகும். அதன் மஹிமையால் அந்த ஸம்ஸாரதாபங்கள் தாமே தொலையும். வ்ரதங்களை நன்றாக அனுஷ்டித்தவரே! எந்த ஆஹாராதிகளால் வ்யாதி உண்டாகிறதோ, அப்படிப் பட்ட அபத்யமான த்ரவ்யத்தை விடாமல் வ்யாதியைப் போக்கும் மருந்தை உபயோகப்படுத்தினும் வ்யாதி வளருமேயன்றித் தீராது. எந்த வஸ்துவால் எந்த வ்யாதி வளருமோ, அந்த வ்யாதிக்கு அதையே மருந்தாக நினைத்து உபயோகப்படுத்தினால் அது அந்த வ்யாதியை வளர்க்குமேயன்றி அதைத் தீர்க்காது. இங்ஙனம் பயன்களை விரும்பிச்செய்யும் செயல்களெல்லாம் ப்ராணிகளுக்கு ஸம்ஸாரத்தை வளர்ப்பவையேயாம். அவற்றை ஈஸ்வரனிடத்தில் அர்ப்பணஞ் செய்யாமல் விடின் அவை கடைசியில் ஆத்ம நாசத்தை விளைப்பனவாம். (ஸ்தாவர ஜன்மங்களை விளைத்து ஆத்மநாசத்

1. அர்த்த பஞ்சகமாவது-ஐந்து அர்த்தங்கள். அவையாவன:— ப்ராப்யனான பரமாத்மாவின் ஸ்வரூபம், ப்ராப்தாமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், பல ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் ஆகிய இவையே. இவற்றை உள்ளபடி அறிகையே அர்த்த பஞ்சக ஜ்ஞானமாம்.

த்தையுங்கொடுக்கும்). பகவானை ஸந்தோஷப்படுத்தும் படியான எந்தச்செயல் செய்கிறோமோ, அதனால் தான் பக்தியோகமும் பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்கு ஹேதுவான ஜ்ஞானமும் உண்டாகவேண்டும். 'நீ செய்யுஞ் செயல்களையெல்லாம் என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்வாய்' என்று பகவான் உபதேசித்த சிக்ஷையை உட்கொண்டு அடிக்கடி வர்ணாஸ்ரமங்களுக்குத் தகுந்த கர்மங்களைச் செய்துகொண்டு பகவானை க்ருஷ்ணனுடைய கல்யாண குணங்களையும் அவற்றை வெளியிடுகிற அனவது நாமங்களையும் பக்தியோகத்தில் விருப்பமுடையவர் வாயாற் சொல்லுவதும் நெஞ்சால் நினைப்பதுஞ்செய்வார்கள். பகவான் கற்பித்த சிக்ஷையின்படி கர்மங்களைச்செய்து அவற்றை அவனிடத்தில் அர்ப்பணஞ்செய்தலும், குணங்களையும் நாமங்களையும் நினைத்தல் சொல்லுதல் முதலியவைகளும் பக்தியோகத்தை விளைப்பனவாம். ப்ரணவத்துடன் வாஸுதேவ ப்ரத்யும்ன அநிருத்த ஸங்கர்ஷண மூர்த்தி நாமங்கள் நான்கையும் வாயார மொழிந்து நமஸ்காரஞ்செய்து, மந்த்ரமே வடிவாகப் பெற்றவனும் கர்மத்தினால் விளையக்கூடிய வேறு வடிவமில்லாதவனும் யஜ்ஞங்களால் பூஜிக்கப்படும் புருஷனுமாகிய பரமபுருஷனைப் பூஜிக்கும் புருஷனே நல்லறிவுடையவனாவான். அந்தணரே! இங்ஙனம் நான் தனது கட்டளையின்படி ஆசரித்தத்தைக்கண்டு, கேசவன், (ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ப்ரபுவான பரமபுருஷன்) எனக்குத் தன்னிடத்தில் பக்தியையும் அதனால் விளையக்கூடிய ஸாக்ஷாத்காரரூபஜ்ஞானத்தையும் ஐஸ்வர்யத்தையும் கொடுத்தான். பல பெரியோரிடத்தில் பலவாறு தர்மங்களைக் கேட்டுணர்ந்தவரே! பெரும் புகழரே! பகவானுடைய புகழை வெளியிடுவதான ஒரு ப்ரபந்தத்தை இயற்றுவீராக. அதில், அறிவுடையவர் அறிய விரும்பும் ப்ரயோஜனங்களெல்லாம் குறைவற

அமைந்திருக்கவேண்டும். மூன்று வகைப்பட்ட ஸம்ஸார தாபங்களால் வருந்தின மனமுடைய மனிதர்களின் வருத்தங்களெல்லாம் மற்ற எந்த உபாயங்களாலும் தீராதவையாயினும் அந்த ப்ரபந்தத்தினால் தீரவேண்டும். 'இதுவே, நமது வருத்தங்களை யெல்லாம் தீர்க்கும், மற்ற எதனாலும் தீராது' என்று ப்ராணிகள் அனைவரும் ஆதரிக்கும்படியான ஒரு ப்ரபந்தத்தை இயற்றுவீராக. ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

நாரத வ்ருத்தாந்தம்.

ஸூதர் சொல்லுகிறார்.—அந்தணர் தலைவரானசௌனகரே! இங்ஙனம் ஸத்யவதியின் புதல்வரான வ்யாஸர் தேவர்ஷியாகிய நாரதருடைய ஜன்மத்தையும் கர்மத்தையும் கேட்டு, மீளவும் அம்முனிவரை வினவினர்.

வ்யாஸர் சொல்லுகிறார்:—உமக்கு ஜ்ஞாநோபதேசஞ்செய்த அந்த யோகிகள் சாதுர்மாஸ்யதீக்ஷை கழிந்தவுடன் வெளியே போகையில், இளம்பருவத்திலிருந்த நீர், அப்பால் என் செய்தீர்? ப்ரஹ்மாவின் புதல்வரே! அந்த யோகிகள் போனபின்பு மேலுள்ள வயதை யெல்லாம் எந்த நடத்தையால் கழித்தீர்? காலம் வருகையில் இந்தச் சரீரத்தை எவ்வாறு துறந்தீர்? முனிஶ்ரேஷ்டரே! முன் கல்பத்தில் உமக்கு யோகிகள் உபதேசித்த தத்வஜ்ஞானத்தை இக்காலம் மறைக்கவில்லையன்றோ? காலம் எல்லாவற்றையும் அழிக்குந் தன்மையுடையது. ஆயினும் உமக்கு ஜன்மாந்தரத்தில் விளைந்த தத்வஜ்ஞானம் இந்த ஜன்மத்திலும் மாறாதிருக்கின்றதே.

நாரதர் சொல்லுகிறார்:—எனக்குஜ்ஞாநோபதேசஞ் செய்த யோகிகள் சாதுர்மாஸ்ய தீக்ஷை கழிந்த பின்பு

வெளியே போகையில், இளம்பருவத்திலிருந்த நான் அப்பால் இங்ஙனம் செய்தேன். என் தாய்க்கு நான் ஒரு புதல்வனேயன்றி மற்றொரு புதல்வன் இல்லை. அவள் பெண்பிள்ளைகளுக்கு ஸ்வாபாவிகமான அறிவின்மைக்கு இருப்பிடமாயிருந்தாள். அவள், வேறு ஜீவனோபாயமில்லாமையால் ஊழியஞ்செய்து பிழைத்து வந்தாள்; வேறு கதியில்லாத என்னிடத்தில் மிகுதியும் ஸ்னேஹம் வைத்திருந்தாள். தாயாகிய அம்மாது பிறர்க்கு ஊழியஞ்செய்பவளாகையால் ஸ்வாதீனமின்றி என்னுடையயோக க்ஷேமத்தில் விருப்பமுடையவளாயினும் அதை நிறைவேற்றவல்லமையற்றிருந்தாள். இவ்வுலகமெல்லாம் பொம்மைபோல் ஈஸ்வரனுடைய அதீனத்திலன்றோ இருக்கின்றது. ஆகையால் அவள் தெய்வகதியைத் தாண்டமுடியாமல் ஊழியஞ்செய்து ஜீவிப்பதும், என்னிடத்தில் ப்ரீதியை மாற்றிக்கொள்ளமுடியாமல் எனது இஷ்டங்களைச்செய்யவும் செய்த இஷ்டங்களை வளர்த்துக்கொடுக்கவும் விரும்பி அதைச் செய்யமுடியாமல் வருந்துவதுமாயிருந்தாள். அப்பொழுது நான் ஐந்து வயதுள்ள பாலனாயிருந்தேன். அப்பொழுது எனக்கு திக்கு தெரியாது; தேசகாலங்களையும் அறியேன். அத்தகைய நான் என் தாயை எதிர்பார்த்துக்கொண்டு அவள் ஊழியஞ்செய்யப்பெற்ற அந்த ப்ராஹ்மண க்ருஹத்தில் வஸித்துக்கொண்டிருந்தேன். இவளுக்கு தேஹவியோகம் எப்பொழுது நேருமோ? இவள் எப்பொழுது மரணம் அடைவாளோ? நான் எங்கேனுஞ் சென்று எனது நன்மையைத் தேடுவதற்கென்று அவள் காலஞ்செல்வதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். இங்ஙனம் இருக்க, ஒரு கால் ராத்ரியில் வீட்டினின்று புறப்பட்டுப் பசு கறக்கிறதற்காக வழியே போகையில் அங்கிருந்த

ஒரு ஸர்ப்பத்தை என் தாய் காலால் மிதித்தாள். அங்ஙனம் மிதியுண்ட ஸர்ப்பம் காலஸ்வரூபமான தெய்வத்தினால் தூண்டப்பட்டு அவளைக் கடிக்கையில், அவள் மரணம் அடைந்தாள். அப்பொழுது நான் அவள் மரணம் அடைந்ததைக் கண்டு, இது, பக்தர்களுக்கு ஸௌக்யத்தையே விரும்புந்தன்மையனான பகவானுடைய அனுக்ரஹமேயென்று நினைத்து வடதிசையை நோக்கிப் புறப்பட்டுப் போனேன். அங்ஙனம் போகையில், மிகுதியுஞ் செழிப்புடைய தேசங்களையும் பட்டணங்களையும் க்ராமங்களையும் இடைச்சேரிகளையும் ரத்னம் முதலியவை விளையும் இடங்களையும் பயிரிடுங்குடிகள் இருக்குங் க்ராமங்களையும் வேடச்சேரிகளையும் புஷ்பவனங்களையும் அரண்யங்களையும் உபவனங்களையும் (மனிதர் வைத்து வளர்க்குந்தோட்டங்களையும்) பலவகையான கைரிக தாதுக்களால் விசித்ரங்களான பர்வதங்களையும் யானைகளால் முறிக்கப்பட்ட கிளைகளையுடைய மரங்களையும் பரிசுத்தமான ஜலமுடைய குளங்களையும் தேவதைகள் விளையாடப் பெற்றவைகளும் பலவாறு குலாவுகின்ற பறவைகள் நிறைந்திருப்பவைகளும் வண்டுகள் உலாவப் பெற்றுத் திகழ்கின்றவைகளுமான தாமரை யோடைகளையும் நான் ஸஹாயமில்லாமல் ஒருவனேயாகக் கடந்து சென்று, மஹத்தான ஓர் அரண்யத்தைக் கண்டேன். அது வழல்களும் மூங்கில்களும் நாணற்புதர்களும் தர்ப்பங்களும் கீசக மூங்கில்களும் (காற்றில் சப்திக்கும் மூங்கில்களும்) சூழ்ந்து புக முடியாததாகி துஷ்டயானைகளும் மலைப்பாம்புகளும் நரிகளும் உலாவப்பெற்று பயங்கரமான உருவங்களால் மிகவும் பயங்கரமாயிருந்தது. அப்பொழுது நான் இந்த்ரியங்களும் சரீரமும் இளைத்துத் தண்ணீர் விருப்பமும் பசியும் உண்டாகப்பெற்று ஒரு நதியின் மடுவில் ஸ்னானஞ்செய்து தண்ணீர் குடித்து

தாஹத்திரப்பெற்றேன். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத அந்த அரண்யத்தில் ஓர் அரசமரத்தின் அடியில் சென்று ஜீவாத்மாவின் உள்ளேயிருக்கும் பரமாத்மாவை நான் கேட்டபடி த்யானிக்கத் தொடங்கினேன். அப்யாஸத்தினால் ஸ்வாதீனஞ் செய்யப்பட்ட மனத்தினால் பகவானுடைய பாதாரவிந்தங்களை ப்ரீதியுடன் த்யானிக்கையில் கண்களில் ஆநந்தநீர் பெருகப்பெற்றிருக்கிற என் ஹ்ருதயத்தில் பரமபுருஷன் தோற்றினான். அப்பொழுது ப்ரீதியின் மிகுதியால் அங்கம் முழுவதும் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று மிகுதியும் ஸுகம் அடைந்து ஆநந்த வெள்ளத்தினால் மூழ்கி, முனிவரே! தேஹத்தையும் ஆத்மாவையும் அறியாதிருந்தேன். மனத்திற்கு மிகுதியும் ப்ரியமாயிருப்பதும் சோகத்தைப் போக்குவதுமான அப்பொழுது தோற்றின பகவானுடைய உருவத்தை மீளவும் காணப்பெறாமல் தழதழப்புற்று மனவருத்தத்துடன் சீக்ரமாக எழுந்திருந்தேன். அந்த உருவத்தை மீளவும் பார்க்க விரும்புகின்ற நான் மனத்தை நிலை நிறுத்திக்கொண்டு த்யானித்தும் காணப்பெற்றிலேன். ஆனதுபற்றியே விஷயாந்தரங்களில் மனஞ் செல்லப்பெற்றவன்போல் த்ருப்தியற்றிருந்தேன். நான் இங்ஙனம் அந்த உருவத்தை மீளவுங் காணவிரும்பி மிகுந்த யத்னஞ் செய்துகொண்டிருக்கையில், வாக்குக்கு விஷயமாகாத (வாயால் சொல்லமுடியாத) குண வைபவங்களையுடைய பரமபுருஷன் கண்ணுக்குப் புலப்படாமலே ஆகாயத்தில் கம்பீரமும் அழகியதுமான உரையால் என் சோகங்களைப் போக்க முயன்று 'இவ்வுலகத்தில் இந்த ஜன்மத்தில் நீ என்னைப் பார்க்க உரியவனல்லை. என்னைக் காண்பதற்குத் தடையான பாபம் கழியப்பெறாத குத்ஸித யோகிகளுக்கு எவ்வளவு வருந்திலும் நான் புலப்படுவ

னல்லேன். (பாபம் கழியப்பெறாத அற்பயோகிகள் எவ்வளவு வருந்தி முயற்சி செய்யினும் என்னைக் காண வல்லரல்லர். 'ஆயின் இப்பொழுது ஒரு தடவை புலப்பட்டதென்' என்கிறாயோ? சொல்லுகிறேன். பாபமற்றவனே! நான் என் உருவத்தை ஒரு தரம் காண்பித்தேனென்பது, உனக்கு என்னைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பம் உண்டாவதற்காகவே. இப்பொழுது நான் ஒரு தரம் காட்டின என் உருவத்தை மீளவும் காண்பதற்கு அடிக்கடி விருப்ப முற்றிருப்பாயாக. 'கேவல விருப்பத்தினால் என்ன ப்ரயோஜனம்?' என்கிறாயோ; என்னைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பம் மாறப்பெறாத புருஷன் நன்னடத்தை யுடையனாகி மனத்திலுள்ள ராகம் முதலிய தோஷங்களை யெல்லாம் மெல்லமெல்லப் போக்குவான். ஆகையால் உனக்கு என்னைக் காணவேண்டுமென்னும் விருப்பம் மாறாதிருப்பதற்காகவே இப்பொழுது என் உருவத்தைக் காட்டினேன். சிறிது காலம் ஸத்புருஷர்களுக்குப் பணிவிடை செய்வதனாலேயே உனக்கு என்னிடத்தில் திடமான மதி உண்டாயிற்று. ஆகையால் பாபிஷ்டமான இந்த சூத்ர தேஹத்தைத் துறந்து கல்பாந்தரத்தில் என் பக்தனாயிருக்குந்தன்மையைப் பெறுவாய். உனக்கு ஏதோ ஒரு காரணத்தினால் என்னிடத்தில் திடமாக உண்டான இந்தமதி, எனது அனுக்ரஹத்தினால் எவ்விதத்திலும் ப்ரளய காலத்திலும் மாறாதிருக்கும்' என்று மொழிந்தான். கர்மத்தினால் விளையுந் தேஹமற்றதும் ஆகாயமே சரீரமாகப் பெற்றதும் எல்லோரையும் அடக்கிக்கொண்டு நடப்பதும் ஈஸ்வரனெனப் படுவதும் எங்கும் நிறைந்திருப்பதும் ஸ்வாதீனமான தன்னிலையுடையதுமாகிய பரப்ரஹ்மம் இவ்வளவு மொழிந்து வெறுமனே யிருந்தது. அப்பால் நானும்பெருமையுடையவரை

வரினும் மேலான பெருமையுடைய அம்மஹானுபாவனால் கருணை செய்யப்பெற்று அந்தப் பரமபுருஷனுக்குத் தலைவணக்கி நமஸ்காரஞ்செய்தேன். அப்பால் தேசகால வஸ்து பரிச்சேதமில்லாத அந்த பகவானுடைய நாமங்களையே லஜ்ஜையில்லாமல் படித்துக்கொண்டு உலகங்களுக்கு மங்களம் விளைப்பவைகளும் வேதரஹஸ்யங்களுமான அவனுடைய ஜன்மங்களையும் செயல்களையும் நினைத்துக்கொண்டே பூமியில் திரிபவனாகி மனக்களிப்புடன் விஷயாந்தரங்களில் (மற்ற சப்தாதி விஷயங்களில்) விருப்பமற்று எந்த ப்ராணிகளிடத்திலும் த்வேஷமில்லாமல் தேஹம் ஸ்வாதீன மற்றிருக்கையாகிற மதமும் தொலையப்பெற்று எங்கும் இருப்பிடங் கொள்ளாமல் இந்தச் சரீரம் முடிவு பெறுங்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். இங்ஙனம் அந்தக் கல்பம் முழுவதும் ஜீவித்திருந்தேன். ஓ அந்தணர் தலைவரே! க்ருஷ்ணனிடத்திலேயே மதி வழங்கப்பெற்றுத் தூய மனத்தனாகி மற்ற சப்தாதி விஷயங்களில் மனப்பற்றின்றி இங்ஙனம் திரிகின்ற எனக்கு அந்த தேஹத்தை விளைவித்த ப்ராரப்தகர்மம் கழியுங்காலம் நேருகையில் ஸௌதாம பர்வதத்தின் ஸமீபத்திலுண்டாகிற மின்னல்போல் மரணகாலம் ஸம்பவித்தது. அப்பொழுது ஸமஸ்த ஜீவராசிகளின் லயத்திற்கும் ஆதாரமாகி அங்ஙனம் ப்ரஸித்தமாயிருப்பதும் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றிருக்கையால் பரிசுத்தமாயிருப்பதுமான அநிருத்த மூர்த்தியில் நான் லயம் பெறமுயன்றிருக்கையில், பஞ்சபூத விகாரமான அந்ததேஹம் தனக்கு நிமித்தமான ப்ராரப்தகர்மம் முடியப்பெற்று வீழ்ந்தது. அப்பொழுது கல்பத்தின் முடிவில் இந்த ஜகத்தையெல்லாம் ஸம்ஹரித்துத் தன்னிடத்தில் லயிக்கச் செய்து ப்ரளய ஸமுத்ரத்தின் ப்ரவாஹத்தில் சயனித்துக் கொண்டிருக்கிற

அநிருத்தனென்னும் பகவானுடைய நாபீ கமலத்தில் படுத்திருக்கும் நான்முகனுடைய ப்ராணன்களில் ப்ரவேசித்தேன். அப்பால் ஆயிரம் யுகங்கள் கழிந்த பின்பு நாபீ கமலத்தினின்று எழுந்து இந்த உலகங்களையெல்லாம் படைக்கமுயன்ற நான்முகனுடைய ப்ராணன் முதலியவற்றினின்று மரீசியுடன் வஸிஷ்டாதி மஹர்ஷிகள் உண்டானார்கள். அப்பொழுது நானும் நாரதனென்னும் பேர்கொண்டு பிறக்கலானேன். அனந்தரம் மஹா விஷ்ணுவின் அனுக்ரஹத்தினால் எங்கும் நடைதடைபடாதவனாகி ப்ரஹ்மசர்ய வ்ரதத்திற்குச் சிறிதும் லோபமில்லாமல் மூன்று லோகங்களின் உள்ளும் வெளியும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன். தேவன் கொடுத்ததும் நிஷாத ருஷப காந்தார ஷட்ஜ மத்யம தைவத பஞ்சமங்களென்கிற ஸப்த ஸ்வரங்களாகிற ப்ரஹ்மத்தினால் அலங்காரமுற்றதும் ஸ்வரங்களைக் கேட்டு மகிழும் பகவான் ஸந்நிதானஞ் செய்யப்பெற்றதுமாகிய இந்த வீணையை மீட்டி ஸ்ரீ ஹரிகதா கானஞ் செய்து கொண்டு (பகவானுடைய கதைகளைப் பாடிக்கொண்டு) இங்ஙனம் திரிகின்றேன். பக்தர்களுக்கு ப்ரீதியை விளைக்கின்ற புகழுடையவனும் கங்காதி புண்யதீர்த்தங்களுக் கிடமாகிப் பரிசுத்தமான பாதாரவிந்தங்களை யுடையவனும் தனது பாதாரவிந்தத்தில் கங்கையென்னும் புண்யநதி உண்டாகப்பெற்றவனுமாகிய பகவான் தனது புகழ்களைப் பாடுகின்ற என்னுடைய மனத்தில் அழைக்கப்பட்டவன்போல் சீக்ரமாகத் தர்சனங்கொடுக்கிறான். அடிக்கடி ஶப்தாதி விஷயங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் மனம் வருந்தப்பெற்ற ஜனங்களுக்கு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தின் வெள்ளமெல்லாம் போனவழி தெரியாமல் தொலையச்செய்யுந் திறமையுடையது இது

வொன்றே. எது வென்கிறீரோ? ஸ்ரீபகவானுடைய சரித்ரங்களைக் கீர்த்தனஞ்செய்கையே. சப்தாதி விஷயங்களை அனுபவிக்க விரும்பி அவ்விருப்பம் மாறப்பெறாமல் ஸம்ஸார ஸாகரத்தில் ஆழ்ந்து மிகுதியும் அலமருகின்ற ஜந்துக்களைக் கரையேற்றுவிக்குந் தெப்பம் பகவானுடைய குணங்களை வர்ணிக்கையே. அடிக்கடி காமத்தினாலும் கோபத்தினாலும் அடிபட்டுக் கலங்கின மனம் முகுந்த ஸேவையினால் (மோக்ஷ போகங்களைக் கொடுக்கும் பகவானுடைய குணங்களையும் சரித்ரங்களையுங் கேட்பது கீர்த்தனஞ்செய்வது முதலிய பணிவிடைகளால்) எங்ஙனம் தெளிவு பெறுமோ, அங்ஙனம் யமநியமாதியான யோகமார்க்கங்களாலும் தெளிவு பெறாது. (ஆகையால் ஜனங்களுக்கு நன்மைசெய்ய வேண்டுமென்னும் விருப்பம் உளதாயின் பகவானுடைய குணங்களை எல்லாரும் நன்றாக அனுபவிக்கும்படி அவன் குணசரித்ரங்களையெல்லாம் முக்யமாக எடுத்துரைப்பதான ஒரு ப்ரபந்தத்தை இயற்றுவீராக). பாபமற்றவரே! நீர் என்னை எதைப்பற்றி வினவினீரோ, அதையெல்லாம் இங்ஙனம் சொல்லி முடித்தேன். என்னுடைய ஜன்மம் செயல் ஆகிய இவற்றின் ரஹஸ்யத்தையும் உமது மனம் எதனால் தெளியுமோ அதையும் உமக்குச் சொன்னேன்.

ஸூதர் சொல்லுகிறார்:—மஹானுபாவராகிய நாரத முனிவர் இங்ஙனம் மொழிந்து, உபரிசரவஸுவின் வீர்யத்தினால் பிறந்தஸத்யவதியின் புதல்வராகிய வ்யாஸரிடம், போய் வருகிறேனென்று விடைபெற்று வீணையை வாசித்துக்கொண்டே இஷ்டப்படி திரியத்தொடங்கிப்போனார். தேவரிஷியாகிய நாரதர் என்ன பாக்யசாலியோ! ஆச்சர்யம்! எவர் சார்ங்கபாணியாகிய பகவானுடைய புகழைப் பாடிக்கொண்டு தான் வீணை

வாஸிக்கும் ஸந்தோஷத்தில் ஆழ்ந்து ஸம்ஸார தாபங்களால் வருந்துகிற இந்த ஜகத்தையும் ஸந்தோஷிக்கச் செய்கிறாரோ; அத்தகைய தேவரிஷியான நாரதரது பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்? ஆறாவது அத்யாயம் முற்றிற்று.

---

அர்ஜுனன் உபபாண்டவர்களைக் கொன்ற அஶ்வத்தாமாவை ஜயித்துக் கட்டிக் கொண்டு வருதல்.

சௌனகர் சொல்லுகிறார்:—ஸூதரே! நாரதர் போன பின்பு, மஹாமஹிமையுடையவரும் ஸமர்த்தருமான பாதராயண முனிவர் (வ்யாஸர்) தான் நினைத்ததையே அவரும் சொல்லக் கேட்டு அப்பால் என் செய்தார்?

ஸூதர் சொல்லுகிறார்:—ஸரஸ்வதி யென்னும் பேருடைய ப்ரஹ்மநதியின் மேல்கரையில் சம்யாப்ராஸமென்று ப்ரஸித்தமானது வ்யாஸருடைய ஆஶ்ரமம். அங்கு ரிஷிகள் ஓயாமல் யாகங்கள் செய்துகொண்டிருப்பார்கள். இலந்தை மரங்களின் வரிசைகளால் அலங்காரமுற்ற அந்தத் தனது ஆஶ்ரமத்தில் வ்யாஸர் ஜலத்தை எடுத்து ஆசமனஞ் செய்து மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்டாமல் அடக்கித் தன்னிலையில் இருக்கச்செய்தார். அவர் பகவானிடத்தில் தனக்குள்ள பக்தியோகத்தினால் பரிசுத்தமான தன் மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்டாமல் அடக்கி ஊக்கத்துடனிருக்கச்செய்து முதலில் பரமபுருஷனைக் கண்டார். உடனே அவனுக்குச் சரீரமாகி அவனையே ஆதாரமாகவுடைய மாயையென்னும் ப்ரக்ருதியையும் கண்டார். ஜீவன் எந்த மாயையினால் மதிமயங்கப்பெற்று அந்த மாயையென்னும் ப்ரக்ருதியைக் காட்டிலும் தான் வேறுபட்டவனாயினும் ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு

என்கிற மூன்று குணங்களின் பரிணாமமான சரீரத்தையே ஆத்மாவாக நினைக்கிறார்கள். அத்தகைய சரீராத்ம ப்ரமத்தினால் விளையும் அனர்த்தமாகிய தாபத்ரயத்தையும் அடைகிறார்கள், அப்படிப்பட்ட மாயையை அம்முனிவர் ஸாக்ஷாத்கரித்தார். எல்லாமறிந்த அந்த வ்யாஸமாமுனிவர், ஸம்ஸாரத்தில் விளையும் அனர்த்தமாகிய தாபத்ரயத்தைப் போக்கும் உபாயம் பகவானிடத்தில் செய்யப்படும் பக்தியோகமே யென்பதை அறியாமல் வருந்துகிற லோகத்திற்கு நன்மையை விளக்கும் பொருட்டு ஸாத்வத ஸம்ஹிதை யெனப்படுகிற இந்த பாகவத மஹா புராணத்தைச் செய்தார். ஜனங்கள் ஸம்ஸாரத்தில் விளைகிற தாபங்களாகிற அனர்த்தத்தைப்போக்கும் உபாயம் இன்னதென்று அறியாமல் தடுமாற்ற முறுவதைக்கண்டு அவ்வனர்த்தங்களைப் போக்கும் உபாயம் அதோக்ஷஜனிடத்தில் (பகவானிடத்தில்) செய்யப்படும் பக்தியோகமேயென்று நிச்சயித்தறிந்தார். பிறகு பாகவதமென்னும் பேருடைய இந்த ஸம்ஹிதையைச்செய்தார். எந்த ஸம்ஹிதையைக் கேட்டமாத்ரத்தில் சோகம் மோஹம் பயம் ஆகிய இவற்றைப் போக்குந் தன்மையுள்ள பரமபுருஷனான க்ருஷ்ணனிடத்தில் ப்ராணிகளனைவர்க்கும் பக்தி உண்டாகுமோ, அப்படிப்பட்ட பொருளடக்கமுடைய பாகவத ஸம்ஹிதையை ஜனங்களின் க்ஷேமத்திற்காக வ்யாஸமுனிவர் இயற்றினார். புத்ர மித்ர களத்ராதிகளின் வியோகத்தினால் (பிள்ளை நண்பன் பெண்டாட்டி முதலியவர்களைப் பிரிவதால்) உண்டாகும் வருத்தமாகிய சோகமும், ஆத்மாவல்லாத சரீரத்தில் ஆத்மாவென்னும் நினைவும் தன்னுடைய தல்லாத வஸ்துவில் தன்னுடையதென்னும் நினைவுமாகிய மோஹமும், மேல் வருந் துக்கங்களை நினைத்துவருந்துகையாகிற பயமும் ப்ராணிகளுக்கு ஸம்

ஸாரத்தில் விளையும் அனர்த்தங்கள். இவற்றைப் பரம புருஷன் தன்னிடத்தில் பக்தி செய்பவர்க்குப் போக்கி மேன்மேலும் ஸுகத்தை விளைப்பான் அத்தகைய பக்தி இந்த பாகவத ஸம்ஹிதையைக் கேட்ட மாத்ரத்தினால் உண்டாகுமென்று நினைத்து வ்யாஸ பகவான் ஜனங்களின் க்ஷேமத்திற்காக இம்மஹா புராணத்தை இயற்றினார். அம்முனிவர் தான் சொல்ல விரும்பின அர்த்தங்களை அடைவே அமைத்து க்ரமமாகவே இந்த ஸம்ஹிதையைச் செய்து முடித்து, ஸம்ஸார தர்மங்களில் முகம் மாறப்பெற்று மனம் பரமபுருஷனிடத்தில் ஊக்கமுற்றிருக்கும் தன்மையை விளைக்கிற சம தமாதியான நிவ்ருத்தி மார்க்கத்தில் ஆழ்ந்து பரப்ரஹ்மத்தின் உண்மையையே மனனஞ்செய்யுந்தன்மையரும் தன் புதல்வருமான சுகரை இதைக் கற்கச்சொல்லி அவர்க்கு உபதேசித்தார்.

சௌனகர் சொல்லுகிறார்:—அந்தச் சுகர், ஸாம்ஸாரிக வ்ருத்தியில் மனஞ்செல்லப்பெறாமல் இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு பரப்ரஹ்மத்யானமாகிற நிவ்ருத்தி மார்க்கத்திலேயே மனவூக்க முடையவரென்றும் பரமபுருஷனுடைய உண்மையையே மனனஞ்செய்யுந் தன்மையரென்றும் நீரே சொன்னீர்; நாங்களும் கேட்டிருக்கிறோம். இங்ஙனம் இது ப்ரஸித்தமே. இத்தகையரான அம்முனிவர் கேட்கவேண்டியவைகளும் ஓதவேண்டியவைகளுமாகிய எல்லாவற்றிலும் ஆதரமில்லாதவர்; எல்லாவற்றிலும் உதாஸீனமாயிருப்பவர்; பரமாத்மாவினிடத்தில் மனத்தை நிறுத்தி ப்ரஹ்மானந்தம் அனுபவிக்குந் தன்மையர். இப்படிப்பட்டவர் எந்தக் காரணத்திற்காக மிகவும் பெரியதான இந்த ஸம்ஹிதையை அப்யஸித்தார்?

ஸூதர் சொல்லுகிறார்:—முனிவர், பரமாத்மாவினிடத்திலேயே மனத்தை நிலைநிறுத்தி ப்ரஹ்மானந்தம்

அனுபவிக்குந் தன்மையரே; மற்றும், லோகவ்ருத்தாந்தத்தை அறிவிக்கிற க்ரந்தங்களை நெஞ்சில் நினைப்பதுஞ் செய்பவரல்லர்; எதிலும் அபேக்ஷயற்றவராகையால் ஒருவர்க்கு உட்பட்டு அவர்களால் தூண்டப்படுமாறு தமமைப் பராதீனமாக்குந் தன்மையரல்லர். ஆயினும் அவர்கள் த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து பலியிடத்தினின்று லோகங்களை இரந்து இந்த்ரனுக்குக் கொடுத்த மஹோபகாரகனான பகவானிடத்தில் ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் நிஷ்காரணமாகவே, 'பகவான் இத்தகைய குணமுடையவன்; இத்தகைய ஸ்வரூப ரூபமுடையவன்' என்று பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை நினைக்கையாகிற பக்தியைச் செய்யுந் தன்மையர். இங்ஙனம் பகவானிடத்தில் ப்ரீதியுடன் அவனது ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறிந்து மனனஞ் செய்கையே பக்தியின் வடிவமாகையால், அதில் பக்திக்கு விஷயமான பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறியவேண்டியது அவஶ்யமாகையால், அவற்றை விஶதமாக விவரித்துச் சொல்லுகிற இந்த ஸம்ஹிதையை அம்முனிவர் அப்யஸித்தார். வேதாந்தங்களில் அறியப்பட்டவைகளும் அனுபவத்தில் வழங்கி வருபவைகளுமான பகவானுடைய குணங்களால் இழுக்கப்பட்ட மதியுடையவரும் ஜ்ஞானாதி குணங்களுக் கிருப்பிடமும் பாதராயணருடைய (வ்யாஸருடைய) புதல்வருமாகிய அந்த சுகமுனிவர், என்றும் விஷ்ணுவினிடம் பக்திசெய்யுந் தன்மையரான வைஷ்ணவ ஜனங்களிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவர். அவர் மஹத்தான இந்த ஸம்ஹிதையை அத்யயனஞ் செய்தார் (ஓதினார்). பகவானுடைய குணங்களை அனுபவிப்பதற்கு வேதங்களை ஓதி உணர்ந்தமையே போதும். ஆயினும், வேதாந்தங்களை ஓதியுணர்ந்

தவர்களுக்கும் பகவானுடைய குணங்களை எடுத்துரைக்கும் ப்ரபந்தங்களைக் கற்றறிவது அவஶ்யமாகையாலும், இந்த ப்ரபந்தம் முழுவதும் பகவானுடைய குணங்களையே கூறுந்தன்மையதாகையாலும், அவதாரம் குணம் விபூதி பக்தர் அவரது குணங்கள் ஆகிய இவற்றோடு கூடவே பகவானை அனுபவிக்க வேண்டுமாகையால் அவதாரம் குணம் பக்தர்நிலை அவரது குணம் ஆகிய இவை வேதாந்தங்களில் விசதமாக விசேஷித்து ஏற்படாமையாலும், வேதாந்தங்களால் அறியுங்குணங்களைக்காட்டிலும் மேலான குணங்கள் இந்த ப்ரபந்தத்தில் தெரிகையாலும் இதை அம்முனிவர் தனக்கு அவஶ்யமென்றே அப்யஸித்தார். ஆகையால் இந்தப் புராணம் வேதாந்தங்களைக்காட்டிலும் மற்றை இதிஹாஸ புராணங்களைக்காட்டிலும் சிறந்ததென்பதில் ஸந்தேஹமில்லை. மேல், பரீக்ஷித்தின் ஜன்மத்தையும் செயலையும் அவன் சரீரவியோகம் பெற்றதையும் பாண்டவர்களின் வ்ருத்தாந்தத்தையும் இவற்றிற்குத்தொடர்ச்சியான க்ருஷ்ண கதைகளையும் சொல்லப்போகிறேன்; கேளுங்கள். பாரத யுத்தத்தில் கௌரவவீரர்களும் ஸ்ருஞ்ஜயவீரர்களும் யுத்தத்தில் மாண்டு வீரஸ்வர்க்கம் அடைகையில், த்ருதராஷ்ட்ரனுடைய பிள்ளையான துர்யோதனன், பீமன் ப்ரயோகித்த கதையின் அடியால் தடிபோல் பருத்துருண்ட துடைகள் முறிந்து விழுகையில், த்ரோணாசார்ய புத்ரனாகிய அஶ்வத்தாமாவென்பவன் தான் செய்ய நினைத்த கார்யம் ப்ரபுவான த்ருதராஷ்ட்ரனுக்கு அநிஷ்டமாயினும் இஷ்டமாயிருக்குமென்று நினைத்து [1] த்ரௌபதியின் புதல்வர்கள் தூங்கிக்கொண்டிருக்கையில் அவரது தலைகளைச் சேதித்துக்கொண்டு வந்தான். அவன் செய்த இந்தக்

1. இவர்களுக்கு உபபாண்டவர்களென்றும் பேருண்டு.

கார்யம் த்ருதராஷ்ட்ரனுக்கு அப்ரியமே. அவனுக்கு மாத்ரமே அன்று; அனைத்துலகங்களுக்கும் அப்ரியமே. ஆனதுபற்றியே இந்த அசட்டுச்செயலை இப்பொழுதும் நிந்திக்கிறார்கள். இப்படி நடக்கையில், அப்பொழுது அவரது மாதாவான த்ரௌபதி குழந்தைகளுக்கு நேர்ந்த பயங்கரமான மரணத்தைக் கண்டு பரிதாப முற்றுக் கண்களில் நீர் பெருகப்பெற்று வருந்தினாள். அப்பொழுது அர்ஜுனன் அந்த த்ரௌபதியை நல் வார்த்தைகளால் ஸமாதானப்படுத்திக் கொண்டே இங்ஙனம் மொழிந்தான்.

'மங்கள ஸ்வபாவமுடையவளே! ப்ராஹ்மணாதம னும் ஆயுதத்தைக் கொண்டு சிரபராதிகளைக் கொன்ற வனுமாகிய அந்த அஸ்வத்தாமாவின் சிரஸ்ஸை, என் காண்டீவத்தினின்று விடுத்தபாணங்களால் நான் அறுத் துக்கொண்டு வருவதும், பிள்ளைகளைப் பறிகொடுத்த நீ அந்தச் சிரஸ்ஸைக் காலால் மிதித்து ஸ்நானஞ்செய் வதும் எப்பொழுதோ, அப்பொழுதே உனது சோகத் தைப் போக்குவேன். இவ்வளவுஞ்செய்து உன் சோகத் தைப் போக்க நான் ஸித்தமாயிருக்கையில் நீ வருந்துவ தேன்?'' என்று இங்ஙனம் அழகாயிருப்பவைகளும் விசித்ரங்களுமான வார்த்தைகளால் தனது அருமைக் காதலியாகிய த்ரௌபதியை ஸமாதானப்படுத்தி, என் றும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் காக்குந் தன்மையனான க்ருஷ்ணனே நண்பனும் ஸாரதியுமாகப் பெற்றுக் கவசம் அணிந்து பயங்கரமான காண்டீவமென் னும் தனுஸ்ஸை ஏந்திக்கொண்டு ஹனுமத்த்வஜமுடைய னான அர்ஜுனன் ரதத்தில் ஏறிக்கொண்டு தனது ஆசா ர்யராகிய த்ரோணரது குமாரனான அஸ்வத்தாமாவைத் தொடர்ந்து ஓடினான். அங்ஙனம் ஓடிவருகின்ற அர்ஜுன னைத் தூரத்தினின்றே பார்த்துக் குழந்தைகளைக்

கொன்ற அஶ்வத்தாமா பயத்தினால் மனம் கலங்கப்பெற்று ப்ராணன்களைப் பாதுகாத்துக் கொள்ள விரும்பிப் பூமியில் எவ்வளவு தூரம் போக முடியுமோ அவ்வளவு தூரமும் ரதத்தில் ஏறிக்கொண்டு ஓடிப்போனான். ருத்ரனிடத்தினின்று பயந்து தக்ஷப்ரஜாபதி ஓடினாற்போல் அவ்வஶ்வத்தாமா ஓடினான். எவ்வளவு தூரம் ஓடிப்போயினும் தனக்கு ரக்ஷகன் ஒருவனும் நேராமல் குதிரைகள் ஓய்ந்திருக்கக் கண்டு அப்பொழுது ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரான த்ரோணருடைய குமாரன் அஶ்வத்தாமா ப்ரஹ்ம ஶிரஸ்ஸென்னும் அஸ்த்ரமே தன்னைப் பாதுகாத்துக்கொள்வதற்கு உபாயமென்றறிந்தான். இப்பொழுது நான் ப்ரஹ்ம ஶிரஸ்ஸென்னும் அஸ்த்ரத்தினால் அர்ஜுனனைக்கொன்று என்னைக் காப்பாற்றிக் கொள்கிறேனென்று நினைத்தான். அப்பால் ஜலத்தை எடுத்து ஆசமனஞ் செய்து அஸ்த்ரப்ரயோகஞ் செய்வதற்கு வேண்டிய மனவூக்கத்துடன் அந்த அஸ்த்ரத்தின் உபஸம்ஹாரத்தை அறியாதவனாயினும் ப்ராணாபத்து நேர்ந்திருக்கையால் அந்த ப்ரஹ்மஶிரஸ்ஸென்னும் அஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அனந்தரம் எல்லாத்திசைகளிலும் நிறைந்து ப்ரகாசிப்பதும் பயங்கரமுமாகிய தேஜஸ்ஸைக் கண்டு ப்ராணாபத்து நேர்ந்ததாக நினைத்து அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பார்த்துச் சொன்னான்.

அர்ஜுனன், அங்ஙனம் தோற்றின தேஜஸ்ஸைப் பார்த்து அதனுடைய உண்மை இன்னதென்றும் அதை அடக்குவதற்கு வழி இதுவென்றும் தெரியாமல் அவ்விரண்டையும் தெரிவிக்கவேண்டுமென்று ஜ்ஞானாதி குணங்களுக்கு விளைநிலமான ஸ்ரீக்ருஷ்ணனை வினவ முயன்று 'எனக்கும் தெரியாது' என்று எங்குச் சொல்லி

விடுகிறுனென்னும் அபிப்ராயத்துடன் முதலில் பக வானை ஸ்வாபாவிகமான தர்மங்களால் ஸ்தோத்ரஞ் செய்யத்தொடங்கினுன்.

'க்ருஷ்ணா! க்ருஷ்ணா! க்ஷத்ரிய குலத்திற்கெல்லாம் பிறப்பிடமான மஹிமையுடைய நீண்ட புஜதண்டங்களை யுடையவனே! பக்தர்களுக்கு அபயங்கொடுப்பவனே! ஸம்ஸாரத்திலுள்ள தாபத்ரயத்தினுல் தஹிக்கப்படு கின்ற ஜனங்களுக்கு நீயொருவனே ஸம்ஸாரத்தினின்று விடுவிக்குங் கரையாயிருக்கின்றனை. நீ லோகங்களுக் கெல்லாம் ஸுகத்தை விளைவிப்பவன். அதிலும், பக்தர் களுக்கு விசேஷித்து அபயங்கொடுப்பவன். மற்றும் ஸம் ஸாரமாகிற மஹத்தான பயத்தையும் போக்குந்திறமை யுடையவன். இத்தகையனுன உனக்கு, இப்பொழுது நேர்ந்திருக்கிற பயத்தைப் போக்குவது ஒரு வருத்த மோ? 'ஆம், இத்தகையன் ஈஶ்வரனல்லவோ? நான் அன்றோ' என்னில், நீ தான் ஸாக்ஷாத் ஈஶ்வரன். நீயே எல்லோர்க்கும் முதன்மையானவன்; உலகங்களுக்கெல் லாம் காரணமாயிருப்பவன். எல்லோர்க்கும் அந்தராத் மாவாய் எல்லோரையும் சிக்ஷித்து நடத்திக்கொண்டு எல்லோருடைய ஹ்ருதயங்களுக்குள்ளே இருக்கும் பரம புருஷன் நீயே. மாயையென்னும் ப்ரக்ருதி, ஜீவனென் னும் ப்ரக்ருதி ஆகிய இருவகைப்பட்ட ப்ராக்ருதிகளைக் காட்டிலும் நீ வேறுபட்டவன். 'ஈஶ்வரன் எல்லாவற் றையும் தரித்துக்கொண்டிருப்பவனுயின், அவன் எதை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனன்? தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவனுக்கு 'நான் தேவன், நான் மனுஷ்யன் என்று தேஹத்தைச் சேர்ந்த மனுஷ் யத்வாதி தர்மங்களோடு ஸம்பந்தம் உண்டாயிருப்பதா கத் தெரியவருகிறதே. ஈஶ்வரனுக்கு மாத்ரம் ப்ர

க்ருதியின் தர்மங்கள் ஸம்பந்திக்காதிருப்பது எப்படி?' என்னில், சொல்லுகிறேன். ஈஶ்வரன், என்றும் தோற்று வதும் அளவிடமுடியாததுமான தர்மபூத ஜ்ஞான மென்னும் சக்தியால் சேதநாசேதநரூபமான ப்ரக்ருதி யின் தர்மங்களை உதறித் தான் வேறு ஆதாரத்தையெதிர் பாராமல் கேவலம் தனது மஹிமையிலேயே நிலைநின்றி ருப்பவன். ஜீவனோவென்றால் கர்மத்தினால் ஜ்ஞானஸங் கோசம் உண்டாகப்பெற்று தேஹத்தையே ஆத்மா வாக ப்ரமித்து தேஹதர்மங்களை ஆத்மாவினிடத்தில் ஏறிட்டுக்கொள்கிறான். ஈஶ்வரனோ என்றால், என்றும் மாறாத ஜ்ஞான சக்தியால் அவற்றை உதறி அந்தந்த ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாய் இருந்து அவர வர் கர்மங்களுக்குத் தகுந்தபடி பலன்களைக் கொடுத் துக்கொண்டு மற்றொருவனால் தரிக்கப்படாமல் தன்னைத் தானே தரித்து நிலைநின்றிருப்பான். அத்தன்மை யுடைய ஈஶ்வரனேயாகிய நீ உனக்கு ஸ்வாபாவிகமான உன் மஹிமை கைசோரப் பெறாமலே, தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமித்தல் தன்னைத் தான் ஸ்வதந்த்ர னென்று ப்ரமித்தல் ஆகிய மாயையின் கார்யத்தினால் மதிமயங்கப் பெற்றுத் தடுமாறுகின்ற ஜீவலோகத்திற்கு தர்ம அர்த்த காம மோக்ஷ ரூபமான நன்மையையும் அவற்றின் மாறுதலாகிய கெடுதியையும் அவரவர் கர்மங் களுக்குத் தகுந்தபடி கொடுக்கின்றாய். இங்ஙனம் அந்த ராத்மாவாய் நின்று நன்மைகளைக் கொடுப்பது மாத்ர மேயன்றி அவதாரங்கள் மூலமாகவும் ஜீவராசிகளுக்கு யோக க்ஷேமங்களை நடத்துகிறாய். பூமிக்கு பாரமான துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்கும், ப்ரயோஜனத்தை எதிர் பாராமல் நிஷ்காரணமாகத் தன்னிடத்தில் பக்தி செய் யுந்தன்மையரான தன்னுடையவர்கள் தன்னை அடிக்கடி மறவாமல் த்யானிப்பதற்குமே இந்த உன் அவதாரம்.

'இந்தத் தேஜஸ்ஸு ஏது? எவ்விடத்தினின்று வருகிறது? எதனால் நீங்கும்?' என்பது ஒன்றுமே எனக்குத் தெரியவில்லை. எங்கும் நிறைந்திருப்பதும் மிகவும் பயங்கரமுமாகிய ஒரு தேஜஸ்ஸு வருகிறதென்பது மாத்ரமே எனக்குத் தெரிகிறது. இதை எனக்குச் சொல்லுவாயாக' என்றான்.

இங்ஙனம் ஸ்தோத்ரஞ் செய்து விண்ணப்பஞ் செய்யப்பெற்ற ஸர்வஜ்ஞனாகிய பகவான் சொல்லுகிறான்:— ப்ராணாபத்து நேர்ந்திருப்பதைக் கண்டு த்ரோண புத்ரனாகிய அஸ்வத்தாமா ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரமே இந்தத் தேஜஸ்ஸென்று அறிவாயாக. இந்த த்ரோண புத்ரன்தான் ப்ரயோகித்த இந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தின் உபஸம்ஹாரத்தை அறியான். இவன் ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தடுக்கும்படியான அஸ்த்ரம் மற்றொன்றுமே இல்லை, ஆகையால் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்கவும் உபஸம்ஹாரஞ் செய்யவும் அறிந்த நீ கிளம்பியிருக்கிற இந்த ப்ரஹ்மாஸ்த்ரதேஜஸ்ஸை ப்ரஹ்மாஸ்த்ர தேஜஸ்ஸினாலேயே தடுப்பாயாக.

ஸூதர் சொல்லுகிறார்:— இங்ஙனம் 'இந்த அஸ்த்ரத்தை இவ்வாறு உபஸம்ஹாரஞ் செய்யவேண்டும்' என்று பகவான் மொழிந்த உபாயத்தைக் கேட்டு, சத்ரு வீரர்களை அழிக்குந் திறமையுடைய அர்ஜுனன் ஜலத்தை எடுத்து ஆசமனஞ் செய்து அந்த ஸ்ரீ க்ருஷ்ணனை ப்ரதக்ஷிணஞ்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு ப்ரதியாக ப்ரஹ்மாஸ்த்ரத்தையே ப்ரயோகித்தான். அப்பால் அவ்விரண்டு அஸ்த்ரங்களின் தேஜஸ்ஸுக்களும் பாணங்கள் நிறைந்து ஒன்றோடொன்று சேர்ந்து [1]த்யாவாபூமிகளையும் ஆகாயத்தையும் சூழ்ந்து மறைத்து ஸூர்யனும் அக்னியும்போல் வளர்ந்தன. அனந்தரம் மூன்று லோகங்களையும் தஹிப்பதான அந்த த்ரோண

1 த்யாவாபூமிகள் - த்யுலோகமும் பூலோகமும்.

புத்ரனும் அர்ஜுனனும் ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரங்களின் தேஜஸ்ஸைக் கண்டு ஸமஸ்த ப்ரஜைகளும் அதனால் தஹிக்கப்பட்டு இது ப்ரளயாக்னியென்று நினைத்தார்கள். உலகமெல்லாம் பாழாகும் போலிருக்கிற ப்ரஜைகளின் உபத்ரவத்தையும் க்ருஷ்ணனுடைய அபிப்ராயத்தையும் கண்டு அர்ஜுனன் ப்ரஹ்மாஸ்த்ரங்களிரண்டையும் ஸம்ஹாரஞ்செய்தான். அப்பால் ஸமீபத்தில் சென்று கொடுந் தன்மையனும் கௌதமியின் (த்ரோண பத்னியான க்ருபியின்) புதல்வனுமான அச்வத்தாமாவைக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்ற அர்ஜுனன் கயிற்றால் பசுவைக் கட்டுவதுபோல் வலிவுடன் அழுந்தக் கட்டினான். சத்ருவாகிய அந்த த்ரோணகுமாரனை பலவந்தமாகக் கயிற்றால் கட்டி ஸேனை இறங்கின இடத்திற்குக் கொண்டு போக விரும்புகின்ற அர்ஜுனனைப் பார்த்து பகவானான ஸ்ரீக்ருஷ்ணன் தர்மத்தைப் பரீக்ஷிக்கமுயன்று கோபித்தவன்போல் சொல்லத் தொடங்கினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அர்ஜுனா! இந்த ப்ராஹ்மணாதமனைப் பாதுகாப்பதற்கு நீ தகுந்தவனல்லை. இவனைப் பிழைக்க விடுவது உனக்கு யுக்தமேயன்று. ராத்ரியில் தூங்கிக்கொண்டிருந்த இளம் பிள்ளைகளைக் கொன்ற பாவியான இந்த துர்ப்ராஹ்மணனை வதிப்பாயாக. தர்மத்தை உணர்ந்த புருஷன், மத்யபானத்தினால் மதித்திருப்பவன் அவதானமற்றவன் பைத்யம் பிடித்தவன் தூங்கிக்கொண்டிருப்பவன் இளைஞன் பெண்டிர் ஒன்றுமறியாத மூடன் சரணம் அடைந்தவன் ரதம் முறியப் பெற்றவன் பயந்தவன் ஆகிய இத்தகையனான சத்ருவை வதிக்கமாட்டான். இது தர்மத்தின் ஸ்திதி. தயையற்றவனும் துஷ்புத்தியுமாகிய எந்தப் புருஷன் பிறருடைய ப்ராணன்களால் தன் ப்ராணன்களை வளர்க்க

விரும்புகிறானோ அவனை வதிப்பது அவனுக்கு நன்மையை விளைப்பதேயாம். அவன் செய்த பாபத்திற்கு அந்த வதம் ப்ராயச்சித்தமாகி அவனைப் பாபமற்றவனாக்கி அவனுக்கு நன்மையை விளைக்கும். இல்லாத பக்ஷத்தில் அவன் தான் செய்த பாபத்திற்கு ப்ராயச்சித்தம் செய்யாமையால் அந்தப் பாபத்தின் தோஷத்தினால் நரகத்தை அடைவான். மற்றும், நான் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது நீ பாஞ்சாலராஜன் புதல்வியான த்ரௌபதிக்கு 'பெருந்தன்மையுடையவளே! கோபிக்குந் தன்மையளே! எவன் உனது புதல்வர்களை வதித்தானோ அவனது சிரஸ்ஸைக் கொண்டு வருகிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்தாய். ஆகையால் பாபிஷ்டனும் நிரபராதிகளைக் கொல்லுந் தன்மையனும் உனது அன்புக்கிடமானகுமாரர்களைக் கொன்றவனும் ப்ரபுவான த்ருதராஷ்ட்ரனுக்கு அபிஷ்டமான இந்தக் கார்யத்தைச் செய்தவனும் குலதூஷகனுமாகிய இவனை வதிக்கத் தகும். இவன் தன்மைகளில் ஒவ்வொன்றுக்குமே இவனை வதிக்கவேண்டியதாயிருக்க, இவை யித்தனையுமுள்ள இவனை வதிக்காமல் விடுவது யுக்தமேயன்று—என்றனன்.

இங்ஙனம் தர்மத்தைப் பரீக்ஷிக்கும் பொருட்டு ஸ்ரீ க்ருஷ்ணன் பலவாறு மொழிந்து தூண்டினும், அர்ஜுனன் பிள்ளைகளைக் கொன்றவனாயினும் ஆசார்ய புத்ரனாகையால் அந்த த்ரோணகுமாரனை வதிக்கவிரும்பவில்லை. அவன் தனது ஆசார்யன் செய்த உபகாரத்தை அறிந்த மஹானுபாவனாகையால் அவனை வதிக்கச் சிறிதும் விருப்பமுறவில்லை. அப்பால் கோவிந்தனை நண்பனும் ஸாரதியுமாகப்பெற்ற அவ்வர்ஜுனன் தனது விடுதிக்கு வந்து, பிள்ளைகள் மாண்டதைப் பற்றிச் சோகிக்கின்ற அருமைக் காதலியான பாஞ்சாலியின் பொருட்டு அந்த




98. அர்ஜுனன் அஸ்வத்தாமாவைக் கட்டிக்
கொண்டுவந்து த்ரௌபதியிடம் விடுதல்.

த்ரோண புத்ரனைக் காண்பித்தனன். அங்ஙனம் அர்ஜுனன் கட்டிக்கொண்டு வர வந்தவனும் கயிற்றால் கட்டுண்டிருப்பவனும் தான் செய்த கார்யத்தில் ஜுகுப்ஸை உண்டாகப் பெற்றுத் தலையை வணக்கிக் கீழ்முகமாயிருப்பவனும் அபகாரஞ் செய்தவனும் அர்ஜுனனால் அவமதி அடைந்தவனும் ஆசார்ய புத்ரனுமாகிய அஶ்வத்தாமாவைப் பார்த்து த்ரௌபதி நல்லியற்கையுடையவளாகையால் நமஸ்காரஞ் செய்தாள். பதிவ்ரதையும் நல்ல ஸ்வபாவமுடையவளுமாகிய த்ரௌபதி இந்த ஆசார்ய புத்ரனை அர்ஜுனன் கட்டிக்கொண்டு வந்ததற்குப் பொறுமல் இங்ஙனம் மொழிந்தாள்.

த்ரௌபதி சொல்லுகிறுள்:—இவரை விடுங்கள் விடுங்கள். இவர் ப்ராஹ்மணர்; அதிலும் ஆசார்யபுத்ரர். இவர் கேவலம் ஆசார்ய புத்ரரென்பதுமாத்ரமே அன்று. நிரூபித்துப் பார்க்கையில் தந்தையே யென்ன வேண்டும். ரஹஸ்யத்தோடுகூடின தனுர்வேதத்தையும் ப்ரயோக உபஸம்ஹாரங்களோடுகூடின அஸ்த்ர ஸமூஹங்களையும் எவருடைய அனுக்ரஹத்தினால் நீங்கள் அப்யஸித்தீர்களோ, அப்படிப்பட்ட மஹானுபாவரான த்ரோணுசார்யரே இந்தப்பிள்ளையின் வடிவமாயிருக்கின்றார். 'தந்தையே பிள்ளையாவான்' என்று வேதஞ் சொல்லுகிறதல்லவா. ஆகையால் பிள்ளைக்குச் செய்த அபகாரம் தந்தைக்கே சேரும். 'அவர் தான் ஸ்வர்க்கம் போய்ச் சேர்ந்தாரே. அவர்க்கு என்ன அவமதி?' எனகிறுயோ; அந்த த்ரோணுசார்யருடைய சரீரத்தின் பாதியான அவரது பத்னி க்ருபி வீரனான புதல்வனைப் பெற்றவளாகி இருக்கின்றுளல்லவா; அனுமரணஞ்செய்யவில்லையே. ஆகையால் த்ரோணுசார்யர் ஸ்வர்க்கஞ் செல்லினும், அவரது சரீரத்தின் பாதியாகிய அவர் பத்னிக்கு

அபகாரஞ் செய்ததேயாம். நான் சொல்லும் தர்மம் உங்களுக்கே தெரியும். நீங்கள் என்றும் ஆசார்யனை அவமதிக்கலாகாதென்னும் தர்மந் தவறாமையாகிற மஹாபாக்யமுடையவர். ஆகையால் ஆசார்யனை வெகுமதிக்குந் தன்மையுடைய நீங்கள் அவ்வாசார்ய வம்சத்தை வருந்தச் செய்வது யுக்தமன்று. நீங்கள் அவ்வம்சத்தை அடிக்கடி பூஜிப்பதும் வெகுமதிப்பதுமே தகுந்தது. நாம் இவர்க்கு அபகாரஞ் செய்வோமாயின், (இவரை வதிப்போமாயின்) க்ருபி (த்ரோணுசார்யருடைய பத்னி) என்னைப்போல் மிகுதியும் துக்கமுறுவாள். குழந்தைகள் மரணம் அடையப்பெற்று நான் எப்படி அடிக்கடி முகத்தில் கண்ணீர் பெருக்கிக்கொண்டு ரோதனஞ் செய்கின்றேனோ, அங்ஙனம் இந்த ப்ராஹ்மணனுடைய தாயான கௌதமி (கௌதமருடைய புதல்வியான க்ருபி) ரோதனஞ் செய்யவேண்டாம். இவரை வதித்தால் அவள் என்னைப்போலவே பிள்ளையைப் பறிகொடுத்து ரோதனஞ் செய்வாள். அங்ஙனஞ் செய்வது உங்களுக்குத் தகுந்ததன்று. மற்றும், இது, நங்குலத்திற்கு அனர்த்தத்தையும் விளைக்கும். எந்த ராஜாக்கள் மனத்தை வெல்லுந் திறமையற்று ப்ராஹ்மண குலத்தின் மேல் கோபமுற்று அதை வருந்தச் செய்கிறார்களோ, அங்ஙனம் வருத்தமுற்ற அந்த ப்ராஹ்மணகுலம் அந்த ராஜாக்களது வம்சத்தை அனுபந்திகளோடு (அவரைச் சேர்ந்தவரோடு) சீக்ரத்தில் தஹித்துவிடும்—என்றாள்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஓ அந்தணர்களே! இங்ஙனம் தர்மத்தினின்று நழுவாததும் ந்யாயத்தினின்று தவறாததும் தயையோடு கூடினதும் பொய்யும் கொடுமையுமற்றதும் பக்ஷபாதமில்லாததும் தனக்குத் தகுந்ததும் ஆழ்ந்த அபிப்ராயமுடையதுமான த்ரௌபதியின் வார்த்தையைக்கேட்டு யுதிஷ்டிரன் கொண்டாடினான்.

அங்ஙனமே நகுலன் ஸஹதேவன் யுயுதானன் (ஸாத்யகி) அர்ஜுனன் தேவகியின் புதல்வனுகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் இவர்களும் மற்றும் அங்குள்ள புருஷர்களும் ஸ்த்ரீகளும் த்ரௌபதியின் வசனத்தைக்கேட்டு மிகுதியும் கௌரவித்தார்கள். அவர்களில் பீமஸேனனோவென்றால், கோபாவேசமுற்று 'ப்ராஹ்மணுதமனான அந்த த்ரோணபுத்ரனை வதிப்பதே நலமென்று நினைக்கிறேன். ஏனென்னில்—இவன் ப்ரபுவான த்ருதராஷ்ட்ரனுடைய ப்ரயோஜனத்திற்காகவாவது தன் ப்ரயோஜனத்திற்காகவாவது உறங்குகின்ற சிசுக்களை வதித்தானல்லன். பின்னையோவென்றால், வேண்டுமென்று வீணுகவே வதித்தான்' என்றான்.

பீமன் சொன்னதையும் த்ரௌபதி மொழிந்ததையும் கேட்டு, சதுர்ப்புஜனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தனது நண்பனுகிய அர்ஜுனனுடைய முகத்தைப் பார்த்துச் சிறிது புன்னகை செய்பவன் போன்று இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—இவன் ப்ராஹ்மண குலத்தில் பிறந்தவனுகையால் துர்நடத்தையுடையவனுயினும், வதிக்கத் தகுந்தவனல்லன். நிரபராதிகளைக் கொன்றனுகையால் இவன் வதிக்கத் தகுந்தவன். இங்ஙனம் வதிக்கத் தகுந்தவனென்பதற்கும் வதிக்கத் தகுந்தவனன்றென்பதற்கும் தகுந்த காரணங்கள் சொல்லியிருக்கிறேன். ப்ராஹ்மணன் எத்தகைய அபராதஞ் செய்யினும் அவனை வதிக்கலாகாதென்பதும், நிரபராதிகளை வதிக்க முயன்றவன் எவனுயினும் விசாரிக்காமலே அவனை வதிக்கலாமென்பதும் ஆகிய இரண்டும் எனது ஆஜ்ஞையே. (இரண்டும் சாஸ்த்ரங்களில் ஒப்புக்கொள்ளப்பட்டவைகளே). ஆகையால் இரண்டையும் கடவாமல் நடத்துவாயாக. ப்ரீதிக்கிடமான உன்பத்னி

யை நீ ஸமாதானப்படுத்தும் பொழுது என்ன ப்ரதிஜ்ஞை செய்தாயோ, அதை ஸத்யமாகச் செய்வாயாக. ப்ராதாவான பீமஸேனனுக்கும் பாஞ்சாலராஜன் புதல்வியான த்ரௌபதிக்கும் நண்பனுகிய எனக்கும் இஷ்டத்தை நிறைவேற்றுவாயாக' என்றான். அப்பால் இங்ஙனம் சொல்லப்பட்ட அர்ஜுனன் கருத்தை அறியுந் திறமையுடையவனாகையால், க்ருஷ்ணனுடைய மனக்கருத்தை அறிந்து கத்தியால் அந்த ப்ராஹ்மணன் தலையில் தரித்திருந்த மணியைத் தலைமயிர்களோடு கூடவே அறுத்து எடுத்துக்கொண்டான். அனந்தரம் கயிற்றை அவிழ்த்து முன்னமே பிள்ளைகளைக் கொன்றதனால் ஒளி மழுங்கப்பெற்றுத் தேஜஸ்ஸைக் கொடுப்பதான மணியும் தொலைந்து மிகுதியும் ஒளியற்றிருக்கிற அந்த த்ரோண புத்ரனை விடுதியினின்று வெளித்துரத்தினான்.

'இப்படி செய்யினும் அர்ஜுனன் தான்ப்ரதிஜ்ஞை செய்ததும் பீமன் சொன்னதும் செய்ததாகவில்லையே' யென்று சங்கிக்கிற சௌனகரைப் பார்த்து ஸூதர் சொல்லுகிறார்:—தலை மொட்டையடிப்பதும் தனத்தைப் பிடுங்கிக்கொள்வதும் இருப்பிடத்தினின்று வெளியே போகத் துரத்துவதும் ஆகிய இவையே அபராதஞ் செய்த ப்ராஹ்மணர்களுக்கு வதமாம். கைகால் முதலியவற்றைச் சேதிப்பதாகிய சரீரதண்டனை எத்தகைய அபராதஞ் செய்யினும் ப்ராஹ்மணர்களுக்குக் கிடையாது. அவற்றில் அஶ்வத்தாமாவுக்கு மூன்றும் செய்யப்பட்டன. அதனாலேயே தேஹதண்டனையும் செய்தாற்போலவே யாய்விட்டது. அப்பால் பாண்டவர்களெல்லோரும் த்ரௌபதியுடன் கூடப் புத்ரசோகத்தினால் வருத்தமுற்றவராகி, மரணம் அடைந்த பந்துக்களுக்

குப் பிணத்தை எடுத்துக் கொளுத்துவது முதலிய கார்யங்கள் எவ்வெவை செய்யவேண்டுமோ அவற்றை யெல்லாம் செய்தார்கள். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் உத்தரையின் கர்ப்பத்தை அபாண்டவேயாஸ்த்ரத்தினின்று பாது காத்தலும், குந்தி ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரம் செய்தலும்.

ஸூதர் சொல்லுகிறார்:—அனந்தரம் அந்தப் பாண்டவர், மரணம் அடைந்து ப்ரேத உருவத்துடன் ஜலதர்ப்பணம் ச்ராத்தம் முதலியவற்றை விரும்புகிற புத்ராதியான பந்துக்களுக்குத் தர்ப்பணாதிகளைக் கொடுக்கும் பொருட்டு த்ரௌபதி முதலிய ஸ்த்ரீகளை முன்னிட்டுக் கொண்டு க்ருஷ்ணனுடன் கங்கைக்குப் போனார்கள். அங்குப் பாண்டவாதிகள் அனைவரும அடிக்கடி மிகுதியும் புலம்பி மரணம் அடைந்தவர்களுக்கு ஜலங்கொடுத்து க்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் ரஜஸ்ஸினால் (தூள்களால்) பரிசுத்தமான கங்காநதியின் ஜலத்தில் ஸ்னானஞ் செய்து பரிசுத்தரானார்கள். அந்த கங்கையின் கரையில் தம்பியின் புதல்வர்களான தர்மபுத்ராதிகளுடன் உட்கார்ந்திருக்கும் குருராஜனை த்ருதராஷ்ட்ரனையும் புத்ரசோகத்தினால் வருந்துங் காந்தாரியையும் அத்தகையளான த்ரௌபதியையும் குந்தியையும், பந்துக்கள் மாண்டுபோகையால் சோகத்தினால் வருந்துகின்ற மற்றவரையும், க்ருஷ்ணன் முனிவர்களும் தானுமாய், ப்ராணிகளிடத்தில் காலன் தடையில்லாமல் ஜன்மஜரா மரணாதிகளை விளைக்கும் நடத்தையை அறிவித்து ஸமாதானப்படுத்தினான். அக்ஷத்யூதம் (சூது சதுரங்கம்) முதலிய உபாயங்களால் வஞ்சனை செய்த துர்யோதனாதிகள் பறித்துக்கொண்ட அஜாதசத்ரு

வின் (யுதிஷ்டிரனுடைய) ஸொந்த ராஜ்யத்தை ஸாதித்துக் கொடுத்து, ராஜாக்களான யுதிஷ்டிராதிகளின் பத்னியாகிய த்ரௌபதியின் தலைமயிர்களைப் பிடித்திழுத்த பாபத்தினால் ஆயுள் க்ஷீணிக்கப் பெற்றிருக்கும் துஷ்டர்களான துர்ய்ஸாஸனாதிகளை அர்ஜுனாதிகளால் முடித்து, மந்த்ரம் தக்ஷிணை ஆகிய இவற்றில் சிறிதும் குறைவின்றி முக்ய பக்ஷத்திற் கிணங்கும்படி யுதிஷ்டிரனைக் கொண்டு மூன்று அய்வமேதயாகங்கள் செய்வித்துப் பரிசுத்தமான அவனுடைய கீர்த்தியை முழுவதும் நிரம்பும்படி பரவச் செய்தான். அப்பால் பாண்டுவின் புதல்வர்களான யுதிஷ்டிர அர்ஜுனாதிகளிடத்திலும் மற்றவர்களிடத்திலும் போய்வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு தன்னால் பூஜிக்கப் பெற்ற (வ்யாஸர்) முதலிய அந்தணர்களால் பூஜிக்கப் பட்டு ஸாத்யகியோடும் உத்தவரோடும் த்வாரகைக்குப் போக மனத்தில் நிச்சயித்து ரதத்தில் ஏறிக்கொண்டான். அப்பொழுது அம்மஹானுபாவன், பயத்தினால் தழுதழுப்புற்றுப் பின்றொடர்ந்து வந்து வழியில் நின்று மேல்வருமாறு விண்ணப்பஞ் செய்கின்றவளும் அபிமன்யுவின் பத்னியுமாகிய உத்தரையைக் கண்டான்.

உத்தரை சொல்லுகிறாள்:—ஓ தேவர்க்குந் தேவனே! ஜகத்தை யெல்லாம் பாதுகாப்பவனே! ஸூக்ஷ்மமான அர்த்தங்களை யெல்லாம் அறியுந் தன்மையனே! காக்கவேணும் காக்கவேணும். எதினிடத்தினின்று அபயம் (பயமில்லாமை) உண்டாகுமோ அப்படிப்பட்ட வஸ்து உன்னைக்காட்டிலும் மற்றொன்றும் எனக்குப் புலப்படவில்லை. உன்னை யொழிந்த மற்றவரெல்லோரும் ஒருவரோடொருவர் வாசியில்லாமல் ம்ருத்யுவுக்கு உட்பட்டவர்களே. தான் ம்ருத்யுவுக்கு உட்பட்டவன்

மற்றொருவனை எங்ஙனம் காக்கவல்லவனாவான்? 'எதினின்று நான் உன்னைப் பாதுகாக்கவேண்டுமோ அப்படிப்பட்ட பயம் உனக்கு இப்பொழுது என்ன வந்திருக்கிறது?" என்கிறாயோ; சொல்லுகிறேன் கேள். ஈஶ்வரனே! ப்ரபூ! ஜ்வலிப்பதும் இரும்பினால் செய்யப்பட்டதுமான ஓர் பாணம் என்னை எதிர்த்து வருகின்றது. ஓ நாதனே! அந்த பாணம் என்னை யதேஷ்டமாகக் கொளுத்தட்டும். என் கர்ப்பம் மாத்ரம் பாழாகாதிருக்கும்படி அருள்புரியவேணும்' என்றாள்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அந்த உத்தரை மொழிந்த வசனத்தைக்கேட்டு பக்தர்களிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடைய பகவான், பாண்டவர்களை இல்லாமல் நாசமாகும்படி செய்வதற்காக த்ரோண புத்ரனை அஶ்வத்தாமன் ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரம் இங்ஙனம் பாணரூபமாக வருகிறதென்பதை அறிந்துகொண்டான். ஶௌனகரே! பகவான் அங்ஙனம் அறிந்தபொழுதே, பாண்டவர்களும் ஜ்வலித்துக்கொண்டு தம்மை எதிர்த்து வருகிற ஐந்து பாணங்களைக் கண்டு அஸ்த்ரங்களை எடுத்துக்கொண்டார்கள். ப்ரபுவாகிய க்ருஷ்ணன், தன்னையொழிந்த மற்றோரிடத்திலும் மனஞ் செல்லப் பெறாதவரும் தன்னையே ரக்ஷகனாக நினைத்திருப்பவருமான பாண்டவர்களுக்கு அங்ஙனம் ஆபத்து நேரிட்டிருப்பதைக் கண்டு தனக்கு அஸாதாரணமான ஸுதர்ஶனாஸ்த்ரத்தினால் அந்த பாணங்களைத் தடுத்துத் தனது பக்தர்களான பாண்டவர்களைப் பாதுகாத்தான். அப்பால், எல்லோர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் உள்ளே புகுந்து தரிப்பவனும் எப்படிப்பட்ட நுண்ணிய பொருள்களையும் அறியுந்திறமையுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவான் உத்தரையின் கர்ப்பத்தில் அபாண்டவாஸ்த்ரம் புகுந்திருப்பது கண்டு குருவம்சம் பாழாகாமல்

வளர்ந்து பரவும்படி திருவுள்ளங்கொண்டு விராடராஜன் புதல்வியாகிய உத்தரையின் வயிற்றில் தான் புகுந்து அந்த கர்ப்பம் ப்ரஹ்மாஸ்த்ரத்தினுல் பாழாகாதிருக்கும்படி தன் மாயையினுல் மறைத்துக்கொண்டு ஸுதர்ஸனத்தினுல் அபாண்டவாஸ்த்ரத்தைத் தடுத்தான். அந்த ப்ரஹ்மஸிரஸ்ஸென்னும் அஸ்த்ரம் எதனுலும் தடுக்கமுடியாததே ; ஆனதுபற்றியே எங்கும் வீணுகாதது. ஆயினும், ஸௌனகரே! விஷ்ணுவின் தேஜஸ்ஸான ஸுதர்ஸனத்தை அடைந்து நன்ருக அணைந்துவிட்டது. ப்ரஹ்மாஸ்த்ரம் ஸுதர்ஸனம் தவிர மற்ற எதனுலும் தடுக்கமுடியாதது. ஸுதர்ஸனமொன்று மாத்ரமே மற்ற எதனுலும் தடுக்கமுடியாதது. இவ்விஷயத்தில் ஆச்சர்யப்படவேண்டியதொன்று மில்லை எல்லா ஆச்சர்யங்களைக் காட்டிலும் மேலான ஆச்சர்யமயமாயிருப்பவனும் தன்னைப் பற்றின அஸ்த்ரங்கள் ஆபரணங்கள் குணங்கள் விபூதிகள் முதலியவற்றை நழுவவிடாதவனுமாகிய பகவானிடத்தில், ஸுதர்ஸனத்தினுல் ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தடுத்தானென்ற இதை ஓராச்சர்யமாக நீர் நினைக்கவேண்டாம். எந்த பகவான் கர்மத்தினுல் பிறத்தல் முதலிய விகாரங்களொன்றுமின்றிச் சேதனுசேதனமயமான இவ்வுலகத்தையெல்லாம், விளையாடமுயன்ற தனது கருவியாகிய மாயையினுல் (ஆச்சர்ய சக்தியால்) படைப்பதும் காப்பதும் அழிப்பதுஞ் செய்கிருனே, அப்படிப்பட்ட மஹானுபாவனுக்கு இது ஒரு செயலோ? ஆகையால் இவ்விஷயத்தில் ஆச்சர்யப்படவேண்டிய அமஸயமில்லை. அப்பால் ப்ரஹ்மாஸ்த்ரத்தினின்று விடுபட்ட யுதிஷ்டிரன் முதலிய புதல்வர்களோடும் த்ரௌபதியோடும் கூடி நன்மனமுடைய குந்தியானவள் புறப்பட்டுப்போக முயன்றிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

குந்தி சொல்லுகிறாள்:—ஸமஸ்த ஜகத்திற்கும் காரணமாகையால் முதல்வனும் ப்ரக்ருதியின் வேறுபட்டவனும் ஈஶ்வரனுமாகிய, உன்னை நமஸ்கரிக்கிறேன். நீ ப்ரக்ருதியைப்போல் ஸமஸ்த ப்ராணிகளுக்கும புலப்படுமவனல்லை. ஸமஸ்த பூதங்களிலும் உள்ளும்புறமும் நிறைந்திருப்பவன். ஜீவர்களின் அஜ்ஞானமாகிற திரையால் மறைக்கப்பட்டிருப்பவன். ஜீவராசிகள் அஜ்ஞானம் திரைபோல் மறைக்கப்பெற்று உன்ஸ்வரூபத்தைத் தமது இந்த்ரியங்களால் அறியவல்லரல்லர். 'எல்லோர்க்கும் இப்படி அறியமுடியாதவனோ' என்னில், அப்படியில்லை. தன்னை உள்ளபடி அறிந்து உபாஸிக்காதவர்களின் இந்த்ரியங்களுக்கு மாத்ரமே புலப்படாதவன். பலவகை விகாரங்களை அடையுந்தன்மையனல்லை. ஆகையால் நீ அறிவிலா மனிதர்களுக்குப் புலப்படுமவனல்லை. பலவாறு விகாரமுறும் வஸ்துவல்லவோ அறிவில்லாதவர்க்கும் தோற்றும். யோகத்தினால் தெளிந்த மனத்திற்கே நீ தோற்றுவாய். யோகஞ்செய்யாமையால் மதி தெளியப்பெறாதவர்க்கு நீ அறியப்படுந்தன்மையனல்லை. வெவ்வேறு வேஷங்களைப் பூண்டு ஆடிப்பிழைக்கும் நர்த்தகன்போல் புலப்படுகின்றாய். மாறுவேஷம் பூண்ட நர்த்தகனுடைய உண்மையறியாதவன் நர்த்தகனைக் காண்பானாயின் 'இவன் இத்தகையன்' என்று எப்படி அறியவல்லனல்லனோ, அங்ஙனமே யோகத்தினால் தெளிவுபெற்ற மனமே உனது உண்மையை யறியவல்லதன்றி, அங்ஙனம் தெளியாதமனம் உனது உண்மையை அறியவல்லதன்று. அப்படியே எப்பொழுதும் உன் ஸ்வரூபத்தையே மனனஞ்செய்யுந் தன்மையரும் பரிசுத்தமான மனமுடையவருமாகிய பரமஹம்ஸர்கள் செய்யும் பக்தி யோகத்திற்கு விஷயமாகிய உன்னை, ஸ்த்ரீகளாகையால் அத்தகைய வழிகளில் அதிகாரமில்லாத நாங்கள் எங்ஙா

னம் அறிவோம்? 'ஆனால் உனக்கு என்ன தெரியும்' என்கிறாயோ? ஜனங்கள் நாட்யமாடும் புருஷனை அவன் நடத்துஞ் செயலைப்பற்றி 'நடன், நர்த்தகன்' என்றே அறிவார்களன்றி அவனுடைய ஜாதி பெயர் குணம் முதலியவற்றை எப்படி அறியவல்லரல்லரோ, அங்ஙனமே இந்த அவதாரத்திலுள்ள க்ருஷ்ண வாஸுதேவாதி நாமங்களும் தாமரையுந்தியனாயிருக்கையுமாகிய அனைவர்க்கும் புலப்படுமவற்றை மாத்ரமே யறிவேனன்றி மற்றொன்றும் அறியேன். க்ருஷ்ணனென்னும் பேருடைய உனக்கு நமஸ்காரம். வஸுதேவ குமாரனாகிய வாஸுதேவனென்னும் பேருடைய உனக்கு நமஸ்காரம். தேவகிக்கு ஸந்தோஷம் விளைக்கும் புதல்வனாகையால் தேவகீ நந்தனனென்னும் பேருடைய உனக்கு நமஸ்காரம். நந்தகோபனுக்குக் குமாரனாகி நந்தகோபனென்னும் பேருடைய உனக்கு நமஸ்காரம். பசுக்களை மேய்த்துப் பாதுகாத்தமையால் கோவிந்தனென்னும் பேருடைய உனக்குப் பலதடவை நமஸ்காரம். தாமரை யுந்தியனாகிய உனக்கு நமஸ்காரம். தாமரைப் பூமாலையணிந்த உனக்கு நமஸ்காரம். தாமரை மலர்போன்ற கண்களையுடைய உனக்கு நமஸ்காரம். தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய உனக்கு நமஸ்காரம். இருடிகேசனே! துர்ப்புத்தியாகிய கம்ஸனால் நெடுநாள் வரையில் தகையுண்டு சோகித்திருந்த தேவகியை அந்த வருத்தத்தினின்று விடுவித்தாற்போல், நானும் என் புதல்வர்களும், ஸர்வசக்தி! நாதனாகிய உன்னால் பலவகை ஆபத்துக்களின் ஸமூஹத்தினின்று விடுவிக்கப்பெற்றிலோமா. உன் தாயைப்போலவே எங்களையும் பாதுகாத்தனை. 'எந்தெந்த ஆபத்துக்களினின்று உங்களை நான் பாதுகாத்தேன்' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். விஷத்தினின்றும் மஹத்தான அக்னியினின்றும் (நெருப்புப்பற்றி

யெரிகின்ற அரக்குமாளிகையினின்றும்) புருஷர்களைப் பிடுங்கித்தின்னும் தன்மையரான ராக்ஷஸர்களைக்கண்ட பயத்தினின்றும், அஸத்துக்களான துர்யோதநாதிகளின் ஸபையில் நேர்ந்த அவமானத்தினின்றும், வனவாஸமாகிற பெருங்கஷ்டத்தினின்றும், யுத்தங்கள் தோறும் பலவகையரான மஹா ரதர்களுடைய (நிகரில்லாத வீரர்களுடைய) ஆயுதங்களினின்றும், த்ரோண புத்ரனாகிய அஶ்வத்தாமாவின் அபாண்டவேயாஸ்த்ரத்தினின்றும், ஹரீ! நாங்கள் உன்னால் ரக்ஷிக்கப்பட்டோம். மீளவும் ஸம்ஸாரத்தின் காட்சியைக் கொடாததாகிய உன் தர்சனம் எங்களுக்குக் கிடைக்குமாயின், ஜகத்குரு! எமக்கு ஆங்காங்கு அடிக்கடி ஆபத்துக்கள் உண்டாகுமாக. எந்த ஆபத்துக்களில் ரக்ஷகனாகிய உன்னைக்கண்டு களிப்போமோ, அப்படிப்பட்ட ஆபத்துக்கள் எங்களுக்கு அடிக்கடி விளையுமாக. 'நான் ஈஶ்வரனாகில், உன்னைப்போல் எல்லோரும் என்னை ஏன் இங்ஙனம் மொழியவில்லை' என்கிறாயோ? அதற்குக் காரணஞ் சொல்லுகிறேன். கேள். நற்குலத்தில் பிறப்பு பணம் கல்வி ஆகிய இவற்றின் ஸம்ருத்திகளால் மேன்மேலும் வளர்ந்து வருகின்ற மதமுடைய புருஷன் மதிமயங்கித் தான் பிறனென்கிற விவேகமற்றவனாகையால் உன்னை வாயாற் சொல்லவும் உரியனல்லன். ஒன்றிலும விருப்பமில்லாமையால் கைமுதலில்லாத ஏழையர்களுக்கே நீ தோற்றுவாயன்றி மற்றவர்க்குத் தோற்றாய். உன்னையே சரணம் அடைந்து உன்னைப் பெறுதற்குத் தாங்கள் ஒரு முயற்சியுஞ்செய்யாமல் உனது பாதங்களையே நம்பியிருக்குங் கைமுதலில்லாத ஏழையர்க்கு ஸுலபமாக அடையத் தகுந்தவனும் ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற குணங்களின் கார்யமான காமக்ரோதாதிகள் என்றும் தீண்டப்பெறாதவனும் தன்னையே தான்

அனுபவிக்கும் ஆநந்தத்தில் ஆழ்ந்திருப்பவனும் பசி தாஹம் சோகம் மோஹம் ஜரை ம்ருத்யு என்கிற விகாரங்களின்றிச் சாந்தமாயிருப்பவனும் மோக்ஷங்கொடுப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். 'ப்ரஹ்மா ருத்ரன் இந்த்ரன் முதலானவர்களில் ஒருவனே நீ சொன்னபடியிருப்பவனன்றி நானல்லேன்' என்கிறாயோ? அப்படியன்று. ப்ரஹ்மருத்ராதிகளையும் தன் வசத்தில் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் காலஸ்வரூபனாகவே உன்னை நான் அறிவேன். ஆனது பற்றியே உனக்குக் காலத்தினால் விளையும் ஜன்ம ஜரா மரணாதி விகாரங்கள் இல்லை. 'நானும் ப்ரக்ருதி ஸம்பந்தமுடையவனைப்போலவே பக்ஷபாதம் முதலிய தோஷங்கள் ஓயப்பெறாதிருக்கிறேனே' என்கிறாயோ? அப்படியன்று. நீ இயற்கையில் பக்ஷபாதமில்லாமல் எங்கும் ஸமமாகவேயிருப்பவன். நீ காலஸ்வரூபனாகி உலகங்களை அங்ஙனமிங்ஙனம் ஸுகப்படுத்துவதும் வருத்தப்படுத்துவது மாயிருக்கிறாயாகையால் உனக்குப் பக்ஷபாதமும் தயையில்லாமையும் உளவேயாயினும் அவை சேதனர்களுடைய புண்ய பாபரூபங்களான கர்மங்களுக்குப் பலன் கொடுக்கையேயாகையால் நீ இயற்கையில் ஸமமாயிருப்பவனே. காலஸ்வரூபனாகிய உன்னிடத்தினின்றுமே ப்ராணிகளுக்கு ஸுகதுக்கங்கள் உண்டாகின்றன. அவரவர்செய்த புண்யபாபங்களுக்குத் தகுந்தபடி நீ ஸுகதுக்கங்களைக் கொடுக்கிறாயாகையால் நீ அவற்றிற்கு நிமித்த மாத்ரமேயன்றி அவரவர் செய்த புண்ய பாபங்களே அவரவர் அனுபவிக்கிற ஸுகதுக்கங்களுக்கு முக்ய காரணம். ஆகையால் அது உன் தோஷமன்று. அவர்களுடைய தோஷமே. 'நானும் சிலரை அனுக்ரஹிப்பதும் நிக்ரஹிப்பது மாயிருக்கிறேனாகையால் எனக்கு எப்படி பக்ஷபாதாதிகள் இல்லாமற் போகும்?' என்கிறாயோ?

பகவானே! மனுஷ்யர்களைப்போல் நடக்கமுயன்ற உன் செயலையும் உன் கருத்தையும் எவன் அறியவல்லவன்? சில இடத்தில் நீ தண்டனைசெய்வதும் கடைசியில் அநுக்ரஹமாகவே முடிகின்றது. ஆகையால் உனக்குப் பக்ஷபாதாதிதோஷங்கள் உண்டென்னலாகாது. பூதனை சகடாஸுரன் யமளார்ஜுனங்கள் குவலயாபீடம் சாணூரன் முஷ்டிகன் கோஸலன் கம்ஸன் முதலியவர்களை நிக்ரஹஞ்செய்ததும் அவர்களுக்கு மேலான புருஷார்த்தமாகிய மோக்ஷத்தையே விளைத்தமையால் அநுக்ரஹமாகவே முடிந்தது. ஆனதுபற்றியே பக்ஷபாதம் முதலிய தோஷங்கள் ஒன்றுமில்லாத உன்னிடத்தில் அத்தகைய தோஷங்களை ஏறிடும் புருஷர்களுடைய புத்தி விபரீதமே. உனக்கு எவ்விதத்திலும் ப்ரீதிக்கிடமானவனும் த்வேஷத்திற்கிடமானவனுங்கிடையாது. அத்தகைய உன்னிடத்தில் மனிதர்களின் புத்திரஜஸ் தமோ குணங்களின் ஸம்பந்தத்தினால் உண்மை யறியுந் தன்மையற்றிருக்கின்றது. கர்மத்தினால் பிறக்கும் பிறவியற்றவனும் ஜன்மாந்தர கர்மத்தின்படி புத்தி செல்லப் பெற்று அதன்படி கர்மங்களைச்செய்யுந் தன்மையற்றவனும் எல்லோர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனுமாகிய நீ திர்யக்கான பசு பக்ஷி முதலியவை ரிஷிகள் மனிதர் ஜலஜந்துக்கள் ஆகிய இந்த ஜாதிகளில் பிறந்ததும் அந்தந்த ஜாதிக்கிணங்கின செயல்களைச் செய்ததும் மிகுந்த அநுகாரமேயன்றி வேறில்லை. பிறவியற்றவனும் செயலற்றவனுமாகிய உனக்குப்பிறவியும் செயலும் இயற்கையில் ஏது? அவை நடனத்திற்காக ஏறிட்டுக்கொண்டவையே. ஆகையால் நீ வராஹம் முதலிய திர்யக்ஜாதிகளிலும், பார்க்கவன் ஆத்ரேயர் கர்த்தமர் முதலிய ரிஷிஜாதிகளிலும், ராகவ யாதவாதிமனுஷ்ய ஜாதிகளிலும் மத்

ஸ்யம் கூர்மம் முதலிய ஜலஜந்து ஜாதிகளிலும் பிறந்தமையும் அந்தந்த ஜாதிகளுக்கிணங்கின செயல்களைச் செய்தமையும் நடனமேயன்றி உனக்கு அவை இயற்கையில் ஏற்பட்டவையன்று. முன்பு நீ பால்யத்தில் ஒருக்கால் அபராதஞ் செய்கையில் இடைச்சியாகிய யசோதை உன்னைக் கட்டுவதற்காகக் கயிற்றை யெடுத்துக்கொண்டாள். அப்பொழுது கண்ணீர்களால் மெய்குலையப்பெற்று பயத்தை அறிவிக்கும் பரபரப்புடன் கூடின கண்கள் அமைந்த முகத்தை மேல் தூக்கி, எல்லோரும் தன்னிடத்தில் பயப்படும்படி பயங்கரனான ம்ருத்யுவையும் பயப்படுத்துந் தன்மையனான நீ பயந்தவன்போல் நடனஞ்செய்து நின்றனையே; அவ்விருப்பு என்னை மதிமயங்கச் செய்கின்றது. உனது அவதாரத்தின் ப்ரயோஜனத்தை அறிய முயன்றவர்களில் சிலர், நீ கர்மத்தினால் விளையும் பிறப்பில்லாதவனாயினும், ப்ரீதிக்கிடமாகிப் புண்யச்லோகனுமான யதுவுக்கு யசஸ்ஸை விளக்கும்பொருட்டு அவனுடைய வம்சத்தில் அவதரித்தாயென்று சொல்லுகிறார்கள். மலய பர்வதத்திற்குப் புகழை விளக்கும் பொருட்டுச் சந்தனமரம் அம்மலையில் எங்ஙனம் முளைக்கின்றதோ, அங்ஙனமே நீயும் யதுவம்சத்திற்குப் புகழை விளக்கும்பொருட்டு அதில் அவதரித்தனை யென்கிறார்கள். மற்றுஞ் சிலர் இவ்வுலகத்திலுள்ள ஸாதுக்களின் க்ஷேமத்திற்காகவும் தேவதைகளை த்வேஷிக்கின்ற அஸுரர்களை வதிப்பதற்காகவும் நீ பிறவியற்றவனாயிருந்தும் வஸுதேவன் தேவகி இவர்களால் முன் ஜன்மத்தில் வேண்டப்பட்டவனாகி வஸுதேவனுக்கு தேவகியினிடத்தில் பிள்ளையாகப் பிறந்தா யென்கிறார்கள். வேறு சிலர், ஸமுத்ரத்தில் ஓடம்போல் பெரும் பாரத்தினால் வருந்துகின்ற பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டு நான்முகன்

வேண்டுகையில் பிறந்தாயென்கிறார்கள். இன்னஞ் சிலர், இவ்வுலகத்தில் அவித்யை (தேஹமே ஆத்மாயென்னும் ப்ரமத்தை விளைவிக்கும் அஜ்ஞானம்) காமம் (அந்த அஜ்ஞானத்தினால் சப்தாதி விஷயங்களில் உண்டாகும் அபிலாஷம்) கர்மம் (அந்த விருப்பங்களை நிறைவேற்றுவதற்குச் செய்யுஞ் செயல்) ஆகிய இவற்றால் வருந்துகின்ற ஜனங்கள் செவிக்ளாரக் கேட்பதும் நெஞ்சார நினைப்பதுஞ்செய்தற்குரிய சேஷ்டிதங்களை நடத்துவதற்காகவே அவதரித்தானென்கிறார்கள். எவர் உன்சரித்ரங்களைச் சொல்லுமவர் உண்டாகில் கேட்பதும், கேட்பார் உண்டாகில் தாம் சொல்லுவதும், சொல்லுவோராவது கேட்போராவது இல்லையாயின் தமக்குள் தாமே பாடுவதும் நெஞ்சார நினைப்பதும் நினைத்துக் களிப்பதுமாயிருப்பார்களோ, அவர்களே ஸம்ஸாரமாகிற ப்ரவாஹத்தை ஒழியச் செய்வதாகிய உனது பாதாரவிந்தங்களைச் சீக்கிரத்தில் காண்பார்கள். இங்ஙனம் எங்களைப்போன்ற நண்பர்களைப் பாதுகாப்பதற்காகவே உனது அவதாரம். அப்படிப்பட்ட நீயும் உன்ஸொந்தப்ரயோஜனத்திற்காக முயன்றாற்போலிருக்கின்றது. ஏனென்னில், ப்ரபூ! உன்னை அடுத்துப் பிழைக்கும் நண்பர்களாகிய எங்களை இப்பொழுது விட்டுப்போக விரும்புகின்றாயல்லவா. வருந்துகின்ற பற்பல ராஜாக்களினிடையில் துக்கத்தை ஜயித்திருக்கிற எங்களுக்கு உனது பாதாரவிந்தங்களைவிட வேறுகதி கிடையாது. அப்படிப்பட்ட எங்களை இப்பொழுது விட்டுப்போக முயற்சி கொண்டாற்போல் தோற்றுகிறது. மனுஷ்யர்களோடொத்த பெயரும் உருவமும் அமைந்த உனதுகாட்சி, இந்த்ரியங்களுக்கு ப்ரபுவான ஆத்மாவின் காட்சிபோல் எவர்க்கு நேர்ந்ததோ, அப்படிப்பட்ட பாண்டவர்களும்யதுக்களுமாகிய நாங்கள் எத்துணையர்!

நாங்கள் எந்த குணத்தினால் உன்னைக்கண்டோம்? உன்னைக்காண்பதற்கு வேண்டிய குணங்கள் ஒன்றும் எங்களிடத்தில் இல்லை. யமநியமாதி அஷ்டாங்கயோகம் செய்தவர்க்கன்றோ ஆத்மஸாக்ஷாத்காரம் உண்டாகும். அங்ஙனம் உனது காட்சியும் அத்தகையர்க்கே உண்டாகக்கூடியது. இங்ஙனம் ஒரு குணமுமில்லாத நாங்கள் உன்னைக்கண்டதற்கு உனது கருணையே காரணமன்றி வேறொன்று காரணமன்று. நாங்கள் உன்னைக் காணுந்திறமையுடைய ருஷி முதலியவர்களின் நாமங்களைப் பெற்றிலோம். அந்நாமம் பெறுதற்குரிய தாபஸ உருவமும் பெற்றவரல்லோம். இத்தகைய எங்களுக்கு நீ உனது காட்சியைக் கருணையாலேயே கொடுத்தாயன்றி வேறில்லை. கதாதரனே! (கௌமோதகி யென்னுங் கதை பிடித்தவனே!) இப்பொழுது இந்த பூமியானது தமக்கு அஸாதாரணமான த்வஜம் வஜ்ரம் அங்குசம் முதலிய ரேகைகளோடுகூடின உன் அடிவைப்புக்களால் அலங்காரமுற்றதாகி ப்ரகாசிக்கின்றது; நீ புறப்பட்டுப் போனவுடனே சோபிக்கப்போகிற தில்லையல்லவா? உனது குளிர்ந்த காட்சிகளால் இந்தத் தேசங்கள் மிகுதியும் ஸம்ருத்தி யுடையவைகளா யிருக்கின்றன. இத்தேசங்களில் செடிகளும் கொடிகளும் நன்கு செழிப்புற்றிருக்கின்றன. அங்ஙனமே அரண்யங்களும் பர்வதங்களும் நதிகளும் மற்றுமுள்ள ஜலாதாரங்களும் வளர்ந்து வருகின்றன உலகத்திற்கெல்லாம் நாதனே! எல்லோருடைய மனத்தையும் நினைத்தபடி நியமித்துக்கொண்டுபோகுந் திறமையுடையவனே! எல்லோர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! ஜகத்தையெல்லாம் சரீரமாகக்கொண்டவனே! என்னைச்சேர்ந்த பந்துக்களாகிய பாண்டவரிடத்திலும் வ்ருஷ்ணிகளிடத்திலும் எனக்குத் திடமாக

உண்டாயிருக்கின்ற ப்ரீதியாகிற பாசத்தை அறுப்பாயாக. இந்த என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுப்பாயாக. மதுபதீ! உன்னிடத்தில் எனக்கு ப்ரீதி மாறாதிருக்கும்படி அருள்புரிவாயாக. மற்றை விஷயங்களில் ப்ரீதி உண்டாகாமல் உன்னிடத்திலேயே ப்ரீதி வளர்ந்துவரும்படி அனுக்ரஹிப்பாயாக. எனக்கு மற்ற விஷயங்களிலுள்ள ப்ரீதியெல்லாம் உன்னிடத்தில் பாய்ந்து மேன்மேலும் வளர்ந்துவரும்படி அருள் செய்வாயாக. என் புத்தி வேறு விஷயங்களிற் செல்லாமல், கங்கை ஸமுத்ரத்தில் தனது ஜலப்ரவாஹத்தைப் பெருக்குவது போல் உன்னிடத்திலேயே ப்ரீதியைப் பெருக்கிக்கொண்டிருக்குமாக. கங்கை ஸமுத்ரம்போய்ச் சேராமல் தன் ஜலப்ரவாஹத்தை எப்படி நிறுத்திக் கொள்ளமுடியாதோ, அங்ஙனமே என் புத்தியும் உன்னை அடையாமல் களிக்க முடியாததாகி உன்னிடத்தில் ப்ரீதி பெருகப் பெற்றிருக்குமாக. ஸ்ரீக்ருஷ்ணா! (ஸமஸ்த லோகங்களுக்கும் ஸுகம் விளைப்பவனே!) அர்ஜுனனுக்கு மிகுந்த நண்பனே! வ்ருஷ்ணிகளில் சிறந்தவனே! உலகங்களுக்கு உபத்ரவஞ்செய்கின்ற ராஜவம்சத்தைக் கொளுத்துவதும் அழியாததுமான வீர்யமுடையவனே! கோவிந்தனே! பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் தேவதைகளுக்கும் உள்ள மனவருத்தங்களைப் போக்குவதான அவதாரமுடையவனே! யோகேஸ்வர! (ஸூக்ஷ்மங்களை யறியுந் திறமையுடையவனே!) வல்லோர்க்கும் ஹிதத்தை உபதேசிப்பவனே! எனக்கு நன்மைசெய்வாயாக.

ஸூதர் சொல்லுகிறார்:— இங்ஙனம் குந்தி மதுரமான வசனங்களை மொழிந்து தன் மஹிமைகளெல்லாம் பாடப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணன் தன்னுடைய ஆச்சர்ய சக்தியால் உலகத்தை மதிமயங்கச்செய்பவன்போன்றுமந்தஹாஸஞ்

செய்தான். அப்பால் தன் பட்டணத்திற்குப் போக முயன்ற பகவான் அந்தக் குந்தியையும் மற்ற ஸ்த்ரீகளை யும் 'அப்படியே ஆகட்டும்' என்று அங்கீகரித்து ப்ரீதி யுடன் யுதிஷ்டிரனால் தடுக்கப்பெற்று ஹாஸ்தினபுரத் திற்கே போனான். அப்பொழுது ஈச்வரனுடைய சேஷ்டி தங்களை நன்கறிந்த வ்யாஸாதி முனிவர்களும் அற்புத மான செயலுடைய க்ருஷ்ணபகவானும் பற்பல இதிஹா ஸங்களைச் சொல்லி எவ்வளவு ஸமாதானப்படுத்தினும் தர்மபுத்ரன் பந்துக்கள் மாண்டுபோன சோகத்தினால் வருந்திக் காலத்தின் கதி இத்தகையதென்று தெரியப் பெறுதிருந்தான். ஓ அந்தணர்களே! பந்துக்களிடத் தில் ஸ்னேஹத்தினால் அவர்கள் மாண்டதற்கு மதி மயங் கப்பெற்று ப்ரக்ருதி ஸம்பந்தத்திற்குட்பட்டு தேஹத்தி லும் அதன் தொடர்ச்சியுடையவரிடத்திலும் தாழ்ந் திருக்கிற மனத்தினால் நண்பர்களுடைய வதத்தையே சிந்தித்துக் கொண்டிருக்கிற தர்மபுத்ரன் சொன்னான். 'ஆ! துர்ப்புத்தியாகிய என்மனத்தில் வேரூன்றியிருக் கிற அஜ்ஞானத்தைக் காண்பீர்களாக. நாய் நரி முதலி யவை பக்ஷிக்கத்தகுந்ததாகையால் பிறர்க்கேயாகிய இந்த தேஹத்தின் ஸுகத்திற்காக நான் பற்பல அக்ஷௌ ஹிணிக் கணக்குள்ள ஸைன்யங்களைக் கொன்றேன். இளைஞர் ப்ராஹ்மணர் நன்மனமுடையோர் நண்பர் பித் ருக்கள் (தந்தைகள் தந்தை முறையிற் சேர்ந்தவர்) ப்ரா தாக்கள் (உடன் தோன்றல்கள் அம்முறையிற் சேர்ந்த வர்) ஆசார்யர்கள் ஆகிய இவர்க்கு த்ரோஹஞ் செய்த நான் நூறாயிரம் வர்ஷங்கள் அனுபவிப்பினும் எனது நரகங்களுக்கு முடிவில்லைபோலும். நான் பதினாயிரம்ஜன் மங்களெடுத்தாயினும் இந்தப் பாபத்தினின்று தப்பித் துக்கொள்ள வல்லனாவேனா? ப்ரஜைகளைப் பாதுகாக் கும் அதிகாரத்தில் முயன்றிருக்கிற மன்னவன் தர்ம

யுத்தஞ் செய்து சத்ருக்களை வதிப்பானாயின் அது அவனுக்குப் பாபமாகாதென்பது மாத்ரமேயன்றி தர்மத்தின் பொருட்டே ஆகுமென்னும் பகவானுடைய வசனம் எனக்கு விவேகத்தை விளைக்க வல்லதாகவில்லை. அந்த பகவானுடைய வசனத்தை நான் எவ்வளவு ஆராய்ந்து பார்க்கினும் எனக்கு அதனால் விவேகம் உண்டாகவில்லை. தர்மயுத்தத்தினால் சத்ருக்களைவதிப்பது ராஜாக்களுக்கு தர்மமே. அது செய்யத்தக்கதே யென்று பகவான் கட்டளையிட்டிருப்பினும் அது எனக்கு மனத்தெளிவை விளைக்கவல்லமையற்றிருக்கின்றது. 'தர்மத்தின் பொருட்டு முயன்றவனுக்கு எவ்விதத்திலும் தடுக்கமுடியாமல் பாபம் நேருமாயின் அதை வர்ணாஶ்ரம தர்மங்களால் போக்கிக் கொள்ளலாம். ஶ்ருதியும் தர்மத்தினால் பாபத்தைப் போக்கலாமென்கிறதே' என்னில்—நான் இந்த தர்மயுத்தத்தில் பர்த்தாக்கள் முதலிய பந்துக்களைக் கொன்று பெண்டிர்களுக்குச்செய்த அபகாரம் என்னிடத்தில் தலைகொண்டிருக்கின்றது. அதை நான் க்ருஹஸ்தாஶ்ரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களால் போக்கடித்துக்கொள்ள வல்லனல்லேன். வெகு காலம் அனுபவித்துத் தீரவேண்டியதான பெரும்பாபத்தைச் சிறிது காலத்தில் நிறைவேற்றக் கூடிய க்ருஹஸ்ததர்மங்களால் போக்குவது ஸாத்யமன்று. சேறு படிந்த அங்கத்தை எப்படி சேற்றினால் சுத்தி செய்ய முடியாதோ, கள்ளெடுத்தமையால் தோஷமுடைய பாத்ரத்தை எப்படி மீளவும் அந்தக் கள்ளினாலேயே சுத்தி செய்யமுடியாதோ, அங்ஙனமே ஒரு ப்ராணிஹிம்ஸையாலுண்டான பாபத்தை ஆயிரம் யாகங்கள் செய்தும் போக்கமுடியாது. யாகங்கள் பசுஹிம்ஸைக்கிடமாகையால் பாபம் கலந்திருப்பவைகளே. அத்தகைய யாகங்கள் ஆயிரஞ்

செய்யினும் பந்து குருமித்ராதிகளைக் கொன்ற பாபத்தினின்று விடுபடவல்லனல்லேனென்று நினைக்கின்றேன்.
எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

தர்மபுத்ரன் தம்பிகளுடன் க்ருஷ்ணனை அழைத்துக்கொண்டு பீஷ்மரிடம் போதலும், பீஷ்மரிடம் தர்மங்களைக் கேட்பதும், பீஷ்மர் க்ருஷ்ணனை ஸ்தோத்ரஞ் செய்து ப்ராணன்களை விடுதலும்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தர்மபுத்ரன் தான் ப்ரஜைகளுக்கு த்ரோஹஞ் செய்ததைப்பற்றி மிகுதியும் பயந்து, ஸ்வர்க்கத்திற்கு ஸாதனமான தர்மங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்னும் எண்ணத்துடன் யுத்தபூமியான குருக்ஷேத்ரத்தில் அடியுண்டு விழுந்திருக்கின்ற பீஷ்மரைக் காண்பதற்காகப் புறப்பட்டுப்போனான். அப்பொழுது அவன் தம்பிகள் அனைவரும் ஸ்வர்ணமயமான அலங்காரங்களை அணிந்து ரமணீயங்களான சிறந்த அச்வங்களால் திகழ்கின்ற ரதங்களில் ஏறிக்கொண்டு தர்மபுத்ரனைப் பின்றொடர்ந்தார்கள். அந்தணர்களே! அங்ஙனமே வ்யாஸர் தௌம்யர் முதலிய ப்ராஹ்மணோத்தமர்களும் அவனைப் பின்சென்றார்கள். ப்ரஹ்ம ரிஷியே! பகவானான ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனும் தானுமாக ரதத்தில் ஏறிக்கொண்டு தர்மபுத்ரனைப் பின் சென்றான். அப்பொழுது அம்மன்னவன் யக்ஷர்களோடு கூடின குபேரன்போல் ப்ரகாசித்தான். ஆகாயத்தினின்று நழுவின தேவன்போன்று பூமியில் வீழ்ந்திருக்கிற பீஷ்மரைக் கண்டு பாண்டவர்கள் தம்மைப்பின் சென்று வந்தவருடன் ஸ்ரீக்ருஷ்ணனை முன்னிட்டுக்கொண்டு நமஸ்கரித்தார்கள். ஸத்தமரே! (மேன்மையுள்ளவரே!) அங்கு பாரதவம்சத்தில் சிறந்தவராகிய பீஷ்மரைப் பார்க்க ப்ரஹ்மரிஷிகள் அனைவரும்



119. தர்மபுத்ரன் ஸ்ரீக்ருஷ்ணபக்ஷத்தில் பீஷ்மரிடம் தர்மோபதேசம் கேட்டல்.

தேவரிஷிகளும் ராஜரிஷிகளும் ஆக எல்லோரும் வந்திருந்தார்கள். அவர்களில் சிலரைச்சொல்லுகிறேன் கேளும். பர்வதர் நாரதர் தௌம்யர் பகவானான பாதராயணர் ப்ருஹஸ்பதி பரத்வாஜர் பரசுராமன் அவருடைய சிஷ்யர்கள் வஸிஷ்டர் இந்த்ரப்ரமதர் த்ரிதர் க்ருத்ஸமதர் அஸிதர் கக்ஷீவான் கௌதமர் அத்ரி கௌசிகர் ஸுதர்சனர் ஆகிய இவர்களும் பரிசுத்தர்களான ப்ரஹ்மராதர் முதலிய மற்றுமுள்ள முனிவர்களும் கச்யபர் அங்கிரஸ்ஸு முதலானவர்களும் தந்தமது சிஷ்யர்களோடு அவ்விடத்திற்கு வந்திருந்தார்கள். மிகுந்த பாக்யமுடைய அவர்களெல்லோரும் அங்ஙனம் வந்திருப்பதைக் கண்டு தர்மங்களை உணர்ந்தவரும் தேசகாலங்களை அறிந்தவரும் அஷ்டவஸுக்களில் சிறந்தவருமாகிய பீஷ்மர் அவரவர்க்குத் தகுந்தபடி பூஜித்தார். அப்பொழுது பீஷ்மர், ஜகதீச்வரனும் மாயையால் (தனது ஸங்கல்ப ஜ்ஞானத்தினால்) திருவுருவங்கள் எடுப்பவனுமாகிய க்ருஷ்ணன் தன்னெதிரில் உட்கார்ந்திருக்கக்கண்டு அவனுடைய ப்ரபாவத்தை அறிந்தவராகையால் மனத்தில் த்யானித்து மானஸிகமான உபசாரங்களால் பூஜித்தார். அப்பால் தன்னைப் பணிந்து உட்கார்ந்திருப்பவரும் வணக்கத்தோடும் ப்ரேமத்தோடும் திகழ்பவருமான பாண்டு புத்ரர்களை ப்ரீதியின் மிகுதியால் பெருகிவருகின்ற கண்ணீர்களால் ஒன்றும்தெரியாமல் கண்கள் மறைக்கப்பெற்று இங்ஙனம் மொழியத் தொடங்கினார். ஓ தர்மபுத்ரனே! ஆ! என்ன கஷ்டம்! ப்ராஹ்மணர்களையும் தர்மத்தையும் பக்தர்களைக் கைவிடாத பகவானையும் அனுவர்த்திக்குந்தன்மையரான நீங்கள் இங்ஙனம் வருந்திப்பிழைக்கத் தகுந்தவரல்லீர். ஸுகமாக ஜீவிக்கத்தகுந்த நீங்கள் இங்ஙனம் வருந்துவது மிகவருத்தமாயிருக்கின்றது. அதிரதனை பாண்டு

மரணம் அடைகையில் இளம்பிள்ளைகளையுடைய மறுமக ளான குந்தி சிறந்த பிள்ளைகளைப் பெற்றவளாயினும் அடிக்கடி பலவகை வருத்தங்களை அனுபவித்தாளல்ல வா. உங்களுக்கு என்னென்ன அப்ரியம் (வருத்தம்) உண் டாயிற்றோ, அதெல்லாம் காலத்தினால் நேர்ந்ததென்று நினைக்கின்றேன். 'எனக்கு வருத்தம் விளைத்த அக்கா லம் எத்தகையது' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். காற்றின் அதீனத்தில் மேகங்களின் வரிசைபோல் எதன் அதீனத்தில் இவ்வுலகமெல்லாம் அகப்பட்டுக் கொண் டிருக்கிறதோ, அதுவே காலமெனப்படுகின்றது. கால மே உலகத்தையெல்லாம் தன் அதீனத்தில் நடத்து கிறது. ராஜாவான தர்மபுத்ரனும் கதையைக் கையி லேந்தின வ்ருகோதரனும் (பீமஸேனனும்) அர்ஜுன னும் த்ரௌபதியும் காண்டீவமென்னும் தனுஸ்ஸும் தர்மபுத்ராதிகளுக்கு நண்பனான க்ருஷ்ணனும் எங்கு இருக்கிறார்களோ அங்குங்கூட ஆபத்து விளைந்தமை மிகுதியும் அற்புதமே. இதெல்லாம் காலத்தின் கார்ய மே. ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவான க்ருஷ்ணன் தர்ம புத்ராதிகளுக்கு நண்பனாயிருந்தும் காலத்தையே அனு ஸரித்திருந்தான். இல்லையாயின் இத்தகைய ஆபத் துக்களெல்லாம் உங்களுக்கு உண்டாக இடமே இல்லை. க்ருஷ்ணன் இருக்குமிடத்திலுங்கூட ஆபத்தென்றால் இதை என்னென்று சொல்லலாம். இது மிகவும் ஆச்சர் யமே. இவன் எல்லாவற்றையும் தடுக்கவல்லவனாயிருந்தும் காலத்தை அனுஸரித்து வெருமனே யிருந்தமையால் தான் இத்தகைய ஆபத்துக்கள் விளைந்தன. இந்த க்ரு ஷ்ணனுடைய அபிப்ராயத்தை அறியமுயன்ற பண்டிதர் களான ப்ரஹ்மாதிகளும் மதிமயங்கப் பெறுகிறார்கள். ஆகையால் உலகத்தில் ஜனங்களுக்கு உண்டாகும் ஸுக

துக்கங்களெல்லாம் தெய்வாதீனமாய் விளைபவைகளே. தெய்வமாவது காலாதிகளைத் தூண்டி அவற்றை அநுஸரித்திருக்குந் தன்மையுள்ள ஈஸ்வரனுன க்ருஷ்ணனே. நீ இதை அறிந்து, அவன் நடத்த நடப்பவனுகி, வல்லவனே! நாதா! அநாதைகளான ப்ரஜைகளைப் பாதுகாத்து வருவாயாக. இந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஜ்ஞான பல ஐஸ்வர்ய வீர்ய ஸக்தி தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்கள் நிறைந்தவனும் ஜகத்திற்கெல்லாம் காரணமாயிருப்பவனும் பரமபுருஷனுமாகிய நாராயணனுயிருந்தும் மாயையால் உலகத்தை மதிமயங்கச்செய்து தன்னுருவத்தை மறைத்துக்கொண்டு யாதவர்களின் இடையில் தானும் ஒரு யாதவன்போல் திரிகின்றுன். மன்னவனே! மிகுதியும் ரஹஸ்யமான இந்த க்ருஷ்ணனுடைய மஹிமையை, பகவானுன சிவன் அறிவான். அங்ஙனம் தேவரிஷியாகிய நாரதரும் பகவானுன கபிலரும் அறிவார்கள். எவனை நீ அம்மானுடைய பிள்ளையாகவும் உன் ப்ரீதிக்கிடமாகவும் உனக்கு நண்பனுகவும் மிகுந்த உபகாரகனுகவும் நினைக்கின்றுயோ; மற்றும் நீ எவனை மந்த்ரியாகவும் ஒருக்கால் தூதனுகவும் ஒருக்கால் ஸ்னேஹத்தினுல் ஸாரதியாகவும் வைத்துக் கொண்டாயோ; அப்படிப்பட்ட இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையைச் சிவனும் நாரதரும் கபிலருமே அறிவார்கள். மற்றவர்க்குத் தெரியாது. நீ இப்படி நினைக்கினும் செய்யினும் அவன் புத்தி ஒருக்காலும் மாறுகிறதில்லை. அவன் எல்லார்க்கும் அந்தராத்மாவாயிருப்பவன். ஆகையால், மாமாவின் புதல்வன் முதலிய முறைகளிற் சேர்ந்தவனுக நினைப்பதும் தூதனுகக் கொள்வதும் ஸாரதியாகக் கொள்வதுமாயிருக்கிற உனக்கும் அந்தராத்மாவாயிருந்து உனக்கு அந்தந்த நினைவுகளை விளைவிப்பவனும் அவனே. வஸ்துக்களெல்லாவற்றிலும் தான் உட்புகுந்து

நியமித்துக்கொண்டிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுதவன். தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமமாகிற அஹங்காரமற்றவனுகையால் தனக்குச் சரீரமான சேதனவர்க்கத்தின் தோஷங்கள் தன்னிடத்தில் பற்றப்பெறுதவன். தனக்கு நிகரானமற்றொரு பொருளில்லாதவன். இவனுக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமாயிருக்கும் வஸ்து ஒன்றுமே இல்லை; எல்லாவற்றிலும் மேலாகி நிகரும் மேலுமின்றி ஸ்வதந்த்ரனுயிருப்பவன். சேதனுசேதன ஸ்வரூபமான ஜகத்தெல்லாம் தனக்குச் சரீரமாகித் தனது நியமனத்திற்கு உட்பட்டிருக்கையால் எல்லாவற்றையும் ஒரு வாறுகப்பார்க்குந் தன்மையன். இத்தகைய குணங்களெல்லாமில்லாதவனுக்கன்றோ மதிக்கலக்கம் உண்டாகும். இக்குணங்களெல்லாம் அமைந்தவனுக்கு மதிவிளக்கமே யல்லவா? ஈச்வரன் எல்லார்க்கும் அந்தராத்மாவாகி எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையனே; ஆயினும் ஓ மன்னவனே! ஒருப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் தன்னிடத்தில் பக்தி செய்யுந்தன்மையரான பக்தர்களிடத்தில் மிகுதியும் அருள் புரியும் ஸ்வபாவனென்று அறிவாயாக. ஏனென்னில்—க்ருஷ்ணன், ப்ராணன்களை விடமுயன்றிருக்கிற எனக்கு நேரே வந்து தர்சனங்கொடுத்தானல்லவா. இவனிடத்தில் பக்தியுடன் மனத்தை நிலைநிறுத்தி வாக்கினுல் இவனுடைய நாமத்தை மாத்ரமே மொழிந்து கொண்டு தேஹத்தை விடுகிறயோகி மற்ற ஜனங்கள் விரும்புகிற சப்தாதி விஷயங்களை அனுபவிப்பதற்குக் காரணமான புண்யபாப கர்மங்களினின்று விடுபடுவான். அப்படிப்பட்ட க்ருஷ்ணன் எனக்கு நேரே வந்து தர்சனம் கொடுத்தான். இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய நாமகீர்த்தன மாத்ரமே புண்யபாப கர்மங்களை விடுவித்துச் சிறந்த மேன்மையைக் கொடுக்குமாயின்,

நேரே அவனுடைய காட்சியின் மஹிமையைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? நான் இந்தச்சரீரத்தை எவ்வளவில் விடுவேனே, அது வரையில், தெளிந்த புன்னகையும் சிவந்த கண்களும் அமைந்து விளங்குவதும் தாமரை மலர்போன்றதுமாகிய முகமுடைய சதுர்ப்புஜனான ஸ்ரீக்ருஷ்ண பகவான் என் கண்ணுக்குப் புலப்பட்டுக்கொண்டே என் த்யானத்திற்கும் விஷயமாகி இங்கேயே இருப்பானாக.

ஸூதர் சொல்லுகிறார்:—யுதிஷ்டிரன் பீஷ்மருடைய வசனத்தைக் கேட்டு பாணங்களால் இயற்றின படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிற அந்த பீஷ்மரைப் பார்த்து, ரிஷிகள் பலரும் கேட்டுக்கொண்டிருக்கையில் நானாவகையான தர்மங்களை வினவினான். புருஷர்களின் ஸ்வபாவங்களையும் ப்ராஹ்மண க்ஷத்ரியாதி வர்ணங்களையும் ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்களையும் அனுஸரித்து அவ்வவற்றிற்குத் தகுந்தபடி வேதங்களில்விதிக்கப்பட்டவைகளும் வைராக்யம் காமம் ஆகிய இவ்விரண்டு காரணங்களைப்பற்றி நிவ்ருத்தி தர்மங்களென்றும் ப்ரவ்ருத்தி தர்மங்களென்றும் இருவகைப் பட்டவைகளுமான தர்மங்களைத் தர்மபுத்ரன் வினவினான். அங்ஙனமே புருஷ ஸ்வபாவத்தையும் வர்ணாஶ்ரமங்களையும் அனுஸரித்துச் சுருக்கமாகவும் விஸ்தரமாகவும் பலபிரிவாகப்பிரித்து விதிக்கப்பட்டதான தர்மங்களையும் நீதிஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ராஜதர்மங்களையும் பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் சொன்ன மோக்ஷ தர்மங்களையும் ஸ்த்ரீ தர்மங்களையும் பகவானைக்கேட்பது துதிசெய்வது முதலிய பகவத் தர்மங்களையும் ஸங்க்ஷேபமாகவும் விஸ்தரமாகவும் வினவினான். முனிவரே! பலவகை இதிஹாஸங்களின் உண்மையை அறிந்த பீஷ்மர் தர்ம அர்த்த காம மோக்ஷங்களையும் அவற்றை நிறைவேற்

றும் உபாயங்களையும் வர்ணித்தார். இங்ஙனம் யுதிஷ்டி ரன் கேட்ட தர்மங்களை பீஷ்மர் மொழிந்து கொண் டிருக்கையில் இஷ்டப்படி மரணம் நேருமாறு வரம் பெற்றவரும் யோகியுமாகிய அவர் விரும்பிக்கொண்டிரு ந்த உத்தராயண காலம்வந்தது. அனேகமாயிரக்கணக் குடைய குருபாண்டவர்களனைவர்க்கும் முன்னின்று நடத்தும் நாயகரான (தனது வம்சத்தில் பிறந்தவர் பல ரையும் நற்கதி அடையச் செய்பவரான) அந்த பீஷ்மர் வார்த்தைகளை நிறுத்திக் கண்களை மலர விழித்து இமை கொட்டாமல், தேஹத்திலும் அதைச்சேர்ந்த பந்துக் களிடத்திலும் பற்றற்றதான மனத்தை, எதிரில் இருப் பவனும் திகழ்கின்ற பீதாம்பரமுடையவனும் ஆதிபுரு ஷனும் சதுர்ப்புஜனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிலை நிறுத்தினார். (ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமேனியை மிக ஊக்கத்துடன் த்யானிக்கும்படி மனத்தை அவனிடத் தில் நிலை நிறுத்தினார்). பரிசுத்தமாகி நிலைநின்று ஸ்ரீ க்ருஷ்ணனை த்யானஞ்செய்யும் மதியினால் பகவானை அடைவதற்கு இடையூறை விளைவிக்கும் ப்ராரப்தரூப மான அசுபமெல்லாம் தீரப்பெற்று அந்த பகவானு டைய காட்சியின் மஹிமையால் ஆயுத அடிகளாலுண் டான வேதனையெல்லாம் தீர்ந்து ஸமஸ்த இந்த்ரியங் களின் வ்யாபாரங்களும் ஒடுங்கி தேஹாத்ம ப்ரமம் முத லிய அவிவேகங்களெல்லாம் அழிந்து நிர்மலராய் விளங் கும் பீஷ்மர் சரீரத்தை விடத்தொடங்கி ஜனார்த்தனனை இங்ஙனம் துதிசெய்தார்.

ஸ்ரீபீஷ்மர் சொல்லுகிறார்:—யாதவர்களில் சிறந்தவ னும் பாகவதர்களுக்கு நாதனும் சேதனாசேதனங்களைக் காட்டிலும் வேறுபட்டு எல்லையில்லாத மஹிமையுடைய வனும் அளவிறந்த ஸ்வபாவஸித்தமான ஆநந்தமுடைய

வனும்ஓரிடத்தில் விளையாடுவதற்காக வடிவங்கொண்ட வனும் தன் ஸங்கல்பத்தினுல் சேதனர்களுக்கு ஸம்ஸார ப்ரவாஹத்தை விளைவிப்பவனுமாகிய க்ருஷ்ண பகவா னிடத்தில் என் புத்தி மற்ருென்றிலும் விருப்பமின்றி நிலைநின்றிருக்குமாக. மூன்று லோகங்களும் காண ஆசைப்படத்தகுந்ததும்பச்சிலை நிறமுடையதும் ஸூர்ய கிரணம்போல் பொன் நிறம் அமைந்த மேலான பீதாம் பரம் உடுத்திருப்பதும் முன்னெற்றி மயிர்களின் வரிசை களால் மறைந்து அழகான தாமரை மலர்போன்ற முக முடையதுமான உருவந்தரித்தவனும் அர்ஜுனனுக்கு நண்பனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் எனக்குப் பரி சுத்தமான (ப்ரயோஜனங்களெவற்றையும் விரும்பாத தான) ப்ரீதி உண்டாகுமாக. யுத்தத்தில் குதிரைகளின் குளப்படிகளால் கிளம்பின தூட்கள் படிந்து அழுக் கடைந்து நாற்புறமும் தொங்குகின்ற முன் னெற்றிமயிர் களாலும் பெருகிவழிகின்ற வேர்வை ஜலங்களாலும் அலங்காரமுற்ற முகமுடையவனும் நான் ப்ரயோகித்த கூரான பாணங்களால் பிளவுண்ட தோலுடையவனும் ரக்தத்தினுல் விளங்குங்கவசம் அமைந்தவனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ண பகவானிடத்தில் என்மனம் பேராமல் நிலையுற் றிருக்குமாக. யுத்தம் தொடங்குகிற அந்த க்ஷணத் தில் ஸ்நேஹிதனான அர்ஜுனன் மொழிந்த வசனத் தைக்கேட்டுத் தன்னுடையவரான பாண்டவர்களுடை யதும் சத்ருக்களான கௌரவர்களுடையதுமான இரண்டு ஸைன்யங்களின் இடையில் ரதத்தை நிறுத்தி நின்று கண்ணோக்கத்தினுலேயே சத்ரு ஸைன்யத்தி லுள்ளவரு டைய ஆயுளைப் பறித்தவனும் அர்ஜுனனுக்கு ஸ்நே ஹிதனுமான க்ருஷ்ணனிடத்தில் எனக்கு ப்ரீதி உண் டாகுமாக. கொஞ்ச தூரத்தில் மறைந்திருக்கிற ஸைன் யத்தின்முன் பாகத்தைக் கண்டு அங்கிருப்பவர் அனை

வரும் பந்துக்களாயிருப்பதை அறிந்து பந்துக்களை வதிப்பது தோஷமென்னும் புத்தியால் அதினின்று முகம் மாறவைத்த அர்ஜுனனுடைய குத்ஸித புத்தியைக் கண்டு ஆத்மஸ்வரூபத்தை அறிவிக்கிற கீதையாகிற உபநிஷத்தை உபதேசித்து எவன் அந்த துர்ப்புத்தியைப் போக்கினானோ அப்படிப்பட்ட ஸர்வாதிகனான எல்லோரினுஞ்சிறந்த) பகவானுடைய சரணாரவிந்தங்களில் எனக்கு ப்ரீதி உண்டாகுமாக. நிரபராதியைக் கொல்லுந் தன்மையுள்ள என்னுடைய பாணங்களால் அடியுண்டு கவசம் முறிந்து ரக்தத்தினால் உடம்பு முழுவதும் நிறைந்தவனாகி, 'ஆயுதம் எடேன்' என்ற தன் ப்ரதிஜ்ஞையைத் துறந்து 'ஆயுதம் எடுக்கச் செய்கிறேன்' என்ற என் ப்ரதிஜ்ஞையை ஸத்யஞ் செய்வதற்காக, ரதத்திலிருந்தவன் அதினின்று கிளம்பிக் குதித்து ஸுதர்ஸனசக்ரத்தை ஏந்திக்கொண்டு யானையை வதிக்கும்பொருட்டுக் கிளம்பிப் பாயும் ஸிம்ஹம்போல், பலாத்காரமாக என்னை வதிக்கும்பொருட்டு பூமி நடுங்கும்படி எவன் என்னை எதிர்த்து வந்தானோ, அந்த முகுந்தனே ஸ்ரீக்ருஷ்ணபகவானே எனக்குக் கதியாவானாக. அர்ஜுனனுடைய ரதமே குடும்பமாகப் பெற்றவனும் உழவுகோலையும் குதிரைகளின் கயிறுகளையும் பிடித்துக்கொண்டு அந்த ஸோபையினால் கண்ணையிரங் கொண்டு காணும்படி மிகவும் அழகியனுமாகிய பகவானிடத்தில், மரணம் அடையமுயன்றிருக்கிற எனக்கு ப்ரீதி உண்டாகுமாக. த்வந்த்வ யுத்தத்தில் மாண்டவர் அனைவரும் எவனைப் பார்த்த மாத்ரத்தினால் தமக்கு ஸ்வபாவஸித்தமான பாபமற்றிருக்கை முதலிய குணங்கள் தோற்றப் பெறுகையாகிற மோக்ஷத்தை அடைந்தார்களோ, அப்படிப்பட்ட பகவானிடத்தில் எனக்கு

ப்ரீதி உண்டாகுமாக. அழகிய நடையாலும் விலாஸத்தி ஞலும் அழகான புன்னகையாலும் ப்ரேமம்பெருகி வழி கின்ற கண்ணேக்கத்திஞலும் மிகுந்த வெகுமதி செய்யப் பெற்ற இடைப்பெண்கள் காமம் தலைக்கொண்டு விவேக மற்று ஸ்ரீக்ருஷ்ணனை ஸாதாரணமாக நினைத்து அவன் செய்த பூதனுஸம்ஹாரம் முதலியசேஷ்டிதங்களை அனு கரிப்பவராகி எவனுடன் ஒற்றுமை அடைந்தார்களோ, அப்படிப்பட்ட பகவானிடத்தில் எனக்குப்ரீதிஉண்டா குமாக. யுதிஷ்டிரன் செய்த ராஜஸூய யாகத்தில் முனிவர்கூட்டங்களும் ராஜஶ்ரேஷ்டர்களும் நிறைந்த ஸபையின் மத்யத்தில் எவன் இந்த யுதிஷ்டிராதிகள் நடத்தினதும் முனிகணங்கள் அனுமதித்ததுமான அக்ரபூஜையைப்பெற்ருனே, அப்படிப்பட்டவனும் பார்க் கப் பதிஞயிரங்கண்கள் வேண்டும்படி மிகவும் அழகிய னும் எனக்கு அந்தராத்மாவுமான இந்த ஸ்ரீக்ருஷ் ணன், நான் இந்த ஶரீரத்தை விடும்வரையில் என் கண் களுக்குப் புலப்பட்டுக்கொண்டு என் முன்னே இருப்பா ஞக. அங்ஙனம் கீழ்ச்சொன்ன இயற்கையுடையவனும் தான் அவரவர் செய்த புண்ய பாபரூபகர்மங்களுக்குத் தகுந்தபடி ஸ்ருஷ்டித்த ப்ராணிகளின் ஹ்ருதயங்தோ றும், ஸூர்யன் தானொருவனேயாயினும் கண்ணுக்குப் புலப்படுகிற ஜலம் முதலிய வஸ்துக்களில் வெவ்வேராகத் தோற்றுவதுபோல், இயற்கையில் தான் ஒரே தகைய ஞயினும் பலவாறு தோற்றுகின்றவனுமாகிய பரமபுரு ஷனைப் பெற்றேன்.

ஸூதர் சொல்லுகிருர் :—இங்ஙனம் பரமாத்மாவா ன ஸ்ரீக்ருஷ்ணபகவானிடத்தில் மனம் வாய் கண் ஆகிய இவற்றின் வ்யாபாரங்களுடன் ஆத்மாவைப் புகச்செய்து (க்ருஷ்ணனிடம்ஸம்பந்தித்ததாக அனுஸந்தித்து) அந்த பீஷ்மர்ஶ்வாஸம் உள்ளே அடங்கப்பெற்று ஶரீரத்தைத்

துறந்து அர்ச்சிராதி மார்க்கத்தினால் பரமபுருஷனை அடைந்தார். அப்பொழுது பீஷ்மர் பந்தங்களை யெல்லாம் துறந்து நிர்த்தோஷமான ப்ரஹ்மத்தை அடைவதை அறிந்து அங்குள்ளவர் அனைவரும் ராத்ரியில் பக்ஷிகள்போல் பேசாமல் வெறுமனே இருந்தார்கள். அங்கு ஆகாயத்தில் தேவதைகளாலும் பூமியில் மனுஷ்யர்களாலும் வாசிக்கப்பெற்ற துந்துபி வாத்யங்கள் முழங்கின. பகவானிடத்தில் பக்தியுடைய ஸாதுக்கள் 'ஆ! பீஷ்மருடைய பாக்யமும் மஹிமையும் மற்றெவற்கும் நேராது' என்று புகழ்ந்தார்கள். ராஜாக்கள் பெய்த புஷ்ப வருஷங்களும் அவர்மேல் விழுந்தன. பார்க்கவரே! பரலோகஞ்சென்ற பீஷ்மருடைய ஸம்ஸ்காரம் முதலிய கார்யங்களை நடத்தி யுதிஷ்டிரன் முகூர்த்தகாலம் துக்கித்திருந்தான். அப்பொழுது முனிவர்கள் ஸந்தோஷம் அடைந்து ஸ்ரீக்ருஷ்ணனை, வேதாந்தங்களில் வருந்தி அறியக்கூடிய அவனது ரஹஸ்யத்தை (ஸ்வரூபத்தின் உண்மையை) வெளியிடுகிற நாமங்களால் துதிசெய்தார்கள். அப்பால் அம்முனிவர்கள் க்ருஷ்ணனிடத்திலேயே மனம் நிலைநிற்கப்பெற்று மீண்டு தந்தமது ஆஸ்ரமங்களுக்குப் போய்ச்சேர்ந்தார்கள். அதன் பிறகு யுதிஷ்டிரன் க்ருஷ்ணனுடன் ஹாஸ்தினபுரஞ் சேர்ந்து, தந்தையாகிய த்ருதராஷ்ட்ரனையும் பதிவ்ரதையான காந்தாரியையும் ஸமாதானப் படுத்தினான். அப்பால் தந்தையான த்ருதராஷ்ட்ரன் அனுமதிக்கவும் பகவானான வாஸுதேவன் 'அப்படியே செய்' என்று அபிநந்தனஞ் செய்யவும் பெற்று வல்லனாகிய யுதிஷ்டிரன் தந்தை பாட்டன் முதலிய வரிசையில் வந்த ராஜ்யத்தைப்பெற்று தர்மந் தவராமல் பரிபாலித்து வந்தான். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ க்ருஷ்ணன் யுதிஷ்டிரனை ராஜ்யம் ஆளும்படி நியமித்துத் தான் த்வாரகைக்குப் போதல்.

ஸௌனகர், இங்ஙனம் மொழிந்த ஸூதரைப்பார்த்து 'ஓ ஸூதரே! தர்மத்தை நடத்துமவர்களில் மேன்மையுற்ற யுதிஷ்டிரன் தன் பாகமாகிய ராஜ்யத்தை ஆசைப்படுகின்றவரும் நிரபராதிகளான தம்மைவதிக்க முயன்றவருமான துர்யோதனுதிகளை முடித்து போஜனம் போன்ற ராஜ்யத்தை மீளவும் பெற்றுத் தம்பிகளான பீமஸேனுதிகளுடன் எவ்வண்ணம் ராஜ்யபரிபாலனஞ் செய்தான்? மற்றும், அப்பால் என் செய்தான்?' என்று வினவினர்.

ஸூதர் சொல்லுகிறூர் :—'வாரீர் ஸௌனகரே! ஜ்ஞானுதி குணங்களெல்லாம் நிறைந்தவனும் ப்ரபுவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன், ஜகத்திற்கெல்லாம் யோகக்ஷேமங்களைச் செய்து அதை வளர்க்குந் தன்மையனுகையால் மூங்கில் புதரில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உறைவதாலுண்டாகுங் காட்டுத் தீப்போன்ற வம்ச கலஹத்தினுல் (வம்சத்தில் ஒருவரோடொருவர்க் குண்டாகுங் கலஹத்தினுல்) பாழான குருவம்சத்தைப் பரீக்ஷித்து மூலமாய் மீளவும் முளைகிளம்பச்செய்து யுதிஷ்டிரனைத் தன் ராஜ்யத்தில் நிலைநிறுத்திச் செய்யவேண்டிய கார்யம் நிறைவேறப்பெற்று மனக்களிப்புற்றவனுனன். யுதிஷ்டிரன் பீஷ்மர் சொன்னதையும் பக்தர்களைக் கைவிடாத பகவான் மொழிந்ததையுங் கேட்டு தேஹாத்ம விவேகம் முதலிய அறிவுகள் உண்டாகவும் தேஹாத்ம ப்ரமம் முதலிய அஜ்ஞானங்கள் தொலையவும் பெற்று பீமஸேனன் முதலிய தம்பிகள் தன் மனத்தின்படி தொடர்ந்து வரப்பெற்று இந்த்ரன்போல் அச்சுதனையே (ஆஸ்ரிதர்களைக் கைவிடாத பகவானையே) அவலம்பமா

கப் பற்றித் திசைகளின் கடைசியை எல்லையாகவுடைய பூமண்டலத்தை யெல்லாம் பரிபாலித்து வந்தான். அஜாதசத்ருவென்னும் புகழ்பெற்ற யுதிஷ்டிரன் ராஜாவாயிருக்கும் பொழுது, மேகம் காலந்தவறாமல் யதேஷ்டமாக மழை பெய்துகொண்டிருந்தது. பூமி விரும்பின விருப்பங்களை யெல்லாம் சுரந்தது. பசுக்கள் பாலின் மிகுதியால் பருத்த மடியுடையவையாகி ஸந்தோஷத்துடன் இடைச்சேரி முழுவதையும் பாலின் பெருக்கினால் நனைத்துக் கொண்டிருந்தன. அந்த யுதிஷ்டிரனுடைய ராஜ்யத்தைச் சேர்ந்த நதிகளும் ஸமுத்ரங்களும் பர்வதங்களும் வ்ருக்ஷங்களும் கொடிகளும் மற்றுமுள்ள ஸமஸ்த ஓஷதிகளும் அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி யதேஷ்டமாகப் பலித்துக்கொண்டிருந்தன. அஜாதசத்ரு அரசனாகி ஆண்டுவரும்பொழுது ப்ராணிகளுக்கு மனோவ்யாதிகளாவது சரீர வ்யாதிகளாவது ஆதிதைவிக ஆதிபௌதிக ஆத்யாத்மிகங்களென்கிற வருத்தங்களாவது எவையும் உண்டாகவில்லை. இங்ஙனம் யுதிஷ்டிரன் ராஜ்ய பரிபாலனஞ் செய்துவரும் பொழுது, ஸ்ரீ க்ருஷ்ணன், நண்பர்களான யுதிஷ்டிராதிகளுக்கு மனவருத்த மில்லாமைக்காகவும் உடன் பிறந்த ஸுபத்ரைக்கு ப்ரியஞ் செய்வதற்காகவும் ஹஸ்தினபுரத்தில் சில மாதங்கள் வஸித்திருந்து, அப்பால் அந்த யுதிஷ்டிரனிடம் போய் வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு அவனை அணைத்து நமஸ்கரித்துத் தனக்குத் தாழ்ந்த வயதுடைய சிலரால் தான் அணைத்து நமஸ்கரிக்கப் பெற்று ரதத்தில் ஏறிக்கொண்டு நடந்தான். அப்பொழுது ஸுபத்ரை த்ரௌபதி குந்தி விராடனது புதல்வியாகிய உத்தரை காந்தாரி த்ருதராஷ்ட்ரன் யுயுத்ஸு கௌதமன் நகுலன் ஸஹதேவன் பீமஸேனன் தௌம்யர் இவர்களும் மாத்ஸ்யன் புதல்வி முதலிய மற்றைப் பெண்

டிர்களும் மதி மயங்கப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனுடைய விரஹத்தைப் பொறுக்கமுடியாமல் வருந்தினார்கள். ஸாதுக்களின் ஸஹவாஸத்தினால் துஸ்ஸஹவாஸத்தொலையப்பெற்ற அறிவுள்ள புருஷன் ப்ரீதியை விளக்குந் தன்மையுள்ள இவனுடைய புகழை மாத்ரமே ஒருதரஞ் சொல்லக்கேட்பானாயின், மீளவும் அவனைத் துறந்திருக்கப் பொருன். அப்படிப்பட்ட பகவானான ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் காட்சி முதலியவற்றால் மதியூன்றப்பெற்ற குந்திபுத்ரர்களான யுதிஷ்டிராதிகள் அவனது பிரிவை எங்ஙனம் பொறுக்க வல்லராவார்கள்? அந்த யுதிஷ்டிராதிகள் அனைவரும் ஸ்னேஹத்தினாலும் சரீர ஸம்பந்தத்தினாலும் மனந்தொடரப்பெற்று இமைகொட்டாமல் மற்றொன்றிலும் செல்லாத கண்களால் அவனையே பார்த்துக்கொண்டு ஆங்காங்குத் தொடர்ந்து திரிந்தார்கள். அப்பொழுது பந்துக்களான குந்தி முதலிய ஸ்த்ரீகள், தேவகீ புத்ரனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் க்ருஹத்தினின்று புறப்பட்டுப்போகையில், அமங்களம் உண்டாகவேண்டாமென்று நினைத்து ப்ரேமவெள்ளங் கலந்த சிந்தையின் மிகுதியால் பெருகி வருகின்ற கண்ணீரையும் தடுத்து நிறுத்தினார்கள். ம்ருதங்கம் சங்கம் பேரி வீணை பணவம் கோமுகம் துந்திரி ஆனகம் கண்டை முதலிய வாத்யங்களும் துந்துபி வாத்யங்களும் ஒரே காலத்தில் முழங்கின. குரு ஸ்த்ரீகள் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்க்க விரும்பி உப்பரிகைகளின் நுனிகளில் ஏறி ப்ரீதியும் லஜ்ஜையும் புன்னகையும் அமைந்த கண்ணோக்க முடையவராகி ஸ்ரீக்ருஷ்ணன்மேல் புஷ்பமழைகளைப் பெய்தார்கள். ப்ரீதிக்கிடமான அர்ஜுனன் தனக்கு மிகுதியும் நண்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு முத்து ஸரங்களால் அலங்காரஞ் செய்யப்பெற்றதும் ரத்னங்கள் இழைத்த காம்புடையது

மான வெண்குடை பிடித்தான். உத்தவன், ஸாத்யகி ஆகிய இருவரும் சிறந்து அற்புதமான சாமரங்களை எடுத்து வீசினார்கள். இங்ஙனம் உபசாரங்கள் செய்யப் பெற்று யதுக்களுக்கு நாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன் மேல் புஷ்பங்களை இறைக்கப்பெற்று விளங்கினான். அப் பொழுது, ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற ப்ராக் ருத குணங்கள் அற்றவனும் ஜ்ஞானம் சக்தி முதலிய ஆறு குணங்களை இயற்கையாகப் பெற்றவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பெறவேண்டிய தொன்றுமில்லாமல் விருப் பங்களெல்லாம் நிறைவேறப் பெற்றவனாகையால் அவனுக் குத் தகாதவைகளும் பக்தியும் ஸ்னேஹமும் தலைக்கொ ண்டு மதிமயங்கித் தட்டுமாறி வழிந்து வருமவையாகை யால் பக்தி ஸ்னேஹங்களுக்குத் தனியிடமான அவனுக் குத் தகுந்தவைகளும் ஸத்யங்களுமாகிய அந்தணர்மொ ழியும் ஆசீர்வாதங்கள் ஆங்காங்குச் செவிப்பட்டன. சிறப்புற்ற நான்முகன் முதலிய தேவதைகள் புகழப் பெற்றவனும் சிறந்த புகழுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ண னிடத்தில் மாறாத மனமுடைய ஹஸ்தினபுரத்து மாத ரார்மணிகள் அப்பொழுது செவிக்கும் நெஞ்சுக்கும் இனிதாக ஒருவரோடொருவர் இங்ஙனம் பேசிக்கொண் டார்கள்.

'ப்ரளயத்தின் பொழுது ஸத்வம்முதலிய குணங்கள் தலையெடுப்பதற்கு முன்னம் கர்மங்களாகிற சக்திகள் பலன் கொடுக்கத் தொடங்காமல் உறங்குந்தருணத்தில் சேதனாசேதனங்களுக்கு அந்தராத்மாவாகி அவற்றைச் சரீரமாகவுடையவனும் அவற்றை நியமித்து நடத்துந் தன்மையனும் ஸ்ருஷ்டிமுதலிய ஸங்கல்ப மற்றவனுமா கிய தான் பூமி ஆகாயம் முதலிய கார்யவர்க்கங்கள் எவையுமின்றி நாமங்களும் உருவங்களுமாகிற பிரிவுகளு

மில்லாதிருக்கும்பொழுது எவன் தன்னைவிட்டுப் பிரித்துச்சொல்லவும் முடியாத ஸூக்ஷ்மமான சேதநாசேதனங்களைச் சரீரமாகக்கொண்டு தனியனேயாகி உபாதான காரணமும் நிமித்தகாரணமும் மற்றொன்றாகாமல் அவையும் தானேயாயிருந்தானோ, அப்படிப்பட்ட ஆதி புருஷனே இந்த ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்தான். இது ப்ரஸித்தமே! எவன் தானொருவனே உபாதான காரணமும் நிமித்த காரணமுமாகித் தனது ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்றதும் தனக்குச் சேஷப்பட்டிருக்கும் ஜீவாத்மாக்களுக்கு ஜ்ஞான ஸங்கோசத்தை விளைவித்துத் தனது உண்மையை அவர்க்குத் தெரியவொட்டாமல் மறைக்குந் தன்மையதுமான ப்ரக்ருதி தன் விகாரமான கார்யவர்க்கங்களைப் படைக்க ஸித்தமாயிருக்கையில், நாமரூபங்களில்லாத ஜீவாத்மாவுக்கு அந்த நாமரூபங்களை வழங்க விரும்பி வேதமென்னும் சாஸ்த்ரத்தை வெளியிட்டு அந்த ப்ரக்ருதியில் அந்தராத்மாவாய்ப் புகுந்து நாமரூபங்களை வழங்கினானோ, அத்தகைய பரம புருஷனே இந்த ஸ்ரீக்ருஷ்ணனாக அவதாரஞ்செய்தான். மனதுமுதலிய இந்த்ரியங்களைத் தந்தமது வழியே போகவொட்டாமல் வென்றவரும் ப்ராணவாயுவை இஷ்டப்படி அடக்கி விடுமாறு வசப்படுத்திக்கொண்டவருமான பண்டிதர்கள் பக்தியுடன் கூடினதும் பரிசுத்தமுமான மனத்தினால் எவனுடைய ஸ்வரூபத்தைக்கண்டறிகிறார்களோ, எவன் தன்னை நினைத்த மாத்ரத்தில் மனத்தைப் பரிசுத்தஞ்செய்ய வல்லவனோ, அப்படிப்பட்ட பரம புருஷனே இவன். தோழீ! ரஹஸ்யங்களான வேதாந்தங்களில் நுழைந்து அவற்றில் மறைந்து ரஹஸ்யமாயிருக்கிற ஈச்வரனுடைய ஸ்வ ரூப ரூப குணங்களின் உண்மையை அறிந்து உபதேசிக்கும் பெரியோர்கள் எவனுடைய பரி

சுத்தமான கதையைத் தொடர்ந்து பாடுகிறார்களோ, எவன் தானொருவனேயாகித் தன்னுடைய லீலைக்காக ஜகத்தைப் படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாகி, அந்த ஜகத்திற்கு அந்தராத்மாவாயிருந்து அவற்றின் தோஷங்கள் தன்மேல் ஸம்பந்திக்கப்பெறாதிருக்கிறானோ, அப்படிப்பட்ட பரமபுருஷனே இந்த ஸ்ரீக்ருஷ்ணன். 'ஆனால் ஏன் யாதவர்களில் ஒருவன்போல் புலப்படுகிறான்?' என்கிறீர்களோ; சொல்லுகிறேன் கேளுங்கள். எப்பொழுது ராஜக்கள் அஜ்ஞானத்தினால் அழிந்த மதியுடையவராகி அதர்மத்தினால் ஜீவிக்கத்தொடங்குகிறார்களோ, அப்பொழுது இந்த பகவான் துஷ்டர்களை அழித்து ஸாதுக்களுக்கு க்ஷேமத்தை விளைவிக்கும்பொருட்டு சுத்த ஸத்வமயமான உருவங்களைக்கொண்டு யுகங்கள்தோறும் அவதாரஞ்செய்து ஐச்வர்யம் ஸத்யம் புண்யகர்மம் தயை புகழ் ஆகிய ஸ்வபாவ ஸித்தமான இக்குணங்களை விடாமலே இவ்வுலகத்தில் புலப்படுவான். யதுவின்வம்சம் மிகுதியும் புகழத்தகுந்தது. மதுவனமும் அங்ஙனமே மிகுதியும் புண்யம்பெற்றது. ஏனென்னில், புருஷச்ரேஷ்டனும் (ஸாத்வதர்களுக்கு நாதனும்) ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கணவனுமாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் தனது ஜன்மத்தினால் யதுவம்சத்தையும், அடிக்கடி ஸஞ்சாரஞ்செய்வதனால் மதுவனத்தையும் சிறப்புறும்படி செய்கின்றானல்லவா? ஆகையால் யதுவம்சமும் மதுவனமும் மிகுந்த பாக்யமுடையவையென்பதில் ஸந்தேஹம் உண்டோ? குசஸ்தலியென்னும் பேருடைய த்வாரகை ஸ்வர்க்கலோகத்தின் புகழையும் திரஸ்கரிக்கும்படியான பெருமையுடையது. மற்றும் பூமிக்குப் புண்யமான புகழை விளைவிக்குந் திறமையமைந்தது. ஏனென்னில்—அந்த த்வாரகா நகரத்திலுள்ள ப்ரஜைகள் தம்மை அனுக்ரஹிக்கும்

பொருட்டு நித்யவாஸஞ் செய்பவனும் புன்னகை அமைந்த கண்ணோக்கமுடையவனும் தமக்கு நாயகனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டனுபவிக்கிறார்களல்லவா? இந்த ஸ்ரீக்ருஷ்ணனால் கைபிடிக்கப்பெற்ற மாதரார்மணிகளான அவ்விடச்சேரியில் பெண்கள் உபவாஸம் முதலிய வ்ரதங்களாலும் புண்யதீர்த்தஸ்னானங்களாலும் ஹோமங்களாலும் தானதர்மங்களாலும் மற்றும் பலவகை நன்னடத்தைகளாலும் பூர்வஜன்மத்தில் ஈஸ்வரனை ஆராதித்திருக்கவேண்டும். இது நிச்சயம். ஏனென்னில், தோழி! அம்மாதரசிகள் இந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனம் மாறாதிருக்கப்பெற்று மதிமயங்கி இவனுடைய அம்ருதம்போன்ற அதரத்தை அடிக்கடி பானஞ்செய்கின்றார்களல்லவா? ஆகையால் அவர்கள் ஜன்மாந்தரத்தில் பெருந்தவஞ் செய்திருக்கவேண்டும். இல்லையாயின் இது கிடைக்குமோ? இந்த ஸ்ரீக்ருஷ்ணன் மதித்த சிசுபாலாதிகளை ஸ்வயம் வரத்தில் ஹிம்ஸித்து ஜயித்து வீர்யமாகிற பந்தயத்தினால் ருக்மிணி ஜாம்பவதி ஸத்யபாமை முதலிய எண்ணெண்ணற்ற மாதரார்மணிகளைக் கொண்டுவந்தானே; மற்றும், நரகாஸுர வதத்தின் பொழுது மற்ற எண்ணெண்ணற்ற மாதரசிகளை ஆயிரமாயிரமாய்க் கொண்டுவந்தானே, இவர்களெல்லோரும் பரிசுத்தியைப் பறந்தோடச் செய்வதும் (தூய்மைக்குச் சிறிதும் இடமாகாததும்) மேன்மையை உதறியிருப்பதும் (கடோரச் செயல்களுக்கிடமாயிருப்பதும்) ஆகிய பெண்மையை மிகுதியும் சிறந்ததெனச் செய்கின்றார்கள், வாஸ்தவத்தில் பெண்மை பல தோஷங்களுக் கிடமாகையால் பழிக்கத் தகுந்ததேயாயினும் இந்த ருக்மிணி ஜாம்பவதி ஸத்யபாமை முதலிய மாதரசிகளால் அத்தகைய பெண்மைக்குப் பெருஞ் சிறப்பு நேரிட்டது.

ஏனெனில், இவரது கணவனுகிய புண்டரீகாக்ஷன் (செந்தாமரை மலர்போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டழகிய கண்களையுடைய புருஷோத்தமன்)'ருக்மிணீ! ஸத்யபாமே! ஜாம்பவதீ! வருவாய்' என்று அழகான அழைக்குஞ் சொற்களால் மனத்திற்கினியனுகி எப்பொழுதும் இந்தப் பெண்மணிகளின் க்ருஹத்தை விட்டுப் போகாமல் தொடர்ந்திருக்கிறுனல்லவா?'' என்று இங்ஙனம் பட்டணத்துப் பெண்மணிகள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீக்ருஷ்ணன் பட்டணத்துப் பெண்மணிகள் இங்ஙனம் மொழியும் உரைகளைப் புன்னகை அமைந்த கண்ணேக்கத்தினுல் அபிநந்தித்துக்கொண்டே சென்றுன். அப்பொழுது அஜாத சத்ருவாகிய யுதிஷ்டிரன் க்ருஷ்ணனிடத்திலுள்ள ஸ்னேஹத்தினுல் சத்ருக்களிடத்தினின்று சங்கித்து ஸ்ரீக்ருஷ்ணனைப் பாதுகாக்கும் பொருட்டு ரதகஜதுரகபதாதிகள் (தேர் யானை குதிரை காலாள்) ஆகிய நான்கு அங்கங்கள் அமைந்த ஸேனையை அனுப்பினுன். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் தன்னைப் பிரிந்திருக்கப் பொறுமல் வருந்தி வெகுதூரம் பின்றொடர்ந்து வருகின்றவரும் திடமான ஸ்னேஹமுடையவருமான யுதிஷ்டிரன் முதலிய கௌரவர்களை நன்கு நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தித் திருப்பியனுப்பி அன்பர்களோடு தனது பட்டணமாகிய த்வாரகைக்குச் சென்றுன் குருக்ஷேத்ரந் தொடங்கி மருதன்வம் வரையிலுள்ள தேசங்களைத்தாண்டி ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் குதிரை சிறிது இளைப்புறப்பெற்று ஸௌவீர ஆபீர தேசங்களுக்கு அப்பாலிருப்பவைகளும் த்வாரகைக்கு அணுகினவைகளுமான ஆனர்த்த மென்னுந் தேசங்களுக்குப்போய்ச் சேர்ந்தான். அத்தேசத்திலுள்ளவர்களால் ஆங்காங்கு பூஜாஸாதனங்களோடு எதிர்கொண்டு வந்து பூஜிக்கப்பெற்று ஆனர்த்த தேசங்க

ளுக்குப்போய்ச் சேரும்பொழுது, பார்க்கவரே! ஸூர்யன் மேற்கு திக்குக்குப்போனன்; ஸமுத்ர ஜலத்தையும் அடைந்தான். பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீக்ருஷ்ணன் த்வாரகையில் ப்ரவேசித்தல்.

ஸூதர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் மிகுதியும் செழிப்புற்றவைகளும் தன்னைச் சேர்ந்தவைகளுமான ஆனர்த்த தேசங்களை அடைந்து இத்தனை காலம் தன்னைப் பிரிந்து வருந்துகின்ற அங்குள்ளவர்களின் வருத்தத்தை யெல்லாம் தணிப்பவன்போல் சங்கங்களில் சிறந்த பாஞ்சஜன்யத்தை எடுத்து ஊதினன். அங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் எடுத்து ஊதப்பெற்ற அந்தப்பாஞ்சஜன்யம் இயற்கையில் இடையெல்லாம் வெளுத்திருப்பதாயினும் ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய திருப்பவளச் செவ்வாயின் செம்மையால் சிவந்து தாமரை மலர்போன்ற அவனுடைய இருகரங்களி னிடையில் இருந்து, தாமரைக் குவியலில் உரக்க வொலிக்கின்ற கலஹம்ஸப்பறவைபோல் மிகவும் ப்ரகாசித்தது. ஜகத்திற்கு பயத்தை விளைவிக்கும் துஷ்டர்களுக்கெல்லாம் பயங்கரமான அந்தப் பாஞ்சஜன்யத்தின் த்வனியைக் கேட்டு ப்ரஜைகளெல்லோரும் தமது ப்ரபுவான பகவானுடைய காட்சியில் பேராவலுடையவராகி எதிர்கொண்டு சென்றார்கள். மிகுந்த பக்தியுடைய அங்குள்ள ப்ரஜைகள் அனைவரும், தன்னையும் ஜகத்தையும்ப்ரகாசிக்கச்செய்து மற்றொருவர் வெளிச்சத்தையும் எதிர்பாராத ஸூர்யனுக்கு விளக்கைக் காட்டுவதுபோல், பூஜைக்கு வேண்டிய த்ரவ்யங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு ப்ரீதியால் தாமரைமலர் போன்ற முகங்கள் மலரப்பெற்றவ

ராகி ஸந்தோஷத்தினுல் தழதழத்த மொழியுடன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து இங்ஙனம் மொழியத்தொடங்கினூர்கள். அவனே என்னில்—என்றும் அழியாததும் எல்லையில்லாததுமான தனது ஆநந்தத்தை அனுபவிக்கப்பெறுகையால் அவாப்த ஸமஸ்த காமனும் (விருப்பங்களெல்லாம் கைகூடப்பெற்று எதையும் பொருள் செய்யாதிருக்குந்தன்மையனும்) அளவிறந்த ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனான தன்னைத் தான் அனுபவிப்பதில் நிலைநின்றவனுமாகையால் பிறர்செய்யும் பூஜையை எதிர்பார்க்குந் தன்மையனல்லன். அத்தகையனான பகவானை அவர்கள் ப்ரீதியின் மிகுதியால் பூஜிக்க விரும்பி அதற்கு வேண்டிய த்ரவ்யங்களை யெல்லாம் எடுத்து எதிர்கொண்டு சென்றூர்கள். அது, தன்னைத் தானே விளங்கச் செய்துகொண்டு ஜகத்தையெல்லாம் விளக்கமுறச் செய்பவனும் மற்றொரு வெளிச்சத்தை எதிர்பாராதவனுமாகிய ஸூர்யனுக்கு விளக்கு வெளிச்சம் காண்பிப்பது போலிருந்தது. இதற்கெல்லாம் காரணம் அவர்க்கு அவனிடத்திலுள்ள ப்ரீதியே. அத்தகைய ப்ரீதியுடைய அவர்கள், பிள்ளைகளெல்லாரிடத்திலும் மிகுந்த ஸ்னேஹமுடையவனும் ரக்ஷகனுமாகிய தந்தையைக் கண்டு அவனது புதல்வர்கள் களித்துப் பேசுவதுபோல், தம்மிடத்தில் ப்ரீதியுடையவனும் ரக்ஷகனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு களித்து இங்ஙனம் மொழிந்தார்கள். 'நாதா! நான்முகனும் அவனது புதல்வர்களான ஸனகாதிகளும் இந்த்ரன் முதலிய தேவதைகளும் வணங்கப்பெற்ற உனது பாதாரவிந்தங்களைப் பணிந்தோம். இவ்வுலகத்தில் நன்மையை விரும்புமவர்களுக்குச் சிறந்த நன்மையை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயம் உன் திருவடிகளே. அனைவரிலும் மேலான ப்ரஹ்மாதிகளையும் வசப்படுத்த வல்லமையுடைய காலமும் உனது பா

தாரவிந்தங்களில் வல்லமையற்றதேயாம். இப்படி எல்லாரையும் அழப்படுத்துந் திறமையுடைய காலத்தையுங் காற்கடைகொள்ளுந் தன்மையனான உனது பாதாரவிந்தங்களைப் பணிந்தோம். ஜகத்தையெல்லாம் பாதுகாப்பவனே! நீ எமது க்ஷேமத்தின் பொருட்டுத் திகழ்வாயாக. எங்களுக்கு அன்னையும் நண்பனும் பதியும் பிதாவும் நீயே. மற்றும், மேலான மேன்மைகளை விளைக்குங் குருவும் மேலான தெய்வமும் எமக்கு நீயே. உன்னைப் பணிந்து நாங்கள் கருத்தெல்லாம் ஈடேறப்பெற்றோம். அப்படிப்பட்ட நீ எங்கள் க்ஷேமத்தின் பொருட்டுத் திகழ்வாயாக. ஆ! உன்னால் நாங்கள் சிறந்த நாதனுடையவரானோம். ஏனென்னில், ஸ்வர்க்கத்திலுள்ள தேவதைகளுக்கும் காணமுடியாமல் வெகு தூரமாயிருப்பதும் ப்ரீதியமைந்த புன்னகையுடையதும் ஸ்னேஹம் வழியப்பெற்ற கண்ணோக்கமுடையதுமாகிய முகத்துடன் கூடி அழகியதுமான உனது உருவத்தை நாங்கள் காணப்பெற்றோமல்லவா? எங்களுக்கு இதைவிட மேலான ப்ரயோஜனம் என்னவேண்டும்? புண்டரீகாக்ஷா! (செந்தாமரைக்கண்ணனே!) நீ உனது நண்பர்களைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் குருதேசங்களுக்கோ மதுதேசங்களுக்கோ, எப்பொழுது போயினையோ, அப்பொழுது, ஆஸ்ரிதர்களைக் கைவிடாதிருக்குந் தன்மையனே! உன்னைப் பாராத நாங்கள் ஸூர்யனைக் காணப்பெறாத கண்கள்போல், ஒரு க்ஷணகாலத்தையுங் கோடிவர்ஷங்களோடொக்க நினைத்திருந்தோம்' என்றார்கள்.

இங்ஙனம் ப்ரஜைகள் மொழிந்த மொழிகளைக்கேட்டுக்கொண்டே பக்தர்களிடத்தில் மிகுதியும் ப்ரேமமுடையவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தனது கண்ணோக்கத்தினால் அனுக்ரஹஞ் செய்துகொண்டே தனது பட்டணத்திற்

குள் ப்ரவேசித்தான். அந்நகரம் ஸ்ரீக்ருஷ்ணனோடொத்த பலமுடைய மதுக்கள் போஜர் தசார்ஹர் குகுரர் அந்தகர் வ்ருஷ்ணிகள் ஆகிய இவர்களால் பாதுகாக்கப் பெற்று நாகங்களால் பாதுகாக்கப் பெற்ற போகவதி யென்னும் நாகலோகம்போல் திகழ்வுற்றிருந்தது. மற்றும், அந்நகரம் எல்லா ருதுக்களும் ஓரே காலத்தில் தொடர்ந்து தோன்றப்பெற்றிருக்கையால் புஷ்பம் காய் பழம் முதலிய ஸம்ருத்திகளெல்லாம் நிறைந்த மந்தாரம் பாரிஜாதம் முதலிய புண்ய வ்ருக்ஷங்களும் பலவகைக் கொடிகளும் அதன் கீழுள்ள ஆஶ்ரமங்களும் அமையப் பெற்ற [1] உத்யானங்களோடும் உபவனங்களோடும் ஆராமங்களோடும் கூடித் தாமரைக் குளங்களால் சோபை மிகப்பெற்றிருக்கும்; மற்றும், கோபுரம்போன்ற வாசற்படிகளின் மார்க்கங்களில் காவல் மாமுதலிய மரங்களின் தளிர்களால் இயற்றின தோரணங்கள் கட்டப்பெற்றதும் விசித்ரமான த்வஜம் பதாகை ஆகிய இவற்றின் நுனிகளால் உள்ளே வெயில் நுழையப்பெறாததுமாயிருக்கும்; ராஜமார்க்கங்களும் ஸாதாரண வீதிகளும் கடைத்தெருவுகளும் யானை குதிரை கட்டுமிடங்களும் நன்கு விளக்கிச் சுத்தி செய்யப்பெற்றதும், வாஸனைஜலங்கள் தெளித்துப் பழம் புஷ்பம் அக்ஷதை முளை தளிர் ஆகிய இவை இறைக்கப்பெற்றதுமாகி அழகாயிருக்கும். த்வாரங்கள்தோறும் தயிர் அக்ஷதை பழம் கரும்பு இவைகளாலும் பூர்ணகும்பங்களாலும் மற்றும் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களாலும் தூபம் தீபம் இவைகளாலும் அலங்காரஞ் செய்யப்பெற்றிருக்கும். இத்தகையதான த்வாரகாபுரத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரவேசித்தான்.

---

1. உத்யானம்-ராஜாக்கள் விளையாடுமிடம். உபவனம்-வனங்களின் அருகே யிருக்குந் தோட்டம். ஆராமம்-செடிகளை வைத்து வளர்க்குந் தோட்டம்.

இங்ஙனம் மிகுதியும் ப்ரீதிக்கிடமான பகவான் வருவதைக் கேட்டு ஆழ்ந்த மனமுடைய வஸுதேவரும அக்ரூரரும் உக்ரஸேனனும் அற்புத பராக்ரமனுகிய ராமனும் ப்ரத்யும்னன் சாருதேஷ்ணன் ஜாம்பவதியின் புதல்வனுகிய ஸாம்பன் ஆகிய இவர்களும மிகுந்த ஸந்தோஷவேகத்தினுல் படுக்கை ஆஸனம் போஜனம் இவற்றை உதறித் துறந்து மேலான ஓர் யானையை முன்னிட்டுக்கொண்டு ஸ்வஸ்தி வாசனஞ்சொல்லுகிற ப்ராஹ்மணர்களோடும் சங்கவாத்ய முழக்கங்களோடும் மற்றும் பல வாத்யகோஷங்களோடும்வேதகோஷத்தோடும் மிகுந்த ஆதரமுடையவராகி ப்ரீதியின் மிகுதியால் பயமும் சிறிது நேரப்பெற்று ரதங்களில் ஏறிக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்கொண்டார்கள். அங்ஙனம் வேசிப்பெண்மணிகளும் அழகான குண்டலங்களால் திகழ்கின்ற கபோலங்கள் அமைந்த முகங்களின் சோபையால் ப்ரகாசிப்பவராகி அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்க்க விரும்பி வாஹனங்களில் ஏறிக்கொண்டு எதிர்சென்றூர்கள். அபிநயம் பிடிக்கும் நடர்களும் பெண்களுக்கு ஆட்டங்கற்பிக்கிற நர்த்தகர்களும் பாட்டுப்பாடுகிற கந்தர்வர்களும் புராணஞ்சொல்லுகிற ஸூதர்களும் வம்சாவளி படிக்கும் மாகதர்களும் மங்களஞ்சொல்லும் வந்திகளும் ஸ்துதி பாடகர்களும் உத்தம ஶ்லோகனுகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அற்புத சரித்ரங்களைப் பாடினுர்கள். அப்பொழுது ஜ்ஞானுதி ஷாட்குண்யம் (ஜ்ஞான சக்தி பல ஐஶ்வர்ய வீர்ய சக்தி தேஜஸ்ஸுக்களென்கிற குணங்களாறும்) நிறைந்த ஸ்ரீக்ருஷ்ணன் விதிப்படி வணக்கத்துடன் நமஸ்கரிப்பது அணைத்துக்கொள்வது கையைப்பிடிப்பது மந்தஸ்மிதஞ் செய்வது காட்சி கொடுப்பது ஆகிய இவற்றுல் அவரவர்க்குத் தகுந்தபடி வஸுதேவாதிகளு

டன் கலந்து ஸமஸ்தமான பந்துக்களுக்கும் பட்டணத்து ஜனங்களுக்கும் ப்ருத்யர்களுக்கும் ஸம்மானஞ்செய்தான். மற்றும் விபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஶ்வபாகன் (சண்டாலன்) வரையிலுமுள்ள அனைவரையும் ஆஶ்வாஸப்படுத்தி அவரவர்க்கு வேண்டிய இஷ்டங்களைக் கொடுத்து ஸம்மானஞ்செய்தான். ஸ்ரீக்ருஷ்ணன் தானும் பத்னிகளோடு கூடின குருக்கள் (ஆசார்யபதம் நிர்வஹிக்கிற அந்தணர் தலைவர்) வயது சென்ற பெரியோர்கள் மற்றை அந்தணர் மற்றுமுள்ள ஸ்துதி பாடகர் ஆகிய இவர்களால் ஆசீர்வாதஞ் செய்யப்பெற்று த்வாரகாபுரத்திற்குள் ப்ரவேசித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் த்வாரகையின் ராஜமார்க்கத்தில் நுழைந்து செல்லும் பொழுது ஆங்காங்கு ஸ்த்ரீகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு களிப்பதாகிற மஹோத்ஸவம்' நேரப்பெற்று, அந்தணரே! உப்பரிகைகளின்மேல் ஆரோஹித்தார்கள். ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய திருமேனியுடையவனும் அச்யுதனும் (ஆஶ்ரிதர்களைக் கைவிடாதவனும்) ஆகிய ஸ்ரீக்ருஷ்ணனை த்வாரகையிலுள்ள மடந்தையர் மணிகள் தினந்தோறும் பார்த்துக்கொண்டிருப்பினும் அவரது கண்கள் த்ருப்தி உண்டாகப் பெறுமையால், அவர்கள் அவனைக் கண்டு களிப்பதாகிற மஹோத்ஸவம் நேரப்பெற்று உப்பரிகைகளின்மேல் ஏறினார்கள். க்ருஷ்ணனைக் கண்டு த்ருப்தி உண்டாகப்பெறுதிருக்கை யாவர்க்கும் வெளிச்சமே. இவனுடைய மார்பு ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானம்; இவனுடைய முகம் காண்போர் கண்களுக்கு இவனுடைய லாவண்ய ரஸத்தைப் பானஞ்செய்வதற்குப் பாத்ரம்போன்றது. இவனுடைய புஜங்கள் லோகபாலர்களுக்கு இவனுடைய லாவண்யரஸத்தைப்பானஞ் செய்வதற்குரிய பாத்ரம் போன்றவை.

இவனுடைய பாதாரவிந்தங்கள் ஸாரத்தையறிந்த முனிவர்களுக்கு இவனுடைய லாவண்ய ரஸத்தைப் பானஞ் செய்வதற்குரிய பாத்ரம் போன்றவை. அப்படிப்பட்ட பகவானைத் தினந்தோறும் பார்த்துக்கொண்டிருப்பவர்களுடைய கண்களும் த்ருப்தி உண்டாகப்பெறா வென்பது யுக்தமே. வழியில் வெண்கொற்றக்குடைபிடிக்கவும் வெண்சாமரங்கள வீசவும் பெற்றுப் பொன்வர்ணமான வஸ்த்ரங்களுடைய அந்தப் பகவான் வனமாலையுடன் கூடி, ஒரே காலத்தில் தோற்றுகிற ஸூர்யன் சந்தரன் இந்த்ரதனுஸ்ஸு மின்னல் ஆகிய இவற்றோடுகூடின காலமேகம்போல் ப்ரகாசித்தான். அப்பால் தாய்தந்தைகளான தேவகி வஸுதேவர்களின் க்ருஹத்தில் புகுந்து பகவான், தேவகி ரோஹிணிமுதலிய தாய்மார்களால் அணைக்கப்பெற்று தேவகி முதலிய தாய்மார்களெழுவரையும் ஸந்தோஷத்துடன் தலைவணங்கி நமஸ்கரித்தான். அந்தத் தேவகிமுதலிய தாய்மார்கள் புதல்வனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை மடியில் ஏறிட்டுக்கொண்டு ஸ்னேஹத்தினால் ஸ்தனங்களில் பால் பெருகப்பெற்று ஸந்தோஷத்தினால் தழதழத்த மனமுடையவராகிக் கண்களினின்று பெருகி வருகின்ற ஆநந்த நீர்களால் அவனை நனைத்தார்கள். அனந்தரம் போக்யவஸ்துக்களும் போகத்திற்கு வேண்டிய கருவிகளும் போகஸ்தானங்களும் நிறைந்து இதைக்காட்டிலும் சிறந்தது மற்றொன்றும் இல்லை என்னும்படி எல்லாவற்றிலும் மேன்மையுற்றதும் பதினாறுயிரம் மனைவிகள் வாஸஞ் செய்யும் உப்பரிகைகள் அடங்கியதுமான தனது க்ருஹத்திற்குப் போனான். அப்பொழுது, நெடுநாள் தேசாந்தரம் சென்று மீண்டு வீட்டிற்குவந்த அன்பனைத் தூரத்திலேயே கண்டு ருக்மிணி முதலிய மனைவிகள் மனத்தில் மஹத்தான ஸந்தோஷம்

விளையப்பெற்றுக் கண்களில் வெட்கம் வழிந்த முகம் உடையவராகி [1]வ்ரதங்களினின்றும் ஆஸனத்தினின்றும் க்ருஷ்ணனையே சிந்தித்துக்கொண்டிருக்கும் மனக் கருத்தினின்றும் சீக்ரமாக எழுந்திருந்தார்கள். எல்லையில்லாத ஸ்னேஹம் நிறைந்த அம்மனைவிகள் தமது கணவன் வந்திருக்கக் கண்டு அவனைத் தமது புதல்வர்களாலும் கண்களாலும் மனத்தினாலும் ஆலிங்கனஞ் செய்தார்கள். ப்ருகுஶ்ரேஷ்டரே! வெட்கமுற்றிருக்கிற அம்மடந்தையர்மணிகள் கண்களினின்று பெருகி வருகின்ற நீரைத் தடுக்கினும் மன உறுதியில்லாமையால் அது நிற்காமல் பெருகி வழிந்தது. இந்த ஸ்ரீக்ருஷ்ணன் அம்மாதரசிகளின் பக்கத்திலிருந்தும் ஏகாந்தத்திலிருந்தும் தன்னை இஷ்டப்படி அனுபவிக்கும்படி கொடுத்தேயிருக்கின்றான்; ஆயினும் அவனுடைய பாதாரவிந்தங்கள் இரண்டும் அவர்களுக்குப் புதிதுபுதிதாகவே இருந்தன. ஆகையால் அவனது பாதாரவிந்தத்தினின்று எவள்தான் பிரிந்திருக்கப் பொறுப்பாள்? மற்ற எல்லா இடங்களிலும் மன நிலைமையில்லாமையால் காலூன்றப் பெறாமல் சஞ்சலையாயிருக்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியும் இவனுடைய பாதாரவிந்தங்களை எப்பொழுதும்விடாமல் அவற்றிலேயே ஊற்றமுற்றிருக்கின்றாள். அப்படிப்பட்ட பகவானுடைய பாதாரவிந்தங்களைஎவள் தான் விட்டிருக்கவல்லளாவாள்? இவன் இங்ஙனம் பூமிக்குப் பாரமான உற்பத்தி

---

I. வ்ரதங்களினின்று எழுந்திருக்கையாவது வ்ரதங்களைத் துறக்கையே. வ்ரதாநுஷ்டானம் க்ருஷ்ணனுடைய காக்ஷிக்காகவேயாகையால், அது நேரவே வ்ரதங்களைத் துறந்தார்கள். மனத்தினின்று எழுந்திருக்கையாவது சிந்தையைத் துறக்கையே. க்ருஷ்ணனைக்காணாமையாலுண்டாயிருந்த மனச்சிந்தை அவனைக் கண்டமையால் நீங்கிற்றென்று கருத்து.

யுடையவரும் அனேகம் அக்ஷௌஹிணிக் கணக்குடைய ஸைன்யங்கள் அமையப்பெற்றவராகையால் அளவில்லாத ஐஶ்வர்யமுடையவருமாகிய கௌரவராஜாக்களுக்கும் பாண்டவராஜாக்களுக்கும் ஒருவரோடொருவர்க்கு வைரத்தை வளர்த்தி, மூங்கில் புதரில் காற்று அக்னியை உண்டாக்கி அதை வளர்த்தி அம்மூங்கில் புதர் முழுவதையும் நாசஞ்செய்வதுபோல், தான் ஆயுதமெடாமலே அம்மன்னவர்கள் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு மாண்டு முடியும்படி செய்து தன் கருத்து நிறைவேறப் பெற்றான். அப்படிப்பட்ட பகவான் தனது ஸங்கல்பத்தினால் இந்த மனுஷ்யலோகத்தில் அவதரித்துச் சிறந்த மாதரார்மணிகளின் கூட்டத்தினிடையில் இருந்து ஸ்த்ரீலோலனான மற்றொரு அற்பன்போல் க்ரீடித்தான் (விளையாடினான்). எந்த மடந்தையர்மணிகள் தமது ஆழ்ந்த மனக்கருத்தை அறிவிப்பவைகளும் அமலங்களும் அழகாயிருப்பவைகளுமான புன்னகைகளாலும் வெட்கம்வழியப் பெற்று விளங்கும் கண்ணோக்கங்களாலும் மன்மதனையும் அடித்துத் தோற்பித்து மதிமயங்கச்செய்து அவன் தன் கையிலிருந்த வில்லையும் விட்டு விடும்படிசெய்தார்களோ அத்தகையரான மாதரசிகளும் தமது வஞ்சனங்களால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய மனத்தை இழுக்க வல்லமையற்றிருந்தார்கள். மனுஷ்யசேஷ்டைகளால் மனிதன்போல் நடித்துத்தனது உண்மையை மறைப்பவனும் வாஸ்தவத்தில் பற்றற்றவனாயினும் பற்றுடையவன்போல் தோற்றுகின்றவனுமாகிய அப்படிப்பட்ட இந்த பகவானை எவன் தன்னைப்போல் ஓர் மனிதனாகவும் அற்ப விஷயங்களில் மனப்பற்றுடையவனாகவும் நினைக்கின்றானோ, அவன் மிகுதியும் அறிவற்றமூடனேயாவான். மூலப்ரக்ருதியில் வ்யாபித்திருந்தும், அந்த ப்ரக்ருதியின் குணங்களாகிய

ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாலும் ஜீவனிடத்திலுள்ள [1] அவித்யை அஸ்மிதை ராகம் த்வேஷம் முதலிய குணங்களாலும் எப்பொழுதும் தீண்டப் பெறுமலிருக்கையே ஈஶ்வரனுக்குள்ள ஐஶ்வர்யமாகும். ஈஶ்வரனுடைய ஜ்ஞானம் எப்படி ஸத்வாதி குணங்களும் ராகாதி குணங்களும் தீண்டப் பெறுதிருக்குமோ, அங்ஙனமே அவனும் அவை தீண்டப்பெறுமல் பரிசுத்தனுயிருப்பான். ஸம்ஸாரிகளுக்கு இந்த்ரியங்களால் உண்டாகும் மதிகள் எப்படி ஈஶ்வரனை அறியுந்திறமையற்றிருப்பவைகளோ, மற்றும், மூடத்தனத்தினுல் விபரீதமாக அறியுந்தன்மை யுடையவைகளோ, அங்ஙனமே அறிவிலிகளான அம்மாதரசிகளும் அந்த பகவானை ஏகாந்தத்தில் ஸ்த்ரீகளின் கூட்டத்தை அனுஸரித்திருக்குந்தன்மையனென்றே நினைத்தார்கள். அவர்கள் தமது பர்த்தாவான அந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய ஸ்வரூபத்தை அறிந்தவரல்லர். ஆகையால் அவன் செய்யும் நடனத்தை உண்மையாகவே நினைத்து அவனை ஸ்த்ரீலோலனென்று ப்ரமித்தார்கள்

பதினென்றுவது அத்யாயம் முற்றிற்று.

---

### பரீக்ஷித்து மஹாராஜாவின் ஜனனம்.

ஶௌனகர் சொல்லுகிறுர்:—த்ரோண குமாரனுகிய அஶ்வத்தாமன் ப்ரயோகித்ததும் அளவற்ற ஒளியுடையதும் ப்ரஹ்மசிரஸ்ஸென்னும் பேருடையதுமாகிய அஸ்த்ரத்தினுல் உத்தரையின் கர்ப்பம் பாழ்செய்யப்பெற்றது. அப்பால் மீளவும் ஈஶ்வரனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த கர்ப்பத்தைப் பிழைப்பித்தானென்றீர். மஹானுபாவனுகிய அந்தப்பரீக்ஷித்து ஜனித்த விதத்தையும், அவன் நடத்தின செயல்களையும், அவன் மரணம் அடைந்த பின்பு

1. அவித்யை = அஜ்ஞானம் அஸ்மிதை = அஹம்பாவம்.

எந்த கதி பெற்றனே, அதையும் நீர் சொல்ல நினைப்பீரா யின், நான் கேட்கவிரும்புகின்றேன். எவனுக்கு சுகமுனிவர் பரமாத்மாவின் உண்மையை அறிவிக்கிற ஜ்ஞானத்தை உபதேசித்தாரோ, அப்படிப்பட்ட மஹாபாகவதனாகிய அந்தப் பரீக்ஷித்தின் ஜன்மாதி வ்ருத்தாந்தத்தைக் கேட்கவேண்டுமென்று பேராவலுற்றிருக்கிற எங்களுக்கு அதைச் சொல்வீராக.

ஸூதர் சொல்லுகிறார்:—தர்மராஜன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களைப் பணிதலால், உலகத்தவர் விரும்பத்தகுந்த காமங்களெல்லாவற்றிலும் விருப்பமற்றவனாகித் தமப்பனைப்போல் தானும் ப்ரஜைகளை மனக்களிப்புறச் செய்துகொண்டு ராஜ்ய பரிபாலனஞ்செய்து வந்தான். பசித்தவனுக்கு அன்னம்தவிர மற்றபூமாலை சந்தனம் தாம்பூலம் முதலியவையெல்லாம் எங்ஙனம் மனக்களிப்பை விளைக்கவல்லவையல்லவோ, அந்தணர் தலைவரே! அங்ஙனமே, ஸம்பத்துக்களும் (போக்யவஸ்துக்கள் போகத்திற்கு வேண்டிய கருவிகள் முதலியவற்றின் ஸம்ருத்திகளும்) ஸ்வர்க்காதி ஸுகங்களை விளைவிக்கிற அஸ்வமேத ராஜஸூயாதி யாகங்களும் கப்பம் கொடுக்கிற ஜனங்களும் பட்டமஹிஷிகளும் ஜயசீலர்களான பீமஸேனன் முதலிய உடன் தோன்றல்களும் சத்ருக்களின் உபத்ரவம் சிறிதுமில்லாத பூமியும் ஜம்பூத்வீபத்திற்கு அதிபதியாயிருத்தலும் ஸ்வர்க்கலோகம் வரையிலும் பரந்த பெரும்புகழும் ஆகிய இக்காமங்களெல்லாம் தேவதைகளுக்கும் ஆசைப்படத் தகுந்தவையாயினும் அத்தகைய இக்காமங்களெல்லாம் மோக்ஷங்கொடுக்கவல்ல ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே நிலைநின்ற மனமுடைய ராஜனாகிய யுதிஷ்டிரனுக்கு மனக்களிப்பை விளைவித்தனவா? விளைவிக்கவில்லை. ஓ ப்ருகுபுத்ரரே! வீரனாகிய அந்த

உத்தரையின் புதல்வன் மாதாவின் கர்ப்பத்திலிருக்கும் பொழுது ப்ரஹ்மாஸ்த்ரத்தின் தேஜஸ்ஸினால் தஹிக்கப் பட்டவனாகி அப்பொழுது ஓர் புருஷனைக்கண்டான். அப்புருஷன் அங்குஷ்டத்தின் அளவுடையவன்; தேஹத்தில் சிறிதும் அழுக்கில்லாதவன்; ஸ்வர்ணமயமான கிரீடம் அணிந்தவன்; பருத்தழகிய மேனியுடையவனாகை யால் ஆசைப்படத்தகுந்த காட்சியுடையவன்; நீலமேகம் போல் கறுத்த நிறமுடையவன், மின்னல்போன்ற பீதாம் பரம் உடுத்தவன்; தன்னைப் பற்றினாரை என்றும் கைவி டாதவன்; திரண்டுருண்டு அழகாகி நீண்டு முழந்தாள் வரையிலும் தொங்குகின்ற நான்கு பாஹு தண்டங்கள் அமைந்தவன்; உருக்கி அழுக்கெடுத்த அழகான பொன் னாற்செய்த குண்டலங்களை அணிந்தவன்; சிவந்து செந் தாமரை மலர்போன்ற கண்களையுடையவன்; கையில் கதை பிடித்தவன். இத்தகையனும் தன்னைச் சுற்றி நாற் றிசைகளிலும் சுழன்று வருகின்றவனும் நெருப்புத் துணுக்கைபோல் திகழ்கின்ற கதையைத் தனது நாற் புறங்களிலும் சுழற்றுகின்றவனும் தாரகனுமாகிய ஓர் புருஷனை அந்த உத்தரையின் குமாரன் கண்டான். ஸூர்யன் பனியைப் போக்குவதுபோல், தன் கதையால் ப்ரஹ்மாஸ்த்ரத்தின் தேஜஸ்ஸைப் பாழ் செய்கின்றவ னும் அருகில் இருப்பவனுமாகிய இத்தகைய புருஷனைக் கண்டு 'இவனார்' என்று பர்யாலோசனை செய்தான். ஆன துபற்றியே [1] பரீக்ஷித்தென்னும் பேர் பெற்றான். அளவி டமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களை யுடையவனும் தர்மத் தைக்காக்குந் தன்மையனும் வல்லவனும் தன்னைப்பற் றினாருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய அந்த பகவான் பத்தாவது மாதத்தில் கர்ப்பத்திலிருக்

1 பரீக்ஷிக்கை = பர்யாலோசனை செய்கை.

கும் அந்தச் சிசுவின்மேல் வந்த அந்த ப்ராஹ்மசிரஸ்ஸென்னும் அஸ்த்ரத்தைத் துரத்தி அந்தச்சிசு பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அவ்விடத்திலேயே மறைந்தான். அப்பால் குணங்களெல்லாம் அமைந்ததும் ஆனுகூல்யத்தோடு கூடின சுக்ரன் குரு முதலிய க்ருஹங்கள் உதிக்கப்பெற்றதுமான சுபலக்னத்தில் பாண்டுவின் வம்சத்தை வளரச்செய்பவனும் அந்தப் பாண்டுவே மீளவும் பிறந்தானோ என்னும்படி மிகுந்த ஒளியுடன் ப்ரகாசிப்பவனுமாகிய பரீக்ஷித்து பிறந்தான். அப்பால் ஸந்தோஷமுற்ற மனமுடைய யுதிஷ்டிரன், தௌம்யர் க்ருபர் முதலிய அந்தணர்களோடுகூடிச் சிறந்த மங்கள ஆசீர்வசனங்களைச் செய்வித்து ஜாதகர்மமென்னும் ஸம்ஸ்காரத்தை நடத்தினான். அனந்தரம் மன்னவர் தலைவனாகிய யுதிஷ்டிரன் ஸ்வர்ணம் பசு பூமி க்ராமம் யானை குதிரை முதலிய இஷ்டவஸ்துக்களையும் மற்றும் விரும்பத்தகுந்த மேலான பல வஸ்துக்களையும் அவரவர் மேன்மைக்கும் விருப்பங்களுக்கும் தகுந்தபடி விரும்புவோர்க்குக் கொடுத்தான். தானஞ் செய்யத்தகுந்த இடம் இன்னதென்றறிந்த அம்மன்னவன், பேரன் பிறந்தமைபற்றி அந்த ஸமயம் தானஞ் செய்யத்தகுந்த காலமென்றறிந்து அத்தருணத்தில் ப்ராஹ்மணர்களுக்குச் சிறந்த அன்னதானஞ் செய்தான். அங்ஙனம் ஸ்வர்ணாதிகள் தானஞ்செய்யப்பெற்று ஸந்தோஷமுற்ற அந்தணர்கள் வணக்கத்தினால் வணங்கின ராஜாவான யுதிஷ்டிரனைக் குறித்து இங்ஙனம் மொழியத் தொடங்கி 'பூருவின் வம்சத்தில் பிறந்த உங்களது ஸந்ததியின் அபிவ்ருத்திக்குக் காரணமாகிய கர்ப்பபிண்டம் நாசம் அடைகையில், எங்கும் தடையில்லாதவனும் தெய்வக் குழாங்களில் தலைவனும் எவ்வகையிலும் எங்கும் வல்லவனாயிருக்குந் தன்மையனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு உங்களி

டம் அனுக்ரஹத்தினால் இவனைப்பாதுகாத்தான். ஆகையால் இவன் [1] விஷ்ணுராதனென்னும் பேர்பூண்டு அந்தப் பேரினால் உலகமெங்கும் ப்ரஸித்தி பெற்றுப் பெரும் புகழுடையவனும் குணங்களால் மேன்மையுற்றவனும் மஹாபாகவதனுமா யிருப்பானென்பதில் ஸந்தேஹமே இல்லை' என்றார்கள். ப்ராஹ்மணர்கள் இங்ஙனம்மொழியக்கேட்ட யுதிஷ்டிரன், அவனுக்கு மேல்வரும் மேன்மைகளை அறிய விரும்பி அவ்வந்தணர்களை நோக்கி 'ஓ சிறப்புடைய அந்தணர்களே! இப்பொழுது பிறந்த இந்தச் சிசு ஸாதுக்களான பெரியோர்களிடம் ஜ்ஞானோபதேசம்பெற்று மஹானுபாவர்களும் பரிசுத்தமான புகழுடையோர்களுமாகிய பாண்டு முதலான எமது வம்சத்து ராஜரிஷிகளை யசஸ்ஸினால் அனுஸரித்திருப்பானா? பாண்டு முதலிய எமது பூர்விக அரசர்களைப்போல் இவன் புகழ் பெற்றிருப்பானா?' என்று வினவினான். இங்ஙனம் யுதிஷ்டிரனால் வினவப்பெற்ற அவ்வந்தணர்கள் அவனுடைய குணங்களை மொழிய முயன்று 'குந்தியின் குமாரனே! இவன், வைவஸ்வதமனுவின் புதல்வனாகிய இக்ஷ்வாகுவைப்போல் நேர்மையுடன் ப்ரஜைகளைப் பாதுகாத்து வருவான்; தசரத குமாரனாகிய ஸ்ரீராமன்போல் ப்ராஹ்மண குலத்திற்கு நன்மை செய்யுந் தன்மையனும் ஸத்யஸந்தனுமாயிருப்பான்; உசீனர சக்ரவர்த்தியின் புதல்வனாகிய சிபி சக்ரவர்த்தியைப்போல், எல்லையில்லாமல் தானஞ்செய்பவனும் தன்னைப் பற்றினார்களைக் காப்பதில் திண்மை யுடையவனுமாயிருப்பான்; துஷ்யந்தனுடைய புதல்வனான பரதன்போல் யாகஞ்செய்யுந் தன்மையரான தனது வம்சத்தரசர்களுடைய புகழை மேன்மே

---

1 விஷ்ணுராதன்=விஷ்ணுவினால் ரக்ஷிக்கப்பட்டவனென்று பொருள்.

லும் வளரச் செய்வான். மற்றும், இவன் வில்லாளி களில் சிறந்தவனுகிக் கார்த்தவீர்யார்ஜுனன் பாண்ட வார்ஜுனன் ஆகிய இவ்விருவரையும் நிகர்த்திருப்பான்; அக்னியைப்போல் பிறர்க்குப் பொறுக்கமுடியாதிருப் பான்; ஸமுத்ரம் போல் தாண்டமுடியாமல் ஆழ்ந்திருப் பான் (ஆழ்ந்த கருத்துடையவனுயிருப்பான்). மற்றும், இவன் ஸிம்ஹம்போல் பராக்ரமசாலியும் ஹிமாலயம் போல் ப்ராணிகளனைவரும் அடுத்துப் பிழைக்கத் தகுந் தவனும் பூமியைப்போல் பொறுமையுடையவனும் தாய் தந்தைகளைப்போல் ப்ரஜைகளின் அபராதங்களைக் கணி சியாதவனுமாயிருப்பான்; ஸமஸ்த பூதங்களிலும் பேதம் பாராட்டாமல் ஒத்திருக்குந் தன்மையில் ப்ரஹ்மதேவ னைப் போன்றவனும் ஞானத்தெளிவிலும் அருள் புரிவ திலும் ருத்ரனேடொத்தவனும் புருஷார்த்தங்களை விரும்புகிற ப்ராணிகள் அனைவரும் அடுக்கத் தகுந்த வனும் ஸ்ரீவிஷ்ணுதேவனைப்போல் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமுமாயிருப்பான்; தோஷஞ் சிறிதும் கலக் காமல் ஸகல நற்குணங்களுக்கும் இடமாயிருக்கையால் பெருமை அமைந்து ஸ்ரீ க்ருஷ்ணனைத் தொடர்ந்திருப் பான்; ரந்திதேவன்போல் மிகுதியும் தானசீலனும் யயா தியைப்போல் தர்மிஷ்டனுமாயிருப்பான். இவன் தைர் யத்தில் பலிசக்ரவர்த்தியைப் போன்றவனும், ப்ரஹ்லாத னைப்போல் க்ருஷ்ணனிடத்தில் சிறந்த பக்தியுடையவனு மாயிருப்பான். இவன் அளவில்லாத அஶ்வமேதயாகங் களைச் செய்பவனும் ஜ்ஞானத்திலும் வயதிலும் முதிர்ந்த பெரியோர்களைப் பணியுந் தன்மையனுமாயிருப் பான். மற்றும், இவன் ஜனமேஜயாதி ராஜரிஷிகளைப் படைப்பான். இவன் பூமியின் க்ஷேமத்திற்காகவும் தர் மத்தை நிலைநிறுத்துவதற்காகவும், தர்மமார்க்கத்தைக்

கடக்குந் தன்மையரை தண்டிப்பவனுகிக் கலியை நிக்ர ஹிப்பான். ப்ராஹ்மண குமாரனுடைய சாபத்தினுல் தூண்டப்பெற்ற தக்ஷகனிடத்தினின்று தனக்கு மரணம் நேருவதைக் கேட்டு தேஹத்திலும் அதைத் தொடர்ந்த பந்துக்களிடத்திலும் பற்றற்றவனுகி இவன் ஸ்ரீ விஷ்ணுவின் ஸ்தானத்தைப் பெறுவான். இவன் வ்யாஸ மஹர்ஷியின் புதல்வராகிய சுகமுனிவரிடத்தில் ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூப ஸ்வபாவங்களை விசாரித்து உள்ளபடி அறிந்து தேஹத்திலும் அதைத் தொடர்ந்தவரிடத்தி லும் பற்றற்று, மன்னவனே! இந்த ஶரீரத்தைக் கங்கை யின் கரையில் துறந்து எவ்விதத்திலும் பயமில்லாத விஷ்ணுவின் ஸ்தானத்திற்குப்போய்ச்சேரப்போகிருன். இது நிச்சயம்' என்றூர்கள். இங்ஙனம் ராஜனுகிய யுதிஷ் டிரனுக்கு அந்தப் பரீக்ஷித்தின் குணம் செயல் முதலிய வற்றை அறிவித்து ஜாதகனைப்பற்றி வரும் விசேஷங் களையெல்லாம் அறிவிக்கும் ஜ்யோதிஶ ஶாஸ்த்ரத்தில் நிபுணராகிய அவ்வந்தணர்கள் அனைவரும் அம்மன்னவ னிடம் வெகுமதி பெற்றுத் தந்தமது க்ருஹங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்ஙனம் அந்தணர்களால் மேல்வருங் குணங்களெல்லாங் கூறப்பெற்ற இந்த உத்த ரையின் புதல்வன் பரீக்ஷித்தென்று உலகத்தில் புகழ் பெற்றுன். ஏனென்னில்—ப்ரபுவாகிய (திறமையெல்லாம் அமைந்த) இவன் தாய்வயிற்றிலிருக்கும்பொழுது கண்ட பரமபுருஷனை த்யானஞ்செய்துகொண்டு இவ்வுலகத்தில் மனிதர்களுக்குள் அந்தப் பரம புருஷனைத் தேடினுன். அங்ஙனம் தேடிப்பார்த்து ஸ்ரீக்ருஷ்ணனே அந்தப் பரம புருஷனென்று நிச்சயித்தான். ஆகையால் இவன் [1] பரீ க்ஷித்தென்று உலகமெங்கும் புகழ்பெற்றுன். அங்ஙனம்

---

1 தான் கண்ட புருஷன் எவனுயிருப்பானென்று பரீக்ஷித்துப் பார்த்தானுகையால் பரீக்ஷித்தென்னும் பேர்பெற்றுனென்றுகருத்து.

புகழ்பெற்ற அம்மன்னவர் புதல்வன் (அந்த ராஜகுமாரன்) சுக்லபக்ஷத்தில் தினந்தோறும் வளர்ந்து வருகின்ற கலைகளுடன் சந்த்ரன் வளர்வதுபோல், தினந்தோறும் தந்தைகளால் வளர்க்கப்பெற்று வளர்ந்து வந்தான். இப்படியிருக்கையில், மன்னவனுன தர்மபுத்ரன் ஜ்ஞாதிகளுக்கு த்ரோஹஞ் செய்தமையால் வந்த பாபத்தைப் போக்க விரும்பி அஶ்வமேதயாகஞ் செய்து பகவானை ஆராதிக்க முயன்று, ப்ரஜைகளிடம் கப்பம் வாங்குவது ப்ரஜைகளைத் தண்டித்துப் பணம் வாங்குவது ஆகிய இவ்விரண்டு வழிகள் தவிர மற்ற எவ்விதத்திலும் அந்த யாகத்திற்குப் போதுமான தனம் நேரப் பெருதவனுகி 'ப்ரஜைகளிடத்தில் கப்பம் வாங்குவதால் வருந்தனமும், ப்ரஜைகளைத் தண்டித்து வாங்குந் தனமும் யாகத்திற்கு உபயோகப்படாது. வேறு உபாயத்தினுலும் நான் தனத்தை ஸம்பாதிக்கவில்லை. ஆகையால் எங்ஙனம் யாகஞ் செய்வேன்' என்று சிந்தையில் ஆழ்ந்தான். அந்த யுதிஷ்டிரனுடைய அபிப்ராயத்தைக் கண்டு பீமன் முதலிய அவனது உடன் பிறந்தவர்கள் அச்சுதனுல் தூண்டப்பட்டவராகி வடதிசையில் ராஜாக்களை ஜயித்து அவரிடத்தினின்று தனத்தை அபாரமாகக் கொண்டுவந்தார்கள். யுதிஷ்டிரன் அந்த தனத்தினுல் யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களையெல்லாம் ஸித்தப்படுத்திக் கொண்டு மனவிருப்பங் கைகூடப் பெற்று மந்த்ரம் தந்த்ரம் த்ரவ்யம் ஆகிய இவற்றின் லோபத்தினின்று பயந்து எவ்வகைக்கெடுதியும் நேராதபடி மூன்று அஶ்வமேதயாகங்கள் செய்து ஸ்ரீவிஷ்ணுவை ஆராதித்தான். ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்த ஸ்ரீக்ருஷ்ணனும் அம்மன்னவனுல் அழைக்கப்பெற்று அந்தணர்களைக் கொண்டு யுதிஷ்டிரனுல் யாகஞ் செய்வித்து நண்பர்களுக்கு ப்ரீதி

யை விளக்க விரும்பி அங்குச் சில மாதங்கள் வாஸஞ் செய்தான். அப்பால் பந்துக்களோடு கூடின யுதிஷ்டிரனும் த்ரௌபதியும் அனுமதி கொடுக்கப் பெற்று அர்ஜுனனேடு கூடி யாதவர்கள் சூழ்ந்து வரப்பெற்று, ஓ அந்தணர் தலைவரே! ஸ்ரீக்ருஷ்ணன் த்வாரவதிக்குட் போனான். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

விதுரன் ஹஸ்தினபுரத்திற்கு வருதல்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஓ சௌனகரே! குரு பாண்டவ யுத்தத்திற்கு முன்னமே ஆலோசனைக்காக த்ருதராஷ்ட்ரன் அழைக்கவும் அவன் பிள்ளை துர்யோதனன் பரிபவிக்கவும் பெற்ற விதுரன் தீர்த்தயாத்ரையை உத்தேசித்துப்போனான். அவன் அறிஞராகிய மைத்ரேய மஹர்ஷியினிடம் பரமாத்மாவின் உண்மையை அறிந்து அந்த ஆத்மஜ்ஞானத்தினால் செய்யவேண்டிய கார்யங்களெல்லாம் நிறைவேறப் பெற்றவனும் அறிய வேண்டியவை அனைத்தும் தெரியப்பெற்றவனுமாகி மீண்டு ஹஸ்தினபுரத்திற்கு வந்தான். விதுரன் குஷாரவகோத்ரத்தில் பிறந்த மைத்ரேய மஹர்ஷியின் முன்னிலையில் எத்தனை கேள்விகள் கேட்டானே, அவற்றில் சில கேள்விகளுக்கு மறுமொழி நேரப்பெற்ற மாத்ரத்திலேயே கோவிந்தனிடத்தில் மாறாத பக்தி உண்டாகப் பெற்றவனாகி மற்றைக் கேள்விகளுக்கு மறுமொழியை எதிர்பாராமலே அவ்வளவில் ப்ரயோஜனம் கைகூடப் பெற்றுத் திரும்பினான். பந்துவாகிய அவ்விதுரன் அங்ஙனம் திரும்பிவந்தானென்று தெரிந்து தர்மபுத்ரனும் அவன் தம்பிகள் பீமசேனாதிகளும் த்ருதராஷ்ட்ரன் யுயுத்ஸு ஸஞ்ஜயர் க்ருபாசார்யர் குந்தி காந்தாரி

த்ரௌபதி ஸுபத்ரை க்ருபி ஆகிய இவர்களும் மற்றை அந்தப்புர ஸ்த்ரீகளும் அவரது புதல்வர்களும், சரீரங்கள், போய்வந்த ப்ராணனை எதிர்பார்ப்பதுபோல் அவ் விதுரனைக் கிட்டி அணைப்பது நமஸ்கரிப்பது ஆகிய இவற்றை விதிப்படி நடத்தி நெடுநாள் பிரிந்திருந்தமையால், 'எப்பொழுது பார்க்க நேருமோ' என்னும் பேராவலால் மனங்கலங்கப் பெற்றிருந்தமையால் அவனைக் கண்டவுடனே ஆநந்தத்தினுல் கண்ணீர்களை வெள்ளம் வெள்ளமாகப் பெருக்கினுர்கள். அவ் விதுரனுக்கு ராஜாவான யுதிஷ்டிரன் ஓராஸனங் கொடுத்து, அவன் அதில் உட்கார்ந்திருக்கக்கண்டு அவனைப் பூஜித்தான். அனந்தரம் போஜனஞ்செய்து இளைப்பாறி ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற அவ் விதுரனைப்பார்த்து பந்துக்களெல்லோரும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது யுதிஷ்டிரன் இங்ஙனம் மொழிந்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறுன் :—உமது அனுக்ரஹமாகிற சிறகுகளின் நீழலில் வளர்ந்த எங்களைப்பற்றி உமக்கு ஜ்ஞாபகம் இருக்கிறதா? எங்களை மறக்காதிருக்கிறீரா? எங்கள் தாயும் நாங்களும் விஷம் அக்னி முதலிய பலவகை ஆபத்துக்களினின்று விடுபட்டு உம்மால் பாதுகாக்கப் பெற்ருேமல்லவா? நீர் இந்த பூமண்டலத்தைச் சுற்றும்பொழுது எந்த வ்ருத்தியைக்கொண்டு காலங்கடத்தினீர்? எந்தெந்தப் புண்யதீர்த்தங்களுக்கும் பகவானுடைய ஸந்நிதானம் மாருதிருக்கப்பெற்ற எந்தெந்த திவ்ய க்ஷேத்திரங்களுக்கும் போயிருந்தீர்? எல்லாமறியவல்லவரே! உம்மைப்போன்ற பாகவதர் (பகவானிடத்தில் பக்தியுடையவர்) தாமே பரிசுத்தராயிருக்குந் தன்மையர். தீர்த்தயாத்ரையால் வரும் தூய்மையை நீங்கள் எதிர்பார்க்கவேண்டிய அவஶ்யமில்லை. 'ஆனுல் அவர்கள் தீர்த்தயாத்ரை எதுக்காகச் செய்கிறுர்கள்?' என்னில், அவர்கள் தமது மனத்தில் நித்ய

வாஸஞ் செய்கிற பகவானால் புண்ய தீர்த்தங்களையும் பரிசுத்தமாக்குவதற்காக அவ்வவ்விடங்களில் திரிகின்றார்களன்றி வேறில்லை. இயற்கையில் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களில் பாபிஷ்டர்கள் ஸ்னானஞ் செய்து கழித்துப்போன பாபங்களைப் போக்கி அவற்றையும் இவர்கள் பரிசுத்தஞ் செய்கிறார்கள். அதனால் தமக்கு வரும் பாபங்களையோ வென்னில், தமக்கு அந்தராத்மாவாயிருக்கும் கதாதரனான பரமபுருஷனுடைய த்யானத்தினால் போக்கிக் கொள்ளுகிறார்கள். அந்தப் பரமபுருஷன் பாபங்களுக்கு எதிர்த்தட்டாயிருப்பவனாகையால் அவனிடத்தில் பாபங்கள் ஸம்பந்திப்பதற்கு ப்ரஸக்தியே இல்லை. அப்பனே! ஸ்ரீக்ருஷ்ணனையே தேவதையாகவுடைய நமது நண்பர்களும் பந்துக்களுமாகிய யதுக்களைக் கண்டீரோ? அல்லது, அவர்கள் தமது பட்டணமாகிய த்வாரகையில் க்ஷேமமா யிருக்கிறார்களென்று கேள்விப்பட்டீரோ?' என்றான். இங்ஙனம் தர்மராஜனால் வினவப்பெற்ற அவ்விதுரன் யதுகுலம் பாழானமை தவிர மற்றெல்லாவற்றையும் தான் பார்த்ததைப் பார்த்தபடியும் கேட்டதைக் கேட்டபடியும் அவர்களுக்கு முறையே மொழிந்தான். 'யதுகுலம் பாழான ஸங்கதியை மாத்திரம் ஏன் சொல்லவில்லை' என்கிறீரோ? ஓ மௌனகரே! சொல்லுகிறேன் கேளும். அது ஸஹிக்கமுடியாதது; மற்றும், தானே வரப்போகிறது; மனத்திற்கு அப்ரியமான விஷயம். அப்படிப்பட்ட அந்த யதுகுல க்ஷயத்தை அவன் மொழியாதிருந்தான். அவ்விதுரனோவென்னில், மிகுந்த மன இரக்கமுடையவன். அந்த ஸங்கதியைச் சொல்லின் இவர்களெல்லோரும் அந்த அனிஷ்டத்தைப் பொறுக்க முடியாமல் துக்கிப்பார்கள். இவன் அதைப் பார்த்துப் பொறுக்குந் திறமையுடைய

வனல்லன். ஆகையால் அந்த ஸங்கதியை அவர்களுக்குச் சொல்லாமலே மறைத்துவிட்டான். அனந்தரம் அவ்விதுரன் தேவனைப்போல் வெகுமதி செய்யப்பெற்று ஜ்யேஷ்ட ப்ராதாவான த்ருதராஷ்ட்ரனுக்கு நன்மைகளைச் செய்பவனும் தர்மபுத்ரன் முதலிய மற்ற அனைவர்க்கும் ப்ரீதியை விளைப்பவனுமாகி அங்குச் சிலகாலம் ஸுகமாக வஸித்திருந்தான். மாண்டவ்யருடைய சாபத்தினால் யமன் எவ்வளவு காலம் இப்பூமியில் விதுரனென்னும் சூத்ரனாகப் பிறந்திருந்தானோ, அந்த நூறு வர்ஷங்களும், ஸூர்யன், பாபஞ் செய்தவர்க்கு அவரவருடைய பாபத்திற்குத் தகுந்தபடி தண்டனை செய்வித்துக் கொண்டிருந்தான். இப்படி யமனே விதுரனாகப் பிறந்தானாகையால் அவன் ப்ராணிகளின் ஆயுள் முடிவு முதலிய கதியெல்லாமறியுந் திறமையுடையவன். ஆனதுபற்றி த்ருதராஷ்ட்ரனுக்கு மரணகாலத்தை அறிவித்து மோக்ஷ உபாயத்தை உபதேசித்து நன்மை செய்தான். அக்காலம், யுதிஷ்டிரன் ராஜ்யம் பெற்றுக் குலத்தை நிர்வஹிக்குந் திறமை அமைந்த பேரனாகிய பரீக்ஷித்துப் பிறக்கக் கண்டு, இந்த்ராதி லோகபாலர்களை நிகர்த்த ஸஹோதரர்களோடு கூடிப் பெருஞ் செல்வத்துடன் ஸந்தோஷ முற்றிருந்தான். எல்லாவற்றையும் தனக்கு ஸ்வாதீனமாக்குந் தன்மையதும் ஆனதுபற்றியே எத்தகையனுக்குங் கடக்க முடியாததுமான காலமானது பிள்ளை பெண்டிர் முதலிய க்ருஹஸ்த ஸுகங்களில் மனஞ் செல்லப்பெற்றவரும் அதைச்சேர்ந்த வ்யாபாரத்தினால் மனவூக்கமற்று மரணகாலம் வருமென்பதையும் அறியாமல் திரிகின்றவருமாகிய ப்ராணிகளுக்குத் தெரியாமலே கடந்தது. யுதிஷ்டிராதிகளுக்கு விஷய ஸுகங்களை அனுபவிக்குங் காலங் கடந்துசென்றது. அப்போது

விதுரன் த்ருதராஷ்ட்ரனைப்பார்த்து 'ராஜனே! இவ்விடத்தினின்று சீக்ரம் நீர் புறப்படுவீராக. நமக்கு ஸமீபித்து வந்திருக்கிற இந்த பயத்தை ஆலோசிப்பீராக. எவ்வகைக்காரணத்தினாலும் எப்பொழுதும் எதற்குத் தடைசெய்ய முடியாதோ அப்படிப்பட்டதும் பகவானுடைய ஆஜ்ஞையின்படி மாறுமல் நடப்பதுமாகிய மரணகாலம் நம்மெல்லோருக்கும் இதோ சமீபித்து வந்திருக்கின்றது. இதோ புலப்படுகிற ஜந்துவெல்லாம் மரணகாலம் ஸமீபித்து வரப்பெறின் மிகுதியும் ப்ரீதிக்கிடமாகிய ப்ராணன்களும் விட்டுப் பிரிந்து போகப்பெறுமென்றால், ப்ராணனைத்தொடர்ந்த மற்ற தனுதிகளினின்று விடுபடுமென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அப்படிப்பட்ட காலம் நமக்கு இப்பொழுது அருகாமையில் வந்திருக்கின்றது. உமது தந்தை உடன்தோன்றல் நண்பர் புதல்வர் ஆகிய இவ்வனைவரும் மரணம் அடைந்தார்கள். யௌவன வயதும் போயிற்று. சரீரமும் கிழத்தனம் மூடப்பெற்றது. ஆயினும் ஜீவனத்திற்காகச் சத்ருவின் க்ருஹத்தை அடுத்திருக்கின்றீர். ஆ! என்ன ஆச்சர்யம்! ஜந்துக்களுக்கு ஜீவித்திருக்கவேண்டுமென்னும் விருப்பம் மேன்மேலும் எல்லையில்லாமல் வளர்ந்து வருந்தன்மையது. நீர் அந்த ஆசையாலல்லவோ, பீமன் அவமதித்துக்கொடுக்கிற பிண்டத்தை வாங்கிப்புசித்து வீட்டைக் காக்கும் நாய்போல் விழுந்திருக்கிறீர். இந்த பீமாதிகளை வதிக்கும் பொருட்டு இவர் இருந்த அரக்குமாளிகையில் நெருப்பை இட்டீர்கள்; இவர்களுக்கு விஷங்கொடுத்தீர்கள்; இவருடைய பத்னியாகிய த்ரௌபதியைத் தலைமயிர்களைப் பிடித்திழுப்பது வஸ்த்ராபஹாரஞ்செய்வது முதலியவற்றால் அவமதித்தீர்கள். இவர்களுடைய தனத்தையும் ராஜ்யத்தையும் பறித்துக்கொண்

டர்கள். இவையெல்லாம் நீரே செய்வித்தீர். இவரு டைய பிண்டத்தைப் புசித்து ஜீவிக்கிறீராகையால்இவர் கள் கொடுத்தவை போன்ற இந்த ப்ராணங்களால் என்ன ப்ரயோஜனம்? இது மிகவும் ஹீனப்பிழைப்பே. இங்ஙனம் சத்ருக்களின் பிண்டத்தைத் தின்று அவர் கொடுத்த ப்ராணன்களையுடையவரும் இன்னம் பிழைத் திருக்கவேண்டுமென்னும் விருப்பம் மாறுதிருக்கப் பெற் றவரும் தேஹத்தை விட விரும்பாதவருமாகிய உம்மு டைய தேஹம் கிழிந்த வஸ்த்ரங்கள்போல் கிழத்தன் மையால் தளர்ந்து தொலையப் போகிறதேயன்றி இப்ப டியே இருக்கப்போகிறதில்லை. தனக்கு வேண்டிய புரு ஷார்த்தங்களெவற்றையும் நிறைவேற்றிக் கொடுக்குந் திறமையற்றதாகிய இந்த தேஹத்தை, அதில் மன விருப்பமின்றி ஸம்ஸாரபந்தத்தை விளைவிக்கிற புண்ய பாபங்களெல்லாவற்றையும் தொலைத்துத் தனது ஜ்ஞா திகளுக்குத் தெரியாதபடி எவன் விடுகிருனோ, அவனே தீரனென்று (யோகியென்று) கூறப்படுவான். மற்றும், எவன் தன் புத்தியாலாவது பிறனுடைய உபதேசத்தி னுலாவது இந்த ஸம்ஸாரத்தில் வைராக்யம் உண்டாகப் பெற்று இந்த்ரியங்களை ஜயித்துத் தன்னைப்பற்றினுரு டைய ஸம்ஸார பந்தத்தைப்போக்கும் தன்மையுள்ள பகவானை மனத்தில் நிலை நிறுத்திக்கொண்டு பிள்ளை பெண்டிர்முதலிய க்ருஹத்தைத் துறந்து போவானே, அந்தப்புருஷனே மனிதர்களில் சிறந்தவனுவான். ஆகையால் உமது ஜ்ஞாதிகளுக்கு உமது கதி சிறிதுந் தெரியாதபடி நீர் வடதிசையை நோக்கிச் செல்வீராக. இதற்குப் பின்புள்ள காலமெல்லாம் பெரும்பாலும் புருஷர்களின் சமாதி குணங்களை அழிக்குந் தன்மை யதே. இனிமேல் வருங்காலம் கலிகாலமே. அது புருஷர்களின் குணங்களையெல்லாம் அழியமாற்றி

விடும். ஆகையால் இனி நீர் இங்கிருப்பது ஸரியன்று. நான் சொன்னபடி புறப்பட்டுப்போவதே நலம்' என்று மொழிந்தான். அஜமீட வம்சத்தில் பிறந்தவனும் புத்தியே கண்ணாகப்பெற்றவனும் (குருடனாயினும் கண் ஸ்தானத்திலுள்ள புத்தியால் எல்லாவற்றையும் நேரே பார்த்தாற்போல் அறியுந் தன்மையனும்) தம்பியாகிய விதுரனால் உபதேசஞ்செய்யப்பட்டவனும் அரசனுமாகிய த்ருதராஷ்ட்ரன் ப்ராதாவான அவ்விதுரனால் தான் போகவேண்டிய தேசத்தின் வழி காட்டிக் கொடுக்கப்பெற்று தேஹத்திலும் அதைத்தொடர்ந்த பந்துக்களிடத்திலும் திடமாக ஊன்றியிருந்த ஸ்னேஹங்களாகிற பாசங்களையெல்லாம் அறுத்துக்கொண்டு க்ருஹத்தினின்று வெளிக் கிளம்பிப் போனான். ஸுபலனுடைய புதல்வியும் பதிவ்ரதையும் நல்லியற்கை யுடையவளுமாகிய காந்தாரியும், எவர்க்கும் எவ்வகைக் கெடுதியுஞ் செய்யாது ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நண்பர்களான யோகிகளுக்கு மிகுந்த ஸந்தோஷம் விளைப்பதாகிய ஹிமாலயத்தைக் குறித்துப்போகின்ற தன் கணவனைப் பின்சென்றாள். அந்த த்ருதராஷ்ட்ரன் அங்ஙனம் புறப்பட்டுப்போனது விவேகிகளைத் தட்டி யெழுப்புவதுபோலிருந்தது. அனந்தரம் தர்மபுத்ரன் அக்னி ஹோமங்களை முடித்து எள்ளு பசு பூமி ஸ்வர்ணம் ஆகிய இவற்றால் ப்ராஹ்மணர்களை ஸத்கரித்து நமஸ்கரித்துத் தாய் தந்தைகளிடத்தில் ப்ரீதி அழியாதிருக்கப் பெற்றவனாகையால் தாய் தந்தைகளான காந்தாரி த்ருதராஷ்ட்ரர்களை வந்தனஞ்செய்ய விரும்பி அந்தக்ருஹத்திற்குள் சென்று தந்தைகளான த்ருதராஷ்ட்ரன் விதுரன் ஆகிய இவர்களையும் தாயான காந்தாரியையும் காணப்பெறாமல் திகைத்து நின்றான். அப்பால் தாய் தந்தைகளைக் காணாமையால் பயந்த மனமுடைய அவ்

அஜாதசத்ரு அங்கு உட்கார்ந்திருக்கும் ஸஞ்ஜயனைப் பார்த்து 'ஓ காவல்கணி! (ஸஞ்சய!) நந்தந்தை கண்ணில்லாதவர், வயது சென்றவர். அத்தகையரான அவர் இப்பொழுது எங்குப் போனார்? பிள்ளைகளெல்லோரும் மாளப்பெற்று வருந்துகின்ற தாயான காந்தாரியும் எங்குப் போனாள்? அங்ஙனம், நம்சிற்றப்பனும் நண்பனுமாகிய விதுரர் எங்கே போனார்? என்னால் தன் பந்துக்களான புத்ரர்களெல்லோரும் வதிக்கப்பெற்றவரும் துக்கமுற்றவருமாகிய த்ருதராஷ்டரர் விவேகமற்ற என்னிடத்தில் தோஷத்தைச் சிந்தித்து ஒருக்கால் கங்கையில் போய் விழுந்தாரா என்ன? எமது தந்தையாகிய பாண்டு மரணம் அடைந்திருக்கும்பொழுது நண்பர்களும் புதல்வர்களுமாகிய நம்மெல்லோரையும் பாதுகாத்தார்களே. அத்தகையரும் நந்தந்தையின் உடன்தோன்றல்களுமான த்ருதராஷ்ட்ர விதுரர்களிருவரும் இவ்விடத்தை விட்டு எங்குப் போனார்கள்?' என்று வினவினான். இங்ஙனஞ் சொல்லப்பெற்ற ஸஞ்ஜயன் தன் ப்ரபுவாகிய த்ருதராஷ்ட்ரனைக் காணாமையால் மிகுதியும் வருந்தி அவனைப் பிரிந்தமையால் அந்த க்ஷணத்திற்குள்ளேயே இளைத்து தயையினாலும் ஸ்னேஹத்தினாலுண்டாகுந் தழுதழுப்பினாலும் மறுமொழி கூற வல்லமையற்றிருந்தான். அப்பால் மெதுவாகக் கைகளால் கண்ணீர்களைத் துடைத்து விவேக புத்தியால் மனத்தை நிலைப்படுத்திக்கொண்டு ப்ரபுவான த்ருதராஷ்ட்ரனுடைய பாதங்களை நினைத்துக்கொண்டு அஜாதசத்ருவைப் பார்த்து ஸஞ்ஜயன் மொழிந்தான். 'குருகுல குமாரனே! தர்மபுத்ர! உனது தாய் தந்தைகளாகிய த்ருதராஷ்ட்ரன் விதுரன் காந்தாரி ஆகிய இவர்களுடைய மனக்கருத்தை நான் அறியேன். மஹாபாஹோ! உன்னைப்போல் நானும் மஹானுபாவர்களான அவர்களால்

வஞ்சிக்கப்பெற்றேன்' என்றான். அப்பால் அதே ஸமயத்தில் ஜ்ஞாநாதி குணங்களெல்லாம் அமைந்த நாரதர் தும்புருவுடன் அவ்விடம் வந்தார். அவரைப் பார்த்து யுதிஷ்டிரன் தம்பிகளும் தானுமாய் எழுந்து எதிர்கொண்டு வந்தனஞ்செய்து பூஜித்து இங்ஙனம் மொழிந்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—பகவானே! எமது தந்தைகள் போனபோக்கை நான் அறியேன். அவர்கள் இவ்விடத்தினின்று எங்குப் போனார்கள்? அங்ஙனமே, பிள்ளைகளைப் பறிகொடுத்து வருந்தும் பதிவ்ரதையான எங்கள் தாய் காந்தாரியும் எங்குப் போனாளோ தெரியவில்லை. தந்தைகளைப் பிரிந்த துயரமாகிற ஸாகரத்தில் மூழ்கிக்கிடக்கிற எங்களுக்கு நீர் தெய்வாதீனமாய்த் தென்பட்டீர். உம்மைப் பார்த்த மாத்ரத்தினால் எங்கள் வ்யஸனம் தீர்ந்தது. மேல் ஆநந்தமும் நேருமென்று பாவிக்கிறேன். கரையற்ற பேராழியில் மூழ்கினவர்களுக்கு ஓடம் நடத்துகிற கர்ணதாரன்போல் துக்கஸாகரத்தில் மூழ்கின எங்களுக்கு நீர் தர்சனங் கொடுத்தீர். ஆகையால் நீர் என் தாய் தந்தைகள் போன போக்கைச் சொல்வீராக' என்றான். மௌனகரே! இங்ஙனம் தர்மபுத்ரன் வினவுகையில், தேவரிஷியும் முனிவர்களில் (பகவானுடைய குணங்களை மனனஞ்செய்யுந் தன்மையரில்) சிறந்தவரும் ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்தவருமாகிய அந்நாரதர் அவனுக்கு இங்ஙனம் மொழிந்தார். 'ராஜனே! எந்தச் சரீரத்தைப் பற்றியாவது சரீரத்தைத் தொடர்ந்த மற்றெவனைப்பற்றியாவது நீ சோகிக்கவேண்டிய அவச்யமில்லை. ஏனென்னில்—இந்த ஜகத்தெல்லாம் கர்மங்களுக்குத் தகுந்தபடி பலன்களைக் கொடுக்கமுயன்ற ஈச்வரனுக்கு உட்பட்டது. இந்த்ராதிலோகபாலர்களோடு கூடின இவ்வுலகங்க

ளெல்லாம் (ப்ரஹ்மதேவன் முதல் பூச்சிப்புழுவரையி லுள்ள ஸகல ஜனங்களும்) அந்த ஈச்வரனுக்குப் பணி விடை செய்யுந் தன்மையிலிருப்பவை. (ப்ராணிகளை ஒன்றோடொன்று சேர்ப்பிக்கிறவனும் அவனே; பிரிக்கிற வனும் அவனே.) பிணைக்கயிற்றில் பூட்டுக்கயிறுகளால் கட்டுண்டவைகளும் (மூக்கில் கயிறு கோக்கப்பெற்ற தலைக்கயிறுகளால் கட்டுண்டவைகளும்) ஆகிய நாற்கால் ஜந்துக்கள் இருகால் ஜீவனுக்குப் பணி செய்வதுபோல், வேதமாகிற பிணைக்கயிற்றில் வர்ணாச்ரம விசேஷங் களைத் தொடர்ந்த நாமங்களால் கட்டுண்ட உலகங்க ளெல்லாம் ஈச்வரனுக்குப் பணிவிடை செய்யுந்தன்மை யில் இருக்கின்றன. இவ்வுலகத்தில் விளையாட வேண்டு மென்னும் விருப்பமுடைய புருஷனது இச்சையின்படி விளையாட்டின் கருவிகளுக்குச் சேர்த்தியும் பிரிவும் எப் படி உண்டாகின்றனவோ, அங்ஙனமே ஈச்வரனுடைய இச்சையின்படி மனிதர்களுக்குச் சேர்த்தியும் பிரிவும் உண்டாகும். விளையாட்டில் விருப்பமுடைய புருஷனு டைய இச்சையின்படி விளையாட்டின் கருவிகளான வஸ்துக்கள் எப்படி ஒன்றோடொன்று சேருவதும் பிரி வதுமாயிருக்குமோ, அங்ஙனமே ஈச்வரனுடைய விளை யாட்டுக் கருவிகளான உலகங்களெல்லாம் அவனது இச் சையின்படி சேருவதும் பிரிவதுமாயிருக்கும். நீ உல கத்தை நிலைநின்றதென்று நினைக்கிறாயா? அல்லது, நிலையற்றதென்று நினைக்கிறாயா? நிலை நின்றதும் நிலை யற்றதுமாகி இரண்டு தன்மையுமுடையதாயிருக்கு மென்று நினைக்கவோ இடமில்லை. ஒரே வஸ்துவுக்கு ஒன்றோடொன்று பொருந்தாத இரண்டு தன்மைகள் உண்டென்பதை நாம் பார்த்ததில்லை; கேட்டதுமில்லை. அப்படி இருந்தாலும் எவ்வகையிலும் அந்த தேஹாதி களைப்பற்றி நாம் சோகிக்கவேண்டிய அவச்யமில்லை. ஒரு

வஸ்துவுக்கு இயற்கையில் ஏற்பட்ட தர்மத்தை எவனும் போக்கடிக்கமுடியாது. இப்படியிருக்கையில், அங்ஙனம் அவரவர் சோகிப்பதற்குக் காரணம் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமத்தினால் தேஹாதிகளில் விளையும் ஸ்னேஹமே யொழிய மற்றொன்று மன்று. ஓ ராஜனே! ஆகையால் தேஹத்தை ஆத்மாவாக ப்ரமிப்பதற்குக் காரணமான அஜ்ஞானத்தினால் உன் மனத்தில் உண்டாயிருக்கும் தழுதழுப்பைத் துறப்பாயாக. 'நான் இல்லாமல் நாதனற்றவராகி, தீனர்களாயிருக்கிற அவர்கள் எங்ஙனம் ஜீவிப்பார்கள்?' என்று வினவுகிறாயோ; சொல்லுகிறேன், கேள். ஆகாயம் பூமி முதலிய பஞ்ச பூதங்களால் இயற்றப்பெற்ற இந்த தேஹமானது காலம் அத்ருஷ்டம் ஸத்வாதி குணங்கள் ஆகிய இவற்றின் கட்டளைக்கு உட்பட்டிருக்கும். இத்தகைய தேஹமுடைய ஒருவன் இத்தகையனான மற்றொருவனை எங்ஙனம் ரக்ஷிக்கவல்லனாவான்? தான் ஸர்ப்பத்தினிடம் அகப்பட்ட ஒருவன் அங்ஙனமே ஸர்ப்பத்தினிடம் அகப்பட்ட மற்றவர்களை எங்ஙனம் பாதுகாக்க வல்லனன்றோ, அங்ஙனமே தன்தேஹம் தனக்கு ஸ்வாதீனமற்றிருக்கப் பெற்ற ஒருவன் அத்தகைய மற்றொருவனை எங்ஙனம் காக்க வல்லனாவான்? கையில்லாத பூதங்கள் (ஓஷதிகள் காய் கிழங்கு பசுக்கள் ம்ருகங்கள் முதலியவை) கையுள்ள ஜந்துவுக்கு ஜீவனமாகின்றன. அங்ஙனமே கையில்லாத நாற்கால் ஜந்துக்களுக்குக் காலில்லாத ஜந்துக்கள் ஜீவனமாகின்றன. அந்தக் காலில்லாத ஜந்துக்களிலும் மஹத்தான மலைப்பாம்பு முதலிய ஜந்துக்களுக்கு அற்பஜந்துக்கள் ஜீவனமாகின்றன. ஆகையால் ஜீவனோடிருக்கும் ஜந்துவே ஜீவனம் (பக்ஷணம்) ஆகின்றது. ஓ ராஜனே! அங்ஙனம் ஈஶ்வரனுக்கு உட்பட்டதாகச் சொன்ன இந்த ஜகத்தையெல்லாம் பகவானொருவனே தேவமனுஷ்யாதி

தேஹங்களைக் கொண்ட ஜீவாத்மாக்களின் உள்ளே புகுந்து அவர்களை நியமிப்பதும் தரிப்பதுமாயிருக்கின்றான். இங்ஙனம் ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருப்பினும் தன்னுடைய உண்மையைத் தானே அறிந்தவனாகையால் அவர்களது தோஷத்தின் ஸம்பந்தம் இவனுக்கு நேராது. ஜீவாத்மாக்கள் தேஹத்தை ஆத்மாவென்று ப்ரமித்து தேஹத்தினால் விளையும் துக்கங்களை அனுபவிக்கின்றார்கள். அதற்குக் காரணம் தமது ஸ்வரூபம் தமக்குத் தெரியாமையே. இவன் அத்தகையனல்லன். மற்றும், இவன் அந்தராத்மாவாயிருப்பது மாத்ரமேயன்று வெளியிலும் எங்கும் நிறைந்து விளங்குந்தன்மையன். 'ஆனால் ஒருவன் எப்படி தேவமனுஷ்யாதி ரூபமாய்ப் பலவாயிருக்கக்கூடும்' என்கிறீரோ? அவன் தேவமனுஷ்யாதி ரூபமாய் மாறித் தனக்குச் சரீரமாயிருப்பதும் ஜீவாத்மாக்கள் ஸம்பந்திக்கப்பெற்றதுமாகிய ப்ரக்ருதியால் அவன் பலவாறு தோற்றுகிறான். இயற்கையில் அவன் ஒருவனே. சேதனாசேதன ஸ்வரூபங்களான தேவ மனுஷ்யாதி சரீரபேதத்தால் வேறுபட்டுத் தோற்றுகிறான். உன் தந்தைகள் கேவலம் தமது கார்யத்திற்காகவே புறப்பட்டுப்போனவரல்லர். மற்றை எதற்காகவென்னில்; நீங்களும் இங்ஙனமே புறப்படவேண்டுமென்று உங்களுக்கு அறிவிக்கும் பொருட்டும் இங்ஙனம் போனார்கள். ஸகல ஜகத்திற்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் மூன்றுலோகங்களையும் தன்வசத்தில் வைத்துக்கொண்டிருப்பவனும் காலத்தைச் சரீரமாகக் கொண்டவனும் ஜ்ஞானாதிகுணங்கள் நிறைந்தவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பூதங்களையெல்லாம் தன் கட்டளைக்குட்படுத்தி அவற்றிற்கு க்ஷேமத்தை விளைவிக்குந் தன்மையனாகையால் தேவதைகளுக்கு த்வேஷிகளான துஷ்

டர்களை அழிப்பதற்காக ம்ருத்யுஸ்வரூபனாகி இந்த பூமியில் அவதரித்தான். அவன் தேவதைகளுக்காகச் செய்ய வேண்டிய கார்யம் (அவரது சத்ருக்களை அழிக்கையாகிற கார்யம்) பெரும்பாலும் முடிவுபெற்றது. இப்பொழுதோவென்றால் செய்யவேண்டிய [1] கார்யம் சிறிது குறையப்பெற்று அதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் ஈஸ்வரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இப்பூமியில் எவ்வளவு காலம் இருப்பானோ, அது வரையில் நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பீர்களாக. அப்பொழுது நீங்களும் புறப்படுவீர்களாக. த்ருதராஷ்ட்ரன் தன் பார்யையாகிய காந்தாரியோடும் உடன் தோன்றலாகிய விதுரனோடும் ஹிமாலயத்தின்தென்புறத்திலுள்ள ரிஷிகளின் ஆஸ்ரமத்திற்குப் போனான், அந்த இடம் ஸப்தஸ்ரோதஸ்ஸென்னும் பேருடையது. எங்கும் புகழ்பெற்ற ஸ்வர்க்கநதியான கங்கையானது ஸப்தரிஷிகளின் ப்ரீதிக்காக ஏழு ப்ரவாஹங்களோடுகூடி அந்த இடத்தில் ஏழு விதமாகப் பிரிந்திருக்கிறதாகையால் அவ்விடத்தை ஸப்தஸ்ரோதஸ்ஸென்னும் பேருடையதாகச் சொல்லுகிறார்கள். அந்த இடத்திற்குப் போனான். அங்குப் போய் என் செய்யப்போகிறான்? எங்ஙனம் ஜீவிக்கப் போகிறான்?' என்கிறாயோ. சொல்லுகிறேன்; கேள். அங்கு மூன்று ஸந்த்யைகளிலும் ஸ்னானஞ் செய்து அக்னிகளை விதிப்படி ஹோமஞ் செய்து ஜலத்தையே ஆஹாரமாகக்கொண்டு காமாதி தோஷங்களால் மனங் கலங்கப் பெறாமல் தெளிவுற்று [2] தாரேஷணை தனேஷணை புத்ரே

1. அதாவது—தன்குலத்தைப் பாழ்செய்கையே. அதை வெளியிட்டால் அவன் வருத்தப்படுவானென்று நாரதர் மறைத்துச் சொல்லுகிறார்.

2. தாரேஷணை = மனைவியிடத்தில் ஆசை. தனேஷணை=தனத்

ஷணை ஆகிய மூன்று ஈஷணைகளும் தொலையப்பெற்று ஸுகமாயிருக்கப் போகிறான். நெடுநேரம் உட்கார்ந்திருப்பினும் அதனால் விளையும் வருத்தம் உண்டாகப் பெறாமல் ஆஸனத்தை வென்று ப்ராணம் அபானம் முதலிய ஶ்வாஸ வாயுக்கள் ஐந்தையும் ஜயித்து ஶப்தாதி விஷயங்களினின்று இந்த்ரியங்களாறையும் அடக்கி பகவானுடைய உருவத்தை ஓயாமல் த்யானிக்கையால் ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகிய இம்மூன்று குணங்களால் விளைபவைகளும் மோக்ஷத்திற்குத் தடை செய்பவைகளும் புண்யபாபரூபங்களுமான அழுக்குக்களெல்லாம் த்வம்ஸமாகப்பெற்று, ஜ்ஞானஸ்வரூபனாகிய ஆத்மாவினிடத்தில் அவ்விந்த்ரியங்களை அடங்கச்செய்து கடத்தின் ஆகாசத்தை மஹாகாசத்தோடொக்க அநுஸந்திப்பதுபோல் அந்த ஆத்மாவையும் பரப்ரஹ்மத்தினிடத்தில் அழுத்திக்கொடுத்து அத்தோடொத்ததாக அநுஸந்தித்து ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களின் கார்யமான ராகத்வேஷாதிகளின் மூலமாய் மேல்வரக்கூடிய அனர்த்தங்களெல்லாம் அழியப்பெற்று இந்த்ரியங்களைத் தகைந்து வாஸனையைப் போக்கி மனத்தை நிலைநிறுத்தி ஜலம் பருகுவது முதலிய ஆஹாரங்களையும் துறந்து மொட்டைமரம்போல் அசையாமல் இருக்கப்போகின்றான். தேஹதாரணத்திற்கு வேண்டிய கார்யங்களையெல்லாம் துறந்து ஸுகமாயிருக்கின்ற அந்த த்ருதராஷ்ட்ரனுக்கு நீ விக்னஞ் செய்ய வேண்டாம். ராஜனே! அந்த த்ருதராஷ்ட்ரன் இன்றைத்தினந் தொடங்கி ஐந்தாவது நாளில் தன் சரீரத்தை நிச்சயமாய் விடப்போகின்றான். அந்தச் சரீரம் யோகாக்னியாலேயே பஸ்மமாய்விடப் போகின்றது. அப்பால் பர்த்தாவின் தேஹம் பர்ணசாலையோடு அக்னி

---

தில் ஆசை. புத்ரேஷணை = புத்ரனிடத்தில் ஆசை.

களால் தஹிக்கப்பெற்றிருக்கையில், அவனுடைய பத்னியும் பதிவ்ரதையுமாகிய வெளியிலிருந்த காந்தாரி அந்த அக்னியில் புகுந்து ப்ராணன்களை விடப்போகிறாள். குருகுல குமாரனே! அந்த ஆச்சர்யத்தை விதுரன் கண்டு ப்ராதாவான த்ருதராஷ்ட்ரன் மோக்ஷம் அடைந்தமையால் ஸந்தோஷமும் அவனைப் பிரிந்தமையால் துக்கமும் உண்டாகப் பெற்று அவ்விடத்தினின்று புண்ய தீர்த்தங்களைப் பணிய விரும்பிப் புறப்பட்டுப் போவான்' என்றார். இங்ஙனம் மொழிந்து, பகவானான நாரதர் தும்புருவும் தானுமாய் ஸ்வர்க்கத்தைக் குறித்து மேற் கிளம்பிச் சென்றார். யுதிஷ்டிரனும் அந்த நாரதருடைய வசனத்தை மனத்தில் நிறுத்திக்கொண்டு சோகங்களைத் துறந்தான். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## தர்மபுத்ரன் அவசகுனங்களைக் கண்டு தூக்கித்தல்.

ஸூதர் சொல்லுகிறார்:—பந்துக்களான யாதவர்களைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினாலும் உத்தமஸ்லோகனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய சரித்ரத்தை அறிய வேண்டுமென்னும் விருப்பத்தினாலும் அர்ஜுனன் த்வாரகைக்குப் போயிருக்கும் பொழுது சிலமாதங்கள் கடந்தன. ஆயினும் அவ்வர்ஜுனன் அந்த த்வாரகையினின்று திரும்பிவரவில்லை. அப்பொழுது குருவம்சத்தைத் தலையெடுக்கச்செய்யுந் திறமையுடைய யுதிஷ்டிரன் பயங்கரமாயிருப்பவைகளும் துக்கத்தை அறிவிப்பவைகளுமான அவசகுனங்களைக் கண்டான். வஸந்தம் முதலிய ருதுக்களின் தர்மங்கள் மாறப்பெற்ற காலத்தின் கதி பயங்கரமாயிருப்பதையும், கோபம் லோபம் பொய் ஆகிய இவற்றில் மனஞ்செல்லப்பெற்று மனிதர்கள் ஜீவ

ணத்திற்காகப் பாபகடத்தையில் இருப்பதையும், வ்யவஹாரமெல்லாம் கபடமயமாயிருப்பதையும், ஸ்னேஹம் கெட்ட எண்ணம் கலந்திருப்பதையும், தந்தை தாய் நண்பன் உடன்தோன்றல் பார்யை பர்த்தா ஆகிய இவர்கள் ஒருவரோடொருவர்க்கு ராகம் த்வேஷம் முதலிய தோஷங்கள் உண்டாயிருப்பதையும், தகப்பன் கன்னிகையை விக்ரயஞ் செய்வதையும், பிள்ளை தாய் தந்தைகளுக்குப் போஷணைஞ் செய்யாதிருப்பதையும், ப்ராஹ்மணன் முதலிய மூன்று வர்ணத்தவர்களும் வேதமோதுவதில் விருப்பமற்றிருப்பதையும், சூத்ரர்கள் வேதமோதுவதையும் கண்டான். அங்ஙனமே துக்கத்தை அறிவிக்கிற மற்றும் பலவகை அவசகுனங்களும் மேல்வரப்போகிற விபரீத காலத்திற்குத் தகுந்தபடி உண்டாவதையும், மனிதர்கள் லோபம் முதலிய அதர்மங்களை இயற்கையாயிருப்பதையும் கண்டு ராஜனாகிய யுதிஷ்டிரன் தன் தம்பி பீமஸேனனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—த்வாரகையில் பந்துக்களைப்பார்த்து வருவதற்காகவும் புண்ய ஸ்லோகனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய நடத்தையை அறிவதற்காகவும் அர்ஜுனனை அவ்விடம் அனுப்பினேன். இப்பொழுது அவன் போய் ஏழுமாதங்கள் ஆயின. இன்னம் உன்தம்பி அர்ஜுனன் வந்துசேரவில்லை. அதற்குக் காரணம் என்னவோ எனக்கு உண்மையாகத் தெரியவில்லை. ஒருக்கால் தேவர்ஷியாகிய நாரதர் மொழிந்த அக்காலம் இப்பொழுது ஸமீபித்திருக்குமோ? எந்தக் காலமென்கிறாயோ? ஜ்ஞானாதி குணங்களால் நிறைந்த ஸ்ரீக்ருஷ்ணன் விளையாட்டிற்காகக் கொண்ட சுத்தஸத்வமயமான தன் சரீரத்தை எக்காலத்தில் விடப்போகிறானென்று நாரதர் நமக்கு மொழிந்தாரோ அக்காலம்

இப்பொழுது ஸமீபித்து விட்டதோ என்னவோவென்று நினைக்கின்றேன். எந்த பகவானுடைய அனுக்ரஹத்தினால் நமக்கு ஸம்பத்துக்களும் ராஜ்யமும் பத்னியும் ப்ராணன்களும் குலமும் ஸந்தானமும் சத்ருக்களை ஜயித்தமையும் உண்டாயினவோ, மற்றும் எவனுடைய அனுக்ரஹத்தினால் நமக்குப் புண்யலோகங்களும் உண்டாகப் போகின்றனவோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணபகவான் தனது அப்ராக்ருத லீலாமானுஷ விக்ரஹத்தை விடப்போகிற காலம் நாரதர் சொன்னபடி இப்பொழுது ஸமீபித்திருக்குமோ என்னவோ? மானிடவர்களில் சிறப்புற்ற பீமஸேனனே! ஆகாயத்தில் உண்டாமவைகளும் பூமியில் உண்டாமவைகளும் தேஹத்தில் உண்டாமவைகளும் பயங்கரமாயிருப்பவைகளும் நமது புத்தியை மயங்கச் செய்யும்படியான பயத்தை உடனே வருவதாக அறிவிப்பவைகளுமான உத்பாதங்களைக் காண்பாய். முதலில் தேஹத்தில் விளையும் உத்பாதங்களைக் காண்பாய். ஓ பீமனே! எனது இடத்துடை இடக்கால் இடக்கை ஆகிய இவை அடிக்கடி துடிக்கின்றன; ஹ்ருதயத்தில் (மார்பில்) நடுக்கமும் உண்டாகின்றது. இவையெல்லாம், எனக்குச் சீக்ரத்திலேயே அனிஷ்டம் வரப்போகிறதென்று தெரிவிக்கின்றன. இந்தக் குள்ளநரி அக்னிபோல் ஜ்வலிக்கின்ற முகமுடையதாகி ஸூர்யனுக்கு எதிர்முகமாக ஊளையிடுகின்றது. ஓ பீமா! இந்த நாய் எனக்கு எதிர்முகமாகி பயமில்லாமல் அழுகின்றது. சிறப்புற்றவைகளான பசு குதிரை முதலிய நாற்கால் ஜந்துக்கள் என்னை இடஞ்செய்கின்றன. மற்றை அற்பங்களான கழுதை கடா முதலியன என்னை வலஞ்செய்கின்றன. புருஷஶ்ரேஷ்டனே! யானை குதிரை முதலிய என் வாஹனங்களெல்லாம் அழுகின்றனவாகக் காண்கின்றேன். இதோ ஓர் புரு யமதூ

தன்போன்று கூவென்று கூவிக்கொண்டு என் மனத்தை நடுங்கச் செய்கின்றது. மற்றும், இதோ ஒரு கோட்டானும் அதற்கு எதிரில் மற்றொரு கோட்டானும் யமதூதர்கள் போன்று என் மனத்தை நடுங்கச் செய்பவையாகி உறங்காமல் கூவென்னும் சப்தங்களை யிழற்றி இத்தேசம் பாழாய்விடப்போகிறதென்று தெரிவிக்கின்றன. திசைகளெல்லாம் அழுக்கடைந்திருக்கின்றன. பரிவேஷங்களும் புலப்படுகின்றன. பூமியும் பர்வதங்களோடு நடுங்குகின்றது. அகால மேகங்களும் இடிகளும் உண்டாகின்றன. காற்று கடினஸ்பர்சமுடையதாகி தூளைக்கிளப்பி இருளை விளைத்துக்கொண்டு வீசுகின்றது. மேகங்கள் நாற்புறத்திலும் பார்க்க வழங்காமல் ஆபாஸமாயிருக்கும்படி ரக்தமழை பெய்கின்றன. ஸூர்யன் ஒளியற்றிருப்பதைக்காண்பாய். ஆகாயத்தில் சுக்ரன் ப்ருஹஸ்பதி முதலியக்ரஹங்கள் ஒன்றோடொன்று கலஹஞ்செய்கின்றன; காண்பாய். ஆகாயமும் பூமியும் மிகுதியும் கலக்கமுற்ற பிசாசக்கூட்டங்கள் நிறைந்து எரிகிறாப்போல் புலப்படுகின்றன. கிழக்கேபாயும் நதிகளும் மேற்கே பாயும் நதங்களும் குளங்களும் ப்ராணிகளின் மனங்களும் கலக்கமுற்றிருக்கின்றன. ஆஹவனீயம் முதலிய அக்னிகள் நெய்யால் ஹோமஞ்செய்யப்பெற்றும் எரியாது புகைகின்றன. இத்தகைய அவசகுனங்கள் உண்டாகப்பெற்ற இக்காலம் எவ்வித அனிஷ்டத்தை விளைக்குமோ எனக்குத் தெரியவில்லை. குழந்தைகள் ஸ்தன்ய பானஞ்செய்வதை விரும்பாதிருக்கின்றன. தாய்மார்களும் குழந்தைகளுக்குப்பால் சுரக்கப்பெறாதிருக்கின்றார்கள். பசுக்கள் முகத்தில் கண்ணீர் ததும்பப்பெற்று அழுகின்றன. தொழுவத்தில் வ்ருஷபங்கள் ஸந்தோஷமுறாதிருக்கின்றன. தேவப்ரதிமைகள் அழுபவைபோல் தோற்றுகின்றன; சரீரத்தில் புழுக்கம் உண்டாகப்பெறுகின்றன; மற்றும் கிளம்

பிக் குறிப்பவைபோல் புலப்படுகின்றன. இந்த தேசங்களும் இடைச்சேரிகளும் ஆஸ்ரமங்களும் சோபையழிந்து ஆநந்தமற்று நமக்கு என்ன துக்கத்தை அறிவிக்கின்றனவோ தெரியவில்லை. இந்த உத்பாதங்களைக்கண்டு நான் இங்ஙனம் நினைக்கின்றேன். என்னென்கிறாயோ? மற்றொரு புருஷனிடத்தில் உண்டாகாதசோபையுடையவைகளான ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புக்களை இழந்து அழகற்று இந்த பூமியெல்லாம் பாழாய் விடப்போகிறதென்று எனக்குத் தோற்றுகிறது' என்றான்.

இங்ஙனம், அவசகுனங்களைக் கண்டறிந்த மன்னவனாகிய யுதிஷ்டிரன் சிந்தித்துக்கொண்டிருக்கையில் கபித்வஜனாகிய (குரங்கை த்வஜத்தில் அடையாளமாகவுடைய) அர்ஜுனன் யாதவர்களின் நகரமான த்வாரகையினின்று திரும்பிவந்தான். அங்ஙனம் வந்து பாதங்களில் விழுந்து நமஸ்காரஞ்செய்து நின்ற அவ்வர்ஜுனனைப்பார்த்து, மன்னவன் பயந்த மனமுடையவனாகி நாரதர் மொழிந்ததை நினைத்துக்கொண்டு நண்பர்களினிடையில் இங்ஙனம் வினவினான். அவன் முகம் முன்பிருந்த ரீதியைவிட மாறியிருந்தது. அவன் மனவருத்தமுற்றிருந்தான். மற்றும், அவன் தலை குனிந்து கண்களில் நீர்களைப் பெருக்கிக்கொண்டு ஒளியற்றிருந்தான். அத்தகையனான அவ்வர்ஜுனனைப்பார்த்து 'அர்ஜுனா! ஆனர்த்த புரியான த்வாரகையில் மதுக்கள் போஜர் தசார்ஹர் அர்ஹர் ஸாத்வதர் அந்தகர் வ்ருஷ்ணிகள் ஆகிய நமது பந்துக்களனைவரும் ஸுகமாயிருக்கின்றார்களா? மேன்மைக்கிடமாயிருப்பவனே! அர்ஜுனா! நமது பாட்டனும் நல்லியற்கையனுமாகிய சூரன் க்ஷேமமாயிருக்கிறானா? நமது மாமனாகிய ஆனகதுந்துபியும் (வஸு-

தேவனும்) அவன் தம்பிகளான தேவபாகன் தேவஸ்ர வஸ்ஸு ஆனகன் ஸஞ்ஜயன் சாமகன் கங்கன் சமீகன் வத்ஸகன் வ்ருகன் ஆகிய இவ்வொன்பதின்மரும் க்ஷேமமாயிருக்கின்றார்களா? உக்ரஸேனனுடைய உடன் பிறந்தவர்களும், அந்த வஸுதேவனுடைய பத்னிகளும் நமது மாமிகளுமான தேவகி முதலியவர்கள் (தேவகி, ஸ்ருததேவை சாந்திதேவை உபதேவை ஸ்ரீதேவை தேவரக்ஷிதை ஸஹதேவை ஆகிய இவர்கள்) தந்தமது புதல்வர்களோடும் நாட்டுப்பெண்களோடும் கூடி க்ஷேம மாயிருக்கின்றார்களா? துர்புத்தியான கம்ஸனைப் புதல் வனாகப்பெற்ற ராஜனாகிய உக்ரஸேனன் பிழைத்திருக் கின்றானா? இவன் தம்பி தேவகனும் ஜீவித்திருக்கின்றா னா? ஹ்ருதிகனென்னும் பேர்பெற்ற ஸ்வபல்கனுடைய புதல்வனாகிய அக்ரூரனும் ஜயந்தன் கதன் ஸாரணன் ஆகிய இவர்களும் சத்ருஜித்து முதலிய வஸுதேவபுத் ரர்களும் ஆகிய அனைவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களா? பக்தர்களைப் பாதுகாக்குந் தன்மையனும ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பலராமன் ஸுகமாயிருக் கின்றானா? வ்ருஷ்ணிகளெல்லாரிலும் மஹாரதனான ப்ர த்யும்னன் ஸுகமா? எங்கும் தடைபடாத மஹாவேக முடைய அநிருத்தபகவானும் ஸுகமாய் வளர்ந்து வரு கின்றானா? ஜாம்பவதியின் புதல்வனாகிய ஸாம்பனும் ஸு ஷேணன் சாருதேஷ்ணன் இவர்களும், க்ருஷ்ணனது குமாரர்களும் மேன்மையுடையவருமான ருஷபன் முத லிய மற்றவர்களும் தந்தமது புதல்வர்களோடு ஸுகமா யிருக்கின்றார்களா? அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணனைத் தொ டர்ந்த ஸ்ருததேவன் உத்தவன் முதலியவர்களும் ஸுநந் தன் முதலிய மற்றுமுள்ள யாதவ ஸ்ரேஷ்டர்களும் ஸுகமாயிருக்கின்றார்களா? ஸ்ரீக்ருஷ்ணன் ராமன் இவர்

களுடைய புஜங்களைப்பற்றின அனைவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களா? அவர்களெல்லோரும் ஸ்னேஹம் திடமாயிருக்கப் பெற்று நமது க்ஷேமத்தை நினைக்கின்றார்களா? ப்ராஹ்மணர்களுக்கு நன்மைசெய்வதே நினைவாயிருப்பவனும் பக்தர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனும் ஜ்ஞாநாதிகுணங்களெல்லாம் அமைந்தவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் தன் பட்டணத்தில் ஸுதர்மையில் நண்பர்களால் சூழப்பெற்று ஸுகமாயிருக்கின்றானா? உலகங்களுக்கு யோகக்ஷேமங்களை நிறைவேற்றுகையாகிற மங்களத்தின்பொருட்டு அனந்தனுக்கு (பலராமனுக்கு நண்பனும்) ஆதி புருஷனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸமுத்ரம்போன்ற யாதவகுலத்தில் க்ஷேமமாயிருக்கின்றானா? எந்த பகவானுடைய பாஹுபலத்தினால் பாதுகாக்கப்பெற்ற த்வாரகாபுரியில் யாதவர்கள் ஸமஸ்த லோகங்களாலும் பூஜிக்கப்பெற்று மிகுந்த ஆநந்தமுற்று யக்ஷர்கள்போல் க்ரீடித்துக்கொண்டிருக்கிறார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் ஸுகமாயிருக்கின்றானா? எந்த பகவானுடைய பாதாரவிந்தங்களில் சுஶ்ரூஷை செய்கையாகிற முக்யகார்யத்தில் முயன்று ஸத்யபாமை முதலிய பதினாறாயிரம் மாதரார்மணிகள் தேவதைகளை யுத்தத்தில் ஜயித்து அவனால் கொண்டுவரப்பெற்றவைகளும் வஜ்ராயுதந்தரித்த தேவேந்த்ரனுடைய அன்பிற்கிடமான இந்த்ராணி முதலிய அருமைக் காதலிகள் அனுபவிக்கத்தகுந்தவைகளுமாகிய பாரிஜாதம் முதலான இஷ்டவஸ்துக்களை அனுபவிக்கின்றார்களோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ண பகவான் க்ஷேமமாயிருக்கின்றானா? எவனுடைய பாஹுதண்டங்களை ப்ரபுவாகப்பற்றி ஜீவிக்கும் ப்ருத்யர்களான யதுவீரர்கள் எவ்வகையிலும் பயமற்றவராகி தேவதைகளில் சிறந்த இந்த்ராதிகள் அனுபவிக்கத்தகுந்ததும் அந்த இந்த்ராதிகளை ஜயித்து பலாத்

காரமாகக் கொண்டுவரப் பெற்றதுமான ஸுதர்மை யென்னும் ஸபையைத் தமது பாதங்களால் அடிக்கடி மிதிக்கின்றார்களோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணன் க்ஷேமமாயிருக்கின்றானா? அப்பா! உனக்கு ஆரோக்ய மா? நீ எனக்கு ஒளியற்றவனாகிப் புலப்படுகின்றாய். அப்பனே! நீ அங்கு வெகுகாலம் வஸித்திருந்தனையே. நீ அவர்களால் ப்ரீதியுடன் கௌரவிக்கப்பெற்றிருந்தனையா? அதில் உனக்கு ஏதேனும் குறை நேரிடவில்லையே? அல்லது அவர்களால் ஏதேனும் அவமதிக்கப்பெற்றனையோ? நன்மைக்கிடமாகாதவைகளும் அமங்களமாயிருப்பவைகளுமான ஶப்தாதி விஷயங்களால் மதிமயங்கி அவற்றில் ஏதேனும் கால்தாழப்பெற்றனையோ? அல்லது ஏதேனு மொன்றை ஆசைப்பட்டு வேண்டினவர்க்கு அப்படியே கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து அதை அவர்க்குக் கொடாமல் தவறிப்போயினையோ? ரக்ஷிக்குந் தன்மையனாகிய நீ ப்ராஹ்மணன் இளைஞன் பசு கிழவன் மாறாத ரோகமுடையவன் பெண்டிர் ஆகிய இவர்களில் ஏதேனுமொரு ஜந்து சரணம் அடைகையில் அதைப் பாதுகாக்காமல் கைவிடவில்லையே? நீ புணரத்தகாத மாதைப் புணரவில்லையே. புணரத்தகுந்த மாதையும் ஸ்நாநாதி ஸம்ஸ்காரங்கள் அற்றிருக்கும் பொழுதாவது, அல்லது செய்யவேண்டிய வெகுமதியைச் செய்யாமலாவது புணரவில்லையே? அப்பா! அல்லது, நீ வழியில் வரும்பொழுது உனக்கு மேற்பட்டவர்களாலாவது கீழ்ப்பட்ட ஜனங்களாலாவது தோல்வியடையவில்லையே? கூட உட்கார்ந்து சாப்பிடத்தகுந்த வ்ருத்தர்களையாவது இளைஞர்களையாவது விட்டுத் தனியே புஜித்தனையோ? மனத்திற்கினியனும் என்றும் மிகுந்த அன்பிற்கிடமாயிருப்பவனும் ஆத்ம பந்துவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து மனக்களிப்பற்றுப் பாழாய்விட்

டேனேயென்று நினைத்து வருந்துகின்றாயோ? கீழ்ச் சொன்ன காரணங்களில் ஒன்றேனும் இல்லையாயின், மற்றை எதனாலும் உனக்கு மனவருத்தம் உண்டாவதற்கு இடமில்லையே? உனது ஒளி முன்போலில்லை. ஆகையால் கீழ்ச்சொன்ன காரணங்களில் ஏதேனும் ஒன்றிருக்கவேண்டும்' என்றான். பதினான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

## { அர்ஜுனன் தர்மபுத்ரனுக்கு த்வாரகையின் வ்ருத்தாந்தத்தைக் கூறுதல். }

ஸூதர் சொல்லுகிறார்:— ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸகாவான அர்ஜுனன் தனது உடன் தோன்றலாகிய யுதிஷ்டிரனால் பலவகைப்பட்ட ஸந்தேஹங்களுக்கிடமாயிருப்பதும் ஒளிபற்றதுமான தன்னுருவத்தைப்பற்றி இங்ஙனம் பலவாறு வினவப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனைப்பிரிந்தமையால் இளைப்புற்று அந்த வருத்தத்தினால் முகமும் கமலம் போன்ற ஹ்ருதயமும் ஒளி மழுங்கவும் உலரவும் பெற்று ப்ரபுவான அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே த்யானித்துக்கொண்டு மறுமொழிகூற வல்லமையற்றிருந்தான். அப்பால் பெரும் ப்ரயத்னப்பட்டுச் சோகங்களை அடக்கிக் கண்களைக்கைகளால் துடைத்துக்கொண்டு பரோக்ஷத்திலும் (கண்மறைவிலும்) மிகுதியும் தலைக்கொண்ட நட்பின் மிகுதியாலும் ப்ரீதியுடன் நினைக்கும் சிந்தையாலும் தீரமற்று ஸாரத்யம் முதலிய வ்யாபாரங்களில் ஸ்ரீக்ருஷ்ணன் தனக்கு ஹிதஞ்செய்துகொண்டிருந்ததையும் தன் விருப்பங்களை ஈடேற்றிக்கொண்டிருந்ததையும் தன்னோடு சீலமொத்திருந்ததையும் தான் நினைத்தகார்யங்களில் தூண்டும்படி அவன் தனக்கு உட்பட்டிருந்ததையும் நினைத்துக் கண்ணீர்களால் தழுதழுத்த உரையுடன் தமையனாகிய மன்னவனைக் குறித்து இங்ஙனம் மறுமொழி கூறினான்.

அர்ஜுனன் சொல்லுகிறான்:—மஹாராஜனே! பந்துவாயிருந்தவனும் தன்னைப் பற்றினவருடைய மனவருத்தங்களைத் தீர்க்குந்தன்மையனும் ஸாக்ஷாத் பகவானுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் என்னை வஞ்சித்துத் தனியே விட்டுப் போனான். தேவனே! தேவதைகளுக்கும் ஆச்சர்யத்தை விளைவிப்பதும் அளவிறந்ததுமாகிய என்னுடைய தேஜஸ்ஸை அவன் பறித்துக்கொண்டு போனான். இவ்வுலகத்தில் எவனாயினும் ப்ராணனை இழப்பின் சவமென வழங்கிக்காணத் தகாதவனுமாவதுபோல், எந்த பகவானை க்ஷணகாலம் பிரியினும் என்னைப்போன்ற லோகமெல்லாம் ப்ரீதிக்கிடமல்லாத காட்சியுடையவையாகுமோ, அப்படிப்பட்ட பகவான் என்னை வஞ்சித்துப் போனான். த்ரௌபதியின் ஸ்வயம்வரத் தொடக்கத்தில் மன்மதன் ஆவேசத்தினால் கெட்ட மதமுடையவராகி அவ்விடம் வந்திருந்த ராஜாக்களின் தேஜஸ்ஸை நான் அபஹரித்ததும் நாணேற்றி பாணம் தொடுக்கப்பெற்ற தனுஸ்ஸினால் மத்ஸ்யத்தினுருவமுடைய ஓர் யந்த்ரத்தை அடித்து அறுத்துத் தள்ளினதும் த்ரௌபதியைப் பெற்றதும் எவனுடைய அவலம்பத்தினால் உண்டாயினவோ, அப்படிப்பட்ட பரமபுருஷன் என்னை வஞ்சித்துப் போனான். எவனுடைய ஸந்நிதானத்தினால் நான் தேவக்கூட்டங்களோடு கூடின தேவேந்த்ரனையும் வேகமாக ஜயித்துக் காண்டவமென்னும் வனத்தை அக்னிக்குக் கொடுத்து அத்யாச்சர்யமான கார்யஞ்செய்தேனோ, அன்றியும் மயனால் நிர்மிக்கப்பெற்றதும் ஆச்சர்யமான ப்ரதிமைகள் முதலியன அமைந்ததும் மற்றும் பல அற்புதங்களுடையதுமான ஸபையை நான் பெற்றேனோ, மற்றும், எவனுடைய ஸந்நிதானத்தினால் அச்வமேதயாகத்தில் உனக்கு ராஜாக்கள் பலதிசைகளினின்று கப்பம் கொண்டு வந்து கொடுத்தார்களோ. அப்படிப்பட்ட பக

வான் என்னை வஞ்சித்துப் போனான். உம்முடைய தம்பியும் எனக்குத் தமையனும் பதினாயிரம் யானை களின் பலத்தோடொத்த வீர்ய முடையவனுமாகிய பீம ஸேனன் ராஜாக்களனைவரும் தமது சிரங்களால் தாக் கித் தொழும்படியான பாதங்களையுடைய மஹா வீரனான ஜராஸந்தனுடைய தலையையும் கால்களையும் முறித்து அவனை வதித்ததும், அந்த ஜராஸந்தன் ஜயித்துச் சிறையில் அடைத்திருந்த ராஜாக்கள் பலரும் அதி னின்று விடுவிக்கப்பெற்று ப்ரமத கணங்களுக்கு நாதனா கிய ருத்ரனுடைய யாகத்தின் பொருட்டு ஸித்தப்படுத்தி வைத்திருந்த தனத்தை உமது யாகத்தில் காணிக்கை யாகக்கொண்டு வந்து கொடுத்ததும் எந்த மஹானுபா வானுடைய தேஜஸ்ஸினால் நடந்தனவோ, அப்படிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணபகவான் என்னை வஞ்சித்துப்போனான். மன்னா! அஶ்வமேத யாகத்தில் அபிஷேகஞ் செய்யப்பெற் றுச் சிறப்புற்றதும் அழகியதுமான உமது பத்னியான த்ரௌபதியின் தலைமயிர்ச்சொருக்கை அவிழ்த்துப் பிடி த்திழுக்கையில் அந்த த்ரௌபதி கண்ணும் கண்ணீரு மாய்த் தன் பாதங்களில் விழுந்துவேண்டிக்கொள்ளி னும் விடாமல் ஸபைக்குக் கொண்டு வந்த துஷ்டர்க ளான துஶ்ஶாஸனாதிகளின் மடந்தையர் தமது காதலர் மரணம் அடையப்பெற்றுத் தலைமயிர்களை விரித்துக் கொண்டு வருந்தும்படி பீமன் செய்ததும் எவனுடைய தேஜஸ்ஸினால் நடந்ததோ, அப்படிப்பட்ட மஹானுபா வன் ஸ்ரீக்ருஷ்ணன் என்னை வஞ்சித்துப் போனான். முன்பு பதினாயிரம் ப்ராஹ்மணர்களோடு அக்ரபோஜனஞ் செய்பவராகிய துர்வாஸ முனிவர் துர்யோதனனிடஞ் சென்று அவனால் சிறந்த விருந்தளிக்கப்பெற்று மனக் களிப்புற்று அவனை வரம் வேண்டுவாயென்று தூண்டு கையில், அவனும் வனவாஸஞ்சென்ற நமக்கு அம்முனி

வரைக்கொண்டு சாபமிடுவிக்க விரும்பி அம்முனிவரைப் பார்த்து 'மஹானுபாவரே! அரண்யத்தில் என் ப்ராதாக்களான பாண்டவர்கள் துக்கித்துக் கொண்டிருக்கின்றார்கள். அவரிடஞ்சென்று இங்கு புஜித்தாற்போல் போஜனம் வேண்டிப்பெறுவீராக' என்றான். அதைக் கேட்ட முனிவரும் அங்ஙனம் நமது சத்ருவாகிய துர்யோதனனால் தூண்டப்பெற்று அப்படியே ஆகட்டுமென்று நம்மிடம் வந்து உம்மைப் பார்த்து 'யுதிஷ்டிரா! பதினாயிரம் ப்ராஹ்மணர்களோடு எனக்குச் சீக்ரத்தில் அக்ரபோஜனங் கொடுப்பாயாக' என்றார். நீரும் அது கேட்டு மனத்தில் நடுக்கம் உண்டாகப்பெற்று 'இப்பொழுது நாம் போஜனஞ்செய்தாய் விட்டது. அன்னம் மிகுதியில்லை. அன்றியும் இவ்வனத்தில் பதினாயிரம் ப்ராஹ்மணர்கள் எங்குக் கிடைப்பார்கள்? அத்தனை பேர்களுக்கு போஜன மிடவேண்டுமானால் அதற்குத் தகுந்த ஸாமக்ரியும் கிடைக்காதே. நான் போஜனமிடேனாயின் கோபஸ்வபாவராகிய இம்முனிவர் சாபங்கொடுப்பாரே. ஆயினும் இம்முனிவரை போஜனத்திற்குவரும்படி அழைத்து விட்டு அப்பால் அதற்கு வேண்டிய உபாயத்தைத் தேடுகின்றேன்' என்று நினைத்து நீர் முனிவரைப் பார்த்து 'பகவானே! ஸ்நானம் முதலிய நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு சீக்ரம் வருவீராக. எனக்கு இங்கு எல்லாம ஸித்தமாயிருக்கிறது' என்று மொழிகையில், அம்முனிவரும் அப்படியே ஆகட்டுமென்று போய் ஸ்நானஞ்செய்து ஸந்த்யாவந்தனாதி கர்மங்களை முடித்துப் பரப்ரஹ்மத்தை த்யானித்துக் கொண்டிருந்தார். அவ்வளவில், வருத்தங்களைப் போக்குந்தன்மையனான மதுஸூதனன் நாமிருந்த வனத்திற்கு வந்து நாம் வருத்தத்தினால் முகவொளி மழுங்கப் பெற்றிருக்கக்கண்டு 'ராஜனே! என்ன நெடுநேரம் ஆலோசிக்

கின்றாய்? வருந்தினவன் போல் தோற்றுகிறாயே என்? என்று வினவுகையில் நீரும் முனிவர் வரலாற்றை மொழிந்தீர். பகவானும் இதையெல்லாம் கேட்டு துர்யோதனனுடைய செயலென்றறிந்து 'அன்னம் ஏதேனும் மிகுந்திருக்கிறதா' என்றான். நீரும் 'சாதம் மாத்ரமே சிறிது மிகுந்திருக்கிறது' என்றீர். பகவானும் மிகுந்திருப்பதைக் கொண்டு வரச் சொல்லி அதை வாங்கி உமது வருத்தம் தீரும்பொருட்டு புஜித்தான். அவ்வளவில். ஜலத்தில் சரீரத்தை அழுத்தி த்யானஞ்செய்துகொண்டிருக்கிற அந்த துர்வாஸ முனிவர் ஜங்கம ஸ்தாவர ஸ்வரூபமான மூன்று லோகங்களும் த்ருப்தி அடைந்தனவாக நினைத்தார். இங்ஙனம் நமது சத்ருவாகிய துர்யோதனனால் தூண்டப்பெற்ற துர்வாஸ முனிவரிடத்தினின்று நமக்கு நேரிட்ட எல்லையில்லாத பெருந்துயரத்தினின்று நம்மை எவன் பாதுகாத்தானோ, அப்படிப்பட்ட மஹானுபாவன் என்னை வஞ்சித்துப் போனான். எங்கும் புகழ்பெற்ற மஹானுபாவனும் கிராதவேஷம் பூண்டவனும் சூலபாணியுமாகிய ருத்ரன் யுத்தத்தில் என் செயலுக்கு வியப்புற்றதும், அந்த ருத்ரன் பாசுபதமென்கிற தன்னுடைய அஸ்த்ரத்தை எனக்குக் கொடுத்ததும், அங்ஙனமே இந்த்ரன் முதலிய மற்றவர் என் செயலுக்கு வியப்புற்றதும், நான் இத்தகைய உருவத்தோடு கூடவே மஹேந்த்ரனுடைய பவனத்தில் பெருமை பொருந்தின அவ்விந்த்ரனுடைய ஆஸனத்தின் பாதி பாகத்தில் உட்கார்ந்ததும் எந்த பகவானுடைய தேஜஸ்ஸினால் விளைந்தனவோ, அப்படிப்பட்ட பரமபுருஷன் என்னை வஞ்சித்துப் போனான். மற்றும், அம்மஹேந்த்ர பவனத்தில் நான் யதேஷ்டமாக விளையாடிக்கொண்ருக்கையில், இந்த்ரன் முதலான தேவதைகளனைவரும்

காலகேயர் நிவாதகவசர் முதலிய தமது சத்ருக்களை வதிக்கும் பொருட்டு காண்டீவதநுஸ்ஸுடன் அடையாள மாகப்பெற்ற எனது புஜதண்டங்களிரண்டையும் ஸஹாயமாக வேண்டினதும், நான் அங்ஙனமே அவர்களின் சத்ருக்களை அழித்ததும் எந்த பகவானுடைய மஹிமையால் நடந்தனவோ, ஆஜமீடரே! அத்தகையனும் அளவில்லாத ஆநந்த ஸ்வரூபனும் பரமபுருஷனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் என்னை வஞ்சித்து விட்டுத் தனது லோகம் போய்ச்சேர்ந்தான். நான் ஒருவனேயாகி எவர்க்கும் தடுக்கமுடியாத பலமுடையதும் எல்லையில்லாததுமான கௌரவர்களின் ஸைன்யமாகிற ஸமுத்ரத்தை ரதத்தினுல் தாண்டினதும், சத்ருக்களின் பலவகை தனத்தைப் பறித்துக்கொண்டதும், அன்றியும் அவரது சிரஸ்ஸுக்களிலிருந்தவைகளும் ஒளிக்கிடமுமாகிய ரத்னங்களாகிற தனத்தைப் பெற்றதும் எனது பந்துவாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையால் உண்டானவைகளே. ப்ரபூ! சிறந்த பலமுடைய பல ராஜச்ரேஷ்டர்களுடைய ரத ஸமூஹங்களால் அலங்கரிக்கப்பெற்ற பீஷ்மர் கர்ணன் ஆசார்யராகிய த்ரோணர் சல்யன் ஆகிய இவர்களின் ஸைன்யங்களில் எனக்கு முன்னே ஸஞ்சரித்துக் கொண்டிருந்து தனது கண்ணோக்கத்தினுலேயே ரதிகர்களில் தலைவரான மஹா வீரர்களுடைய ஆயுளையும் மனத்தையும் தேஜஸ்ஸையும் அபஹரித்து நான் சத்ருக்களை அநாயாஸமாகவே ஜயிக்கும்படி எவன் செய்தானே, அப்படிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணனுடைய செயல்கள் என் நெஞ்சில் மாறாது சுழலமிடுகின்றன. நீர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாஹு தண்டங்களின் திண்மையைக் கண்டு அவனிடத்தில் என்னைத் தொடுத்து விட்டீர். நானும் அவனுடைய பாஹு தண்டங்களைப்பற்றி த்ரோணர் பீஷ்மர் கர்ணன் த்ரோண புத்ரனுகிய அச்வத்தாமா த்ரிகர்த்

தன் சலன் ஸைந்தவன் பாஹ்லிகன் முதலிய மஹாவீரர்களோடு யுத்தஞ்செய்யும் பொழுது அவர்கள் ப்ரயோகித்தவைகளும் வீணுகாத மஹிமை யுடையவைகளுமாகிய அஸ்த்ரங்களெல்லாம், நரஸிம்ஹ தாஸனுகிய ப்ரஹ்லாதன்மேல் ஹிரண்ய கசிபு ப்ரயோகித்த அஸ்த்ராதிகளெல்லாம் அவனைத் தொடாதிருந்தாற்போல், என்னைத் தீண்டாதிருந்ததுவும் எந்த பகவானுடைய மஹிமையைப் பற்றியோ, அத்தகைய மஹானுபாவனுடைய சரித்ரங்கள் என் மனத்தில் மாருதிருக்கின்றன. நல்வியற்கையுடைய ஸாதுக்கள் ஸம்ஸாரத்தைக் கடந்து மோக்ஷம் பெறவேண்டுமென்னும் விருப்பத்தினுல் தன் பாதாரவிந்தங்களைப் பணியப்பெற்றவனும் விரும்புவோர்க்குத் தன்னையுங்கொடுக்க ஸித்தமாயிருப்பவனும் ஸர்வேஶ்வரனுமாகிய அந்த மஹானுபாவனை நான் கெடு மதியனுகையால், 'நீ எனக்கு ஸாரதியாயிருப்பாய்' என்று வேண்டினேன். அன்றியும், நான் குதிரைகளிளைப்புறப்பெற்று ரதத்தினின்று இறங்கி பூமியிலிருக்கும் பொழுது சத்ரு ராஜாக்கள் தாம் ரதத்திலிருந்தும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையால் மதி மயங்கப்பெற்று என்னை அடிக்காமலே இருந்தார்கள். இப்படி மஹோபகாரஞ்செய்த அம்மஹானுபாவனுடைய சரித்ரங்கள் என் மனத்தில் மாருதிருக்கின்றன. ஓ மன்னவனே! ஆழ்ந்த கருத்துடையவைகளும் அழகியவைகளுமான பரிஹாஸ வாக்யங்களும் 'ஓ பார்த்த! ஏ அர்ஜுனு! ஓ நண்பனே! ஓ குருநந்தனு!' என்று அழைத்துச் சொல்லுகிற மனத்திற்கினிய மற்றும் பல வாக்யங்களும் இப்பொழுது நினைவுக்கு வந்து என் மனத்தை அறுக்கின்றன. படுத்தல் உட்காருதல் திரிதல் பேசுதல் புசித்தல் முதலிய வ்யாபாரங்களில் ஒத்திருக்கையால் வேறு

பாடில்லாத நான் மதிகேடினால் தேவர்களுக்குத் தேவனா கிய அந்த பகவானை இங்ஙனம் அவமதிக்கையில், அவன் எல்லையில்லாத மஹிமையுடையவனாகையால், நண்பன் செய்த அபராதத்தை நண்பன் போலவும், பிள்ளையின் பிழையைத் தந்தைபோலவும், எனது பிழைகளை யெல் லாம் பொறுத்திருந்தான். மற்றும், 'க்ருஷ்ணா! நீ மிக வும் ஸத்யவாதியல்லவா! உன்னைப்போல் ஸத்யம் பேசுமவன் மற்றொருவனும் இல்லையப்பா!' என்று நான் அவ னைப் பலவாறு அவமதித்துப் பரிஹாஸஞ் செய்யினும் மஹானுபாவனாகையால் அவன் அவற்றையெல்லாம் நினைக்காமல் பொறுத்திருந்தான். அம்மஹாபுருஷனு டைய செயல்கள் இப்பொழுது நினைவுக்கு வந்து என் நெஞ்சை உருக்குகின்றன. ராஜஶ்ரேஷ்டனே! அங்ங னம் உட்காருதல் படுத்தல் புசித்தல் முதலிய செயல்க ளெல்லாவற்றிலும் தொடர்ந்திருந்த நான் என்னோ டொத்த ஸுக துக்கங்களையுடையவனும் அளவில்லாத அன்பிற்கிடமும் எனக்கு ஹிதஞ்செய்பவனும் என் மனத் திற்கினியனும் என்நெஞ்சில் நிறைந்து மாறாதிருப்பவ னும் புருஷோத்தமனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து, ஓ மன்னவனே! த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து மூன்றடி கள் இரந்து உலகமெல்லாம் அளந்த மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மனைவிக் கூட்டத்தைப் பாது காத்து அழைத்துக்கொண்டு வரும்பொழுது வழியில் துஷ்டர்களால் அபலையெனப்படும் ஓர் மாதுபோல், இடையர்களால் ஜயிக்கப் பெற்றேன். (தோல்வியடை யப் பெற்றேன்). முன்பு பகவானோடிருக்கும் பொழுது எந்த தனுஸ்ஸோ, அதே தனுஸ்ஸு தான இப்பொழு தும். பாணங்களும் அவையே. ரதமும் அதுவே. குதி ரைகளும் அவையே. நானும் அப்பொழுது ரதிகர்களில் சிறப்புற்றிருந்த அவனே. எந்த தனுஸ்ஸு முதலிய

வற்றால் என்னே ராஜாக்கள் அனைவரும் மேன்மையுற்ற வனாகப் பாவித்துக்கொண்டிருந்தார்களோ, அவைகளே இப்பொழுதிருப்பவைகளும். ஆயினும், அந்த தனுஸ் ஸு முதலியதெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்த பின்பு இல்லாததைப் போன்று பஸ்மாஹுதி போலும், துர்ப் புத்தியனான ப்ராஹ்மணன் செய்யும் தானாதி ஸத்காரம் போலும் களர் நிலத்தில் விதைத்த விதைபோலும் ப்ர யோஜன மற்றவையாயின. ராஜனே! த்வாரகையில் நீர் கேட்ட நமது நண்பர்களில் நாலைந்து பேர்கள் தான் மிகுந்திருக்கின்றார்கள். மற்றவர்களனைவரும் ரிஷிக ளின் சாபத்தினால் மதி மயங்கி மதங்கொடுப்பதான மத் யத்தைப் பருகி அந்த மத்ய மதத்தினால் ஸ்வாதீன மற்ற மனமுடையவராகி, ஒருவர்க்கொருவர் தெரியாதவர் போல் ஒருவரை யொருவர் முட்டிகளால் அடித்துக் கொண்டு மாண்டார்கள். இது பெரும்பாலும் ஜ்ஞா னாதி குணங்கள் நிறைந்தவனும் எல்லாவற்றையும் தன் னிஷ்டப்படி நடத்துந்தன்மையனுமாகிய ஈஶ்வரனுடைய செயலே. அவனுடைய ஸங்கல்பத்தினால் நடந்ததே யன்றி வேறன்று. ப்ராணிகள் ஒன்றோடொன்று ஒத் திருப்பதும் ஒன்றையொன்று ஹிம்ஸித்துக் கொள்வது மாகிய இவை பகவானுடைய செயலே. ஆகையால் இவர்களும் அந்த ஈஶ்வரனுடைய ஸங்கல்பத்தினால் சில காலம் வாழ்ந்திருந்தார்கள். அவனுடைய ஸங்கல்பம் மாறினபடியால் இப்பொழுது ஒருவரை யொருவர் அடித் துக்கொண்டு மாண்டார்கள். ஜலத்தில் மத்ஸ்யங்களுக் குள் சிறிய மத்ஸ்யங்களைப் பெரிய மத்ஸ்யங்கள் பிடித் துத் தின்பதும் பெரிய மத்ஸ்யங்களிலும் பலமற்றவை களை பலமுள்ளவை ஹிம்ஸிப்பதும், பலமுள்ள பெரிய மத்ஸ்யங்கள் ஒன்றை யொன்று ஹிம்ஸிப்பதும் உலகத் தில் எப்படி நடக்கின்றனவோ, அப்படியே ஈஶ்வரன்

பலிஷ்டர்களும் பெருமையுடையவருமான யாதவர்களைக் கொண்டு துர்ப்பலர்களான மற்றவரை மாள்வித்து, அப்பால் யாதவர்களைக்கொண்டு யாதவர்களையே ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு முடியச்செய்து பூமியின் பாரங்களைப் போக்கினான். தேசகாலங்களுக்குத் தகுந்த ப்ரயோஜனங்களை வெளியிடுமவைகளும் கேட்பவருடைய மனத்திலுள்ள துக்கங்களை அணைப்பவைகளுமாகிய கோவிந்தனுடைய (ஸ்ரீக்ருஷ்ணனுடைய) வசனங்கள் நினைவுக்கு வந்து என்மனத்தை உருக்குகின்றன' என்றான்.

இங்ஙனம் அர்ஜுனன் ஆழ்ந்து அளவிறந்ததுமாகிய ஸ்னேஹத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவன் புத்தி வருத்தங்களெல்லாம் தொலைந்து கலக்கமற்றுத் தெளிவு பெற்றது. ஸ்ரீவாஸுதேவனுடைய பாதாரவிந்தங்களை த்யானஞ் செய்தமையால் ஊக்கம் வளரப்பெற்ற பக்தியால், நெடுநாள் மனத்தில் படிந்திருக்கையால் அழிக்க முடியாத ராகாதி தோஷங்களெல்லாம் தொலைந்து மதிதெளியப்பெற்றவனும் வல்லவனுமாகிய அர்ஜுனன் யுத்தாரம்பத்தில் கீதோபநிஷத்தின் மூலமாய் பகவான் உபதேசித்ததும் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மை, பரமாத்மாவை அடைவதற்கு வேண்டிய உபாயங்கள் ஆகிய இவற்றை அறிவிப்பதுமாகிய தத்வஜ்ஞானமெல்லாம் நெடுநாளாய் மறந்திருந்து இப்பொழுது மனக்கலக்கங்களெல்லாம் தீரப்பெற்றமையால் அந்த நுண்ணறிவு முழுவதும் மனத்தில் தெளிவாகத் தோன்றப்பெற்றான். பகவான் தன் லோகம்போன வ்ருத்தாந்தத்தையும் யதுகுலம் அழிந்ததையும் கேட்டு யுதிஷ்டிரன் மனத்தை விவேகத்தினால் ஸமாதானப் படுத்திக்கொண்டு எல்லை

யில்லாத பேராநந்தம் கொடுக்கவல்ல பரலோகம் போகும் வழியில் மதியைச்செலுத்தினை. யதுகுலம்பாழானதை யும் பகவான் தனது லோகஞ்சென்றதையும் அர்ஜுனன் சொல்லக்கேட்ட குந்தியும் ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்து இந்த்ரியங்களால் விளையும் அறிவுக்கு எட்டாதவனுமாகிய அந்த பகவானிடத்தில் எந்த ப்ரயோஜனத்தையும் எதிர் பாராத பக்தியால் மனத்தை நிலைநிறுத்திஸம்ஸாரத்தில் வைராக்யம் உண்டாகப்பெற்றாள். கர்மத்தினால் விளையும் ஜன்மமில்லாத பகவான் மானிட உருவம் போன்ற எந்தச் சரீரத்தைக்கொண்டு பூமியின் பாரத்தைப்போக்கினனோ அந்தச் சரீரத்தை விட்டுத்தனக்கு அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்துடன் தனது லோகம்போய்ச்சேர்ந்தான். ஶௌனகரே! ஒரு முள்ளைக் கொண்டு காலில் பொற்றுக் கொண்டிருக்கிற மற்றொரு முள்ளை எடுத்து அவ்விரண்டு முள்ளுகளையும் வீசி யெறிவதுபோல், பகவானாகிய ஸ்ரீக்ருஷ்ணன் யதுவம்சத்தில் அவதரித்து லோகங்களுக்கு முள்போல் பாதை செய்யுந் தன்மையரான துஷ்டர்களை யெல்லாம் ஸம்ஹாரஞ்செய்து அதற்காகத் தான் கொண்ட சரீரத்தையும் தான் ஸம்ஹரித்த துஷ்டர்களின் சரீரத்தையும் துறந்து தன் லோகம்போய்ச்சேர்ந்தான். பகவான் சேதனு சேதனங்களெல்லாவற்றிலும் உள்ளே புகுந்திருப்பவனுகையால் அவனுக்கு உலகங்களெல்லாம் சரீரமே. ஆகையால் அவன் துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்காகக் கொண்ட சரீரத்தையும் ஸம்ஹரித்த சரீரங்களையும் துறந்து சென்றான். அவனுக்கு இரண்டு சரீரங்களும் துல்யமே. நாட்டிய மாடுகிற நடன் நாட்யத்திற்கு வேண்டிய வெவ்வேறு வேஷங்களைக்கொண்டு, நாட்யம் முடிந்தபின்பு, எப்படி தன்னுருவத்துடன் இருப்பானே, அப்படியே பகவா



187. தர்மபுத்ரன் பரீக்ஷித்துக்குப் பட்டாபிஷேகம் செய்தல்.

னும் அந்தந்த ப்ரயோஜனங்களுக்காக மத்ஸ்யாதி உருவங்களைக் கொண்டு அந்த ப்ரயோஜனங்கள் தீர்ந்தபின்பு அந்த மத்ஸ்யாதி உருவங்களை விட்டுத் தனக்கு அஸாதாரணமான உருவத்துடன் இருந்தான். இப்பொழுதும் அங்ஙனமே எந்த உருவத்துடன் பூபாரத்தைப் போக்கினானோ, அந்த மானிட உருவத்தைத் துறந்து தனது திவ்யமங்கள விக்ரஹத்துடன் தன்னுடைய லோகம் போய்ச் சேர்ந்தான். அனைவரும் கேட்கத் தகுந்த அழகான கதைகளையுடைய பகவானான முகுந்தன் தனக்கு அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்துடன் என்றைத் தினம் இந்த பூமியைத்துறந்து சென்றானோ, அன்றைத்தினமே அவிவேகிகளுக்கு அசுபம் விளைப்பதான கலியுகம் தொடங்கிற்று. அப்பால் யுதிஷ்டிரன் தனது ராஜ்யத்திலும் க்ருஹத்திலும் ஜனங்களின் சரீரங்களிலும் அந்தக் கலி தொடர்ந்திருப்பதை அறிந்து அதனால் விளைகிற லோபம் பொய் கபடம் ஹிம்ஸை முதலிய அதர்மங்களின வரிசையைக்கண்டு க்ருஹத்தினின்று புறப்பட்டுப்போவதற்கு முயற்சிகொண்டான். அதன்பிறகு ராஜாவான யுதிஷ்டிரன் குணங்களால் தனக்கு மிகுதியும் ஒத்திருப்பவனும் வணக்கமுடையவனும் பேரனுமாகிய பரீக்ஷித்தை ஹஸ்தினா புரத்தில் ஸமுத்ரங்களை அரைநாண் மாலையாகப்பெற்ற பூமிக்குப்பர்த்தாவாக அபிஷேகஞ் செய்தான். அங்ஙனமே மதுரையில் வஜ்ரனென்னும் பேருடைய யதுகுல குமாரனை அவன் சூரஸேன தேசங்களுக்குப் பதியாகப் பட்டாபிஷேகஞ்செய்தான். அப்பால் ராஜனாகிய அந்த யுதிஷ்டிரன் ப்ரஜாபதியை தேவதையாகவுடைய ஓர் யாகத்தைச்செய்து ஆஹவனீயம் முதலிய அக்னிகளை ஆத்மஸமாரோபணஞ்செய்தான். அனந்தரம் அங்ஙனம் இத்தனைகாலமாய் அணிந்து வந்த வெண்பட்டு முதலிய ஆடைகளையும் தோள்

வளை முதலிய ஆபரணங்களையும் மற்றுமுள்ள போகவஸ்துக்களையும் துறந்து தேஹத்தைத் தொடர்ந்த பந்துக்களிடத்தில் தன்னுடையவரென்னும் அபிமானத்தையும் அறுத்து தேஹமே ஆத்மாவென்னும்ப்ரமமாகிற அஹங்காரமற்றவனாகி ப்ரக்ருதிமுதலிய பந்தங்களெல்லாம் கழிந்தனவாகக் கருதி, வாக்குமுதலிய கர்மேந்த்ரியங்களின் வ்யாபாரத்தையும் கண்முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களின் வ்யாபாரத்தையும் மனத்தில் ஹோமஞ்செய்தான் (மனத்திற்கு அதீனமென்று நினைத்தான்.) அம்மனத்தை ப்ராணனில் ஹோமஞ்செய்தான். அந்த ப்ராணனை அபானத்திலும், மலமூத்ரங்களை வெளித்தள்ளுகையாகிற தன் வ்யாபாரத்தோடு கூடின அவ்வபானத்தை உதானத்திலும், அவ்வுதானத்தைம்ருத்யுவென்னும் பேருடைய ஸமானத்திலும் அந்த ஸமானத்தை ப்ராணன் முதலிய பஞ்சவாயுக்களுக்குங்காரணமான வாயுவினிடத்திலும் ஹோமஞ்செய்தான். மனனஞ்செய்யுந் தன்மையுடைய அந்த யுதிஷ்டிரன், பஞ்ச பூதங்களையும் இந்த்ரியக் கூட்டங்களையும் ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்று மூன்று வகைப்பட்ட அஹங்காரத்திலும், அவ்வஹங்காரத்தை ஒன்றான ப்ரக்ருதி தத்வத்திலும் ஹோமஞ்செய்தான். அனந்தரம் வாக்குமுதல் ப்ரக்ருதி வரையிலுமுள்ள தத்வங்களை யெல்லாம் ஜீவனிடத்திலும், அந்த ஜீவாத்மாவை அழிவில்லாத பரப்ரஹ்மத்தினிடத்திலும் ஹோமஞ்செய்தான். அப்பால் மரவுரியைவஸ்த்ரமாக உடுத்து ஆஹாரத்தைத் துறந்து வாக்கை அடக்கி மௌனவ்ரதத்தை ஏற்றுக்கொண்டு தலைமயிர்களை அவிழ்த்து விரித்து ஒன்றும் அறியாதவனுடன் போலும் பைத்யம் பிடித்தவன் போலும் பிசாசம்போலும் தன்னைப் பிறர் நினைக்கும்படி தன்னுருவத்தைக்காட்டிக்கொண்டு செவிடன்போல் எதையும் செவிகொடுத்துக் கேளா

தவனும் குருடன்போல் எதையும் கண்ணெடுத்துப்பாராதவனுமாகி, பரமபுருஷனை மனத்தில் த்யானித்துக் கொண்டு, ஸம்ஸாரத்தில் வெறுப்புற்ற பல மஹானுபாவர்களால் முன்பு செல்லப்பெற்றதும், எங்குப்போனவர் திரும்பி வர மாட்டார்களோ அத்தகையதும் (தன்னிடம் வந்தவர்களைத் திரும்பிப்போக வொட்டாமல் நல்வழிக்குச்செலுத்துவதும்) ஆகிய வடதிசையைக் குறித்துச் சென்றான். அவனது உடன் பிறந்தவர் அனைவரும்போக நிச்சயித்து விவேகமுற்றவராகி அந்த யுதிஷ்டிரனைத் தொடர்ந்து புறப்பட்டார்கள். அந்த யுதிஷ்டிராதிகள், பூமியிலுள்ள ப்ரஜைகளெல்லாம் அதர்மத்தையே நண்பனாகக்கொண்ட கலியினால் தீண்டப்பெற்றிருப்பதைக் கண்டு தேஹம் தேஹத்தைப்பற்றினபந்துக்கள் முதலிய எல்லாப்பதார்த்தங்களையும் அஸாரமாக (அற்பமாக) நினைத்து எதையும் பொருள்செய்யாமல் தமதுசரீரத்திற்கு மரணம் வந்திருப்பதை அறிந்து பகவானுடைய பாதாரவிந்தங்களை மனத்தில் த்யானித்தார்கள். அங்ஙனம் ஸ்ரீவைகுண்டனுடைய பாதாரவிந்தங்களை த்யானிப்பதால் பக்திவளர்ந்துவரப் பெற்று அதனால் தெளிந்த மனமுடையவராகி நாராயணனென்று கூறப்படுகிற பரமபுருஷனிடத்தில் மதி நிலைநின்றிருக்கப்பெற்று, ஶப்தாதி விஷயங்களில் தாழ்ந்த மனமுடைய துர்புத்திகளால் வருந்தியும் பெறமுடியாத மோக்ஷகதியை அடைந்தார்கள். அவர்கள் பகவானை அடைவதற்குத் தடையான பாபங்களை யெல்லாம் உதறி ரஜஸ்ஸும் தமஸ்ஸும் தீண்டப்பெறாத உருவத்துடன் நாராயணனுடைய ஸ்தானம்போய்ச் சேர்ந்தார்கள். விதுரனும் சிறிது காலம் தீர்த்தயாத்ரையாகத் திரிந்து பாண்டவாதிகளின் கதியைக் கேட்டு பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகையால் சிறிதும் வருந்தாமல் ப்ரபாஸ தீர்த்தத்தில்

தேஹத்தை விட்டு ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே யிருந்த ஊக்கமுடையவனைகையால அவனிடத்தினின்று மனம் போகப்பெறுதவனுகிப் பித்ரு தேவதைகளுடன் தன்னுடைய ஸ்தானம் போய்ச்சேர்ந்தான். அப்பொழுது த்ரௌபதியும் தன்பர்த்தாக்களாகிய தர்மபுத்ராதிகள் ஸம்ஸாரத்தில் விருப்பற்று மோக்ஷகதியைக் குறித்து முயன்றமை கண்டு பகவானை வாஸுதேவனிடத்தில் நிலைநின்ற மதியுடையவளாகி அந்த வாஸுதேவனை அடைந்தாள். இங்ஙனம் படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் சுபங்கொடுப்பதும் பரிசுத்தமுமாகிய பகவான் தனது லோகஞ்சென்ற வ்ருத்தாந்தத்தையும் பாண்டவர் மோக்ஷகதி அடைந்த வ்ருத்தாந்தத்தையும் எவன் விருப்பத்துடன் கேட்பானே, அம்மனிதன் ஸ்ரீபகவானிடத்தில் பக்தி உண்டாகப்பெற்று மோக்ஷஸித்தியைப்பெறுவான். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து மஹாராஜன் திக்விஜயத்தில் பூமியோடும் தர்ம தேவதையோடும் ஸம்வாதஞ் செய்தல்.

ஸூதர் சொல்லுகிறார்:—அங்ஙனம் பாண்டவர்கள் போனபின்பு மஹாகுணசாலியான அந்தப் பரீக்ஷித்து, அந்தணரே! அவன் பிறந்தவன்று ஜாதகம் அறிந்த ப்ராஹ்மணர்கள் எங்ஙனம் மொழிந்தார்களோ, அங்ஙனமே ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களின் சிக்ஷையால் மஹாபாகவதனுகி (பகவானிடத்தில் சிறந்த பக்தியுடையவனுகி) பூமியைப் பாதுகாத்து வந்தான். அவன் தனது மாமனுகிய உத்தரனுடைய புதல்வியான இராவதியென்பவளை மணம் புரிந்து, அவளிடத்தில் ஜனமேஜயன் முதலிய நான்கு புதல்வர்களைப் பெற்றான். அவன் க்ருபரை ஆசார்யனுக

வரித்துக் கங்கையின் கரையில் மூன்று அஸ்வமேத யாகங்கள் செய்தான். அந்த யாகங்களில் இந்த்ரன் முதலிய தேவதைகள் கண்ணுக்குப் புலப்பட்டு ஹவிர்ப் பாகங்களைப் பெற்றார்கள். (அந்த யாகங்களின் சிறப்பை யும் தூய்மையையும் இனி நான் விடுத்துச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. வீரனாகிய அந்தப் பரீக்ஷித்து ஒருக்கால் திக்விஜயத்தின் பொருட்டுத்திரிந்து கொண் டிருக்கும்பொழுது, ஓரிடத்தில் பாதத்தினால் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு பசுக்களை வதித்துக் கொண் டிருப்பவனும் சூத்ரஜாதியன்போல் தோன்றியும் ராஜா வின் அடையாளங்களைத் தரித்திருப்பவனுமாகிய கலி புருஷனைத் தன் தேஜஸ்ஸினால் (பிறரைப் பரிபவிக் கும் வல்லமையால்) தண்டித்தான்.

ஸௌனகர் சொல்லுகிறார்:— ராஜாவாகிய பரீக்ஷி த்து திக்விஜய ஸமயத்தில் கலியை எந்தக் காரணத்தி னால் தண்டித்தான்? பசுவைக் காலால் அடிப்பவனும் ராஜாவின் அடையாளங்களைத் தரித்திருப்பவனுமாகிய அந்தச் சூத்ரன் எத்தகையன்? ஓ ஸூதரே! மிகுந்தபா க்யமுடையவரே! கலியைத் தண்டித்தது முதலிய வ்ருத் தாந்தங்களை நாங்கள் கேட்கிறோமென்பதற்காக நீர்சொ ல்லவேண்டாம். மஹானுபாவரே! எதுவும் விஷ்ணுவின் கதையைத் தொடர்ந்திருக்குமாயின், அல்லது இந்த வி ஷ்ணுவின் பாதாரவிந்தங்களின் மதுவைப் பருகுந்தன் மையரான ஸாதுக்களின் கதையைத் தொடர்ந்திருக்கு மாயின், அதையே எங்களுக்குச் சொல்லவேண்டும். ஓ ஸூதரே! அற்பமான ஆயுளுடையவரும் கர்மபலனை அனுபவிக்க விரும்புவோர்களும் மரணம் அடையுந் தன் மையருமான மனிதர்களைத் தொடர்ந்தவைகளும் ஒரு ப்ரயோஜனமுமின்றி ஆயுளை அழிப்பவைகளும் விஷ்ணு

வோடாவது அவனது பக்தர்களோடாவது தொடர்ச்சி யற்றவைகளுமான மற்ற வீண்வார்த்தைகளை வர்ணிப்ப தாலும் கேட்பதாலும் எந்த ப்ரயோஜனமும் உண்டா காது. உண்மையான பரப்ரஹ்மத்தைப் பெற விரும்பு வோர்களும் குறைந்த ஆயுளுடையவர்களும் மரணம் அ டையுந் தன்மையருமாகிய நமக்கு மற்ற வீண் வார்த்தை களால் என்ன ப்ரயோஜனம்? எந்த வ்ருத்தாந்தங்களைக் கேட்கில் வீணாக வாழ்நாள் அழிந்துபோவது மாத்ரமே யன்றி மற்றொரு ப்ரயோஜனமும் உண்டாகாதோ அத் தகைய வீண்வ்ருத்தாந்தங்கள் நமக்கு வேண்டியதில்லை. அவற்றை நாம் வர்ணிப்பதும் கேட்பதும் தகுதியன்று. 'ஆனால் இப்படி கேள்விகள் கேட்பதும் விடை கொடுப் பதுமாயிருந்தால் இந்தப் புராணம் முழுவதையும் கேட்க வும் சொல்லவும் நமதாயுள் போதாதே. நாம் எப்பொ ழுது மரணம் நேரப் பெறுவோமென்பதும் நமக்கு நிச் சயிக்க முடியாதே. ஆகையால் இங்ஙனம் பொழுது போக்குவது யுக்தமன்றோ' என்று நினைக்கிறீரோ? அங்ஙனஞ் சங்கிக்கவேண்டாம். இந்த நைமிச க்ஷேத்ர த்தில் பகவானுடைய குணங்களை வர்ணிப்பதும் கேட் பதுமாகிற ப்ரஹ்ம ஸத்ரமென்னும் ஸத்கர்மத்தில் பக வானுன ம்ருத்யு இங்கு வந்திருக்கும்படி அழைக்கப்பெ ற்று வந்திருக்கின்றான். அவ்வந்தகன் இங்கு எவ்வளவு காலம் இருப்பானே அதுவரையில் இங்கு ஒருவனும் மர ணம் அடையமாட்டான். இங்கிருப்பவர் எவரும் மரணம் அடையலாகாதென்கிற இந்த ப்ரயோஜனத்திற்காகவே மஹர்ஷிகளால் ம்ருத்யு தன் வ்யாபாரத்தைத் துறந்து இங்கு வந்து பகவானுடைய குணங்களைக் கேட்கும்படி அழைக்கப்பெற்று வந்திருக்கின்றான். மனுஷ்ய லோகத் தில் விஷ்ணுவின் லீலைகளை எடுத்துரைப்பதும் அம்ருதம்

போன்றதுமாகிய வசனத்தைப் பருகுவதே (கேட்பதே) முக்யம். இங்ஙனம் எவர் பகவானுடைய அம்ருதம் போன்ற சரித்ரத்தைப் பருகுவார்களோ அவரது பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்! ஏனென்னில், செயலும் புத்தியும் ஆயுளும் அற்பமாயிருக்கப்பெற்ற ஒருவன் பகவானுடைய லீலைகளாகிற அம்ருதத்தை உட்கொண்ட வசனத்தைக்கேளா திருப்பானாயின், அவனுடைய வயது ராத்ரியில் தூக்கத்திலும் பகலில் விண்வ்யாபாரங்களாலும் கழிகிறதேயன்றி ஒருபயனும்பெறுவதில்லை. பகவானுடைய கதைகளைக் கேட்கும் மனிதனுடைய வயதெல்லாம் ஸபலமே' என்றார்.

ஸூதர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து திக்விஜயத்திற்காகப் புறப்பட்டுக் குருஜாங்கல தேசங்களில் வஸித்துக்கொண்டிருக்கையில் தனது ஆஜ்ஞைக்கு உட்பட்ட தேசத்தில் கலி புகுந்தானென்கிற மிகுதியும் அனிஷ்டமான வ்ருத்தாந்தத்தைக் கேட்டு உடனே யுத்தத்தில் ஸமர்த்தனாகிய அம்மன்னவன் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டான். அப்பால் நன்கு அலங்கரிக்கப்பெற்றுக் கறுத்த குதிரைகள் பூட்டினதும் ஸிம்ஹத்வஜம் கட்டினதுமாகிய ரதத்தில் ஏறிக்கொண்டு ரதகஜதுரகங்களாகிய நான்கு அங்கங்கள் அமைந்த ஸேனை சூழ்ந்துவரப்பெற்று திக்விஜயத்திற்காகக் குருஜாங்கல தேசத்தினின்று அம்மன்னவன் புறப்பட்டான். அவன் பத்ராஸ்வம் கேதுமாலம் பாரதம் கிம்புருஷம் முதலிய வர்ஷமென்று வழங்கும் பூமியின் பாகங்களையும் உத்தர குரு தேசங்களையும் ஜயித்து அவரவரிடத்தில் கப்பம் பெற்றான். அவன் அந்தந்த தேசங்களில், ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையை அறிவிப்பதும் மஹானுபாவர்களான தனது பூர்விகர்களைச் சேர்ந்ததுமான புகழைப் பாடக்கேட்டான். மற்றும், அவன் தன்னை அஸ்வத்தா

மாவின் ப்ரஹ்மாஸ்த்ரத்தினுடைய தேஜஸ்ஸினின்று ஸ்ரீக்ருஷ்ணன் பாதுகாத்ததையும் வ்ருஷ்ணிகளுக்கும் பாண்டவர்களுக்கும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலுள்ள ப்ரீதியையும் பக்தியையும் ஆங்காங்குள்ளவர்சொல்லக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அந்த ஸந்தோஷத்தினால் கண்கள் மலரப் பெற்றுக் கம்பீர மனமுடைய அம்மன்னவன் அங்ஙனம் சொல்லும் ஜனங்களுக்கு விலையுயர்ந்த வஸ்துக்களையும் அத்தகைய ஆடைகளையும் அத்தகைய முத்துமாலைகளையும் கொடுத்தான். அவ்வரசன், தன்னிடத்தில் ஸ்னேஹமுடையவரான பாண்டவர்களிடத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் நடத்தின தேரோட்டுதல், ஸபையில் ந்யாய அந்யாயங்களை நிர்ணயிக்கும் அதிகாரத்தை நிறைவேற்றுதல், ஊழியஞ் செய்தல், தூதுபோதல், அரசன் ஆஸனத்தில் வீற்றிருக்கையில் அவனைத் தொடர்ந்து பணிதல், துதித்தல், வணங்குதல் ஆகிய இச்செயல்களையும், அவனை உலகமெல்லாம் பணிந்துகொண்டிருந்ததையுங் கேட்டு, எங்கும் நிறைந்தபொருளாகிய அம்மஹானுபாவனுடைய பாதாரவிந்தங்களில் பக்தி செய்தான். அந்தப் பரீக்ஷித்து தனது பூர்விகர்களான யுதிஷ்டிராதிகளின் நடத்தையைத் தினந்தோறும் தொடர்ந்து கொண்டிருக்கையில், அவனுக்கு ஸமீபத்தில் பெரிய ஓர் ஆச்சர்யம் நடந்தது. அதைச் சொல்லுகிறேன், கேள். தர்மதேவதை வ்ருஷபத்தின் உருவங்கொண்டு ஒற்றைக் காலால் உலாவுவதாகி, ஒளியற்றதும் குழந்தையை இழந்த தாய் போன்றதும் முகத்தில் கண்ணீர் வழியப்பெற்றதும் பசுவின் உருவந் தரித்ததுமாகிய பூமிதேவியைப் பார்த்து வினவியது.

தர்மதேவதை சொல்லுகிறது:— 'மங்களஸ்வபாவமுடையவளே! உன் உடம்பு ரோகங்களொன்றுமில்லா

மல் ஸௌக்யமாயிருக்கின்றதா? நீ வாடின முகத்துடன் நிறம் மாறப்பெற்றிருக்கின்றாய். உன்னை உற்றுப்பார்க்கையில், நீ மனத்தில் ஏதோ வருத்தமுற்றிருப்பதுபோல் தோற்றுகிறது. அம்மே! உன் முகவாட்டத்தையும் நிறம் மாறுதலையும் பற்றி, நீ தூரதேசஞ் சென்ற ஓர் பந்துவைப் பற்றிச் சோகிக்கிறாயென்று நான் ஊஹிக்கிறேன். மற்றும், மூன்று கால்கள் குறையப்பெற்று ஒற்றைக்காலுடையதுமாகிய என்னைக் குறித்துச் சோகிக்கின்றாயா? அல்லது, 'சூத்ரர்கள் போன்று தர்ம மார்க்கத்தில் நிலை நில்லாதவர் மன்னவராய் வந்து என்னை இனி அனுபவிக்கப் போகின்றார்களே' என்று உன்னைப் பற்றிச்சோகிக்கின்றாயா? யாகஞ்செய்பவரில்லாமையால் யாகங்களில் ஹவிர்ப்பாகம் நேரப்பெறாத வானவர்களைப்பற்றி வருந்துகின்றாயா? அல்லது, இந்த்ரன் மழை பெய்யாமையால் துர்ப்பிக்ஷத்தினால் பீடிக்கப்பெற்ற ப்ரஜைகளைப் பற்றி வருந்துகின்றாயா? அல்லது, பூமி! ராக்ஷஸர்போன்ற கொடியர்களால் பீடிக்கப்பெற்ற இளைஞர்களைப் பற்றியாவது, அல்லது தந்தை கணவன் புதல்வன் முதலியவர்களால் பாதுகாக்கப்பெறாத பெண்களைப் பற்றியாவது வருந்துகின்றாயா? அல்லது, ப்ராஹ்மணகுலம் தர்மத்தினின்று நழுவிக் கெட்டவழியில் சென்றிருக்கையால், விஷ்ணுவின் ஸ்வரூப ரூபகுண விபூதிகளை அறிவிக்கிற வேதம் தன்னை ஆதரிப்பாரற்று வருந்துவதைப் பற்றிச் சோகிக்கின்றாயா? அல்லது, ராஜவம்சமெல்லாம் ப்ராஹ்மணர்களை ஆதரிக்காமல் அவமதிக்கையால், குலங்களில் சிறந்த அவ்வந்தணர்களைப் பற்றி வருந்துகின்றாயா? அல்லது, க்ஷத்ரியர்கள் கலியினால் தீண்டப் பெற்றுத் தமது தர்மத்தைத்துறந்து மேன்மை குலைந்து தாழ்ந்திருப்பதைப்பற்றி வருந்துகின்றாயா? அல்லது அந்த க்ஷத்ரிய அதமர்களால் பீடிக்கப்

பெற்ற தேசங்களைப்பற்றி வருந்துகின்றாயா? அல்லது, இங்கு மங்கும் போகக்கூடாத தேசங்களுக்குப்போய் அன்னம் பானம் ஸ்னானம் ஸ்த்ரீஸம்போகம் இவைகளில் விருப்புற்று வருந்துகிற ப்ராணிஸமூஹத்தைப்பற்றிச் சோகிக்கின்றாயா? அல்லது, அம்மா! பூமி! உனது அளவில்லாத பாரத்தைப் போக்கும்பொருட்டு அவதரித்த அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இப்பொழுது அந்தர்த்தானம் அடைந்தமையால் (மறைந்து போனமையால்) அவனுடைய அஸந்நிதானத்தில் நேரே புலப்படுகின்றவை போல் நெஞ்சில் தோற்றி ஸுகத்திற் கிடமாகாமல் துக்கத்தை விளைவிப்பவைகளுமான அவனுடைய செயல்களை நினைத்து வருந்துகின்றாயா? பூமிதேவி! உனக்கு இங்ஙனம் நேர்ந்திருக்கிறமனவருத்தத்தின்காரணத்தை எனக்குச் சொல்வாயாக. எந்த வருத்தத்தினால் இப்படி இளைப்புற்றிருக்கின்றாயோ, அப்படிப்பட்ட வருத்தம் யாது? அம்மா! தேவர்களும் வெகுமதிக்கத் தகுந்ததும் அனைவரும் ஆசைப்படக்கூடியதுமாகிய உன் ஸௌந்தர்யம் (அழகு), பலிஷ்டர்களையும் தன் வசப் படுத்திக்கொண்டு பலீயஸ்ஸாயிருக்கின்ற காலத்தினால் பறிக்கப்பெற்றதோ?' என்று வினவியது.

இங்ஙனம் வினவப்பெற்ற பூமிதேவி தர்மதேவதையைப்பார்த்து இங்ஙனம் மொழிந்தாள். 'அந்த என் மனவருத்தத்தின் காரணமெல்லாம் உனக்கே தெரியும். உனக்குத் தெரியாதாயின், நீ இங்ஙனம் தர்மங்களை வினவுகின்றாயே, இது எப்படி பொருந்தும்? ஆயினும் அது என்னென்று கேட்பின், சொல்லுகிறேன் கேட்பாயாக. நீ இத்தனைகாலம், உலகங்களுக்கு ஸுகத்தை விளைப்பனவாகிய நான்கு பாதங்களோடு ஸுகமாயிருந்ததும், இப்பொழுது ஒற்றைக்காலால் வருந்துவதும்

எதைப்பற்றியோ, அதுவே என் மனவருத்தத்திற்கும் காரணம். ப்ராணிகளுக்கு ஹிதஞ்செய்தல், உண்மை, தோஷங்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கை, அபராதஞ் செய்தவர்களையும் பொறுத்தல், சிறைவினால் எதிலும் ஆவலற்றிருக்கை, தானம் எவ்வகையிலும் வருத்தமின் றிக் களிப்புற்றிருக்கை, மனம் வாக்கு செயல் இவை ஒத் திருக்கை, மன அடக்கம், மற்ற இந்த்ரியங்களை அடக் கிக்கொண்டிருத்தல், உலகங்களைப் படைப்பதற்குரிய ஆலோசனை, பசி தாஹம் முதலிய விகாரங்களற்றிருக் கை, ஸுகதுக்கம் முதலிய த்வந்த்வங்களால் தடைபடா திருத்தல், வீண்செயல்களினின்று ஓய்தல், ஸகல சாஸ் த்ரங்களின் பொருள்களையும் உண்மையாக உணர்தல், தன்னைப் பற்றினார்க்கு இஷ்டங்களைக் கொடுத்தல் அனிஷ்டங்களைப் போக்குதல் ஆகிய இவைகளுக்குரிய அறிவு, ஸப்தாதி விஷயங்களில் விருப்பின்மை,ஸப்தாதி விஷயங்களால் இழுக்கப்படாத மனமுடையவனாகை, தன்னையொழிந்த மற்றையனைவரையும் நியமித்துக் கொண்டிருத்தல். யுத்தங்களில் மூகம் மாறவையாமை, எவர்க்கும் எதிர்க்க முடியாமை, வலிமை, ஒருவன் பல அபராதங்கள் செய்திருப்பினும் அவன் செய்த உபகா ரத்தையே மறவாது நினைத்தல், பிறரை எதிர்பாராமல் ஸ்வதந்த்ரனாயிருத்தல்,வல்லமை, ஸூர்யனும் மழுங்கும் படியான ஒளியுடையனாகை, தன் வீட்டில் நுழைவது போல் யுத்தங்களில் நுழையும்படியான தைர்யம், மேன் மை (கொடியனாயிராமை), ஆசைப்படும்படி அழகியனாயி ருத்தல்,ஸபைகளில் மயங்காமல் தீரமுடையனாயிருக்கை, பெரியோர்களிடத்தில் வணக்கமுடையவனாகை, நல்ல நடத்தை, பொறுக்குந்திறமை, அன்னம் முதலியவற் றால் உண்டான திண்மை, எல்லாவற்றையுந் தரிக்கும் வல்லமை, ஜ்ஞானம் முதலிய குணங்களின் மேன்மை,

ஆழ்ந்த கருத்துடையனுயிருக்கை, கோபம் விளைவதற்கு வேண்டிய காரணங்கள் பல உண்டாயிருப்பினும் கோபம் உண்டாகப் பெறுமை, சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களில் நம்பிக்கை, புகழ், மேன்மைக்கிடமாயிருக்கை, தேஹாத்மாபிமானமில்லாமை ஆகிய இக்குணங்களும், பெருமையை விரும்புவோர் ஆசைப்படத்தகுந்த மற்றும் பல குணங்களும் எவனிடத்தில் எப்பொழுதும் மாறுமல் நித்யமாயிருக்கின்றனவோ, அத்தகையனும் குணங்களுக்கு முக்யமான இருப்பிடமும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப்பிரிந்து பாபத்திற்கிடமான கலியினுல்பார்க்கப்பெற்றதுமாகிய லோகத்தையும் என்னையும் தேவர்களில் சிறந்த உன்னையும் தேவர்களையும் பித்ருக்களையும் ரிஷிகளையும் ஸாதுக்களையும் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரர்களாகிய ஸமஸ்த வர்ணங்களையும் ப்ரஹ்மசாரி க்ருஹஸ்த வானப்ரஸ்த ஸந்யாஸிகளாகிய ஆஸ்ரமங்களையும் பற்றி நான் வருந்துகின்றேன். ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகளனைவரும் எவனுடைய கடைக்கண் பார்வை தம்மேல் விழவேண்டுமென்று நெடுநாள் தவஞ்செய்தார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீமஹாலக்ஷ்மியும் தனது வாஸஸ்தானமாகிய தாமரை வனத்தைத் துறந்து மிகுந்த ஸ்னேஹத்துடன் எந்த பகவானையே அடைந்து அவனது பாதாரவிந்தங்களின் ஸௌந்தர்யத்தை (அழகை) அனுபவிக்கின்றுளோ, அப்படிப்பட்ட பகவானைப் பிரிந்து வருந்துகின்றேன். தாமரைமலர் வஜ்ரம் மாவெட்டி த்வஜம் ஆகியஇவ்வடையாளங்களுக்கு இடமாயிருப்பவைகளும் அழகமைந்தவைகளுமான அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய அடிவைப்புக்களால் அங்கம் முழுவதும் அலங்காரமுற்றிருக்கப் பெற்று ஸம்ருத்திகளெல்லாம் அமைந்து 'இத்

தகைய பாக்யம் உனக்குக் கிடைக்கவில்லையே' என்று ஸ்ரீமஹாலக்ஷ்மியை அவமதித்து மூன்று லோகங்களையும் கடந்து மிகுந்த ஒளியுடையவளாயிருந்தேன். இங்ஙனம் கர்வமுற்றிருக்கிற என்னை அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அவ்வவதாரத்தின் ப்ரயோஜனம் முடிகையில் என்னைக் கைவிட்டுப் போனான். எனக்கு மிகுதியும் பாரமாகி அஸுரஸ்வபாவமுடைய வம்சத்தில் பிறந்தவருமான ராஜாக்களின் அனேகமாயிர அக்ஷௌஹிணிக் கணக்குடைய கூட்டத்தை எவன் அழித்தானோ, மற்றும் பிறர்க்கு உட்படாமல் ஸ்வதந்த்ரனாகிய எவன் இங்ஙனம் மூன்று பாதங்கள் குறையப்பெற்று வருந்துகின்றவனுமாகிய உன்னைத் தன் ஸாமர்த்யத்தினால் நான்கு பாதங்களோடு ஸஞ்சரித்து ஸுகமாயிருக்கச் செய்ய முயன்று யாதவர்களிடத்தில் அழகான உனது அங்கத்தை வளர்த்துக் கொண்டு வந்தானோ, அப்படிப்பட்ட பகவானைப் பிரிந்து எங்ஙனம் வருந்தாதிருப்பேன்? இவன் ப்ரீதி அமைந்த கண்ணோக்கத்தினாலும் அழகிய புன்னகையினாலும் இனியமொழிகளாலும் யாதவஸ்த்ரீகளின் மனத்திண்மையைச் சிறிதுமில்லாதபடி பறித்தானல்லவா. மற்றும், இவனுடைய பாதாரவிந்தங்களால் அலங்கரிக்கப்பெற்ற நான் மயிர்க்கூச்சல் உண்டாகப் பெற்றிருந்தேன். அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிரிவை என்னைப் போன்றவள், எவள் தான் பொறுக்கவல்லளாவாள்?' என்றாள்.

இங்ஙனம் அந்த பூமிதேவியும் தர்மதேவதையும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருக்கையில், அப்பொழுது பரீக்ஷித்தென்னும் மன்னவர்தலைவன் ப்ரபாஸ தீர்த்தத்திற்கு வந்தான். பதினாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

கலிபுருஷன் தர்மதேவதையை உதைத்தல்

ஸூதர் சொல்லுகிறார்:—ராஜனாகிய பரீக்ஷித்து, அவ்விடத்தில் நாதனற்றவைபோல் வதிக்கப் பெற்ற ஓர் பசுவையும் ஓர் வ்ருஷபத்தையும், ராஜாவின் அடையாளங்களைத் தரித்துக் கையில் தடியுடையவனுமாகிய ஓர் சூத்ரனையும் கண்டான். அவற்றில் வ்ருஷபம் தாமரைக் கிழங்குபோல் வெளுத்துச் சூத்ரனால் அடிக்கப்பெற்று பயந்து மூத்ரம் பெய்துகொண்டு ஒற்றைக் காலுடன் நடுங்கி வருத்தமுற்றிருந்தது. பசுவானது, யாகம் முதலிய தர்மானுஷ்டானத்திற்கு வேண்டிய பால் தயிர் நெய் முதலியவற்றைக் கொடுப்பதும், சூத்ரனுடைய இடக்காலால் அடியுண்டதும் மிகுதியும் வருத்தமுற்றதும் கன்றைப் பிரிந்ததுபோன்றிருப்பதும் முகத்தில் கண்ணீர் வழியப்பெற்றதும் இளைப்புற்றதும் புல்தின்ன விரும்புவதுமாயிருந்தது. ஸ்வர்ணமயமான அவயவங்கள் அமைந்த ரதத்தில் ஏறிக்கொண்டிருப்பவனும் நாணேற்றின தனுஸ்ஸையுடையவனுமாகிய அந்தப் பரீக்ஷித்து மேகத்தின் கர்ஜனைபோல் கம்பீரமான குரலுடன் அவ்வெருதையும் பசுவையும் சூத்ரனையும் பார்த்து இங்ஙனம் வினவினான்.

மன்னவன் சொல்லுகிறான்:—'என்னை ரக்ஷகனாகப் பெற்ற இவ்வுலகத்தில் நீ பலிஷ்டனாகி துர்ப்பலர்களை பலாத்காரமாக ஹிம்ஸிக்கின்றனை. நீ யார்? நாட்யமாடுகிற நடன்போல் மன்னவனுடைய வேஷம் பூண்டிருக்கின்றனை. செயலைப் பார்த்தால் சூத்ரனாகத் தோற்றுகின்றனை. தர்மங்களை நடத்துந் தன்மையனான ஸ்ரீக்ருஷ்ணன் வெகுதூரமான லோகாந்தரஞ் சென்ற பின்பு கேட்பாரில்லையென்று நினைத்து நீ சோகிக்கத் தகாதவர்களை ஏகாந்தத்தில் வதிக்கின்றாயாகையால் வதிக்கத்தகுந்

தவனாயிருக்கின்றனை. ஆனதுபற்றியே பந்து ஜனங்களால் சோகிக்க வேண்டிய தசையிலிருக்கின்றனை. தாமரைக்கிழங்கு போல் வெளுத்திருக்கின்ற ஓ வ்ருஷபமே! மூன்று பாதங்கள் குறைந்து ஒற்றைக் காலால் உலாவுகின்றனையே. நீ யார்? இங்ஙனம் ஓர் வ்ருஷபத்தின் உருவங்கொண்டு எம்மை வருத்தச் செய்ய முயன்ற ஓர் தேவனோ? குருவம்சத்திற் பிறந்த மஹானுபாவர்களால் பாதுகாக்கப்பெற்ற இப்பூமண்டலத்தில் உன்னைத் தவிர மற்றை எந்த ப்ராணிகளுக்கும் எப்பொழுதாயினும் இங்ஙனம் சோகத்தினால் கண்ணீர் பெருகுவதைக் கண்டிலேன். ஓ வ்ருஷபமே! நீ சோகிக்கவேண்டாம். இந்தச் சூத்ரனிடத்தினின்று நீ பயப்படுவதைத் துறப்பாயாக. இந்தச் சூத்ரனிடத்தினின்று உனக்கு பயம் தொலையுமாக. அம்மா! துஷ்டர்களைத் தண்டிக்குந்தன்மையுள்ள நான் இருக்கும்பொழுது நீ கண்ணீர் பெருக்கி வருந்தவேண்டிய அவஶ்யமில்லை. உனக்கு க்ஷேமமே உண்டாகும். நல்லியற்கையுடையவளே! எவனுடைய ராஜ்யத்தில் ப்ரஜைகளனைவரும் துஷ்டர்களிடத்தினின்று பயப்படுகின்றார்களோ, அத்தகைய மனவூக்கமற்ற மன்னவனுடைய புகழும் ஆயுளும் பாக்யமும் நற்கதியும் பாழாகின்றன. வருந்தினவர்களின் வருத்தத்தைப் போக்குகையே மன்னவர்களுக்கு முக்யமான தர்மம். ஆகையால் ப்ராணிகளுக்கு அபகாரஞ் செய்பவனும் ஆனதுபற்றியே துர்நடத்தையுடையவனுமாகிய இவனை வதிக்கின்றேன். ஓ வ்ருஷபமே! நாற்கால் ஜந்துவாகிய உனது மூன்று கால்களை எவன் துண்டித்தான்? வடிவங்கொண்ட தர்மம்போன்ற ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து செல்லுந் தன்மையுள்ள ராஜாக்களாகிய எமது ராஜ்யத்தில் உன்னைப்போல் வருந்துமவர் இல்லாதிருப்பார்களாக. ஓ வ்ருஷபமே! உங்களுக்கு க்ஷேமமே

உண்டாகும். நிரபராதிகளும் (அபராதத்தை அறியாதவர்களும்) நல்லியற்கையுடையவருமாகிய உங்கள் சரீரத்தை விரூபஞ் செய்தவனும் பாண்டவர்களின்புகழைப் பாழ் செய்தவனும் எவனோ, அவனை எனக்கு மொழிவீர்களாக. எவன் அபராதஞ் செய்யாத ஜனத்திற்கு த்ரோஹஞ் செய்கின்றானோ, அவன் எவ்விடம் போயினும், என்னிடத்தினின்று அவனுக்கு பயம் தீராது. எவன் அபராதத்தை அறியாத ப்ராணிகளிடத்தில் தடையில்லாமல்த்ரோஹஞ் செய்கின்றானோ,அவன் நேரே தேவனாயினும் தோள்வளை அமைந்த அவனுடைய புஜத்தை அறுத்துக் கொண்டு வருவேன். ஆபத்தில்லாத ஸமயத்தில் தமது தர்மத்தைத் துறந்து கெட்ட வழியில் செல்லும் துஷ்டர்களை விதியின்படி தண்டிக்குந் தன்மையுள்ள மன்னவனுக்குத்தந்தமது தர்மத்தினின்று நழுவாமல் அவற்றில் நிலை நின்றிருக்கும் ப்ரஜைகளைப் பாதுகாக்கையே முக்யமான தர்மம். ஆகையால் நிரபராதிகளான உங்களுக்கு த்ரோஹஞ் செய்தவன் எவனோ அவனைச் சொல்வீர்களாயின், நான் அவனை தண்டித்து விடுகின்றேன்' என்றான்.

தர்மதேவதை சொல்லுகிறது:— பாண்டுவின் வம்சத்தில் பிறந்த நீங்கள் வருந்தினவர்களைப் பார்த்து 'அபயங்கொடுக்கின்றேன்' என்று இங்ஙனம் மொழிவது உங்களுக்கு உரியதே. 'பாண்டுவின் வம்சத்தில் பிறந்தவர்க்கு என்ன விசேஷம்' என்கிறாயோ? சொல்லுகிறேன், கேள். பாண்டுவின் புத்ரர்களான யுதிஷ்டிராதிகள் தமது நற்குணங்களின் தொகுதிகளால்ஸ்ரீக்ருஷ்ண பகவானைத் தூதுபோவது முதலிய வ்யாபாரங்களுக்காக வரித்தார்களல்லவா. இத்தகைய குணகணங்களுக்

கிடமான அவ்வம்சத்தவர் இங்ஙனம் மொழிவது யுக்தமே. ஓபுருஷஶ்ரேஷ்டனே! எங்களுக்கு துக்கத்தை விளைவித்தவன் எவனோ, அப்படிப்பட்ட புருஷனை நாங்கள் அறியோம். துக்கத்தின் காரணங்களைச் சொல்லுகிறவர்களின் பலவகை வாக்யங்களால் நாங்கள் மதிமயங்கப் பெற்றிருக்கின்றோம். துக்கத்தின் காரணங்களைக் கூறுமவர்களில் சிலர் 'இப்படியாவது அப்படியாவது என்று விகற்பத்தையே முக்யமாகக் கொண்டு தனக்குத் தானே துக்ககாரணமென்கின்றார்கள். வேறு சிலர் தெய்வத்தையே (ஜீவனுடைய அத்ருஷ்டத்தையே) துக்கத்திற்குக் காரணமென்கிறார்கள். மற்றுஞ் சிலர் ஜன்மாந்தரகர்மத்தையே துக்ககாரணமாகச்சொல்லுகிறார்கள். இன்னுஞ் சிலர் ப்ரக்ருதியின் மாறுதலையும், சிலர் ஈஶ்வரனையும் துக்ககாரணமாகச் சொல்லுகிறார்கள். சிலர் ஊஹிக்கமுடியாததும் இன்னதென்று சொல்லக்கூடாததுமாகிய ஓர் காரணத்தினால் துக்கம் உண்டாகிறதென்கிறார்கள். இங்ஙனம் அவரவர் மனம்போனபடி நிச்சயிக்கின்றார்கள். ராஜனே! இப்பொழுது விகற்பித்துச் சொன்ன பலவகை துக்ககாரணங்களில்இப்பொழுதுள்ள வருத்தத்திற்கு எது பொருந்துமோ, அதை உன்புத்தியைக் கொண்டு விசாரித்துப்பார்' என்றது. இங்ஙனம் தர்மம் மொழிந்து கொண்டிருக்கையில் ஓ ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களே ஸார்வபௌமனுகிய(சக்ரவர்த்தியாகிய) அந்தப் பரீக்ஷித்து வருத்தந்தீர்ந்து மனவூக்கத்துடன் அந்த தர்மதேவதையின் அபிப்ராயத்தை ஆலோசித்து நிச்சயித்தான். அங்ஙனம் தான் கண்டுபிடித்த அபிப்ராயத்தை அவன் அந்த தர்மதேவதையைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான். ஓ தர்மங்களை உணர்ந்தவனே! வ்ருஷபத்தின் உருவங்கொண்ட ஸாக்ஷாத்தர்

மமே நீ. ஆனதுபற்றியே, ஆபத்திலுங்கூட அந்தப் புருஷனை அறியோமென்று தர்மத்தையே மொழிகின்றனை. அதர்மஞ் செய்தவன் எந்த இடம் போய்ச் சேருவனோ, அவ்வதர்மத்தை ஸூசனை செய்பவனுக்கும் அவ்விடமே நேரும். ஆகையால் அதர்மஞ் செய்த புருஷன் அருகில் இருப்பினும் அவனை அறிவிக்காமல் எனக்குத் தெரியாதென்கிறாய். பாபஞ் செய்தவனைப் பார்த்து 'இவன் பாபஞ்செய்தான்' என்று சொல்பவனும் அந்தப் பாபஞ் செய்தவன் விழுகிறநரகத்தில்போய் விழுவானென்கிறாயோ? அல்லது ஈஶ்வர ஸங்கல்பத்தின் கதி ப்ராணிகளின் மனத்திற்கும் வாக்குக்கும்விஷயமன்றென்று நிச்சயிக்கிறாயோ? என் வருத்தத்திற்குக் காரணம் இன்னவனென்று எனக்குத் தெரியாதென்றாய். உன் புத்தியைக் கொண்டு நீயே ஆலோசித்துப் பாரென்றாய். 'இதனால் இவன் பாபஞ் செய்தவனென்று தெரிவிப்பது அதர்மம்' என்றாவது, 'ஈஶ்வர ஸங்கல்பம் நமது வாக்குக்கும் மனத்திற்கும் உட்படாதது. ஆகையால் நான் என் வருத்தத்திற்கு எதைக் காரணமாகச் சொல்லுவேன்' என்றாவது நீ நிச்சயிப்பதாகத் தெரிகிறது. தர்ம தேவதையாகிய உனக்குத் தவம் சுத்தி தயை ஸத்யம் ஆகிய இவை நான்கும் நான்கு பாதங்களாகப் பெரியோர்களால் கூறப்பெற்றன. அவற்றில் மூன்று பாதங்கள் அதர்மத்தின் அவயவங்களான கர்வம் ஸங்கம் (பற்று)மதம் ஆகியஇம்மூன்றுகளால் முறிக்கப்பெற்றன. தவத்திற்கெதிர்த்தட்டான கர்வத்தினால் தவமும், சுத்திக்கு எதிர்த்தட்டான ஸங்கத்தினால் சுத்தியும் தயைக்கு எதிர்த்தட்டான மதத்தினால் தயையும் பாழாயின. ஓ தர்மமே! உனது நான்காம் பாதமாகிய ஸத்யம் எதனால் (பொய்யில்லாமையால்) நிலைநிற்குமோ ,அதை (அந்தப்

பொய்யில்லாமையை) இப்பொழுது பொய்யால் வளர்ந்த இந்த அதர்மஸ்வரூபமாகிய கலி தடுக்க விரும்புகின்றது. இந்தப் பசு ஸாக்ஷாத் பூமிதேவியே. இவள் ஸ்ரீக்ருஷ்ணனால் மஹத்தான பாரமெல்லாம் போக்கப்பெற்றுத் தாமரை மலர் முதலிய அடையாளங்களால் அழகாயிருக்கின்ற அந்த பகவானுடைய அடிவைப்புக்களால் எங்கும் மஹத்தான உத்ஸவம் நேரப்பெற்றிருந்தாள். இப்பொழுது அந்த பகவான் தனது லோகம் போய்ச் சேர்ந்தமையால் அவனைப்பிரிந்து கல்வியற்கையுடைய இப்பூமிதேவி பாக்யமற்றவள் போன்று, 'ப்ராஹ்மணர்களிடத்தில் நன்மனமில்லாதவரும் ராஜாக்களின் வேஷம் தரித்தவருமாகிய சூத்ரர்கள் அனுபவிக்கப்போகிறார்களே' என்னும் வருத்தத்தினால் கண்களில் நீர்த்துளிகள் பெருகப்பெற்று வருந்துகின்றாள்' என்றான். இங்ஙனம் தர்மதேவதையையும் பூமிதேவியையும் ஸமாதானப்படுத்தி அதர்மத்திற்கிடமான கலியை வதிக்கும்பொருட்டுக் கூருள்ளதான கத்தியை எடுத்தான். அந்தப்பரீக்ஷித்து தன்னைக் கொல்ல நினைத்திருப்பதை அறிந்து கலிபுருஷன் தான் தரித்திருந்த ராஜசிஹ்னங்களான (ராஜாக்களின் அடையாளங்களான) கிரீடம் முதலியவற்றை வாங்கிப்போகட்டு பயத்தினால் சரீரம் நடுங்கப்பெற்றுத் தலைவணங்கி அந்தப் பரீக்ஷித்தினுடைய பாதங்களின் அடியில் வந்து விழுந்தான். வீரனும் புகழத்தகுந்தவனுமாகிய அம்மன்னவன் தீனர்களிடத்தில் (வருந்தினவரிடத்தில்) ப்ரீதியுடையவனும் பாதுகாப்பதில் வல்லனுமாகையால் மன இரக்கமுற்றுத் தனது பாதங்களில் விழுந்த அந்தக் கலியைக் கொல்லாமல் சிரித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ராஜன் சொல்லுகிறான்:— அர்ஜுனனுடைய கீர்த்தியை வளரச் செய்பவராகிய எமது ஸந்ததானத்தில்

அஞ்சலிசெய்துகொண்டிருக்கிற உனக்குச் சிறிதும் பயம் இல்லை. ஆனால் எமது க்ஷேத்ரத்தில (தேசத்தில்) எவ்வகையிலும் நீ இருக்கலாகாது. ஏனெனில், நீ அதர்மத்திற்கு பந்துவன்றோ. ஆகையால் நீ இருக்கில் அதர்மங்கள் நடையாடுமானதுபற்றி நீ இங்கிருக்கலாகாது. நீ ராஜாக்களின் தேஹங்களில் இருப்பாயாயின், லோபம் (பிறர்பொருளை விரும்புவது), பொய்பேசுவது பிறர்பொருளை அவர்க்குத் தெரியாமல் பறிப்பது பிறர்க்குத் தெரியாமல் அவர்க்குக் கெடுதி செய்வது பாபம் அலக்ஷ்மி (பெரியம்மா) ராகத்வேஷாதிகள் தான் சொன்னதை இல்லையென்று மறைப்பது வஞ்சனம் ஆகிய இவ்வதர்மங்களின் கூட்டம் உன்னைத் தொடர்ந்து வரும். ஆகையால், அதர்மத்திற்கு பந்துவாயிருப்பவனே! தர்மமும் ஸத்யமும் நிலைநின்றிருக்குமிடமாகிய இந்த ப்ரஹ்மாவர்த்த க்ஷேத்ரத்தில் நீ இருக்கலாகாது. யாகங்களை அனுஷ்டிக்கும் விதம் அறிந்த பெரியோர்கள் யாகங்களால் யஜ்ஞேஶ்வரனை பரமபுருஷனை ஆராதிக்குமிடமாகிய இந்த ப்ரஹ்மாவர்த்தமென்னும் க்ஷேத்ரத்தில் நீ இருக்கலாகாது. பல படச்சொல்லி என்? ப்ராணிகளால் பூஜிக்கப்பெற்ற இந்த்ராதி தேவதைகளைத் தனக்குச் சரீரமாகக்கொண்டவனும் யாகங்களால் ஆராதிக்கப் படுபவனுமாகிய பகவான் வாயுவைப்போல் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பூதங்களின் உள்ளும் புறமும் பரந்து அவற்றின் உள்ளே புகுந்து அவற்றை நியமிப்பதும் தரிப்பதுஞ் செய்துகொண்டு தன்னை ஆராதிப்பவர்க்கு வீணாகாத விருப்பங்களையும் மோக்ஷ ஸுகத்தையும் எவ்வெவ்விடங்களில் கொடுத்துக் கொண்டிருக்கின்றானோ அவ்விடங்களெல்லாவற்றிலும் நீ இருக்கலாகாது' என்றான்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பரீக்ஷித்தினால் கட்டளையிடப்பெற்ற கலிபுருஷன் சரீரம் முழுவதும் நடுங்கப்பெற்று, கத்தியை உயரத்தூக்கிக்கொண்டு தண்டாயுதத்தைக் கையிலேந்தின யமன்போன்ற அம்மன்னவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான். 'பூமண்டலம் முழுவதும் பாதுகாக்கும் சக்ரவர்த்தியே! உனது ஆஜ்ஞையின்படி எங்கேனும் வஸிக்கலாமென்று ஆலோசித்துப்பார்க்கினும், அவ்வவ்விடங்களில் கையும் வில்லுமாயிருக்கிற நீயே எனக்குப் புலப்படுகின்றாய். ஆகையால் இத்தகையனாகிய உன்னை எவ்விடத்தில் காணாதிருப்பேனோ, தர்மத்தை நடத்துவோர்களில் சிறந்தவனே! எவ்விடத்தில் நான் உனது ஆஜ்ஞையைத் தவறாமல் அனுஷ்டித்துக்கொண்டு வாஸஞ்செய்வேனோ அப்படிப்பட்ட ஓரிடத்தை எனக்கு எடுத்துரைப்பாயாக' என்றான்.

ஸூதர் சொல்லுகிறார்.—இங்ஙனம் கலியினால் வேண்டப்பெற்ற அம்மன்னவன், எவ்விடத்தில் சூதாடு மத்யபானஞ்செய்தல் நியதியின்றி ஸ்த்ரீகளைப்புணர்தல் ப்ராணிகளை ஹிம்ஸித்தல் ஆகிய இந்நான்கு வகை அதர்மங்கள் நடக்கின்றனவோ, அந்த இடங்களைக் கலிபுருஷனுக்குக் கொடுத்தான். மீளவும் வேறு இடத்தையும் அபேக்ஷிக்கிற அந்தக் கலிக்கு ப்ரபுவாகிய பரீக்ஷித்து ஸ்வர்ணத்தை ஓரிடமாகக் கொடுத்தான். மீளவும் த்ருப்தி அடையாமல்வேண்டுகிற அந்தக்கலிக்குப் பொய் மதம் காமம் க்ரோதம் வைரம் ஆகிய இவ்வைந்தும் எங்கு நடக்குமோ அவ்விடங்களையுங் கொடுத்தான். அதர்மத்திற்கிடமான கலிபுருஷன் உத்தரையின் புதல்வனாகிய பரீக்ஷித்தினால் கொடுக்கப்பெற்ற இந்தப்பொய் முதலிய ஐந்து ஸ்தானங்களையும் முன்சொன்ன சூதுமுதலிய இடங்களையும் பெற்று அம்மன்னவனுடையகட்டளையைக் கடக்காமல் தொடர்ந்துகொண்டு அவ்விடங்களில்

வஸித்துவந்தான். சூது முதலியவை கலியின் வாஸஸ்தானமாகையால் க்ஷேமத்தைவிரும்பும் புருஷன்இந்தச் சூதுமுதலியவற்றைப் பாராட்டலாகாது. மன்னவனுயிருப்பவன் சிறிதும் இவற்றைக் கண்ணெடுத்தும் பார்க்கலாகாது. ஏனென்னில், மன்னவன் தர்ம ஸ்வபாவனுயிருக்க வேண்டுமல்லவா. அது தான் ஏனென்னில், அவன்ஜனங்களையெல்லாம் அதர்மத்தில் போகவொட்டாமல் பாதுகாக்கவேண்டியவனல்லவா. அவன் அங்ஙனம் தர்மத்தில் நிலைநின்றிராணுயின், அவனைப் பார்த்து ப்ரஜைகளும் அங்ஙனம் அதர்மத்தில்சென்று பாழாய்விடுவார்கள். ஆகையால் மன்னவனுக்கு இது தகுதியன்று. இவன் ப்ரஜைகளுக்கு ஹிதோபதேசஞ்செய்து அவர்களை நல்வழிக்குக் கொண்டு வரவேண்டியவனல்லவா. அப்பால் அம்மன்னவன், வ்ருஷபத்தின் உருவம் தரித்த தர்மதேவதைக்கு அழிந்துபோன தவம் முதலியமூன்று பாதங்களையும் முன்போலவே சேர்ப்பித்தான். அங்ஙனமேபூமியையும் ஆய்வாஸப்படுத்தி நன்குபோஷித்து வந்தான். அப்படிப்பட்ட மஹிமையுடைய இந்தப்பரீக்ஷித்து இப்பொழுது ஸமீபகாலத்தில் வனத்திற்குப் போக விருப்ப முற்ற பாட்டனுகிய யுதிஷ்டிர மன்னவனுல் கொடுக்கப்பெற்றதும் ஸார்வபௌமனுக்கு உரியதுமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்தான். கௌரவர்களில் சிறந்தவனும் ஸார்வபௌமனுக்குள்ள சோபையால் திகழ்பவனும் பரந்த புகழுடையவனும் பூமண்டலத்தையெல்லாம் பரிபாலித்து வருபவனும் ராஜரிஷியுமாகிய பரீக்ஷித்து ஹஸ்தினபுரத்தில் ஸமீபகாலத்தில் இருந்தான். இப்பொழுது சொன்னது மாத்ரமே அன்று அவன் ப்ரபாவம். இன்னம் இத்தகைய பலவகை ப்ரபாவங்களும் உண்டு. அபிமன்யுவின் புதல்வனுகிய இந்தப் பரீக்ஷித்து மன்னவன் இத்தகைய மஹிமையுடையவன்.

ஆகையால் அம்மன்னவன் பரீக்ஷித்து இப்பொழுது இல்லையாயினும் அவனிடத்தில் பயத்தினால் கலி இத்தேசத்தில் ப்ரவேசிக்கிறதில்லை. ஆனது பற்றியே உங்கள் ப்ரஹ்மஸத்ரம் நடக்கின்றது. கற்பூரம் வைத்திருந்த பரணியில் கற்பூரத்தின் வாசனை மாறாதிருப்பது போல் அம்மன்னவனது கட்டளை இத்தேசத்தில் இன்னம் மாறாமல் நடந்து வருகையால் நீங்கள் இங்ஙனம் ப்ரஹ்மஸத்ரத்திற்கு ஸங்கல்பித்துக்கொண்டு ஸுகமாக நடத்துகிறீர்கள். இல்லையாயின் கலியினால் கெடுதி செய்யப்பெற்று உங்கள் ப்ரஹ்மஸத்ரம் நடக்காது' என்றார். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து மன்னவன் வேட்டைக்குப் போதலும், அங்கு அவனுக்கு ப்ராஹ்மண சாபம் நேருதலும்.

ஸூதர் சொல்லுகிறார்:—இந்தப் பரீக்ஷித்து மன்னன் மாதாவின் கர்ப்பத்தில் அஶ்வத்தாமாவின் அஸ்த்ரத்தினால் கொளுத்தப்பட்டும் அற்புதமான செயல்களையுடைய ஸ்ரீக்ருஷ்ணனது அனுக்ரஹத்தினால் மரணம் அடையாதிருந்தான். மற்றும், பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய இம்மன்னவன் ப்ராஹ்மணன் கோபித்துச் சாபம் கொடுத்தமையால் தூண்டப்பெற்றவனும் ப்ராணன்களை யழிப்பவனும் மஹாபயத்திற்கிடமாகிய தக்ஷகனிடத்தினின்று பயப்படாதிருந்தான். அம்மன்னவன் தேஹம், தேஹத்தைத் தொடர்ந்த பந்துக்கள் முதலியவை ஆகிய எல்லா இடங்களிலும் பற்றைத் துறந்து வ்யாஸமஹர்ஷியின் புதல்வராகிய சுகமுனிவர்க்குச் சிஷ்யனாகி, அம்முனிவருடைய உபதேசத்தினால் பகவானை அறிந்து அவனிடத்தில் மனத்தை நிலைநிறுத்தித் தன் சரீரத்தைக் கங்கையின் கரையில் துறந்தான்.

உத்தம ஶ்லோகனுன பகவானுடைய வ்ருத்தாந்தத்தை யே வாயாரப் பேசுந் தன்மையரும் அவனுடைய கதைகளாகிற அம்ருதத்தைப் பானஞ் செய்பவரும் அவனது பாதாரவிந்தத்தையே மறவாது நினைப்பவருமாகிய மனிதர்களுக்கு மரணகாலத்திலும் பயம் உண்டாகாது. அத்தகையனுகிய பரீக்ஷித்து ஸார்வபௌமனுகி இந்தப் பூமண்டலத்தை எவ்வளவுகாலம் ஆண்டுவந்தானே, அவனுடைய ஆஜ்ஞை எதுவரையில் மாருமல் தொடர்ந்து வந்ததோ, அதுவரையில், கலி இவ்வுலகம் முழுவதும் புகுந்திருப்பினும், வல்லனுகவில்லை. என்றையதினம் எந்தக்ஷணத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் பூமியைத் துறந்து சென்றுனே, அப்பொழுதே அதர்மத்திற்கு விளைநிலமாகிய இந்தக் கலி பூலோகத்தில் ப்ரவேசித்தான். ஸார்வபௌமனுகிய அந்தப் பரீக்ஷித்து, கலியினிடத்தில் அவனைக் கொல்லும்படியான த்வேஷத்தை ஏற்றுக்கொள்ளவில்லை; ஏனென்னில், வண்டு தாமரைமலரிலுள்ள தேனைப் பருகி அதை எங்ஙனம் அழிக்காது விடுமோ, அங்ஙனமே அம்மன்னவன் அந்தக் கலியின் ஸாரத்தை அறிந்து அவனைக்கொல்லாமல் விட்டான். 'கலியினிடத்திலுள்ள ஸாராம்சம் என்' என்கிறீர்களோ? சொல்லுகிறேன் கேளுங்கள். கலியுகத்தில் பகவானுடைய நாமங்களைக் கீர்த்தனஞ் செய்கை முதலிய நற்செயல்களெல்லாம் சீக்ரத்தில் பகவானைப் பெறுகையாகிற ஸித்தியைக் கொடுப்பனவாம். மற்றைப் பாபகர்மங்களோவென்னில், சீக்ரத்தில் பயன் கொடுப்பனவாகிறதில்லை. இந்த ஸாராம்சத்தை அறிந்து அந்தக் கலியை அம்மன்னவன் வதிக்காதுவிட்டான். ஒன்றுந் தெரியாத மூட ஜனங்களிடத்தில் சூரனும் விவேகமுடையவரிடத்தில் பயந்தவனுமாகிய கலியால் என்ன செய்ய முடியும்?

அந்தக் கலி, ஆட்டு மந்தையில் செந்நாய்போல், மன ஆக்கமில்லாதவரிடத்தில் தான் மனஆக்கமுற்றிருப்பான். ஆகையால் மனஆக்கமுடையவர்க்கு அந்தக் கலியை வெல்லுவது ஒருபொருளன்று. அந்தணர்களே! பகவானுடைய கதைகள் அமைந்ததும் கேட்பவர்க்கும் சொல்பவர்க்கும் புண்யத்தை விளைப்பதுமாகிய பரீக்ஷித்தின் வ்ருத்தாந்தத்தை, நீங்கள் கேட்டபடியே இங்ஙனம் உங்களுக்கு வர்ணித்தேன். சொல்லவேண்டிய செயல்கள் பற்பலவாயிருக்கப்பெற்ற பகவானுடைய குணங்களையும் செயல்களையும் பற்றின கதைகள் எவ்வெவை உண்டு, அவற்றையெல்லாம் க்ஷேமத்தை விரும்பும் புருஷர்கள் ஓயாமல் கேட்டனுபவிக்கவேண்டும்' என்றார்.

சௌனகர் சொல்லுகிறார்:—ஸூதரே! நல்லியற்கையுடையவரே! நீர் பல ஆண்டுகள் க்ஷேமமாயிருப்பீராக. அம்ருதம்போன்றதும் எல்லையில்லாததுமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய புகழை மரணஸ்வபாவரான எங்களுக்குச் சொல்லுகிறீரல்லவா. அம்ருதத்தைப் பருகுவது தேவதைகளுக்கே கிடைக்கக்கூடியதன்றி மனிதர்களுக்குக் கிடைப்பதன்று. அப்படியிருக்க மனிதர்களான எங்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணகதைகளாகிற அம்ருதத்தைஊட்டி வாழ்விக்கின்றீரே. இப்படிமஹோபகாரஞ் செய்பவர் மற்றெவர் நேரப்போகின்றார்கள்? இத்தகைய நீர் பலவாயிரமாண்டுகள் க்ஷேமமாயிருப்பீராக. 'இது நமக்கு ஒரு கெடுதியையும் விளைக்காமல் நமது இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுக்கும்' என்ற நம்பிக்கையோடுநிர்ப்பயமாயிருப்பதற்கிடமாகாதஇந்தயாகாதி கர்மத்தில் நிலைநின்றவர்களும் அஜ்ஞானம் நிறைந்த மனமுடையவரும் யாகப்புகையினால்அழுக்கடைந்த சரீரமுடையவருமாகிய கேவல கர்ம நிஷ்டர்களுக்கும் கோவிந்தனுடைய பாதங்களாகிற தாமரைமலரில் பெரு

கும்படியான இனிய அம்ருதத்தை ஊட்டுகின்றீர். ஆகையால் பகவானிடத்தில் பற்றுடைய உம்மைப்போன்ற பெரியோர்களின் ஸஹவாஸத்தில் சிறிதுநேரத்திற்காயினும் ஸ்வர்க்கமாவது மஹாநந்தத்திற்கிடமான மோக்ஷமாவது ஈடாகாது. அங்ஙனம் ஒத்திட்டுப் பார்க்க நாங்கள் முயற்சியுங் கொள்ளோம். இப்படியாயின், பிறந்துஞ்செத்தும் சின்றிடரும் பேதையர்களான மானிடவர் விரும்பும்படியான அர்த்த காமாதி புருஷார்த்தங்களை அதனுடன் சிறிதும் ஒத்திட நினைக்கமாட்டோமென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? 'பகவானுடைய குணங்களையும் செயல்களையும் கேட்டறியாதவர்போல் ஏன் இப்படி வினவுகிறீர்கள்?' என்கிறீரோ; சொல்லுகிறேன் கேளும். மனத்தெளிவுடைய மஹானுபாவர்கள் 'இவனே நமக்குமேலான ப்ராப்யமும்ப்ராபகனும்' என்று ஆதரிக்கும்படியான பகவானுடைய கதையில் ரஸம் அறிந்திருப்பானாயின், எந்த மனிதன் 'இவ்வளவே போதும். இனிமேல் வேண்டாம்' என்று த்ருப்தி அடைவான்? ஒருவனும் அடையமாட்டான். 'ஆனால், கேட்ட குணங்களையே மீளவும் கேட்பதில் என்னரஸம்?' என்னில், அப்படியில்லை. ஹேயகுணங்கள் சிறிதுமில்லாத பகவானுடைய குணங்களின் முடிவை ப்ரஹ்மருத்ராதிகளான யோகிஸ்வரர்களும் அறியார்கள். ஆகையால் கேளாத குணங்களும் செயல்களும் பற்பல உண்டு. கேட்டவைகளும் புதிதுபுதிதாயிருக்கும். ஆகையால் அவனது குணங்களையும் செயல்களையும் கேட்டு த்ருப்தி அடைபவன் எவனுமே இருக்கமாட்டான். ஆகையால் பெரியோர்களுக்கு முக்யகதியான பகவானுடையதும் பரிசுத்தமாயிருப்பதும் கம்பீரமுமான சரித்ரத்தை, பகவானையே முக்யமாகவுடைய நீர் கேட்கவேண்டுமென்று

விருப்பங்கொண்ட எங்களுக்குச் சொல்வீராக. நீர் பகவானுடைய குணம்செயல் ஆகிய இவற்றின்உண்மையை நன்றாக அறிந்தவர். ஆகையால் அவற்றை எங்களுக்குச் சொல்லவேண்டும். கீழ்ச்சொன்ன வைபவமுடையவனும் பகவானிடத்தில் மிகுந்த பக்தி உண்டாகப் பெற்றவனும் கம்பீரமான அறிவு அமைந்தவனுமாகிய அந்தப் பரீக்ஷித்து வ்யாஸமஹர்ஷியின் புதல்வராகிய சுக முனிவர் உபதேசித்த புராணத்தைக் கேட்டு அதனால் நல்லறிவு நேரப்பெற்றுப் புள்கொடியனை பகவானுடைய பாதமூலத்தை அடைந்தானென்றீர்.பரீக்ஷித்துக்குச் சுகர் உபதேசித்த அந்தப் புராணத்தை எங்களுக்குச் சொல்வீராக. சொல்லுவோர்க்கும் கேட்போர்க்கும் சிறந்த புண்யத்தை விளைப்பதும்'இதற்கிடான மற்றொரு புராணம் இல்லை' என்னும்படி சிறப்புற்றதும் மோக்ஷத்தில் விருப்பமுடையோர்க்கு வேண்டிய ஶாஸ்த்ரார்த்தங்களெல்லாம் தெளிவாயிருக்கப் பெற்றதும் பகவானிடத்தில் அற்புதமான பக்தியோக நிலைமையை விளைவிப்பதும் அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடைய பகவானுடைய சரித்ரங்கள் அமைந்ததும் பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களுக்கு இனியதும் பாகவதமென்னும் பேருடையதுமாகிய எந்தப் புராணத்தைப் பரீக்ஷித்துக்குச் சுகர் உபதேசித்தாரோ, அதை எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்றார்.

இங்ஙனம் முனிவர்களால் பகவானுடைய குணங்களைச் சொல்லும்படி தூண்டப்பெற்ற ஸூதர் சொல்லுகிறார்:—ஆ! என்னுடைய பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்!ப்ராஹ்மண ஸ்த்ரீயிடத்தில் க்ஷத்ரியனுக்குப் பிறந்தவனாயினும் ஜ்ஞானம் வயது ஜன்மம் இவைகளால் முதிர்ந்தவரான உங்களது அனுஸரணத்தினால்

இப்பொழுது சிறந்த பிறவியுடையவனானேன். ஆ! மிகுந்த மேன்மையுடைய உங்களைப்போன்ற பெரியோர்கள் கேட்கவும் நான் சொல்லவும் நேர்ந்த இந்நேர்மை, இழி குலத்திற் பிறந்தமையாலுண்டான இழிவையும் அதனால் விளையும் மனவருத்தத்தையும் உதறி விடுகின்றது. இப்படி இருக்க, மேன்மையுடைய பெரியோர்கள் மனஉறுதி மாறாமல் 'இவனே நமக்குச் சிறந்த கதி' என்று ஆதரிக்கும்படியான பகவானுடைய நாமங்களை நேரே மொழியும் புருஷனுக்கு இழிகுலத்திற்பிறந்தமையாலுண்டான இழிவும் மனவருத்தமும்எங்கிருந்துநேரப்போகின்றது? அவன் ஜ்ஞானம் முதலிய ஆறு குணங்களும் நிறைந்தவன்; அக்னிக்குக் கொளுத்துந் திறமைபோல் தன் பேரைச்சொல்லுவோர்களின் தாழ்வு முதலிய தோஷங்களையெல்லாம் போக்குந் திறமை முதலிய பல சக்திகள் இயற்கையாயிருக்கப்பெற்றவன்; எல்லையில்லாத குணங்களுடையவனாகையால் அனந்தனென்று கூறப்படுமவன். பகவானோடொத்த குணமுடையவனாவது அவனுக்கு மேற்பட்ட குணமுடையவனாவது எவனுமே இல்லை. ஸ்ரீமஹாலக்ஷ்மி, ப்ரஹ்மாதி தேவதைகள் தன்னை ப்ரார்த்தித்துக்கொண்டிருப்பினும் அவர்களை விரும்பாமல்துறந்து,ஸ்ரீமஹாவிஷ்ணு தன்னை விரும்பாதிருப்பினும் அவனுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பணிகின்றாள். இதுவொன்றே ஸ்ரீவிஷ்ணு நிகரில்லாத குணங்களுடையவனென்றும் எல்லோரினும் மேன்மையுற்றவனென்றும் திடப்படுத்துகிறது. அன்றியும் ப்ரஹ்மதேவன் ஸ்ரீமஹாவிஷ்ணுவின்பாதாரவிந்தங்களைவிளக்கி ஆராதிக்கும்பொழுது அவனுடைய இடது பாதத்தின் கட்டைவிரல்நகத்தினின்று பெருகின ஜலம் கங்கையாகி இந்த்ராதி லோகபாலர்களோடு கூடின உல

கங்களை யெல்லாம் பரிசுத்தமாக்குகிறது. பகவானுடைய மஹிமை எல்லையில்லாததென்பதற்கு இதுவே போதுமல்லவா? அவன் இத்தகைய மஹிமைகள் அபாரமாயிருக்கப்பெற்றவன். இங்ஙனம் மஹாகுணங்களையுடைய முகுந்தனைக்காட்டிலும் மற்ற எவன்தான் 'பகவான்' என்னும் பதத்திற்குப் பொருளாகக் கூடியவன்? பகவச்சப்தம் ஜ்ஞான சக்தி பல ஐச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்கள் முதலிய எல்லையில்லாத பற்பல குணங்களமைந்த வஸ்துவைச் சொல்லுந்தன்மையது. அத்தகைய வஸ்து பரமபுருஷனைத் தவிர மற்றெவனாவான்? மற்றெவனும் ஆகமாட்டான். ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனும் போக மோக்ஷங்களைக் கொடுக்க வல்லவனுமாகிய பகவானிடத்தில் ப்ரேமம் நிரம்பப்பெற்றவர் இந்த்ரியங்களை வென்று விரைவிலேயே தேஹத்திலும் அதைத்தொடர்ந்த மற்றவைகளிலும் நெடுநாளாக வேரூன்றின மனப்பற்றைத்துறந்து, அஹிம்ஸையும் மன அடக்கமுமாகிய தமக்குரிய இந்ததர்மங்களுக்கிடமாகி ஆச்ரமங்களில் நான்காவதுமான பரமஹம்ஸாச்ரமத்தை அடைகின்றார்கள். ஜ்ஞானாதிகரான முனிவர்களே! வேதஸ்வரூபர்களே! நீங்கள் பகவானுடைய மஹிமையைச்சொல்லும்படி என்னை வினவினீர்கள். அதைச்சொல்ல நான் வல்லவனல்லேன். ஆயினும் என்புத்திக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவுமஹிமையை நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். பறவை எப்படி தந்தனது சக்திக்குத் தகுந்தபடியே ஆகாயத்திற்கிளம்பிச் செல்லுமோ, அங்ஙனமே பண்டிதர்களும் தமது புத்திபலத்திற்குத் தகுந்தவளவே விஷ்ணுவின் மஹிமையை அறியவல்லராவார்கள். பறவைகள் ஆகாயத்தில் பறக்கத் தொடங்கிச் சென்று ஆகாயம் முடிந்தமையால் திரும்பி வருகின்றனவன்று; ஆனால் தமது சக்திக்குத் தகுந்தவளவு

சென்று அதற்குமேல் போக வல்லமையற்றே திரும்பி வருகின்றன. இங்ஙனமே பண்டிதர்களும் பகவானுடைய குணங்களை அறிய முயன்று குணங்களின் எல்லை கண்டு திரும்புகிறார்களல்லர். தமது புத்திபலம் உள்ளளவுஞ் சென்று புத்திபலக்குறைவினால் அதற்குமேல் அறியமுடியாமல் திரும்புகிறார்கள். ஆகையால் என் புத்திக்கு எட்டினமட்டும் பகவானுடைய மஹிமையை நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன்.

ஒருகாலத்தில் அந்தப் பரீக்ஷித்து தனுஸ்ஸை ஏந்தி வனத்தில் வேட்டையாகத் திரியத்தொடங்கி ம்ருகங்களைத் தொடர்ந்து போய் இளைப்புற்றுத் தண்ணீர் தாஹமும் பசியும் உண்டாகப்பெற்று எங்கும் ஜலாதாரமொன்றுங் காணப்பெறாமல் அங்கிரஸ்ஸென்னும் மஹர்ஷியின் ஆஶ்ரமத்தில் நுழைந்து அங்கு உட்கார்ந்திருப்பவரும் சமாதிகுணங்கள் அமைந்தவரும் கண்ணைமூடிக் கொண்டு த்யானஞ் செய்பவருமாகிய அம்முனிவரைக் கண்டான். அவர் இந்த்ரியங்களையும் ப்ராணனையும் மனத்தையும் புத்தியையும் அடக்கிப் பார்வை கேள்வி முதலிய அவற்றின் வ்யாபாரங்களினின்று ஓய்ந்திருப்பவரும் ஜாக்ரத்தசை ஸ்வப்னதசை ஸுஷுப்திதசை ஆகிய மூன்று ஸ்தானங்களைக் கடந்த ஆத்மாவை அனுஸந்திப்பவரும் பரப்ரஹ்மத்தை த்யானித்துக்கொண்டிருப்பவரும் ஸுகதுக்கங்கள் முதலியவற்றால் விளையும் விகாரங்களற்றவருமாயிருந்தார். மற்றும், அவர் நாற்புறங்களிலும் தொங்குகின்ற ஜடைகளால் மறைந்து ருருவென்னும் மானுடைய தோலை உடுத்திருந்தார். அத்தகையரான அம்முனிவரைப் பார்த்துத் தாடைகளும் வாயும் தாஹத்தினால் உலரப்பெற்ற மன்னவன் ஜலம் வேண்டினான். அம்முனிவர், தனக்கு ஆஸனத்திற்காக தர்ப்பமும் உட்கார பூமியும் அர்க்யஜலமும்



217. பரீக்ஷித்து சமீக ரிஷியின் கழுத்தில் ஸர்ப்பத்தை எடுத்துப் போடுதல்.

மற்றதெதுவும் கொடாமல், 'க்ஷேமமா? எப்பொழுது வந்தாய்? உட்கார்' என்பது முதலிய நல்லவார்த்தையும் எதுவும் பேசாமல் வெறுமனே த்யானித்துக் கொண்டிருக்கக்கண்டு தன்னை அவர் அவமதித்ததாக நினைத்துக் கோபித்துக் கொண்டான். அந்தணர்தலைவரே! பசிதாஹங்களால் வருந்தின தேஹத்தையுடைய அம்மன்னவனுக்கு இதுவரையில்என்றும் உண்டாகாத த்வேஷமும் கோபமும் அந்த ப்ராஹ்மணஸ்ரேஷ்டரான முனிவரிடத்தில் உண்டாயின. அப்பால் அவ்வரசன் அவ்வாஸ்ரமத்தினின்று திரும்பிவர முயன்று கோபத்தினால் அந்த ப்ரஹ்மரிஷியின் தோளில் தனுஸ்ஸின் நுனியால் ஒரு செத்த பாம்பை எடுத்துப் போகட்டுவிட்டுப் பட்டணம் போய்ச்சேர்ந்தான். 'இம்முனிவர் வாஸ்தவமாகவே இந்த்ரியங்களை யெல்லாம் அடக்கிக் கண்களை மூடி த்யானஞ் செய்கின்றாரா?. அல்லது க்ஷத்ரியாதமர்களால் நமக்கு என்ன ப்ரயோஜனம்? என்று நினைத்துப் பொய்யாகவே த்யானஞ் செய்வது போல் கண்களை மூடிக்கொண்டு மாயஞ் செய்கிறாரா?' என்றறியவேண்டுமென்னும் அபிப்ராயத்தினால் அங்ஙனம் செத்தபாம்பைத் தோளில் போகட்டுப் போனான். அப்பால், அம்முனிவரின் புதல்வனும் ப்ரஹ்மதேஜஸ்ஸு மிகுந்திருக்கப்பெற்றவனுமாகிய பாலகன் சிறுவர்களோடுவிளையாடிக்கொண்டிருக்கையில், தன் தந்தையை அங்ஙனம் அம்மன்னவன் அவமதித்து அபராதப் பட்டதாகக் கேட்டு அவ்விடத்திலேயே இங்ஙனம் மொழிந்தான். 'நாய் போலவும் காக்கைபோலவும் வளர்ந்த ராஜாக்களின் அதர்மத்தைப் பாருங்கள். ஆ! என்ன வருத்தம்! நாய்கள்போல் காவலிருக்குந்தன்மையரான ராஜாக்கள் தமது ஸ்வாமியாகிய ப்ராஹ்மணனிடத்தில் அபராதப்படுவாராயின், அது அதர்மமன்றோ?

க்ஷத்ரியனை ப்ராஹ்மணர்கள் நாயைப்போல் காத்திருக்கும்படி ஏற்பாடு செய்திருக்கின்றார்கள். அங்ஙனம் வாசலில் நின்று காத்திருக்கவேண்டிய க்ஷத்ரியன் அந்த ப்ராஹ்மண க்ருஹத்தில் நாய்போல் அவர்களோடு ஒரே பங்க்தியாக எப்படி போஜனஞ்செய்ய உரியனாவான்? வழியைக்கடந்து செல்பவரைத் தண்டிக்குந் தன்மையனான ஸ்ரீக்ருஷ்ணபகவான் சென்ற பின்பு, பயமில்லாமல் வரம்பைக்கடக்கின்ற அவர்களை இப்பொழுது நான் தண்டிக்கின்றேன். என்பலத்தைப் பாருங்கள்' என்றான். இங்ஙனம் தனது நண்பர்களான இளைஞர்களைப்பார்த்து மொழிந்து கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்ற அந்த ரிஷிகுமாரன் கௌசிகநதியின் ஜலத்தை எடுத்து ஆசமனஞ்செய்து சாபமிடும் வாக்காகிற வஜ்ராயுதத்தை ப்ரயோகித்தான். அங்ஙனம் அவ்விளைஞன் சாபங்கொடுக்க முயன்று 'இவ்வாறு மர்யாதையை (வரம்பை)க் கடந்து என் தந்தைக்கு அபகாரஞ்செய்தவனும் குலத்தைப் பாழ் செய்பவனுமாகிய மன்னவனை இன்றைக்கு ஏழாவது நாளில் தக்ஷகனென்னும் ஸர்ப்பராஜன் என்னால் தூண்டப்பெற்றுக் கொளுத்திவிடப்போகின்றான்' என்று மொழிந்தான். அந்தணர் தலைவரே! அப்பால் தனது தந்தையின் ஆச்ரமத்திற்கு வந்து கழுத்தில் ஸர்ப்பத்தின் உடல் தொங்கப்பெற்ற தந்தையைக்கண்டு துக்கத்தினால் வருந்தி உரத்த குரலுடன் ரோதனஞ்செய்தான். அந்தணரே! அதன் பிறகு அவ்வங்கிரஸ முனிவர் புதல்வன் அழுங்குரலைக் கேட்டு மெதுவாகக் கண்களை விழித்துக் கழுத்தில் செத்த பாம்பின் உடல் தொங்குவதைக் கண்டு அதை எடுத்து அப்புறம் போகட்டுப் புதல்வனைப் பார்த்து 'குழந்தாய்! ஏன் ரோதனஞ்செய்கிறாய்? யார் என்ன அபகாரஞ் செய்தார்?' என்று வினவினர். இங்ஙனம் வினவப்பெற்ற அவ்விளை

ஞன் நடந்த ஸங்கதிகளை யெல்லாஞ் சொன்னான். அப்பால், அங்ஙனம் பாபத்திற்குரியனல்லாத மன்னவன் சபிக்கப் பெற்றமை கேட்டு அந்தணரான அங்கிரஸ முனிவர் புதல்வனை 'நீ செய்தது நல்லது' என்று கொண்டாடாமல் இகழ்ந்து அவனுக்கு இங்ஙனம் மொழிந்தார். 'ஒன்றுந் தெரியாத மூடனே! ஆ! நீ மஹத்தான பாபஞ் செய்தனை. என்ன கஷ்டம்! இதைப்பற்றி நான் மிகுதியும் வருந்துகின்றேன். மிகுதியுஞ் சிறிய ஓர் அபராதத்திற்காகப் பெரிய தண்டனை செய்தாய். புத்தி படியாதிருக்கப் பெற்றவனே! மனிதர்கள் மன்னவனால் அபராதஞ் செய்யப் பெறினும் தாங்கள் அவனுக்கு ப்ரதியாக அபகாரஞ் செய்யலாகாது. பரமபுருஷனே ராஜனாகவந்து ப்ரஜைகளைப் பாதுகாக்கிறானென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அத்தகையனான ராஜனை நீ வெகுமதிக்க வேண்டியவனே யன்றி அவமதிக்கத் தகுந்தவனல்லை. ஏனென்னில், ராஜனுக்கு நாம் அபகாரஞ் செய்யாமல் அவனும் க்ஷேமமாயிருப்பானாயின், சத்ருக்களுக்கு எதிர்க்க முடியாத அவனுடைய தேஜஸ்ஸினால் ப்ரஜைகள் பாதுகாக்கப்பெற்று எவ்விடத்திலும் பயமற்றவராகி மங்களங்களைப் பெறுவார்கள். ஆகையால் உலகங்களுக்கு க்ஷேமத்தை விளைவிப்பவனாகிய மன்னவனை நாம் அழிக்கலாகாது. ராஜனென்னும் பேர்பூண்ட சக்ரபாணியாகிய (சக்ராயுதங்கையில் கொண்ட) ஸ்ரீவிஷ்ணு இல்லாதிருப்பானாயின், பிள்ளாய்! அப்பொழுது இவ்வுலகம் பாதுகாக்கப் பெறாமல் திருடர் நிரம்பப் பெற்றுச் செந்நாய்கள் நிறைந்த ஆட்டு மந்தைபோல் க்ஷணத்தில் பாழாய்விடும். 'பாழாய்விடட்டுமே. அதனால் நமக்கென்ன கெடுதி?' என்கிறாயோ; சொல்லுகிறேன் கேள். நீ ராஜனை அழித்தமையால் பணத்

தைப் பாதுகாப்பவனில்லாமல் ஜனங்கள் திருடர் நிரம்பப் பெற்று ஒருவரை யொருவர் அடித்துக் கொள்வதும், பருஷமாகப் பேசிக்கொள்வதும், வெட்டிமடிவதும், பொருள்களைப் பறிப்பதுமாவார்கள். இப்படி அந்த ஸந்ததியைப் பாழ் செய்கையாகிற அந்தப் பாபமெல்லாம் இப்பொழுது நமக்கே வந்து சேரும். மற்றும் உலகங்களைப் பாதுகாக்குந்திறமையுள்ளபகவானுடைய அம்சமாகிய மன்னவன் அழிந்து புலப்படாது போவானாயின், வர்ணாஶ்ரமாசாரங்களைப் பற்றினதும் வேதமர்யாதையில் வழங்கி வருவதும் மானிடவர் ஆசரிப்பதும் பெரியோர்களால் புகழப்பெற்றதுமாகிய தர்மமும் பாழாய்விடும். அங்ஙனம் தர்மம் பாழாகையில், ஜனங்கள் அர்த்த காமங்களில் மனந்தாழப்பெற்று நாய்கள் போலவும் குரங்குகள் போலவும் தோன்றபடி யெல்லாம் நடக்கையில், வர்ணஸங்கரம் உண்டாகும். புதல்வனே! இப்பொழுதுநான், ஸாமான்யமாகவே மன்னவர்களுக்கு நாம் அபகாரஞ் செய்யலாகாதென்றேன். பரீக்ஷித்து மன்னவனது குணங்களை ஆலோசித்துப் பார்க்கையில் நீ செய்தது சிறிதும் ஸரியன்று. அதை உனக்குத் தெளிய உரைக்கின்றேன், கேட்பாயாக. அந்தப் பரீக்ஷித்து மன்னவனோவென்றால், வர்ணாஶ்ரம தர்மங்களின் வரம்புகளை அழியாமல் பாதுகாப்பவன்; பரந்த புகழுடையவன்; இப்பூமண்டலத்தை யெல்லாம் தானொருவனே ஆளும்படியான ஸார்வபௌமன்; அன்றியும் பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவனாகையால் மஹாபாகவதனென்று பேர் பெற்றவன். குழந்தாய்! ப்ரஹ்மவித்தான (பரப்ரஹ்மத்தின் உண்மையை அறிந்த) அம்மன்னவனிடம் அபசாரப்பட்ட நமக்குக் கதியே இல்லை. மற்றும், அவன் ராஜாவென்று பேர் பூண்டவனே யன்றிவாஸ்தவத்தில் ரிஷியே; அஶ்வமேத

யாகஞ்செய்தவன். அவன் பசிதாஹங்களால் இளைப்புற்று வாடி வருந்தினவன். அத்தகையன் எவ்விதத்திலும் நமது சாபத்திற்கு உரியனல்லன்' என்றார். இங்ஙனம் புதல்வனுக்கு மனவெறுப்புடன் மொழிந்து அவன் செய்த பாபத்தினால் தனக்கு அனர்த்தம் விளையுமென்று சங்கித்துத் தனது அபராதத்தைப் பொறுக்கும்படி பகவானை வேண்டத் தொடங்கி 'அனைவர்க்கும அந்தராத்மாவாயிருக்கும் பகவான் நிரபராதிகளான தனது பக்தர்களிடத்தில் நன்றில பெறாத மதியுடையவனும் விவேகமற்றவனும் இளைஞனுமாகிய இவன் செய்த இந்தப் பாபத்தைப் பொறுத்தருளவேண்டும்' என்றார். அம்முனிவர், 'என் விஷயத்தில் நேரே அபராதஞ்செய்தவர்கள் என்னைச் சரணம் அடைவார்களாயின், நான் அவரது அபராதத்தைப் பொறுப்பேன். என் பக்தர் விஷயத்தில் செய்த அபராதத்தை நான் எவ்விதத்திலும் பொறுக்கமுடியாது. அதை அவர்களே பொறுக்க வேண்டும்' என்று பகவான் அபிப்ராயப்படுவதாக அறிந்து, அந்த பகவானுடைய பக்தர்களையே வேண்டத் தொடங்கி 'பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்கள் பிறரால் அவமதிக்கப்பெறுவார்களாயினும், வஞ்சனை செய்யப்பெறுவார்களாயினும், சாபமிடப்பெறுவார்களாயினும், நிந்திக்கப் பெறுவார்களாயினும், அடிக்கப்பெறுவார்களாயினும், தாம் ப்ரதி செய்ய வல்லராயிருந்தும் இங்ஙனம் அவமதி முதலியன செய்தவனுடைய அபராதத்திற்கு ப்ரதி செய்யமாட்டார்கள்; ஆனால் அதையெல்லாம் பொறுத்தருள்வார்கள். ஆகையால் எனது அவிவேகியான புதல்வன் அறியாதவன் செய்த அபராதத்தை அவர்கள் பொறுத்தருள வேண்டும்' என்றார். மஹானுபாவராகிய அம்முனிவர் இங்ஙனம் புதல்வன் செய்த பாபத்திற்குப் பச்சாத்தாபம்

அடைந்து மன்னவனால் தான் அபகாரஞ்செய்யப் பெற்றிருப்பினும் அவன் செய்த அபராதத்தை ஒரு பொருளாக நினைக்கவேயில்லை. உலகத்தில் நன்மனமுடைய பெரியோர்கள் பிறர்களால் சீதம் (குளிர்) உஷ்ணம் (வெப்பம்) ஸுகம் துக்கம் முதலியவற்றிற்கு ஆள்படுத்தப் பட்டவராயினும் பெரும்பாலும் வருத்தப்படுவதுமில்லை; ஸந்தோஷிப்பதுமில்லை. எப்படி ஸுகத்தில் மூட்டப்பெற்றவராகி அதற்காக ஸந்தோஷிக்க மாட்டார்களோ, அங்ஙனமே துக்கத்தில் மூட்டப்பெற்றவராயினும், அதற்காக வருந்தமாட்டார்கள். ஏனென்னில், அவரது மனம் ஸத்வத்திற்கிடமாயிருக்குமேயன்றி, ரஜஸ்தமோ குணங்களின் கார்யமான ராகத்வேஷாதிகளுக்கிடமன்று. ஆகையால் அவர்கள் வருந்தமாட்டார்களென்னில், பிறர்க்கு அபகாரஞ்செய்ய மாட்டார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து மன்னவன் ஆலோசித்துக் கங்கையின் கரையில் ப்ராயோபவேசஞ் செய்யத் தொடங்குதலும், அங்குப் பற்பல ரிஷிகளும் சுகமுனிவரும் வந்து சேருதலும்.

ஸூதர் சொல்லுகிறார்:—அப்பால் அந்தப் பரீக்ஷித்து மன்னவன் பட்டணம் போய்ச் சேர்ந்து அந்த ப்ராஹ்மணன்மேல் ஸர்ப்பத்தையெடுத்துப் போகட்டு வந்தமையாகிற தான்செய்த நிந்தைக்கிடமான கார்யத்தைப் பற்றிச் சிந்தையுற்று மிகமனவருத்த மடைந்தவனானான். 'என்ன கார்யஞ்செய்தோம்' என்று தன்னைத் தான் பழிக்கத்தொடங்கி 'ஆ! என்ன ஆச்சர்யம்! நான் ஒன்றுமறியாதமூர்க்கன்போல்,நிரபராதியும்(அபராதத்தையே அறியாதவரும்) வல்லமையை வெளிக்காட்டாமல்

உள்ளேயே அடக்கிக்கொண்டிருப்பவரும் மஹாதே ஜஸ்வியுமான அந்தணர்விஷயத்தில் பாபத்திற்கிடமான கார்யத்தைச் செய்தேனே! நான் கேவலம் ப்ராஹ்மணனை அவமதித்தமை மாத்ரமன்று. தேவர்க்குந் தேவனாகிய பகவானையே நேரே அவமதித்தவனானேன். (ப்ராஹ்மணனென்றால் ஒன்றான பகவானேயன்றி வேறன்று. அன்றியும்பகவானிடத்தில்அபராதப்பட்டால் அவனைப் பொறுப்பித்துக்கொள்ளலாம். அவன் பக்தரிடத்தில் அபராதப்பட்டால் அவன் பொறுக்கமாட்டானே). (அவனது பக்தரான அந்தணரிடத்தில் அபசாரப் படுதல் மிகுதியும் கொடியது). இங்ஙனம் பகவத்ஸ்வரூபனாகிய ப்ராஹ்மணனை அவமதித்தமையால் சீக்ர காலத்திலேயே எனக்கு எவ்விதத்திலும் கடக்கமுடியாத வ்யஸனம் நேருமென்பது நிச்சயம். ஆனால் அந்த ஆபத்து நான் செய்த பாபத்தின் சுத்தியின் பொருட்டு விளையுமாக. அது எனக்கு இஷ்டமே. 'இது என்? ஆபத்தை இஷ்டமென்று வேண்டுகிறாய்' என்னில், இப்பொழுது நான் செய்த பாபத்திற்குத் தகுந்த பலனை அனுபவிப்பேனாயின், மீளவும் அத்தகைய பாபத்தைச் செய்ய மாட்டேனல்லவா? செய்யவேமாட்டேன். இது உண்மையே. இதில் தவறமாட்டேன். இப்பொழுது கோபிக்கும்படி தூண்டப்பெற்ற அந்தணர் குலத்தின் நிக்ரஹமாகிற அக்னியானது இப்பொழுதே எனது ராஜ்யத்தையும் என் ஸைன்யத்தையும் சிரவதிகமான பொக்கசத்தையும் பஸ்மஞ்செய்யுமாக. அமங்கள ஸ்வபாவனாகிய எனக்கு அந்தணர் தேவதைகள் பசுக்கள் ஆகிய இவர்களிடத்தில் அபகாரஞ்செய்ய வேண்டுமென்னும் நினைவோடுகூடின பாபிஷ்டபுத்தி எப்படி மீளவும் உண்டாகாதிருக்குமோ, அப்படி என்னைச் சிக்ஷிக்கும் பொருட்டு அவ்வந்தணர் குலத்தின் கோபாக்னியானது எனது ராஜ்யம் முதலிய எல்லாவற்றையும் பஸ்மஞ்செய்

யுமாக' என்று வருந்தினான். இங்ஙனம் சிந்தித்துக் கொண்டிருக்கிற அம்மன்னவன் முனிவர் குமாரனது சாபவாக்யத்தினால் ஸர்ப்பராஜனாகிய தக்ஷகன் தூண்டப்பெற்றுத் தனக்கு ம்ருத்யுவாகப்போகிறானென்ற வ்ருத்தாந்தத்தைக் கேட்டான். அப்பால் அவன் சப்தாதி விஷயங்களில் மனம் தாழப்பெற்ற தனக்கு அவற்றில் வைராக்யத்தை விளைப்பதும் சீக்ரத்தில் தன்னைக் கொளுத்த வரப்போகிறதுமாகிய தக்ஷகனாகிற அக்னியை 'நல்லது' என்று நினைத்தான். அனந்தரம் அம்மன்னவன் தான் முன்னமே அஸாரங்களென்று நிச்சயித்திருந்த இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் விளையக்கூடிய ஸுகங்களில் விருப்பத்தைத் துறந்து, உடனே ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களைப் பணிதலே மேலான புருஷார்த்தத்திற்கு ஸாதகமென்று உறுதியாக நினைத்து, கங்கையின் கரையில் ப்ராயோபவேசத்திற்கு தீக்ஷித்துக்கொண்டான் (சாப்பிடாமலேயிருக்கையாகிற வ்ரதத்தில் முயன்றான்). 'தன் க்ருஹத்திலாவது மற்றை இடத்திலாவது ப்ராயோபவேசஞ் செய்யாமல் கங்கா நதிக்குப் போனானே; என்னவிசேஷம்' என்கிறீர்களோ? சொல்லுகிறேன் கேளுங்கள், திகழ்கின்ற அழகிய துளஸியுடன் கூடின ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தினுடைய ஸம்பந்தத்தினால் மிகுதியும் மேன்மையுற்ற தூய் நீருடையதாகிப் பெருகிவருகின்ற தேவநதியாகிய கங்கை, இவ்வுலகம் அவ்வுலகம் (பரலோகம்) ஆகிய இரண்டிடங்களிலுமுள்ள லோகபாலர்களோடு கூடின ஜனங்களையெல்லாம் பரிசுத்தமாக்குகிறதல்லவா? ஸமீபத்தில் மரணம் நேரப்பெற்ற எந்த மனிதன் தான் அந்நதியைப் பணியாதிருப்பான்? ஆனதுபற்றியே அம்மன்னவன் ப்ராயோவேசத்திற்கு அவ்விடம் சென்றான்.

பாண்டவர்களின் பேரனாகிய அந்தப் பரீக்ஷித்து இங்ஙனம் விஷ்ணுபாதாரவிந்தத்தினின்று பெருகின மஹாநதியான கங்கையின் கரையில் ப்ராயோபவேசஞ்செய்ய நிச்சயித்துக்கொண்டு தேஹத்திலும் அதைச்சேர்ந்த மற்றவைகளிலும் பற்றைத் துறந்து முனிவர்கள் ஆசரிக்கும் வ்ரதத்தைக் கைப்பற்றி மற்றைச் சிந்தையேதுமில்லாதவனாகி ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தையே த்யானித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது உலகங்களைப் பவித்ரஞ்செய்யுந்தன்மையரும் மஹானுபாவர்களுமான முனிவர்கள் தந்தமது சிஷ்யர்களோடு அம்மன்னவனுடைய ஸந்நிதானத்திற்கு வந்து சேர்ந்தார்கள். நன்மனமுடைய பெரியோர்கள் பெரும்பாலும் தீர்த்தயாத்ரையென்னும் வ்யாஜத்தினால் தாமே புண்ய தீர்த்தங்களைப் பரிசுத்தஞ் செய்கிறார்களல்லவா! அத்ரி வஸிஷ்டர் ச்யவனர் சரத்வான் அரிஷ்டநேமி ப்ருகு அங்கிரஸ்ஸு பராசரர் விஸ்வாமித்ரர் பரசுராமன் உசத்யர் இந்த்ரப்ரமதர் இத்மவாஹர் மேதாதிதி தேவலர் ஆர்ஷ்டிஷேணர் பரத்வாஜர் கௌதமர் பிப்பலாதர் அகஸ்த்யர் வ்யாஸர் நாரதபகவான் இவர்களும், மற்றும் சிறந்த தேவரிஷிகளும் ப்ரஹ்மரிஷிகளும் ராஜரிஷிகளும் மற்றை அருணர் முதலிய ரிஷிகளும் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். த்வ்யார்ஷேயம் த்ர்யார்ஷேயம் பஞ்சார்ஷேயம் ஸப்தார்ஷேயம் முதலிய பலவகை ரிஷிகளைத் தொடர்ந்த ப்ரவரங்களையுடைய பற்பல மஹர்ஷிகளும் வந்திருக்கக் கண்டு அம்மன்னவன் அவர்களெல்லோரையும் தலையால் வணங்கி உரியபடியே பூஜித்தான். அப்பால் அம்முனிவர்கள் ஸுகமாக உட்கார்ந்தபின்பு மீளவும் நமஸ்கரித்து அவர்க்கருகே சென்று எதிரில் நின்று அஞ்சலிசெய்து விவேகம் நிறைந்த மனமுடைய அம்மன்

னவன் தான்செய்ய நினைத்திருப்பதை அவர்களுக்கு இங்ஙனம் விண்ணப்பஞ் செய்தான்.

பரீக்ஷித்து சொல்லுகிறான் ;—ராஜாக்களுக்குள் நாங்கள் மிகுந்த பாக்யமுடையவர். ஆ! என்ன ஆச்சர்யம்! ஏனென்னில், மஹானுபாவர்களான நீங்கள் இப்படி எம்மைத் தேடிவந்து அனுக்ரஹிக்கும்படியான சீலமுடையவராயிருக்கிறோமல்லவா? மஹானுபாவர்களான உங்களைப்போன்ற பெரியோர்களின் அனுக்ரஹத்தினால் நேரக்கூடிய சீலம் எங்களுக்கு உளதென்று, நீங்கள் இப்படி வந்து அனுக்ரஹிப்பதினாலேயே தெரிய வருகின்றது. அந்தணர்தலைவர்களான உங்கள் பாதங்களைப் பணிவதால் விளையுந் தூய்மைக்கிடமாகாமல் தூரத்தில் ஒதுங்கின ராஜவம்சமெல்லாம் நிந்தைக்கிடமான செயலுடையதே. ஆ! என்ன வருத்தம்! 'இப்படி பெரியோர்களின் அனுக்ரஹத்தினால் விளையக்கூடிய சீலம் அமைந்த உனக்கு ஏன் இப்பொழுது அந்தப்பெரியோர்களின் நிக்ரஹம் நேரிட்டது?' என்கிறீர்களோ; சொல்லுகிறேன், கேளுங்கள். நான் அத்தகைய சீலமுடையனாயிருந்தும் அடிக்கடி ஸம்ஸார ஸங்கங்களில் மனந்தாழப் பெற்றிருந்தமையால் பரப்ரஹ்மத்தை அறிந்த மஹானுபாவரான அந்தணர் விஷயத்தில் அபசாரப்படும்படி நேர்ந்தது. அதைக் கண்டு, மேன்மையுடைய ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ஆராதிக்கப்படுமவர்க்கும் ப்ரபுவான ஸர்வேச்வரன் ப்ராஹ்மணாவமானமென்னும் வ்யாஜத்தினால் நான் பட்ட அபசாரத்தைப் பரிஹரித்து எனக்கு தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிலும் உண்டான விருப்பத்தைப் போக்கி அவற்றில் வெறுப்பை விளைவித்து என்னை அனுக்ரஹிக்கத் தொடங்கினான். பகவானே இந்த ப்ராஹ்மண சாபமாகத் தோன்றி எனக்குச் சித்தத்தில் அடக்கிக்கொடுக்க முயன்

ருனல்லவா? ஆகையால் இந்த ப்ராஹ்மணசாபம் நான் பட்ட அபசாரத்தைப் போக்குவதாகையாலும் தேஹாதிகளில் வெறுப்பை விளைவிக்கையாலும் இத்தகைய பெரியோர்களின் ஸஹவாஸத்தை விளைவித்து அதன் மூலமாய் மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியதாகையாலும் எனக்கு இது அனுக்ரஹமே அன்றி நிக்ரஹமன்று. ஓ அந்தணர்களே! நீங்களும் இந்த கங்காதேவியும், அத்தகைய நான் ஸர்வேஸ்வரனை பகவானிடத்தில் மனத்தை நிலையாக நிறுத்தி, உங்களைப் பணிந்து உங்களிடத்தில் துறக்கத் தகுந்தவை இவையிவையென்பதையும் பற்றத்தகுந்தவை இவையிவையென்பதையும் கேட்க விரும்புற்றிருப்பதை அறிவீர்களாக. அந்தணராற் றூண்டப்பெற்ற தக்ஷகன் என்னை வஞ்சித்து வேண்டியபடி கடிப்பானாக. அதற்கு நான் பயப்படவில்லை. ஆனால் நீங்கள் ஸ்ரீவிஷ்ணுவின கதைகளை ஓயாமல் பாடிக்கொண்டிருப்பீர்களாக. மற்றும் எல்லையில்லாத குணங்களையுடைய பகவானிடத்தில் பக்தியும் அந்த பகவானைப் பற்றின பெரியோர்களிடத்தில் மனப்பற்றும் எனக்கு உண்டாகும்படி அனுக்ரஹஞ்செய்வீர்களாக. அன்றியும், எந்தெந்த ஜன்மத்தைப் பெறுகிறேனோ, அந்தந்த ஜன்மங்களிலெல்லாவற்றிலும், உங்களைப்போன்ற மஹாநுபாவர்களிடத்தில் எனக்கு அனுகூலபுத்தி உண்டாகுமாக. அந்தணர்களாகிய உங்களுக்கு நமஸ்காரம்" என்றான்.

இவ்வண்ணம் நிச்சயமுற்றிருக்கும் தீரனாகிய அம்மன்னவன் தன் புதல்வனாகிய ஜனமேஜயனிடத்தில் ராஜ்யபாரத்தை வைத்துக் கங்கையின் தென்கரையிற் கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் பரப்பி அவற்றின்மேல் வடக்குமுகமாக உட்கார்ந்தான். இங்ஙனம் ராஜாதிராஜனாகிய அந்தப் பரிக்ஷித்து ப்ராயோபவேசஞ் செய்

கையில், ஆகாயத்தில் ஸமஸ்த தேவக் கூட்டங்களும் அவனைப் புகழ்ந்து ஸந்தோஷத்தினால் புஷ்பங்களை அடிக்கடி பூமியில் இறைத்தார்கள். துந்துபி வாத்யங்களும் முழங்கின. அவ்விடம் எவரெவர் வந்திருந்தார்களோ, அம்மஹர்ஷிகளனைவரும் ப்ரஜைகளிடத்தில் அனுக்ரஹஞ் செய்கையாகிற ஸ்வபாவமே முக்யமாயிருக்கப்பெற்றவராகையால் மிகுந்த மஹிமையுடைய பெரியோர்களும் புகழத்தகுந்த நற்குணங்களால் அழகியனான அம்மன்னவனை 'நல்லது நல்லது' என்று புகழ்ந்து, இங்ஙனம் மொழிந்தார்கள். 'ஓ! ராஜரிஷிகளில் சிறந்தவனே! என்றும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்திருக்குந் தன்மையுடைய உங்களுக்கு இது ஓராச்சர்யம் அன்று. ஏது என்கிறாயோ? நீங்கள் பகவானுடைய பார்ஶ்வம் போய்ச் சேரவிரும்பி ராஜாக்கள் தரிக்கும்படியான கிரீடத்தோடு கூடின ஸார்வபௌம ஸிம்ஹாஸனத்தைத் துறக்கின்றீர்களென்பதே. இங்ஙனம் ராஜாவைப் பார்த்து மொழிந்து, அப்பால் தங்களுக்குள் 'பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களை முக்யமாகப் பணியுந்தன்மையனான இம்மன்னவன் சரீரத்தைத் துறந்து சுத்த ஸத்வமயமாயிருப்பதும் சோகம் முதலிய தோஷங்கள் அற்றதுமாகிய பரலோகத்தை அடையும் வரையில், நாம்அனைவரும் இங்கு இம்மன்னவனது ஸமீபத்திலேயே இருப்போம்' என்று மொழிந்துகொண்டார்கள். பக்ஷபாதமில்லாததும் அம்ருதத்தைப் பெருக்குவதும் ஆழ்ந்த கருத்துடையதும் கபடமற்றதுமாகிய அந்த முனிவரது வசனத்தைக் கேட்டுத் தனக்கு ஹிதஞ்செய்ய முயன்ற இம்மஹர்ஷிகளை வணங்கி ப்ராயோபவேசத்தில் முயன்றிருக்கிற பரீக்ஷித்து மன்னவன் விஷ்ணுவின் சரித்ரங்களைக் கேட்க விரும்பி இங்ஙனம் மொழிந்தான். 'ஸத்யலோகத்தில் உருவத்துடன்

கையில், ஆகாயத்தில் ஸமஸ்த தேவக் கூட்டங்களும் அவனைப் புகழ்ந்து ஸந்தோஷத்தினால் புஷ்பங்களை அடிக்கடி பூமியில் இறைத்தார்கள். துந்துபி வாத்யங்களும் முழங்கின. அவ்விடம் எவரெவர் வந்திருந்தார்களோ, அம்மஹர்ஷிகளனைவரும் ப்ரஜைகளிடத்தில் அனுக்ரஹஞ் செய்கையாகிற ஸ்வபாவமே முக்யமாயிருக்கப்பெற்றவராகையால் மிகுந்த மஹிமையுடைய பெரியோர்களும் புகழத்தகுந்த நற்குணங்களால் அழகியனான அம்மன்னவனை 'நல்லது நல்லது' என்று புகழ்ந்து, இங்ஙனம் மொழிந்தார்கள். 'ஓ! ராஜரிஷிகளில் சிறந்தவனே! என்றும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்திருக்குந் தன்மையுடைய உங்களுக்கு இது ஓராச்சர்யம் அன்று. எது என்கிறீரோ? நீங்கள் பகவானுடைய பார்ஸ்வம் போய்ச் சேரவிரும்பி ராஜாக்கள் தரிக்கும்படியான கிரீடத்தோடு கூடின ஸார்வபௌம ஸிம்ஹாஸனத்தைத் துறக்கின்றீர்களென்பதே. இங்ஙனம் ராஜாவைப் பார்த்து மொழிந்து, அப்பால் தங்களுக்குள் 'பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களை முக்யமாகப் பணியுந்தன்மையனான இம்மன்னவன் சரீரத்தைத் துறந்து சுத்த ஸத்த்வமயமாயிருப்பதும் சோகம் முதலிய தோஷங்கள் அற்றதுமாகிய பரலோகத்தை அடையும் வரையில், நாமனைவரும் இங்கு இம்மன்னவனது ஸமீபத்திலேயே இருப்போம்' என்று மொழிந்துகொண்டார்கள். பக்ஷபாதமில்லாததும் அம்ருதத்தைப் பெருக்குவதும் ஆழ்ந்த கருத்துடையதும் கபடமற்றதுமாகிய அந்த முனிவரது வசனத்தைக் கேட்டுத் தனக்கு ஹிதஞ்செய்ய முயன்ற இம்மஹர்ஷிகளை வணங்கி ப்ராயோபவேசத்தில் முயன்றிருக்கிற பரீக்ஷித்து மன்னவன் விஷ்ணுவின் சரித்ரங்களைக் கேட்க விரும்பி இங்ஙனம் மொழிந்தான். 'ஸத்யலோகத்தில் உருவத்துடன்



229. பரீக்ஷித்து மஹாராஜனிடம் சுகர் வருதல்.

உலாவுகின்ற வேதங்கள்போல் திகழ்கின்ற நீங்கள் எல்லோரும் எல்லாத்திசையினின்று என்னை அநுக்ரஹிக்கிறதற்காகவே இவ்விடம் வந்தீர்கள். நீங்கள் இங்ஙனம் வருவது, என்னைப் போன்ற பிறரை அநுக்ரஹிக்கையாகிற உங்கள் ஸ்வபாவத்தைப்பற்றியேயன்றி, இவ்வுலகத்திலாவது பரலோகத்திலாவது விளையக்கூடிய மற்றை எந்த ப்ரயோஜனத்தைப் பற்றியும் அன்று. இப்படி நீங்கள் வருவது என்னைப்போன்றவர்களை அநுக்ரஹிப்பதற்காகவே யாகையால், ஓ அந்தணர்களே! உங்களை நம்பி நான் செய்யவேண்டியது இன்னதென்கிற விஷயத்தில் கேட்கவேண்டிய இவ்வம்சத்தை வினவுகின்றேன். மரணம் அடையப்போகிற ஜனங்கள், ஸர்வப்ரகாரத்தாலும் மனோ வாக் காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் செய்யக்கூடியது எதுவோ, அவர்களுக்கு எது ஸம்ஸாரத்தை ஒழித்து நிர்மலமான மோக்ஷத்தைக் கொடுப்பதாகித் தூய்தாயிருக்குமோ, அத்தகைய பொருளை விவரிக்குந் திறமையுடைய நீங்கள் எனக்கு விவரித்து மொழிவீர்களாக' என்றான். அம்மன்னவன் இங்ஙனம் வினவிக்கொண்டிருக்கையில் ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்தவரும் வ்யாஸமஹர்ஷியின் புதல்வருமாகிய ஸ்ரீ சுகமுனிவர் அவ்விடம் வந்து நின்றார். அவர் மனம்போனபடி பூமியைச் சுற்றிக் கொண்டிருக்குந்தன்மையர்; செய்யவேண்டிய கார்யம் ஒன்றுமில்லாமையால் எதிலும் விருப்பமில்லாதவர்; பரப்ரமஹ்மஸ்வரூபனாகிய ஆத்மாவின் அநுபவம் நேரப்பெற்றிருப்பவராகையால் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவர். ரிஷியென்று அறிய முடியாத சரீரமுடையவர்; அவமதிக்கும்படியான வேஷம் பூண்டிருப்பவர்; ஆனது பற்றியே ஒன்று மறியாத இளைஞர்களால் சூழப்பெற்றவர். அவர் வரக்கண்டு அழுக்கடைந்த ரத்னம்போல் மறைந்த ஒளியுடையவராயினும் அவருடைய

அடையாளங்களை அறிந்த முனிவர்கள் தமது ஆஸனங்களினின்று எழுந்திருந்தார்கள். அவர் பதினாறு வயதுள்ள பாலகன்போல் புலப்பட்டார். கால் கை துடை புருவம் தோள் கபோலம் (கன்னம்) இவைகளும் மற்ற அவயவங்களும் மென்மைக்கிடமாயிருக்கப் பெற்றவர்; நீண்டு அகன்று அழகியவைகளுமான கண்கள் அமைந்து உயர்ந்த மூக்குடையதும் காதுகள் ஒன்றோடொன்று ஒத்திருக்கப் பெற்றதும் அழகான புருவங்களுடையதுமான முகத்துடன் ப்ரகாசிப்பவர்; லக்ஷணங்கள் அமைந்து அழகில் சிறப்புற்ற கண்டமுடையவர்; தோளெலும்புகள் மறைந்து மாம்ஸலமாயிருக்கப்பெற்றவர்; அகன்று உயர்ந்த மார்புடையவர்; நீர்ச்சுழிபோன்ற கொப்பூழ் அமைந்தவர்; [1] மூன்று மடிப்புகளால் அழகான வயிறுடையவர்; அரையில் கந்தலை உடுத்து மேல் வஸ்த்ரமின்றித் திகம்பரமாயிருப்பவர்; சுருண்டு விரிந்த தலைமயிருடையவர்; நீண்ட புஜதண்டங்களுடையவர்; அழகிய தேவோத்தமன்போல் திகழ்கின்ற ஒளியுடையவர்; ஆசைப்படத்தகுந்த வயதுடையவர்; அங்கத்தின் சோபையாலும் அழகிய புன்னகையினாலும் ஸ்த்ரீகளின் மனதிற்கு இனியராயிருப்பவர். இத்தகையரான ஸ்ரீசுகமுனிவர் அம்மன்னவன் ப்ராயோபவேசஞ்செய்த கங்கையின் கரைக்கு வந்து சேர்ந்தார். அப்பால் விஷ்ணுராதன் (பரீக்ஷித்து) அங்ஙனம் வந்த அதிதியாகிய அந்தச் சுகமுனிவர்க்குத் தலைவணங்கி நமஸ்காரஞ் செய்து அவரைவிதிப்படி பூஜித்தான். அப்பொழுது அவரைப் பின்றொடர்ந்து வந்த அறியாத பெண்களும் பிள்ளைகளும் அனைவரும் திரும்பிப்போனார்கள். அனந்தரம் பூஜிக்கப்பெற்ற அந்தச் சுகமுனிவர் மன்னவன் ஸமர்ப்பித்த மேலான ஆஸனத்தில் உட்

---

1. இம்மடிப்புகளையே த்ரிவலி யென்று சொல்லுகிறார்கள்.

கார்ந்தார். மிகுந்த மஹிமையுடைய பெரியோர்களும் கௌரவிக்கத்தகுந்த மஹிமையுடையவராயினும் மறைந்திருக்கிற பகவானுகிய அந்தச் சுகர் ப்ரஹ்மரிஷிகளும் ராஜரிஷிகளும் தேவர்ஷிகளும் கூட்டம் கூட்டமாயிருக்கிற அவ்விடத்தில் ஓராஸனத்தில் உட்கார்ந்து, அங்காரகன் முதலிய க்ரஹங்களும் அச்வினி முதலிய நக்ஷத்ரங்களும் மற்றை ஸாதாரண நக்ஷத்ரங்களும் கூட்டங் கூட்டமாய் நிறைந்திருக்கப்பெற்ற சந்த்ரன்போல் மிகுதியும் ப்ரகாசித்தார். மிகுந்த காந்தியுடையவராகி ஸாத்த்விகவேஷம் பூண்டவரும், [1] அவித்யையின் தடை நீங்கப்பெற்று எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கும்படியான புத்தியுடையவருமாகி உட்கார்ந்திருக்கின்ற சுகமுனிவரது ஸமீபத்தில வந்து மஹாபாகவதனுகிய பரீக்ஷித்து மன்னவன் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்து கைகூப்பிக்கொண்டு மனவூக்கத்துடன் இனிய உரையால் இங்ஙனம் வினவினுன். 'ஓ அந்தணர் தலைவரே! நாங்கள் க்ஷத்ரியாதமர்களாயினும் இப்பொழுது ஸத்புருஷர்களைப் பணியுந்தன்மையரும் ஸத்புருஷர்களால் அனுக்ரஹிக்கத்தகுந்தவருமானேம் ஆ! என்ன ஆச்சர்யம்! ஏனென்னில், உம்மைப்போன்ற மஹானுபாவர்கள் அதிதிகளென்னும் வ்யாஜமாக அருள்புரிந்து வந்து எங்களைப் புனிதஞ்செய்தார்களல்லவா. நீங்கள் மனத்தில் நினைத்தமாத்ரத்தில், உங்கள் நினைவுக்கு விஷயமான புருஷர்களின் க்ருஹங்கள் உடனே பரிசுத்தங்களாகின்றனவாயின், உங்களதுகாட்சி, உங்கள் பாததூளி படுதல், உங்கள் ஸ்ரீபாததீர்த்தம், நீங்கள் வந்து உட்காருதல் முதலியவற்றால் பரிசுத்தங்களாமென்பதற்கு என்ன ஸந்தே

---

1. அவித்யையால் வினையும் தடை, அதாவது ஜ்ஞான ஸங்கோசம்.

ஹம்? இதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? யோகிகளில் சிறந்தவரே! உமது ஸந்நிதானம் நேர்ந்தமையால், என்னைப்போன்ற புருஷர்களின் பாதகங்களெல்லாம் (மஹாபாபங்களெல்லாம்) ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக்கண்ட அஸுரர்கள்போல் உடனே பாழாய் விடுமல்லவா! பாண்டவர்களை நண்பர்களாகவுடைய ஸ்ரீ க்ருஷ்ணன் என்னிடத்தில் அருள்புரிந்தானென்று நினைக்கின்றேன். தனது அத்தையின் புதல்வர்களான பாண்டவர்களின் ப்ரீதிக்காக அவரது ஸந்ததி முழுவதிலும் அவன் இஷ்டபந்துவாகி அவர்க்கு அருள்புரிகின்றானென்று தெரிகின்றது. அத்தையாகிய குந்தியிடத்திலுள்ள ப்ரீதி அவள் புதல்வர்களான பாண்டவர்களிடத்திலும், அவரிடத்திலுள்ள ப்ரீதி அவரது புதல்வர்களிடத்திலுமாக அந்த ஸந்ததி முழுவதிலும் அவன் மிகுந்த ப்ரீதியுடையவனாயிருக்கிறானென்று ஏற்படுகின்றது. இப்படி ஸ்ரீ க்ருஷ்ணன் என்னிடத்தில் அருள்புரிந்தானனது பற்றியே எனக்கு உம்மைக்காண நேரிட்டது. அப்படி இல்லாத பக்ஷத்தில் ஸம்ஸாரத்தில் அழுந்தித்திரியும் ஜனங்களால் அறிய முடியாத கதியுடையவரும் பெரும்பாலும் வனத்தில் வாஸஞ்செய்பவரும் செயலெல்லாம் தீர்ந்தவரும் (செய்ய வேண்டிய கார்யங்களொன்றுமில்லாதவரும்) ஆகிய உமதுகாட்சி ஸம்ஸாரி ஜனங்களுக்கு, அதிலும் மரணம் ஸமீபித்திருக்கப்பெற்ற எமக்கு எப்படி நேரும்? இப்படி நேரக்கூடாத உமது காட்சி எனக்கு நேரிட்டமையால், யோகிகளுக்கும் பரமகுருவான உம்மை, மோக்ஷத்தை விரும்பும் புருஷனுக்கு எப்பொழுதும், அதிலும் மரணகாலத்தில் மனோவாக் காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் எது செய்யத்தகுந்ததோ, அதை வினவுகின்றேன். வல்லவரே! மோக்ஷத்தில் விருப்பமுடைய புரு

ஷர்கள் மரணம் ஸமீபித்திருக்கும்பொழுது எதைக் கேட்கவேண்டுமோ, எதை ஜபிக்கவேண்டுமோ,எதைச் செய்யவேண்டுமோ, எதை மனனஞ் செய்யவேண்டுமோ எதை ப்ரீதியுடன் பணியவேண்டுமோ, கேட்கக்கூடாத தும் ஜபிக்கக்கூடாததும் செய்யக்கூடாததும் நினைக்கக் கூடாததும் பணியக்கூடாததும் எதுவோ, அவற்றை யெல்லாம் எனக்கு விசதமாகச் சொல்லவேண்டும். ஓ அந்தணர்தலைவரே! நீர் க்ருஹஸ்தர்களின் க்ருஹங்க ளில் எங்கும் பசு கரக்கிறவளவு நாழியுங்கூடநின்று புலப் படமாட்டீரல்லவா ? ஆயினும், நான் இந்தச்சரீரத்தை விடும்வரையில் நான் வினவின விஷயங்களைத் தெளி வாக மொழிந்துகொண்டு இங்கேயே இருக்கவேண்டும்' என்று அம்மன்னவன் விண்ணப்பஞ்செய்தான். இங்ங னம் மன்னவனால் புகழ்ந்து சொல்லப்பெற்றவரும் மோக்ஷ விஷயங்களைப்பற்றி வினவப்பெற்றவரும் தர்மங் களை அறிந்தவரும் வ்யாஸ மஹர்ஷியின் புதல்வரும் மஹானுபாவருமாகிய அந்தச் சுகமுனிவர் மென்மையும் தூய்மையும் அமைந்த மொழியுடன் இங்ஙனம் மறு மொழி கூறினர்.

பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

ப்ரதம ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.



# ஸ்ரீ பாகவதம்

## த்விதிய ஸ்கந்தம்.

பரீக்ஷித்துக்கும் சுகமுனிவர்க்கும் ஸம்வாதம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஓ மன்னவனே! புருஷர்கள் கேட்கவேண்டியது நினைக்கவேண்டியது முதலிய விஷயத்தைப்பற்றி லோகங்களின் ஹிதத்தைக்குறித்து நீ கேட்ட கேள்வி மிகுதியும் புகழத்தகுந்தது. ஆத்மாவின் உண்மையை அறிந்த பெரியோர்களுக்கு மிகுதியும் ஸம்மதமாயிருப்பது. ராஜஶ்ரேஷ்டனே! இல்லறத்தில் இருக்கும் புருஷர்கள் கேட்கவேண்டியவை முதலிய அம்சங்கள் பலவாயிருக்கின்றன. ஸம்ஸாரிகள் ஆத்மாவின் உண்மையை அறியாதவர்; இஹ பர லோக ஸுகங்களை விரும்பி இந்த்ராதி தேவதைகளின் ப்ரீதிக்காகப் பற்பல செயல்களைச் செய்யுந்தன்மையர். அவர்களுக்குக் கேட்கவேண்டியது முதலிய விஷயங்கள் பலவாயிரம் உண்டு. மோக்ஷத்தில் விருப்பமுடையவர்க்குக் கேட்கவேண்டியதும் மனனஞ்செய்ய வேண்டியதும் த்யானஞ்செய்ய வேண்டியதும் பரப்ரஹ்மமொன்றே. ஸம்ஸாரிகளுக்கு வயது ராத்ரியில் நித்ரையாலும் ஸம்போகத்தாலும் கழிகின்றது. மன்னவனே! பகலில் வயது, பணம் ஸம்பாதிப்பதற்கு வேண்டிய செயல்களாலும், பணம் ஸம்பாதித்த பின்பு குடும்பபோஷண வ்யாபாரத்தினாலும், மற்றும் பலவகைச்செயல்களாலும் கழிகின்றது. இல்லறத்தில் புகுந்தவன் தனது பரிவாரங்களாகிய தேஹம் புதல்வர் மனைவி முதலியவை நிலையின்றி அழியுமவையாயினும்

அவற்றில் மனப்பற்றுடையவனாகி, பிறர் முடிவதைப் பார்த்தும் 'இங்ஙனமே நாமும் நிலையின்றி முடியப்போகின்றவரே' என்று த்ருஷ்டாந்தத்தினால் அறியக்கூடுமாயினும், மனவூக்க மற்றுத் தன்னுடைய தேஹாதிகளுக்கும் அங்ஙனமே நேரு மென்பதை நினைக்கிறதேயில்லை. பரதவம்சத்தில் பிறந்தவனே! ஆகையால், எவ்விதத்திலும் பயமில்லாத மோக்ஷத்தை விரும்புமவன் ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் தன்னைப்பற்றினவருடைய பயங்களைப் போக்குந்தன்மையனும் ஜ்ஞானம் பலம் முதலிய குணஸமூஹங்கள் நிறைந்தவனும் பகவானென்று கூறப்படுபவனும் கார்ய காரண ரூபமான சேதனர்களை நியமிப்பவனுமாகிய பரமபுருஷனையே செவிகளாரக் கேட்பதும் வாயார வாழ்த்துவதும் நெஞ்சார நினைப்பதும் செய்யவேண்டும். ஜ்ஞான யோகம் கர்மயோகம் பக்தியோகம் ஆகிய இவற்றை நிர்விக்னமாகச் செய்து நிலைமை பெறுவதால் தேஹம் முடியும்பொழுது பரமபுருஷனை நினைப்பதே ஸாதிக்கவேண்டிய அம்சம். இவ்வளவே ஜன்மம் எடுத்ததற்கு மேலான பயன். முனிவர்கள் 'இதைச் செய், இதைச் செய்யாதே' என்று விதிப்பதும் நிஷேதிப்பதுஞ் செய்கிற வேதத்தில் சொல்லப்படுகிற கர்மங்களினின்று பெரும்பாலும் மீண்டு ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலந்த ஸத்த்வம் தீண்டப்பெறாது சுத்தஸத்த்வமயமான பரப்ரஹ்மத்தினிடத்தில் நிலைநின்று அவனே நமக்குத் தஞ்சமென்று அவன் திருவடிகளையே திடமாகக்கொண்டு தன்னைப்பற்றினாருடைய பாபங்களைப்போக்குந்தன்மையனான பரமபுருஷனுடைய குணங்களைப் பேசியே பேரானந்தத்துடன் பொழுது போக்கினார்கள். ராஜனே! பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறிவிக்குந் திறமையுடையதும் வேதத்தோடொத்ததுமாகிய இந்த பாகவதமென்

னும் புராணத்தை என் தந்தையாகிய வ்யாஸ மஹர்ஷி யிடத்தினின்று கலியுகத்தின் ஆரம்பத்தில் நான் அத்ய யனஞ்செய்தேன் (கற்றேன்). 'நீர் ஸித்திபெற்றிருந்தும் ஏன் புராணம் கற்பதில் முயன்றீர்' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். ஸத்வ ரஜஸ்தமோ குணங்களைக் கடந்து சுத்தஸத்வமயனான பரமபுருஷனுடைய குணங் களை அனுபவிப்பதில் சாஸ்த்ரங்களின் உதவியை எதிர் பாராமல் எல்லை சேர்ந்து நிலைமை பெற்றவனாயினும் உத்தமச்லோகனான (சிறப்புற்ற ப்ரஹ்மாதி தேவர்க ளால் புகழப்பெற்றவனும் சிறந்த புகழுடையவனுமாகிய) பகவானுடைய லீலைகளால் மனம் இழுக்கப்பெற்று அவற் றை எடுத்துக்கூறுகிற இந்தப் புராணத்தை நான் கற் றேன். கரையேறின எம்மைப் போன்றவர்க்கும் இந்தப் புராணம் ஆதரிக்கத் தக்கதாயின், கரையேற விரும்பு கிற உனக்கு இது மிகுதியும் ஆதரிக்கத் தக்க தென் பதைப்பற்றி நான் சொல்லவேண்டியதில்லை. நீ மஹா புருஷனாகிய பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவன். ஆகையால் உனக்கு நான் இந்தப் புராணத்தைச் சொல் லுகிறேன். (ஸாதாரணமாய் ஒருவனுக்கு ரஹஸ்யார்த் தங்களை உபதேசிக்க வேண்டுமானால் அவனது மனத் தூய்மையை நெடுநாள் பரீக்ஷித்துச் சுச்ரூஷை கொண்டு மாஸோபவாஸம் பக்ஷோபவாஸம் முதலியவை களால் அருமைப்படுத்திச் சூழரவுகொண்டு உபதேசிக்க வேண்டும். ஆயினும் உன் மனத்தூய்மை எனக்குத் தெரியுமாகையால் ரஹஸ்யார்த்தங்கள் நிறைந்த இந்த பாகவதமென்னும் புராணத்தை அருமைப்படுத்தாமல் உனக்கு உபதேசிக்கிறேன். நீ பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவனாகையால் உன்னிடத்தில் சுச்ரூஷை கொள்ளவேண்டிய அவச்யமில்லை). இந்தப் புராணத் தைக்கேட்டு இதில் விளங்கும் பொருள்களில் ச்ரத்தை

யுடையராயிருப்பார்களாயின், மோக்ஷங்கொடுக்குந் தன்மையுள்ள பகவானிடத்தில் நிஷ்காரணமான (ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராத) பக்தி விளையப்பெறுவார்கள். மன்னவனே! ஆத்யாத்மிகம் முதலிய மூன்று வகைப்பட்ட ஸம்ஸார தாபங்களில் அடிபட்டு அதன் மூலமாய் ஸம்ஸாரத்தில் வெறுப்படைந்து எவ்விதத்திலும் பயமில்லாத மோக்ஷத்தை விரும்பிக் காமயோகாதி மார்க்கங்களில் நிலைநின்ற யோகிகளுக்கும், பகவானுடைய நாமங்களைக் கீர்த்தனஞ் செய்தலும் ஸ்வரூப ரூப குண விபூதிகளைச் சிந்தித்தலுமாகிய இவையே மோக்ஷ ஸாதனமென்று பெரியோர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். 'எனக்கு ஆயுள் அற்பமே இருக்கின்றது. இதில் நான் என்ன ஸாதிப்பேன்' என்று வருந்தவேண்டாம். பிள்ளை பெண்டிர் சரீரம் முதலியவற்றில் மனஞ்செலுத்தப்பெற்ற மதியிலா மானிடர்களுக்குத் தெரியாமலே செல்கிற பல ஆண்டுகளாலும் என்ன ப்ரயோஜனம்? ஒரு ப்ரயோஜனமும் இல்லை. வீணாய்ச்செல்கிறதே யென்று அறியப் பெற்ற ஒரு முஹூர்த்தமாயினும் சிறந்ததே. அம் முஹூர்த்த காலத்திலும் நன்மைக்கு யத்னஞ் செய்யலாமல்லவா? ஆகையால் காலம் இல்லையேயென்று நீ சிந்திக்கவேண்டாம். இருக்கிற காலமே போதும். கட்வாங்கனென்னும் ராஜரிஷி தன்னுடைய ஆயுள் இவ்வளவென்பதை அறிந்து முஹூர்த்த காலத்திற்குள் இவ்வுலகத்திலுள்ள தேஹம் முதலிய அனைத்திலும் அபிமானத்தைத் துறந்து பயத்திற்கெதிர்த்தட்டான பகவானை அடைந்தான். குருகுல குமாரனே! உனக்கோவென்றால், பிழைத்திருக்கவேண்டிய காலம் ஏழு நாள்கள் இருக்கின்றன. அந்த ஏழுநாள்களுக்குள் பரலோகத்திற்கு வேண்டியதை யெல்லாம் ஸம்பாதித்துக் கொள்வாயாக. தேஹம் முடிகிற காலம் வரும்போது,

புருஷன் பயமெல்லாம் தொலேயப்பெற்று எதிலும் பற்றின்மையாகிற அஸ்த்ரத்தினல் தேஹத்திலும் அதைத் தொடர்ந்த பிள்ளேபெண்டிர் முதலியவற்றிலும் நானென்றும் என்னுடையதென்றும் அபிமானத்தினல் வரும் போகவிருப்பத்தை அறுக்கவேண்டும். மற்றும், க்ருஹத்தினின்று புறப்பட்டு ஜிதேந்த்ரியனுகிப் புண்ய தீர்த்த ஜலங்களில் ஸ்னனஞ் செய்து பரிசுத்தமும் ஏகாந்தமுமான ஓரிடத்தில் விதிப்படி ஆஸனத்தை ஏற்படுத்திக்கொண்டு அதில் உட்கார்ந்து, அகார உகார மகாரங்களென்கிற மூன்றக்ஷரங்களடங்கியதும் பரிசுத்தமும் எல்லாவற்றிலும் சிறப்புற்றதுமாகிய ப்ரணவத்தை ஓயாமல் ஆவ்ருத்திபண்ணவேண்டும் (உருச்சொல்லவேண்டும்), க்ரமமாக ஶ்வாஸத்தை (ப்ராணவாயுவை) அடக்கி ப்ரஹ்மபீஜமாகிய ப்ரணவத்தை மறவாமல் நினைத்துக் கொண்டே மனத்தைக்கட்டவேண்டும். மற்றும், புத்தியாகிற ஸாரதியைக் கொண்டு மனதாகிற கயிற்றினல் இந்த்ரியங்களாகிற அஶ்வங்களே விஷயங்களாகிற கெட்டவழிகளில் போகவொட்டாமல் தடுத்துத் திருப்பி அடக்கவேண்டும். மீளவும் கர்மவாஸனேயால் இழுக்கப்படுகிற மனத்தை அழகியதான பகவானுடைய உருவத்தில் நிச்சய புத்தியுடன் நிலேபெறச்செய்யவேண்டும். பரிபூர்ணமான சுபாஶ்ரயத்தைப்பற்றின மனத்தினல் சக்தி உண்டாயின், முழு உருவத்தையும் த்யானஞ் செய்யவேண்டும். இல்லேயாயின் முக்ய அவயவமான முகத்தை த்யானஞ் செய்யவேண்டும். வேறுவிஷயங்களில் அனுபவமில்லாததாகிய மனத்தை பகவானுடைய உருவத்தில் நிலே நிறுத்தி மற்றென்றையும் நினையாதிருக்கவேண்டும். இங்ஙனம் முயன்ற புருஷன் பகவானுடைய உருவத்தை அனுபவிக்கையாலுண்டாகிற மஹாநந்த வெள்ளத்தில்

மூழ்கி எதையும் நினைக்கவும் பார்க்கவும் வல்லனாகமாட்டான். எந்த உருவத்தைச் சிந்திக்கில் மனது ராகம்முதலிய தோஷங்களால் வருங்கலக்கமின்றித் தெளிவு பெறுமோ, அத்தகையதும் தனக்கு மேற்பட்டதொன்றுமில்லாததுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் உருவமே சுபாஸ்ரயமெனப்படும். கீழ்ச் சொன்ன வழியின்படி இந்த்ரியங்களை வென்றவன், மனது ஒருகால் ரஜஸ்ஸினால் கலக்கமுறுமாயின், அதைப் பகவானுடைய உருவத்தில் நிலைநிறுத்தி அந்தச் சுபாஸ்ரயத்தையே த்யானஞ் செய்து அதனால் அடக்கவேண்டும். சுபாஸ்ரயத்தில் மனத்தை அங்ஙனம் நிறுத்தி தாரணை செய்யின் அந்த தாரணையே, ரஜஸ் தமஸ்ஸுக்களால் விளைகிற ராகாதியான தோஷங்களைப் போக்கி மனத்தைச் சுத்தி செய்யும். இங்ஙனம் விடாமல் மனத்தை நிலை நிறுத்திச் சுபாஸ்ரயமான பகவானுடைய உருவத்தை நேரில்பார்ப்பதுபோல் த்யானஞ் செய்யும் புருஷனுக்கு விரைவில் பக்தியோகம் உண்டாகும். தாரணையின் மஹிமை இத்தகையது. (தாரணையாவது சுபாஸ்ரயத்தில் மனத்தை நிலை நிறுத்துகை)' என்றார்.

இங்ஙனம் சுருக்கமாக அஷ்டாங்க யோகத்தை அம்முனிவர் உபதேசிக்கையில் அதன் விஸ்தாரத்தைக் கேட்க விரும்பி மன்னவன் அம்முனிவரைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான். 'அந்தணர் தலைவரே! எங்ஙனம் முயற்சி செய்யின் அந்த தாரணை உண்டாகும்? எந்த வஸ்துவில் தாரணை செய்யவேண்டும்? பகவானுடைய உருவம் பலவகைப்பட்டது. ஆகையால் எத்தகையதான பகவானுடைய உருவத்தில் மனத்தை நிறுத்தி தாரணை செய்யவேண்டும்? அந்த் தாரணை எத்தகையதாயின், ராகத்வேஷாதியான புருஷனுடைய மனமலங்களை விரைவில் போக்கும்?' என்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! நெடுநேரம் உட்காருவதால் விளையும் ஸ்ரமத்தை ஜயித்து ப்ராண வாயுவை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு மனத்தை அடக்கி வென்று இந்த்ரியங்களைத் தடுத்து நிறுத்தி பகவானுடைய ஸ்தூலமான (மிகுதியும் பெரியதான) உருவத்தில் புத்தியாகிற ஸாரதியைக் கொண்டு தன் மனத்தை நிலை நிறுத்தவேண்டும். ஆகாயம் பூமி முதலிய பஞ்சபூதங்களின் விக்ருதியும் கார்ய காரண ஸ்வரூபமுமாகிய ப்ரபஞ்சமெல்லாம் அந்த பகவானுடைய உருவமே. அது மிகப்பெரிய வஸ்துக்களைக்காட்டிலும் மிகப் பெரிதாயிருக்கும். அதில் போனதும் வரப்போகிறதும் இருக்கிறதும் ஆகிய இவை எல்லாம் புலப்படும். பூமி ஜலம் தேஜஸ்ஸு வாயு ஆகாசம் அஹங்காரம் மஹத்து என்னும் பேருடைய ஏழு ஆவரணங்களால் சூழப்பெற்ற இந்த ப்ரஹ்மாண்டமே சரீரமாகப் பெற்றவனும் விராட்புருஷனாகிய அநிருத்த பகவானுடைய அம்சமும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பரம புருஷனே தாரணைக்கு விஷயம். இவன் விராட்புருஷனுடைய அம்சமாகையால் வைராஜ புருஷனெனப்படுவான். இம்மஹா புருஷனுக்குப் பாதாள லோகத்தை உள்ளங்காலாகவும், ரஸாதலத்தைக் குதிகால்களும் நுனிக்கால்களுமாகவும், ஜகத்தையெல்லாம் படைக்குந் தன்மையனாகிய அம்மஹா புருஷனுக்கு மஹாதலத்தைக் கால்கரடுகளாகவும், தலாதலத்தைக் கணைக்கால்களாகவும், ஜகத்தெல்லாம் சரீரமாகப் பெற்ற அம்மஹானுபாவனுக்கு ஸுதலத்தை இரு முழந்தாள்களாகவும், தலம் அதலம் இவைகளை இரண்டு துடைகளாகவும், மன்னவனே! பூலோகத்தை இடையின் முன் பாகமாகவும், புவர்லோகத்தைத் தடாகம்போன்ற கொப்பூழா

கவும், இவ்வைராஜ புருஷனுக்கு ஜ்யோதிச் சக்ரத்தை மார்பாகவும், மஹாலோகத்தைக் கழுத்தாகவும், இவனுக்கு ஜனோலோகத்தைமுகமாகவும், இவ்வாதி புருஷனுக்குத் தபோ லோகத்தை நெற்றியாகவும் ஆயிரந் தலைகளுடைய இம்மஹா புருஷனுக்கு ஸத்யலோகத்தைச் சிரஸ்ஸுக்களாகவும் த்யானிக்க வேண்டுமென்கிறார்கள். இந்த்ரன் முதலிய தேவதைகள் இவனுக்கு புஜங்களென்றும், திசைகள் காதுகளென்றும், த்வனியென்றும் வர்ணமென்றும் இருவகைப்பட்ட சப்தம் இவனுக்கு ஸ்ரவணேந்த்ரியமென்றும், தன் ஜ்யேஷ்டனும் தனக்கு மேற்பட்டவனுமில்லாத இவ்வுத்தமனுக்கு அஸ்வினி தேவதைகள் மூக்குகளென்றும் இவனுக்குச் சாந்தம் உக்ரம் முதலிய பல பிரிவுகளையுடையகந்தமே (வாசனை) க்ராணேந்த்ரியமென்றும், ஜ்வலிக்கின்ற அக்னி வாயென்றும், த்யுலோகம் கண்களென்றும் ஸூர்யன் சக்ஷுரிந்த்ரியமென்றும், எங்கும் நிறைந்திருக்குந் தன்மையுள்ள இவ்வைராஜ புருஷனுக்கு அஹோராத்ரங்கள் (பகலிரவுகள்) இமைமயிர்களென்றும், நான்முகனிருக்குமிடம் புருவங்களென்றும், இவனுக்கு ஜலாபிமானி தேவதையாகிய வருணன் தவடைகளென்றும், அறுவகைப்பட்ட ரஸமே நாக்கென்றும் சொல்லுகிறார்கள். எவ்வகையிலும் அளவிடமுடியாத இப்புருஷோத்தமனுக்கு வேதங்களைச் சிரஸ்ஸென்கிறார்கள். யமனைக் கோரைப்பற்களென்கிறார்கள். ப்ரபஞ்சத்தில் உள்ள ஸ்னேஹமெல்லாம் இவ்விஷ்ணுவின் தந்தங்களாம். (பற்களாம்.) ஜனங்களை மதிமயங்கச்செய்கிற ஆச்சர்யமே அவனது சிரிப்பு. பற்பல வகைப்பட்ட ஸ்ருஷ்டியெல்லாம் அவனுடைய கடைக்கண் பார்வை. அவனுக்கு ப்ரபஞ்சத்திலுள்ள லஜ்ஜையென்னும் பொருளே மேலுதடு. பிறர் பொருளை விரும்புகையாகிற லோபமே கீழுதடு.

தர்மமே ஸ்தனங்கள். அதர்மம் பின்புறம் (முதுகு). ப்ரஹ்மதேவன் அவனுக்கு ஆண்குறி. மித்ரனும் வருணனும் வ்ருஷணங்கள். ஸமுத்ரங்கள் வயிறு. பர்வதங்கள் எலும்பின் குவியல்கள். கங்கை யமுனை முதலிய நதிகள் நரம்புகள். மன்னவர் தலைவனே! ப்ரபஞ்சமெல்லாம் சரீரமாயிருக்கப்பெற்ற அம்மஹாபுருஷனுக்கு வாயுவே மூச்சுக்காற்று. இவனுக்கு நடையும் வயதும் செயலும் ஆகிய இவை ஸத்த்வரஜஸ்தமோ குணங்களின் கார்யமாகிய ப்ராணிகளின் ஸம்ஸாரமே. குருஸ்ரேஷ்டனே! ஜகத்தையெல்லாம் அடக்கியாளுந்திறமையுடைய இவ்வீஸ்வரனுக்கு மேகங்களைத் தலைமயிர்களாக த்யானிக்கிறார்கள். எங்கும் பரந்திருக்குந்தன்மையுள்ள இவ்விபுவுக்குக் காலை மாலை ஸந்த்யைகளே வஸ்த்ரங்களாம். இவனுக்கு ப்ரக்ருதியை ஹ்ருதயகமலமென்றும், ஸமஸ்த ஓஷதிகளின் விகாரத்திற்கு ஹேதுவும் அங்ஙனம் ப்ரஸித்திபெற்றவனுமாகிய சந்த்ரனை மனதென்றும், மஹத் தத்வத்தை வ்யவஸாய சக்தியென்றும், அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருக்கிற இவனுக்கு ருத்ரனை அஹங்காரமென்றும், குதிரை கோவேறு கழுதை ஒட்டை யானை ஆகிய இவை நகங்களென்றும், மற்றை எல்லா ம்ருகங்களும் பசுக்களும் இவனுக்கு இடையின் பின்புறமென்றும், வேதஸ்வரூபங்களான தித்திரி முதலிய பக்ஷிகள் இவனுடைய அற்புதமான சிற்பஸாமர்த்யமென்றும் சொல்லுகிறார்கள். இவனுக்கு மந்த்ரமே புத்தி. இவனுக்கு மானிடவர்களெல்லோரும் வாஸஸ்தானம். கந்தர்வர் வித்யாதரர் சாரணர் அப்ஸரஸ்ஸுக்கள் ஆகிய இவர்கள் இவனுக்கு ஷட்ஜம் முதலிய ஸ்வரம். அஸுரக்கூட்டத்தில் சிறந்த ப்ரஹ்லாதன் நினைவு. ப்ராஹ்மணன் முகம். இவ்வைராஜனுக்கு க்ஷத்ரியன் புஜம். வைஸ்யன்

துடைகள். சூத்ரன் பாதங்கள். பலவகைப்பட்டவரும் யாகத்திற்குரியவருமாகிய வஸு ருத்ராதிகளின் குணங்களைக் கூறும் மந்த்ரங்கள் அமைந்ததும் ஹவிஸ்ஸு முதலிய த்ரவ்யங்களால் நிறைவேற்றக் கூடியதுமாகிய யஜ்ஞாதி கர்மயோகமெல்லாம் இம்மஹா புருஷனுடைய ஆராதனரூபமான கர்மமாம். இங்ஙனம் வைராஜனென்னும் பேர்பூண்ட ஈஸ்வரனுடைய உருவத்தின் ஸந்நிவேசத்தை (நிலைமையை) உனக்கு நான் எங்ஙனம் மொழிந்தேனோ, இது இங்ஙனமே உள்ளது. மோக்ஷத்தில் விருப்பமுடையவர், மிகுதியும் பெரியதாகிய இந்த வைராஜனுடைய உருவத்தில் தமது யுக்தியால் மனத்தை நிலை நிறுத்துகிறார்கள். எல்லாம் தன்னில் அடங்கப் பெற்ற இந்த வைராஜனுடைய உருவமே தாரணைக்கு விஷயமாம். இந்த ஈஸ்வரனுடைய உருவத்திற்கு வெளிப்பட்டது ஒன்றுமே இல்லை. அவன் ப்ரத்யக்ஷம் அனுமானம் முதலிய ஜ்ஞானங்களால் அறியப்படுகிற பொருள்களெல்லாம் உள்ளும் புறமும் அடங்கப்பெற்று, ஸ்வப்னத்தில் பல ஜனங்களைப்பார்க்கிற ஒரு ஜீவன்போல் தோற்றுவான். இங்ஙனம் சேதனு சேதனஸ்வரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுமல் ஸ்வரூபத்திலும் குணங்களாலும் விகாரமற்றிருப்பான். மற்றும் ஆநந்தத்திற்கு விளை நிலமாகி ஆநந்தஸ்வரூபனுமாயிருப்பான். அத்தகையனை அம்மஹா புருஷனையே உபாஸிக்கவேண்டும். இவனையொழிய மற்றவையெல்லாம் ஸம்ஸாரத்தில் விழுத்தள்ளிப் பாழ்செய்யும். அங்ஙனம் தான் ஸம்ஸாரத்தில் விழுந்து பாழாகுந்தன்மையதும் பிறரையும் அங்ஙனமே விழுத்தள்ளிப் பாழாக்குவதுமாகிய மற்றை எதிலும் கால் தாழலாகாது.

முதல் அத்யாயம் முற்றிற்று.

வைராஜதாரணையின் மஹிமையும், வைராக்ய ப்ரசம்ஸையும் முமுக்ஷுக்கள் ஹ்ருதயத்தில் உபாஸிக்கவேண்டிய பரமாத்ம ஸ்வரூப நிரூபணமும், அங்ஙனம் உபாஸிப்பவர்க்கு விளையும் அர்ச்சிராதிகதியின் விவரணமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—முன்பு ப்ரஹ்மதேவன், வைராஜபுருஷனுடைய உருவத்தில் மனத்தை நிலை நிறுத்தி த்யானிக்கையாகிற இந்த தாரணையால் அம்மஹா புருஷனுக்கு ஸந்தோஷத்தை விளைவித்து அவனுடைய அனுக்ரஹத்தினால், ஸ்ருஷ்டிப்பதற்குரிய அறிவைப் பெற்று ஸ்ருஷ்டிக்கவேண்டிய பொருள்களெல்லாம் உள்ளபடி நினைவில் நிச்சயமாகத் தோன்றப்பெற்று, ப்ரளயத்திற்கு முன்பு எப்படி இருந்ததோ அப்படியே வஸ்துக்களை யெல்லாம் படைத்தான். ஆகையால் இந்த வைராஜதாரணை மிகுதியும் சிறப்புற்றது. வேதங்களில் ஸ்வர்க்காதி பலன்களையும் சொல்லியிருக்கிறதே அவையும் புருஷார்த்தங்கள் தானே. அவற்றிற்கு நாம் யத்னஞ் செய்யவேண்டாமோ?' என்னில் சொல்லுகிறேன், கேள். வேதங்களில் சொல்லப்படுகிற அர்த்தங்களை யெல்லாம் நாம் ஆதரிக்கவேண்டிய அவச்யமில்லை. சப்தஸ்வரூபமாகிய வேதத்தின் வழி இதுவே. அது, மேலான புருஷார்த்தங்களுக்கு இடமாகாத ஸ்வர்க்காதி நாமங்களைச் சொல்லி அந்த ஸ்வர்க்காதி ஸுகத்தில் புத்தியைச் செலுத்திப் புருஷனுக்கு அதே சிந்தையை விளைக்கும். ஸ்வர்க்காதி லோகங்களில் விளையும் ரம்பாஸம்போகாதி ஸுகங்களைச் சொல்லக் கேட்டு புத்தி அதில் கால்தாழப்பெறும். ஸ்வர்க்காதிகள் பேரைக் கேட்ட மாத்ரத்தில் அழகாகத் தோற்றுமேயன்றி அநுபவத்தில் அற்பமாயிருக்கும்; ஸ்வப்ந ஸுகங்களைப் போலவைகளே. ஆனால், ப்ராணிகளுக்கு ஹிதஞ் செய்ய முயன்ற வேதம் இங்ஙனம் அற்ப ஸுகங்களில் மதிமயங்கச்செய்து வஞ்

சிப்பது யுக்தமோ என்னில், அது காமாதியான அற்ப ஸுகங்களில் கால் தாழ்ந்து வசப்படாமல் திரியும் ப்ராணிகளை வசப்படுத்துவதற்காக அத்தகைய க்ஷுத்ர புருஷார்த்தங்களை எடுத்துரைக்கும். ஆகையால், புத்திசாலியாகி மேலான மோக்ஷ புருஷார்த்தத்தில் விருப்பமுடையவன் அவற்றில் மனஞ் செலுத்தாமல் அதற்குத் தகுந்த யத்னஞ் செய்யவேண்டும். இங்ஙனம் பேர்மாத்ரத்தினால் ஸாரம்போல் தோற்றுகிற ஸ்வர்க்காதியான அற்ப புருஷார்த்தங்களுக்கு வேண்டிய செயல்களைச் சொல்லி அவற்றில் புத்தியை நுழையச்செய்வது வேதத்தின் வழி. மாயாமயமான இந்தப்ரபஞ்சத்தில் அனாதியான கர்ம வாஸனையால் உழல்கின்றவன் அந்த ஸ்வர்க்காதியான க்ஷுத்ர புருஷார்த்தத்திற்கு வேண்டிய கர்மங்களில் திரிவானாயின், மோக்ஷ புருஷார்த்தத்தையும் அதன் உபாயம் முதலியவற்றையும் பெறமாட்டான். ஆகையால் வேதங்களில் சொல்லுகிற பொருளெல்லாம் ஆதரிக்கத் தக்கவைகளென்று ப்ரமிக்கலாகாது. வேதம் ப்ராணிகளிடத்தில் ஆயிரம் மாதாபிதாக்களை விட அதிகமான வாத்ஸல்யமுடையதே. அது ப்ராணிகளை ஸம்ஸாரத்தினின்று கரையேற்ற வேண்டுமென்னும் நினைவு நிரம்பப்பெற்றதே. ஆயினும் ப்ராணிகள் சிலர் தாமஸஸ்வபாவர்களும் சிலர் ரஜஸ்வபாவர்களும் சிலர் ஸத்த்வஸ்வபாவர்களுமாகிப் பலவகைப்பட்டிருக்கையால் அவரவரிடத்தில் ப்ரீதியால் அவரவர்க்கு வேண்டிய ஹிதத்தை அறிவிக்கின்றது. அவற்றில் ரஜோகுண ஸ்வபாவர்களும் தமோகுணஸ்வபாவர்களும், ஸத்த்வகுண ஸ்வபாவர்கள் ஆதரிப்பதான மோக்ஷபலத்தில் மனஞ் செல்லப் பெறாமல் காமாதிகளில் கால் தாழ்ந்து ஸ்வாதீனமற்று உபாயமல்லாதவற்றில் உபாயமென்னும் புத்தி

யைச் செய்து பாழாய்விடுகிறார்கள். வேதம் ரஜஸ்ஸூம் தமஸ்ஸூம் ஸ்வபாவமாயிருக்கப் பெற்றவர்க்கு ஸ்வர்க்காதி பலன்களையும் அவற்றிற்கு வேண்டிய உபாயங்களையும் அறிவிக்கின்றது. கேவலஸத்த்வஸ்வபாவர்களுக்கு அவை துறக்கத் தக்கவைகள் என்றும், கர்மங்களையெல்லாம் மோக்ஷத்திற்காகவே செய்யவேண்டுமென்றும் அறிவிக்கின்றது. ஆகையால் 'இது நன்று, இது தீது' என்று பிரித்தறியும் விவேகமுடையவன் மனதுக்கம் தவறாமல் தேஹயாத்ரைக்காகக் கொண்ட அன்னம் பசு முதலியவற்றிலும் ஆஸக்தி வைக்காமல், ஸ்வர்க்காதி பலன்கள் நச்வரங்கள் (அழியக்கூடியவை) என்றும் அற்பங்களென்றும் நிச்சயித்துப் பேர்மாத்ரத்தினால் ஸாரங்கள் (சிறந்தவை) போல் தோற்றுகிற போக்ய வஸ்துக்களில் தனக்கு எவ்வளவு ப்ரயோஜனப்படுமோ அவ்வளவே எடுத்துக்கொள்ளவேண்டும்; அற்பப்ரயோஜனங்களில் மனவிருப்பங் கொள்ளலாகாது. பலவகைப் பயன்களும் அவற்றிற்கு வேண்டிய பற்பல கர்மங்களும் வேதங்களில் விதிக்கப்பட்டிருப்பினும் அவற்றில் எவ்வளவால் சரீரயாத்ரையும் உபாஸனையும் (பகவானுடைய ஆராதனமும்) நிறைவேறுமோ, அவ்வளவே அங்கீகரிக்கவேண்டும். தனக்கு வேண்டிய பொருள் ஜந்மாந்தர கர்மத்திற்குத் தகுந்தபடி வேறுவிதத்தில் ஸித்தமாயிருக்க, அற்ப புருஷார்த்தங்களிலும் அவற்றிற்கு வேண்டிய உபாயங்களிலும் யத்னஞ் செய்யலாகாது அப்படி மீறி யத்னஞ் செய்வானாயின், ஜன்மாந்தரகர்மத்திற்குத் தகுந்தபடி வரக்கூடியதே வருமன்றித் தான் செய்த யத்னத்திற்குத் தகுந்த பலன் விளையாது. வீண் ப்ரயாஸமே பலிக்கும். இதை அறிந்து அவற்றில் யத்னஞ் செய்யலாகாது. பூமி இருக்கையில் படுக்கைக்கா

கச் செய்யும் ப்ரயத்னங்களால் என்ன ப்ரயோஜனம்? அஞ்சலி இருக்கப் பலவகை அன்னக் கலங்களைத் தேடு வதால் என்ன பயன்? உத்தரீயம் போன்ற திசைகளும், அரையாடைகள் போன்ற மரவுரிகளும் இவை முதலிய மற்றும் பலவும் இருக்கையில், வெண்பட்டு முதலியவற் ருல் என்ன உபயோகம்? கிழிந்த துணிக்கந்தல்கள் வழியில் அகப்படாவோ? இலை பூ காய் பழம் இவை களைக் கொடுத்துப் பிறரைப் போஷிக்குந் தன்மையுள்ள வ்ருக்ஷங்கள் பிச்சையிடாவோ? நதிகள் உலர்ந்துபோ யினவோ? பர்வத குஹைகள் மூடப்பெற்றனவோ? இவையெல்லாம் ஒருவனை அடுத்து வேண்டிப் பெற வேண்டியவைகளன்றே. தாமே கிடைக்கக்கூடியவை களல்லவா? ஒருகால், இவை அகப்படாமற் போயி னும், ஸர்வேஸ்வரன் சரணம் அடைந்தவர்களை ரக்ஷிக்க மாட்டானோ யென்ன? இப்படி இருக்க, பணக் கொழுப் பினுல் 'இது செய்யலாம், இது செய்யலாகாது' என்ற விவேகமற்றுக் கண் தெரியாதிருக்கின்ற ப்ரபுக்களை ஏன் அறிஞர்கள் அடுக்கவேண்டும்? அறிவுடையோர் அன் னபானுதிகளுக்காகவும் அற்ப ப்ரபுக்களை அடுக்கலா காது. தன்மனம் இங்ஙனஞ் சொன்னபடியே திட மாக நிச்சயித்து வேறுவிஷயங்களில் விருப்பின்மையா கிற ஸித்தியைப் பெற்றிருக்கு மளவில், அறிஞனுயிருப்ப வன் பரம புருஷனையே பற்றவேண்டும். அவனைப் பணிவதற்குத் தேடிப் போகவேண்டிய அவஸ்யமில்லை. அவன் உள்ளே புகுந்து அந்தராத்மாவாகி தரித்துக் கொண்டிருப்பவன். அவனுல் தரிக்கப் பெற்ற நாம் நமக்கு தாரகனுன அந்தப் பரமாத்மாவைப் பற்றுவதே யுக்தம். இங்ஙனம் நமக்கு அந்தராத்மாவாயிருப்பது பற்றி அவனே நாம் ப்ரீதி செய்யத் தகுந்த இடம். பர மாத்மாவின் ஸம்பந்தத்தினுலல்லவோ பிள்ளை பெண்டிர் தேஹம் முதலியவை ஆத்மாவின் ப்ரீதிக்கிடமாகின்றன.

ஆத்மாவுக்கும் அந்தராத்மாவாயிருக்கின்ற அவன் ப்ரீதிக்கிட மென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அவன் எல்லையில்லாத ஆநந்த ஸ்வரூபனாகையால் சிறந்த புருஷார்த்தமும அவனே; மற்றும், தோஷங்களுக்கெதிர்த்தட்டாகி ஜ்ஞானம் ஶக்தி பலம் ஐஶ்வர்யம் முதலிய எல்லையில்லாத குணங்களுக்கெல்லாம் இருப்பிடம்; எவ்வகையிலும் எல்லை முடிவு அழிவு இவையில்லாதவன்; ஸம்ஸார பந்தத்திற்கு ஹேதுவான அவித்யையைத் தொலைக்குந் திறமையுடையவன். இத்தகையனும் தன்னைப் பெறுதற்குத் தடை செய்கிற அவித்யையைப் போக்குந் தன்மையனுமாகிய அந்தப் பரமாத்மாவை, அறிஞனாயிருப்பவன் வேறு விஷயங்களில் விருப்பின்மையாலும் மஹாநந்த ஸ்வரூபனாகிய பரமாத்மாவைப்பணியும் விருப்பத்தினாலும் மனக்களிப்புற்று வேறு பயன்களினின்று மீண்டு மோக்ஷமொன்றே வேண்டுமென்ற உறுதியுடன் உபாஸிக்கவேண்டும். அத்தகையனான ஈஶ்வரனைச் சிந்திப்பதைத் தவிர்ந்து அமங்களமான மற்றைப் பொருள்களைப் பற்றின சிந்தைக்கு எவன்தான் இடங்கொடுப்பான்? பசுக்களைப்போல் ஆஹாரம் நித்ரை பயம் மைதுனம் ஆகிய இவற்றைத் தவிர மற்றொன்றையும் அறியாத மூடர்களே அங்ஙனம் அமங்களமான சிந்தைக்கு இடங் கொடுப்பார்களன்றி அறிவுடையவன் எவனும் இடம் கொடுக்கமாட்டான். அப்படி இடங் கொடுப்பவன் பசுவே. வைதரணி (யமலோக நதி) போன்ற ஸம்ஸாரத்தில் விழுந்து அதிலும் தமது கர்மங்களுக்குத் தகுந்தபடி ஆத்யாத்மிகம் முதலிய மூன்று வகைப்பட்ட தாபங்களால் விளையும் வருத்தங்களை ஜனங்கள் அனுபவிப்பதைக் கண்டு எவன்தான் பரமாத்மாவைச் சிந்திப்பதை ஒழித்து அமங்கள

மான மற்றவைகளைச் சிந்திப்பான்? சில யோகீஸ்வரர்கள் தமது தேஹத்தினிடையிலுள்ள ஹ்ருதயத்தின் இடத்தில் வஸிப்பவனும் ஓட்டைச்சாணளவுடைய உருவமுடையவனும் (ஹ்ருதயத்தின் உள்ளளவுக்கொத்த அளவுடையவனும்) இரண்டு கைகளால் கமலம் சக்ரம் இவைகளையும் மற்ற இரண்டு கைகளால் சங்கம் கதை இவைகளையும் தரித்த மஹானுபாவனுமாகிய பரம புருஷனை, மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தடுத்து நிலைநிறுத்துகிற அப்யாஸத்தினால் உபாஸிக்கிறார்கள். தெளிந்த முகமுடையவனும் தாமரையிதழ்போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டழகிய கண்கள் அமைந்தவனும் கடம்பப்பூவின் தாதுபோல் பொன்னிறம் அமைந்த பீதாம்பர முடையவனும் திகழ்கின்ற பெரிய ரத்னங்கள் இழைக்கப்பெற்ற ஸ்வர்ணமயமான தோள்வளைகளுடையவனும் ஜ்வலிக்கின்ற மஹாரத்னங்களால் இயற்றின கிரீடமும் குண்டலங்களும் அணிந்தவனும் மலர்ந்த ஹ்ருதய கமலத்தின் கர்ணிகையில் வைத்திருப்பதாக யோகீஸ்வரர்களால் த்யானஞ் செய்யப்பெற்ற தளிர்போன்ற பாதங்களுடையவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மியே அடையாளமாகப் பெற்றவனும் கழுத்திற்கு அருகாமையில் மார்பில் கௌஸ்துப மணி அணிந்தவனும் வாடாத சோபையுடையவனும் வனமாலையால் திகழ்கின்றவனும், அரை நூல் மாலையும் விலையுயர்ந்த மோதிரங்களும் தண்டைகளும் கைவளைகளும் அணிந்து மிக்க அழகுடன் ப்ரகாசிப்பவனும், நிருநிருத்து நிர்மலங்களாகிச் சுருண்டு இருண்டு அழகிய தலைமயிர்களால் மிகுதியும் விளங்குகின்ற முத்தில் திகழும் புன்னகையினால் அழகாயிருப்பவனும் கம்பீரமாகி விளையாடலால் விளைவதுமாகிய மந்தஹாஸ விலாஸம் பொருந்தின கண்ணோக்கத்துடன் திகழ்கின்ற புருவ

நெரிப்புக்களால் அறிவிக்கப்பெற்ற பேரருள் அமைந்தவனும் சிந்தையில் தோற்றுபவனுமாகிய பரமபுருஷனை, மனம் தாரணையாக எவ்வளவு நிலைநிற்குமோ அவ்வளவு அம்மனத்தினால் கண்டு உபாஸிக்கவேண்டும். தன்னைப் பற்றினாருடைய விரோதிகளைப் போக்கும் பொருட்டு கதையைத் தரித்துநிற்கும் பரமதயாளுவாகிய பரமாத்மாவின் உருவத்தில் பாதம் முதற்கொண்டு மந்தஸ்மிதம் வரையிலுள்ள அங்கங்கள் முழுவதையும் ஒரே தடவையில் த்யானிக்க வல்லமையற்றவன் அவற்றில் ஒவ்வொன்றையும் தனித்தனியே புத்தியினால் த்யானிக்கவேண்டும். ஒவ்வொரு அவயவத்தையும் அது நெஞ்சில் தோன்றி நிலைநிற்கும் வரையில் த்யானித்து நிலைநின்ற பிறகு அதைவிட்டு மற்றோரவயவத்தை நெஞ்சில்கொண்டு நிலைநிற்கும்வரையில் த்யானிக்கவேண்டும். இங்ஙனம் நிலைநின்ற அவயவங்களொவ்வொன்றையும் விட்டு மேன்மேலுள்ள அவயவங்களை த்யானித்து நெஞ்சில் நிலைநிறுத்திக்கொள்ளவேண்டும். புத்தி அவயவங்களை த்யானிப்பதில் கலவரப்படாமல் தெளிவுபெறும் வரையில் உள்ளங்கால் குதிகால் நுனிக்கால் முதலிய அவயவங்களை மனத்தில் நிறுத்தி த்யானிக்கவேண்டும். உலகத்தில் மேன்மையுற்ற ப்ரஹ்மாதி தேவதைகளும் தனக்குத் தாழ்ந்திருக்கப் பெற்றவனும் ஜகத்தையெல்லாம் அடக்கி ஆளுந்திறமை யுடையவனும் ஸர்வஜ்ஞனும் (எல்லாம் அறிந்தவனும்) கீழ்ச்சொன்ன உருவமுடையவனுமாகிய பரமபுருஷனிடத்தில் பக்தியோகம் (சுபாஶ்ரயமான அவனது உருவம் முழுவதையும் இடைவீடின்றி மிகுந்த ப்ரீதியுடன் த்யானிக்குந்திறமை) உண்டாகும் வரையில், அவஶ்யமாய் அனுஷ்டிக்கவேண்டிய நித்யகர்மங்கள் முடிந்தபின்பு கீழ்ச்சொன்ன லக்ஷணங்கள் அமைந்த பரமபுருஷனுடையபெரியஉருவத்தை

மனவூக்கத்துடன் ஒவ்வோரவயவமாக த்யானிக்க வேண்டும். இங்ஙனம் அவயவங்களெல்லாம் கலக்கமின்றித் தோற்றினபின்பு அந்தந்தைய அவயவங்கள் அமைந்த சுபாஶ்ரயமான பகவானுடைய உருவத்தை இடைவிடாமல் ப்ரீதியுடன் த்யானிக்கும்படியான பக்தி யோகத்தை நிலைப்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு பக்தியோகத்தில் முயற்சிகொண்டவன் அந்த பக்தி யோகம் கைபுகுந்தபின்பு அதை நிறைவேற்றிக்கொடுத்த சரீரத்திற்குக் காரணமான ப்ராரப்தகர்மம் முடிகிற ஸமயத்தில் அந்தச் சரீரத்தைவிட விருப்புறுவானாயின், கங்கையின் கரை முதலிய தேசவிசேஷங்களிலாவது உத்தராயணம் முதலிய காலவிசேஷங்களிலாவது மனத்தைப்பற்ற விடலாகாது. 'சரீரம் முடிகிற காலம் வந்ததே. இதைப்பரிசுத்தமான கங்கைக்கரை முதலிய இடங்களில் கொண்டு போய் விடுவோம், தக்ஷிணாயனம் முதலிய காலங்களில் மரணம் வரின் ப்ராயச்சித்தம் செய்யவேண்டுமாகையால் பரிசுத்தமான உத்தராயணம் முதலிய காலங்களை எதிர்பார்ப்போம்' என்று சிந்திக்கலாகாது. ஆனால் என்னசெய்யவேண்டுமென்னில்; ப்ராணவாயுவை அடக்கி ஜயித்து நிர்ப்பயமான இடத்தில் ஸுகமாயும் மென்மையுடையதுமான ஆஸனத்தில் உட்கார்ந்து மனத்தினால் ப்ராணன்களையும் இந்த்ரியங்களையும் அடக்கவேண்டும். பகவானுடைய உபாஸனையால் நிர்மலமானதும் மோக்ஷம் தவிர மற்றொன்றும் வேண்டியதில்லையென்கிற உறுதியுடன் கூடினதுமான தனது புத்தியினால் மனத்தை அடக்கி, அந்த புத்தியை ஜீவாத்மாவினிடத்திலும், அந்த ஜீவனைப் பரமாத்மாவினிடத்திலும் ஸமர்ப்பித்து ஸந்தோஷம் அடைந்து அவஶ்யமான நித்யகர்மங்களைச் செய்வதையுந் துறந்து பரமாத்மாவின் ஸ்வரூபத்தையே த்யானித்துக்கொண்

டிருக்கவேண்டும். ப்ரஹ்மாதி தேவதைகளையும் மற்ற எல்லோரையும் அடக்கி ஆளும் ப்ரபுவான காலம் அந்தப் பரமாத்மாவினிடத்தில் எதுவுஞ்செய்ய வல்லதன்று. அங்ஙனம் காலத்திற்குட்பட்ட ப்ரஹ்மாதி தேவதைகள் ப்ரபஞ்சத்தை யெல்லாம் நியமிப்பவராயினும் காலத்தையும் காற்கடைக் கொள்ளுந் திறமையனான அந்தப் பரமபுருஷனிடத்தில் தங்கள் ப்ரபுத்வம் தலையெடுக்கப் பெறமாட்டார்கள். இனி அந்த தேவதைகளுக்கு உட்பட்ட ப்ராணிகள் அவனிடத்தில் எதுவுஞ்செய்யவல்லவரன்றென்று சொல்லவேண்டுமோ? இப்படி எல்லோரையும் அடக்கி ஆள்பவனும் தன்னை அடக்கி ஆள்பவன் எவனுமில்லாதவனுமாயிருப்பான் அம்மஹானுபாவன். மற்றும், அவனிடத்தில ப்ரக்ருதியும் அதன் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களும் அதன் கார்யமான மஹத்து அஹங்காரம் முதலியவைகளும் தந்தமது கார்யத்தைச் செலுத்த வல்லமையற்றவைகளே. வேதாந்தங்கள், அவனுக்கு உட்படாது ஸ்வதந்த்ரமாயிருக்கும் வஸ்து எதுவுமேயில்லை யென்று தெரிவிப்பனவாகி, மற்ற எதிலும் நட்பின்றி (தாத்பர்யமின்றி) அவன் ஸ்வரூபத்தை எல்லாவற்றிலும் சிறப்புற்றதென்று மொழிகின்றன. ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களால் மனக்கலக்க முறுகை தவிர்ந்து அனைவரும் ஆராதிக்கத் தகுந்தவனும் அத்தகையனுமாகிய அந்த பகவானுடைய உருவத்தை நிகரில்லாத நட்புடன் மனத்திலல் அடிக்கடி ஆலிங்கனஞ்செய்து மற்றைச் செயல்களெல்லாவற்றினின்று நிவ்ருத்தி (ஓய்தல்) பெறவேண்டும். இங்ஙனம் பகவானுடைய உருவத்தையே மனனஞ்செய்யும் பக்தியோக முடையவன் சரீரத்தைத் துறக்க இவ்வாறு முயற்சி செய்யவேண்டும். அவன், எல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபமென்று நிலைநின்ற மதியுடையவனாகி அந்

தப் பரம புருஷனை த்யானிக்கும் ஜ்ஞானமே கண்ணாகப் பெற்று அதன் ஸாமர்த்யத்தினால் கர்மவாஸனையைச் சிறிதும் நீண்டவொட்டாமல் தொலைத்துத் தன் குதிகாலால் மூலாதாரத்தைத் தகைந்து ஆயாஸத்தை வென்றவனாகி ப்ராணவாயுவை நாபி முதலிய ஆறு இடங்களில் உயர்த்தவேண்டும். மணிபூரக மென்னும் பேருடைய நாபியிலிருக்கும் ப்ராணவாயுவை அனாஹத மெனப்படுகிற ஹ்ருதயகமலத்தில் ஏறச் செய்து அதினின்று உதானவாயு ஸஞ்சரிக்கும் க்ரமத்தில் கழுத்திற்கு அருகாமையான மார்பிலுள்ள விசுத்த சக்ர மென்னும் இடத்திலும், தான் பெறவேண்டிய பரம புருஷனுடைய ஸ்வரூபத்தை மறவாமல் த்யானித்துக் கொண்டே மனத்தை நன்றாக அடக்கி, அவ்வாயுவை அதினின்று தனது நாக்கின் அடிபாகமாகிய முன் சொன்ன விசுத்த சக்ரத்தின் நுனியிலும் மெல்ல மெல்ல ஏறச்செய்யவேண்டும். பிறகு கண்கள் இரண்டும் காதுகள் இரண்டும் மூக்கின் த்வாரங்கள் இரண்டும் வாயொன்றும் ஆகிய ஏழு ஸ்தானங்களையும் நன்றாகத் தகைந்து அந்த நாக்கின் அடிபாகத்தினின்று அவ்வாயுவைப் புருவத்தின் மத்யத்திலுள்ள ஆஜ்ஞா சக்ரமென்னும் இடத்திற்குக் கிளப்பிக்கொண்டு வரவேண்டும். வேறு விஷயங்களில் விருப்பின்றி அந்தப் புருவத்தினிடையில் அரைமுஹூர்த்தகாலம் நின்று தான் பெறவேண்டிய விஷயத்தில் ஜ்ஞானம் சிறிதும் தடை படப்பெறாமல் பரமாத்மாவைப் பெற்றதாக அனுஸந்தித்துச் சிரக்கபாலத்தைப் பிளந்து கொண்டு ஸ்தூலதேஹத்தைத் துறக்க வேண்டும். அப்பால் அர்ச்சிராதி மார்க்கத்தினால் சென்று பரமாத்மாவின் ஸ்தானமாகிய பரமபதம் போய்ச்சேருவான். இங்ஙனன்றி ஸ்வர்க்காதிலோகங்களை விரும்புமவர் தூமாதிமார்க்கத்தினால் அந்த லோகங்களுக்குப் போக

வேண்டும். அந்த தூமாதி மார்க்கத்தினால் ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் போகுமவர் ஸங்கதியைப்பற்றிச் சிறிது எடுத்துரைக்கிறேன் கேட்பாயாக. ஓ மன்னவனே! ப்ரஹ்மதேவனுடைய லோகத்திற்காவது ஆகாயத்தில் விமானங்களில் ஏறிக்கொண்டு திரியும் ஸித்தர்கள் விளையாடுமிடமும் அணிமை முதலிய அஷ்டைச்வர்யங்கள் அமைந்ததுமாகிய ஸ்வர்க்காதி லோகங்களுக்காவது போக விரும்புவானாயின், மரணம் உண்டானபின்பு மனஸ்ஸோடும் இந்த்ரியங்களோடுங் கூடவே போக வேண்டும். ஸ்வர்க்காதி போகங்களை விரும்பி அண்டத்திற்குட்பட்ட அந்தந்த லோகங்களுக்குப் போகவிரும்புவோர் பூதஸூக்ஷ்மங்களும் இந்த்ரியங்களும் அமைந்த லிங்கசரீரத்தோடு கூடவே போவார்கள். பரப்ரஹ்மத்தைப் பெறவிரும்பி அர்ச்சிராதி மார்க்கத்தினால் பரமபதம் போகுமவன் சிறிது வழி கடந்தபின்பு அந்தச் சரீரத்தை இடையிலேயே துறந்து செல்வான். பரமபுருஷனைப் பெறவிரும்பி அவனிடத்தில் பக்தியோகஞ் செய்யும் வழியில் செல்லாமல், தான் பரமாத்மாவுக்கு உட்பட்டவனென்றும் அவனே தனக்கு எல்லாவுறவென்றும் இசையாமல் தன்னை ஸ்வதந்த்ரனாக ப்ரமித்து அத்தகைய ஆத்மஸ்வரூபத்தைப் பெறவிரும்பி ஆத்மோபாஸனஞ்செய்கிறவர்கள் வாயு ரூபமான ஸூக்ஷ்ம சரீரத்துடன் பாதாளம் பூமி ஸ்வர்க்கம் என்கிற மூன்று லோகங்களுக்கு வெளிப்பட்ட [1] ஜனலோகம் முதலிய லோகங்களுக்குச் செல்கிறார்களென்று சொல்லுகிறார்கள். சாஸ்த்ரங்களால் விளையும் ஜ்ஞானயோகம் கர்மயோகம் யமம் நியமம் ஸமாதி இவை நேரப்பெற்றவர்போகும் லோகங்கள் கேவல கர்மயோகத்தை ஆசரிப்பவர்க்கு நேராவாம். அர்ச்சிராதி கதியைப்பற்றிச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. பகவானைப் பெறவிரும்புமவர் செல்லும் வழியும் முன்னே வழிகாட்டிக்கொண்டு செல்லும் பகவானுடைய

1. இது மதாந்தரானுவாதம்.

தேஜஸ்ஸினால் வெளிச்சமுற்றுத் திகழ்வதுமாகிய ஸுஷும்னை யென்னும் நாடியின் வழியால் சரீரத்தினின்று வெளிக் கிளம்பி ஆகாசமார்க்கத்தினால் சென்று ஆதிவாஹிக தேவதைகளில் முதல்வனாகிய அக்னியிடம் போய்ச்சேருவான். அப்பால் புண்யபாபங்கள் தொலையப்பெற்று, மன்னவனே! ஸூர்யனுக்கு அப்புறத்திலிருக்கின்ற ம்சுமார சக்ரம் போய்ச்சேருவான். ஸூர்யன் சந்த்ரன் முதலிய க்ரஹங்களும் அஸ்வினி முதலிய நக்ஷத்ரங்களும் மற்ற ஸாதாரண நக்ஷத்ரங்களும் ஆகிய இவற்றிற்கு இருப்பிடமும் விஷ்ணுவின் ஸ்தானமும் ப்ரஹ்மத்தை அறிந்த பெரியோர்களால் நமஸ்கரிக்கப்படுவதுமாகிய ம்சுமாரசக்ரத்தைக் கடந்து புண்யபாபங்கள் தொலையப்பெற்று மிகுதியும் ஸூக்ஷ்மமான லிங்க சரீரத்துடன் ஸஹாயமின்றித் தனியனாகவே சென்று கல்பம் வரையிலும் ஜீவித்திருக்கும்படியான ஆயுளையுடைய தேவதைகள் விளையாடலுற்றிருக்கும் தேசமாகிய ஜனலோகம் போய்ச்சேருவான். இங்ஙனம் போகிற முமுக்ஷு புண்யபாபங்கள் தொலைந்து ஜ்ஞான ஸங்கோசமும் தீர்ந்து த்ரிகாலங்களிலுமுள்ளவற்றையெல்லாம் அறியுந்திறமை நேரப்பெற்றிருக்கையால், கீழ் பாதாளத்திலிருக்கிற ஆதிசேஷனுடைய முகத்தினின்றுண்டான (ருத்ரகணத்தின் நெற்றிக்கண்) நெருப்பினால் ஜகத்தெல்லாம் எரிந்து போகுந்தன்மையதாகையால் அனைத்திற்கும் மரணம் தவறாதிருப்பதைக்கண்டு இவையெல்லாம் ஹேயமென்று அறிந்து அவற்றில் கண்வைக்காமல் இரண்டு பரார்த்தம்வரையிலும் அழியாதிருப்பதும் ஸித்தேஸ்வரர்கள் வீற்றிருக்கப்பெற்ற விமானங்களையுடையதும் மற்றை லோகங்களைக்காட்டிலும் சிறப்புற்றதுமாகிய அந்தப்ரஹ்மதேவனது லோகங்களினின்று புறப்படுவான். அந்த ப்ரஹ்மதேவனது லோகத்தில் சோகம்

கிழத்தனம் மரணம் துக்கம் குளிர்காற்று வெயில் மழை இவை முதலிய எதையேனும் பற்றி நேரக்கூடிய எவ்வித பயமும் நேராது. அத்தகைய அந்த நான்முகனது உலகத்திலும் இதோ புலப்படுகிற ப்ரபஞ்சத்தைக்காட்டில் விலக்ஷணமான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிந்த மஹானுபாவர்கள், கர்மத்தினால் விளைவதும் எல்லையில்லாத பலவகை துக்கங்களுக்கு விளைநிலமுமாகிய ஸம்ஸாரம் தீரப்பெறாமல் மனவருந்த முறுவதைக் கண்டு அந்தச்சதுர்முக லோகத்தினின்று புறப்பட்டுப் பெரும்பாலும் மண்ணால் இயற்றப்பெற்ற அண்டகடாஹத்தை அடைந்து அதினின்று புறப்பட்டுக் கீழ்ச்சொன்ன ஸ்வரூபமுடையவனாகவே பயமின்றி ஆவரணஜலத்தைச்சேர்ந்து அதினின்று புறப்பட்டு, சுட்டுப்போமோ எரிக்குமோவென்னும் சங்கையில்லாமையால் விரைவின்றிக் கட்டியாயிருக்கிற ஆவரணாக்னியை அடைந்து அக்னிமயமான உருவத்துடன் அதினின்றுபுறப்பட்டு ஆவரணவாயுவைஅடைந்து வாயுமயமான உருவத்துடன் அதினின்று புறப்பட்டுத் தன் கார்யமான வாயு முதலியவற்றைக் காட்டிலும் பெரியதும் தனக்கு அஸாதாரணமான சப்தத்தை அடையாளமாக வுடையதுமாகிய ஆவரணாகாசத்தை அடைந்து ஆகாச உருவமுடையவனாகி அதினின்று புறப்படுவான். ஒவ்வொரு ஆவரணத்தினின்று புறப்படும்பொழுதும் அந்தந்த ஆவரணத்தின் உருவமுடையவனாகவே புறப்படுவான். ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள சப்தாதிகளில் ஆதாரமில்லாமலே போவான். அண்டத்தின் ஆவரணங்களாகிய பூமி முதலிய பஞ்சபூதங்களின் குணங்களை அனுபவித்துக் கொண்டே செல்வான். தனது ஸூக்ஷ்ம சரீரத்திலுள்ள க்ராண இந்த்ரியத்தினால் (மூக்கினால்) ஆவரண பூமியின் குணமான கந்தத்தையும், ரஸந இந்த்ரியத்தினால் (நாக்கினால்)

ஆவரணஜலத்தின் குணமான ரஸத்தையும், சக்ஷுரிந்த்ரியத்தினால் (கண்ணால்) ஆவரணதேஜஸ்ஸின் குணமான ரூபத்தையும் த்வகிந்த்ரியத்தினால் (உடம்பின் தோலால்) ஆவரணவாயுவின் குணமான ஸ்பர்ஸத்தையும், ஶ்ரோத்ரேந்த்ரியத்தினால் (செவியினால்) ஆவரணாகாசத்தின் குணமான சப்தத்தையும், அந்தக்கரணத்தினால் (மனத்தினால்) அபிப்ராயத்தையும் க்ரஹித்துக் கொண்டே அந்தந்த பூதங்களைப் பிளந்துகொண்டு செல்வான். அந்த யோகியானவன், நடந்து சென்று தன் கார்யமூலமாய் மாறுந்தன்மையதும் திசைகள் காற்று முதலிய தேவதைகளால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்ற இந்த்ரியங்களுக்கும் மனத்திற்கும் ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களுக்கும் அவற்றின் ஸூக்ஷ்மங்களான ஶப்தாதிகளுக்கும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களுக்கும் காரணமாயிருப்பதும் ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று மூன்று வகைப்பட்டதுமாகிய அஹங்காரதத்வத்தை அடைந்து அத்துடன கூடவே விஜ்ஞானமென்னும் பெயருடைய மஹத்தத்வத்தை அடைவான். அதினின்று புறப்பட்டு ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் ஏற்றக்குறைவுகளின்றி ஒத்திருக்குந்தன்மையதான ப்ரக்ருதியிடம் போய்ச்சேருவான். அதினின்று புறப்பட்டு அதினெல்லையைக் கடந்து புண்யபாபங்களற்றுப் பரிசுத்தமாயிருப்பதாகிய ஸூக்ஷ்ம உருவத்துடன் பசி தாஹம் முதலிய விகாரங்களற்றவனும் எல்லையில்லாத மஹாநந்த ஸ்வரூபனுமாகிய பரமாத்மாவை, அத்தகைய ஆநந்தத்துடன பெறுவான். பகவானிடங்கொண்டு சேர்ப்பதாகிய இந்த அர்ச்சிராதி மார்க்கத்தினால் எவன் போவானோ, அவன் மீளவும் இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் கர்மத்தினால் வரும் தேஹத்தைப் பெறமாட்டான். ஶமாதி

மார்க்கமென்றும் அர்ச்சிராதி மார்க்கமென்றும் வழங்கி வருகிற இவ்விரண்டு வழிகளையும் வேதம் அறிவிக்கின்றது. இவை அநாதிகளாயிருப்பவை. மன்னவனே! நீ கேட்டவழிகளும் இவையே. இவற்றை நானுனக்கு உள்ளபடியே மொழிந்தேன். ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகிய பகவான் முன்பு கல்பாதியில் நான்முகனால் ஆராதிக்கப் பெற்று மனக்களிப்புற்று இம்மார்க்கங்களை அவனுக்கு மொழிந்தான். ஆகையால் இவை அநாதிகளாயிருப்பவை. ஸம்ஸாரத்தில் இந்த அர்ச்சிராதி மார்க்கத்தைக் காட்டிலும் மங்களகரமான மார்க்கம் மற்றொன்று கேள்விப்பட்டதில்லை. இம்மார்க்கத்தைச் சிந்தை செய்யினும், அனைவர்க்கும் அந்தராத்மாவாகிய பகவானிடத்தில் பக்தியோகம் உண்டாகப் பெறுவான். ஆகையால் எக்காலத்திலும் மறவாமல் இம்மார்க்கத்தைச் சிந்தை செய்யவேண்டும். பகவானென்று சொல்லப்படுகிற பரமாத்மாவே ஜகத்திற்கெல்லாம் காரணமான பரப்ரஹ்மம். அவனிடத்தில் பக்தி செய்கையே மோக்ஷத்திற்கு உபாயம். புத்தியினால் சாஸ்த்ரங்களையெல்லாம் ஒரு தரத்திற்கு மூன்று தரமாக ஆராய்ந்து பார்த்து 'எல்லையில்லாத ஆநந்த ஸ்வரூபனும் விகாரங்களற்றவனுமாகிய பரமாத்மாவைச் சேர்ந்து அவனைக் கைவிடாமல் அநுபவித்து அவ்வநுபவத்தினால் விளையும் ஆநந்தத்திற்குப் போக்குவிடாக அந்தந்த ஸமயங்களுக்குத் தகுந்த பணிவிடைகளைச் செய்து நிலைபெறுகையாகிற மேலான புருஷார்த்தமானது எந்த உபாயத்தினால் உண்டாகுமோ, அத்தகைய பக்தியோகமே மோக்ஷத்திற்கு உபாயம்' என்று மிகுந்த வல்லமையுடைய உலகமெல்லாம் நிச்சயித்திருக்கின்றது. 'கண்ணுக்குத் தெரியாத பகவானிடத்தில் பக்தியோகம் எப்படி உண்டாகும்? ஆகையால் அவ

ளைப்பெற்று அனுபவித்துப் பணிவிடைகள் செய்கையா கிற மஹாநந்தம் உண்டாவதற்கு ப்ரஸக்தி இல்லையே' என்கிருயோ? சொல்லுகிறேன் கேள். கண்ணுக்குப் புலப்படக்கூடிய மஹத்து முதலிய கார்யங்களால் அவற் றிற்குக் காரணமான பரமபுருஷனை அனுமானிக்கலாம். அனுமானித்தறிகை மாத்ரமே அன்று; அவனுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை அறிவிக்கிற வேதங்களா லும் அவற்றின் பொருள்களை எளிதில் தெளிவாக எடுத்துரைக்கின்ற ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களாலும் அவனை அறியலாம். அங்ஙனம் அறிந்தபடியே யோக மார்க்கத்தினுல் சுத்தி செய்யப் பெற்ற மனத்தில் த்யா னித்து அவனிடத்தில் பக்தியோகம் செய்து அவனைப் பெற்று அனுபவித்து ஆநந்திக்கலாம். ஆகையால்' மன்னவனே! மனிதராகப் பிறந்தவரனைவரும் தன்னைப் பற்றினுருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுன பகவானையே ஸர்வ ப்ரயத்னத்தினுலும் ஸர்வகாலத்தி லும் செவிகளாரக் கேட்பதும் வாயார வாழ்த்துவதும் நெஞ்சார நினைப்பதும் செய்யவேண்டும். மன்னவனே! யோகமார்க்கத்தினுல் மனத்தைத் தெளிவித்துக் கொண்டு அம்மனத்தினுல் பகவானை த்யானித்து பக்தி யோகம் செய்து அவனைப் பெறுகை வருத்தமென்றும் இதில் பல இடையூறுகள் நேருமென்றும் [1] ஸ்வரூபத் திற்குப் பொருந்தாதென்றும் நினைப்பாயாயின், மற்ருரு பாயஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக. பெரியோர்கள் பாடுகிற பகவானுடைய கதைகளாகிற அம்ருதத்தைத் தமது செவிகளில் நிறைத்துக்கொண்டு பானஞ் செய் வார்களாயின், அவர்கள் சப்தாதி விஷயங்களால் கலக்க

1. பாரதந்த்ரியமாகிற ஸ்வரூபத்திற்கு ஸ்வாதந்த்ரிய கர்ப்ப மான உபாய பரிக்ரஹம் பொருந்தாதென்றும், பகவானையே உபாய மாகப் பற்றுகை மிகவும் பொருந்துமென்றும் கருத்து.

முற்ற மனத்தைத் தெளிவித்துக்கொண்டு அந்தபகவானுடைய பாதாரவிந்தங்களைப் பெறுவார்கள். பெரியோர்களைப் பணிந்து அவரிடம் பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறிந்து அவனையே சரணம் அடைந்து அவனது குணங்களை அனுபவித்துப் பொழுது போக்குமவர்க்கு அம்மஹானுபாவன் மனமலங்களைப் போக்கி அநாயாஸமாகவே சரீரத்தின் முடிவில் அர்ச்சிராதி மார்க்கத்தினால் அழைத்துக்கொண்டு போய்த் தனது லோகமான பரமபதஞ் சேர்ப்பித்து மஹானந்தஸ்வரூபனாகிய தான் அவரிடம் பணிவிடை கொண்டு அவர்களை வாழ்விப்பான். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

மற்ற தேவதைகளெல்லாம் க்ஷுத்ரபலன்களைக்கொடுப்பவரென்றும், பகவானொருவனே ஸமஸ்த பலன்களையும் மோக்ஷத்தையும் கொடுப்பவனென்றும் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! மானிடனாய்ப் பிறப்பது பெரும்பாலும் அரிது. தெய்வாதீனமாய் ஒருகால் மானிடராய்ப் பிறந்தவர்களிலும் மதிச்சிறப்புடையோர் கிடைப்பது அரிது. அங்ஙனம் மானிடராய்ப் பிறந்து மதிச்சிறப்பும் உடையராகி மரணம் சமீபிக்கப் பெற்றவர் ஏதேது செய்யவேண்டுமோ, இதையெனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டாயே, இதையெல்லாம் உனக்கு இங்ஙனம் சொல்லிமுடித்தேன். இனி, காமபலன்களை விரும்புவோர் ஆராதிக்க வேண்டுந் தேவதைகளைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ப்ரஹ்மவர்ச்சஸத்தை (ப்ரஹ்மதேஜஸ்ஸை) விரும்புமவன் வேதத்திற்கு ப்ரபுவான (வேதங்களையெல்லாம் குறைவறவுணர்ந்த) ப்ரஹ்ம தேவனை உபாஸிக்கவேண்டும். இந்த்ரியங்களின்

வலிமை விரும்புமவன் இந்த்ரனையும், ப்ரஜைகளை விரும்புமவன் தக்ஷர் முதலிய ப்ரஜாபதிகளையும் உபாஸிக்க வேண்டும். ஸோபையை விரும்புமவன் ஆச்சர்ய சக்தியுடையவளும் விஷ்ணுபத்னியுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியையும், தேஜஸ்ஸை விரும்புமவன் ஸூர்யனையும், பணத்தை விரும்புமவன் அஷ்டவஸுக்களையும் உபாஸிக்கவேண்டும். வீர்யத்தை விரும்புமவன் ருத்ரர்களை உபாஸிப்பானாயின் சிறந்தவீர்ய முடையவனாவான். அன்னத்தையும் பக்ஷயத்தையும் விரும்புமவன் அதிதியையும், ஸ்வர்க்கத்தை விரும்புமவன் அதிதியின் புதல்வர்களையும், ராஜ்யத்தை விரும்புமவன் ஸாத்யர்களையும், ஆயுளை விரும்புமவன் அஸ்வினிதேவதைகளையும், புஷ்டியை (தேஹபலத்தை) விரும்புமவன் பூமி தேவியையும், தானிருக்கும் ஸ்தானத்தினின்று நழுவாமல் நிலைநின்றிருக்க விரும்பும் புருஷன் உலகங்களுக்குத் தாய்மார்களாகிய த்யாவாபூமிகளையும் (ஆகாயபூமிகளுக்கு அதிஷ்டான தேவதைகளிருவரையும்), அழகை விரும்புமவன் கந்தர்வர்களையும், ஸ்த்ரீகளை விரும்புவன் அப்ஸரஸ்த்ரீகளில் சிறந்த ஊர்வசியையும், எல்லோர்க்கும் ப்ரபுவாயிருக்க விரும்புமவன் பரமேஷ்ட்டியையும், யஸஸ்ஸை விரும்புமவன் யஜ்ஞஸ்வரூபனான விஷ்ணுவையும், பொக்கசத்தை விரும்புமவன் வருணனையும், வித்யையை விரும்புமவன் ருத்ரனையும், தம்பதிகள் ஒருவர்மேல் ஒருவர் ப்ரீதியாயிருக்க விரும்புமவன் பதிவ்ரதையான பார்வதியையும், தர்மத்தை விரும்புமவன் உத்தமஸ்லோகனான விஷ்ணுவையும், ஸந்தான வ்ருத்தியை விரும்புமவன் பித்ருதேவதைகளையும், பாதை நீங்கி ஸுகமாயிருக்க விரும்புமவன் யக்ஷர்களையும், பலத்தை விரும்புமவன் மருத்கணங்களையும், ராஜ்யத்தை விரும்புமவன் மனுதேவதைகளையும், சத்ருவை அழிக்க விரும்புமவன்

ராக்ஷஸர்களையும், காமஸுகங்களை விரும்புமவன் ஸோமனையும் (சந்த்ரனையும்), வைராக்யத்தை விரும்புமவன் பரமபுருஷனையும் உபாஸிக்கவேண்டும். வைராக்யத்தை விரும்புமவனும், ப்ரஹ்மவர்ச்சஸம் முதலியவை யெல்லாவற்றையும் விரும்புமவனும், இவற்றில் எதையும் விரும்பாமல் ஆழ்ந்த மதியுடையவனாகி மோக்ஷத்தையே விரும்புமவனும் தீவ்ரமான பக்தியோகத்தினால் பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும். இவ்வுலகத்தில் பகவானை ஆராதிக்குமவர் பாகவதர்களோடு ஸஹவாஸஞ் செய்து அதன்மூலமாய் அந்த பகவானிடத்தில் அழியாத பக்தியினையப்பெறுவார்களாயின், உடனே அவர்களுக்கு மோக்ஷம் உண்டாவது ஸித்தமே. அந்த பக்தி உண்டாகும் வரையிலுமே விளம்பமன்றி அதுண்டான பின்பு விளம்பமே இராது. ஆகையால் பாகவத ஸஹவாஸத்தினால் பகவானிடத்தில் நிலைநின்ற பக்தியை விளைவித்துக்கொள்ளவேண்டும். பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடைய பெரியோர்களிடஞ் சென்று பகவானுடைய கதைகளை அவர்கள் சொல்லக் கேட்பார்களாயின், அவனிடத்தில் பக்தி அநாயாஸமாக விளையும். பகவானுடைய கதைகளைக் கேட்குந் தசையில், ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் கார்யமான ஊர்மி சக்ரமெனப்படுகிற பசி தாஹம் சோகம் மோஹம் மூப்பு மரணம் ஆகிய இவைகள் தொலையப்பெற்ற நல்ல திருந்திய ஜ்ஞானமும் மனத்தெளிவும் கர்ம லோகம் போகலோக மென்கிற இரண்டு லோகங்களிலுமுள்ள சப்தாதிவிஷயங்களில் விருப்பின்மையும் மோக்ஷத்திற்குறிய மார்க்கமாகிய பக்தியும் ஆகிய இவை யெல்லாம் விளையுமாயின், அத்தகைய பகவானுடைய கதைகளில் ஸந்தோஷத்துடன் எவன்தான் விருப்பஞ் செய்யமாட்டான்?, என்றார்.

ஶௌனகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீசுகர் மொழிந்ததைக்கேட்டு பாதவம்சத்தில் சிறந்த மன்னவன் பரீக்ஷித்து பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்தவரும் சப்த ப்ரஹ்மத்தில் ஆழ்ந்தவரும் வ்யாஸமஹர்ஷியின் புதல்வருமாகிய ஸ்ரீ சுகரைக் குறித்து மீளவும் என்ன வினவினான்? ஸூதரே! இதைக்கேட்க விரும்புகிற எங்களுக்கு நீர் இதை மொழிவீராக. நீர் எல்லாம் அறிந்தவரல்லவா. பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களின் ஸபையில் பகவானுடைய கதைகளை உட்கொண்ட உரைகளே நடையாடும். இது நிச்சயம். பாண்டவர்களின் வம்சத்தில் பிறந்தவனும் மஹாரதனுமாகிய அம்மன்னவன் பகவானிடத்தில் பக்தியுடையவர்களில் சிறந்தவன். ஏனென்னில், அவன் பால்யத்தில் பிள்ளைகள் விளையாடும் விளையாட்டுக் கருவிகளைக்கொண்டு விளையாடும் பொழுது க்ருஷ்ணனை ஆராதிக்குஞ் செயலையே விளையாடலாகக் கொண்டானல்லவா. ஆகையால் அவன் பால்யம் முதற்கொண்டே பகவானிடத்தில் பக்தியுடையவன். மஹானுபாவரான வ்யாஸகுமாரரும் அனைவர்க்கும் அந்தராத்மாவான பரமபுருஷனையே எல்லாவிதத்திலும் முக்யமாகவுடையவர். இப்படி இருவரும் சிறந்த பாகவதர்களாகையால் அவர்களுக்கு நேர்ந்த ஸம்வாதத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம். பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்கள் எங்கேனும் ஓரிடத்தில் சேருவார்களாயின், பகவானுடைய குணங்கள் அமைந்து கம்பீரங்களான கதைகளே நடக்குமல்லவா. இந்த ஸூர்யன் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாகி, உத்தமஶ்லோகனாகிய பகவானுடைய கதை நடையாடப்பெற்றுக் கழிந்தக்ஷணம் தவிர ப்ராணிகளின் மற்ற ஆயுளையெல்லாம் வீணாகவே பறித்துக்கொண்டு போகின்றான். நாள்தோறும் ப்ராணிகளின் ஆயுள் கழிந்துகொண்டே

யிருக்கின்றது. அதில் பகவானுடைய குணங்களைச் சொல்லிக்கொண்டு கழித்த காலம் தவிர மற்றவை யெல்லாம் வீணே. க்ஷணமாயினும் பகவானுடைய குணகீர்த்தனத்துடன் கழியுமாயின் அதுவே ஸபலமாம்; அது வீணன்று. 'ஜீவித்திருத்தலே ஆயுளுக்குப் பயனாகட்டுமே' என்னில் சொல்லுகிறேன், கேளும். வ்ருக்ஷங்கள் ஜீவிக்கவில்லையா. அவற்றிற்கு மூச்சில்லையேயென்கிறீரோ? கருமானுடைய தோல் துத்திகளும் மூச்சுவிடுகின்றன. அவற்றிற்கு ஆஹாராதிகள் இல்லையே யென்கிறீரோ? க்ராமத்திலுள்ள நாற்கால் ஜந்துக்களும் மற்றவைகளும் ஆஹாரந் தின்கிறதில்லையா; மைதுனஞ் செய்யவில்லையா. ஒருகாலும் பகவானுடைய நாமம் எவன் காதில் விழவில்லையோ அம்மனிதன், நாய் க்ராமத்தில் திரியும் பன்றி ஒட்டை கழுதை இவைகளோடொத்த ஓர் பசுவே (நாற்கால் ஜந்துவே). த்ரிவிக்ரமாவதாரஞ்செய்து உலகங்களை யெல்லாம் தனது பாதாரவிந்தங்களால் ஸ்பர்சித்த பகவானுடைய பராக்ரம சரித்ரங்களைக் கேளாத காதுகள் காதுகளே யல்ல, வீண் பாழிகளே. பெரியோர்களால் ஓயாமல் பாடப்படும் குணங்களையுடைய பகவானுடைய பாட்டுக்களைப் பாடாத நாக்கு இருந்தும் இல்லாததுபோலவே; தவளையின் நாக்கைப்போல் பயனற்றதே. போகமோக்ஷங்களைக்கொடுக்க ஸித்தமாயிருக்கின்ற பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணியாத உத்தமாங்கம் (தலை) பட்டுப்பாகையும் பொற்கிரீடமும் அணிந்திருப்பினும் வீண் பாரமே. தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனான பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பூஜிக்காத கைகள் திகழ்கின்ற பொன் வளைகள் அணிந்திருப்பினும் பிணத்தின் கைகளே. விஷ்ணுவின் திவ்யமங்கல விக்ரஹங்களைக்காணாத கண்

கள் மயில்கண்களே. ஸ்ரீரங்கம் முதலிய ஸ்ரீவிஷ்ணு வின் திவ்ய க்ஷேத்ரங்களுக்கு நடந்து செல்லாத மனிதர் களின் பாதங்கள் வ்ருக்ஷத்தின் ஜன்மம் பெற்றவைகளே (வ்ருக்ஷங்களின் வேர்களோடொத்தவைகளே). பகவா னிடத்தில் பக்தியுடைய பெரியோர்களின் பாததூளியை ஒருகாலும் விரும்பாத மனிதனும், ஸ்ரீவிஷ்ணுவின் பாதாரவிந்தங்களில் படிந்த துளஸியின் வாஸனையை மோந்து ஸந்தோஷம் அடையாத மனிதனும் ப்ராண னோடிருக்கும் பிணங்களே. பகவானுடைய நாமங்களைக் கேட்டும் மொழிந்தும் அவை நெஞ்சில் படப்பெற்று மனத்தில் கலக்கமும் முகத்தில் மலர்த்தியும் கண்ணில் ஆநந்த நீர்களும் உடம்பில் மயிர்க்கூச்சலும் எவன் உண் டாகப்பெறு திருப்பானே, அவனுடைய ஹ்ருதயம் சிறந்த இரும்பினால் செய்யப்பட்டதே. ஆ! என்ன ஆச்சர்யம். பகவானுடைய நாமங்களைக் கேட்டு மனத்தில் ப்ரீதி உண்டாகப் பெறுவானாயின், அவனுக்கு முகமலர்த்தி யும் ஆநந்தக் கண்ணீரும் மயிர்க்கூச்சலும் உண்டாகும். பாகவதர்களில் சிறப்புற்ற நீர் மனத்திற்கினிதாக மொழிகின்றீர். ஆகையால், ஆத்மவித்யையில் நிபுண ராகிய ஸ்ரீசுகர் நன்கு வினவப்பெற்றவராகி மன்னவ னுக்கு எது மொழிந்தாரோ, அதை எங்களுக்கு நீர் மொழிவீராக. மூன்றுவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து சுகரைப் பார்த்து லோக ஸ்ருஷ்டி முதலியவற்றை வினவுதல்.

ஸ்ரீ ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் வ்யாஸ மஹர்ஷியின் புதல்வராகிய ஸ்ரீ சுகர் ஆத்மாவின் உண் மையை நிச்சயித்து மொழிந்த வசனத்தைக் கேட்டு, உத்தரையின் குமாரனாகிய அந்தப் பரீக்ஷித்து மன்னவன்

தெளிந்த மதியைச் செய்தான். மற்றும், அவன் தேஹம் பார்யை புதல்வர் க்ருஹம் பசுக்கள் பணம் பந்துக்கள் இவற்றிலும் எவ்வகையிலும் குறையில்லாமல் புஷ்கலமான ராஜ்யத்திலும் நெடுநாளாய்த் தினந்தோறும் வேரூன்றியிருக்கிற மமதையை(என்னுடையதென்னும் புத்தியை)த் துறந்தான. மனத்தூய்மையுடைய மஹானுபாவர்களே! ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையைக் கேட்பதில் ச்ரத்தையுடையவனும் பெரும்புகழுமாகிய அம்மன்னவன் நீங்கள் கேட்ட இந்த விஷயத்தைப் பற்றியே இன்னமும் வினவினான். அம்மன்னவன் தனக்கு மரணம் சீக்ரத்தில் நேருவதை அறிந்து தாம அர்த்த காமங்களை நிறைவேற்றிக்கொடுக்கிற செயல்கள் எவ்வளவு உண்டோ அவற்றையெல்லாம் துறந்து பகவானை வாஸுதேவனிடத்தில் 'இவன் எனக்கு அந்தராத்மா' என்று திடமான பாவம் உண்டாகப்பெற்று அம்மஹர்ஷியைப் பார்த்து பகவானுடைய கதைகளைப் பற்றி நீங்கள் கேட்டவண்ணமே கேட்டான்.

மன்னவன் சொல்லுகிறான்:—ஓ அந்தணர் தலைவரே! பாபமற்றவரே! எல்லாம் அறிந்தவரும் எனக்கு பகவானுடைய கதைகளை மொழிகின்றவருமாகிய உமது மொழி மிகவும் அழகாயிருக்கின்றது; நல்வழி தவறாதது; நன்கு புகழத் தகுந்தது. இதைக் கேட்டமாத்ரத்தில் எனது அஜ்ஞானமெல்லாம் பறந்தோடுகின்றது. உலகத்தில் சிறந்த ப்ரபுக்களாகிய ப்ரஹ்மாதிகளாலும் இத்தகையதென்று நிரூபிக்கமுடியாத இவ்வுலகத்தையெல்லாம் பகவான் தனது ஆச்சர்ய சக்தியால் படைக்கும் விதத்தை மீளவும் நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். எல்லையில்லாத சக்தியுடைய பரமபுருஷன் ப்ரஹ்மருத்ராதியான எந்தெந்த உருவத்தைக் கொண்டு இவ்வுலகங்களைப் படைத்து ரக்ஷிப்பதும் கடைசியில்

ஸம்ஹரிப்பதுஞ் செய்கிறானோ அதையெல்லாம் எனக்குத் தெளிவாகச் சொல்லவேண்டும். மற்றும், அந்தப் பரம புருஷன் ப்ரஹ்ம ருத்ராதிஸ்வரூபனாகிய தன்னை ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் முதலிய வ்யாபாரங்களில் விசேஷமான அபிமான முடையவனாகச் செய்து தான் ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களால் விளையாடலுற்று அந்தந்த வ்யாபாரங்களைச் செய்வதும் அவற்றைப் பற்பல விகாரங்களால் மாறச்செய்வதுமாகிய அவன் செயல்களை எனக்குச் சொல்லவேண்டும். அந்தணரே! ஆச்சர்யப்படும்படியான வ்யாபாரங்களையுடைய பகவான நடத்துகிற சேஷ்டிதங்கள் மிகுந்த ஜ்ஞானமுடைய அறிஞராலும் 'இன்னது இனியது' என்று சிந்திக்கமுடியாததுபோல் தோற்றுகிறது. தான் ஒருவனேயாகிப் பல அவதாரங்களால் பற்பல செயல்களைச் செய்து கொண்டு அவன் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களை ஒரே காலத்திலாவது காலக்ரமத்திலாவது எங்ஙனம் ஏற்றுக் கொள்கிறானோ, அதை எனக்குச் சொல்லவேண்டும். அவன் 'இவ்வுலகங்களைப் படைக்கும் பொழுது எது நிமித்தகாரணம்? உபாதான காரணம் எது? எதை ஆதாரமாகக்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறான்? அவன் உலகங்களை ரக்ஷிக்கும்பொழுது, ஸ்ருஷ்டியில் ப்ரஹ்மாதிகளுக்கு அந்தராத்மாவாயிருந்து ஸ்ருஷ்டிப்பதுபோல் ஜீவாந்தர்யாமியாயிருந்து ரக்ஷிக்கிறானா? அல்லது தானே நேராக அவதரித்து ரக்ஷிக்கிறானா? எதை ஆதாரமாகக்கொண்டு ஸம்ஹாரஞ்செய்கிறான்? பகவானுடைய அவதாரங்கள் ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் மூன்றும் அமைந்தவைகளா? அல்லது இம்மூன்றில் ஒரு குணம் அமைந்தவைகளா? அல்லது ப்ரக்ருதியின் ஸம்பந்தமேயில்லாதவைகளா? இதையெல்லாம் விசாரித்துத்

தெரிந்து கொள்ளவேண்டுமென்று எனக்கு அபிப்ராயம். மஹானுபாவராகிய நீர் இவற்றை உள்ளபடி எனக்குச் சொல்லவேண்டும். ஶப்தப்ராஹ்மத்தில் (ஶப்த ஸ்வரூபமான ஸமஸ்த ஶாஸ்த்ரங்களிலும்) நீர் கரையறிந்தவர். நீர் பரப்ராஹ்மத்திலும் ஆழ்ந்தவர். பரப்ராஹ்மத்தின் ஸ்வரூப ரூபகுண விபூதிகளை நீர் ஶாஸ்த்ரங்களாலும் யோகஸாக்ஷாத்காரத்தாலும் உள்ளபடி அறிந்தவர். ஆகையால் நான் வினவினதை யெல்லாம் எனக்குத் தெளிவாக மொழியவேண்டும்' என்றான்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானுடைய குணங்களைக் கூறும்படி மன்னவனால் வேண்டப்பெற்ற அம்முனிவர், ஸமஸ்த இந்த்ரியங்களுக்கும் நியாமகனாகையால் ஹ்ருஷீகேசனென்று பேர்பெற்ற பகவானை நெஞ்சில் கொண்டு மொழியத் தொடங்கினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சேதனாசேதனங்களை (ப்ரக்ருதி புருஷர்களை)க் காட்டிலும் விலக்ஷணனும், ஸ்வரூபத்தினாலும் குணத்தினாலும் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவனும் ப்ரபஞ்சத்தின் பிறத்தல் வளர்தல் சாதல் ஆகிய இவையே லீலையாகப்பெற்று ப்ராஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற மூன்று சக்திகளை ஏற்றுக்கொள்பவனும் அனைத்துக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் இத்தகையதென்று அறியமுடியாத ஸ்வரூபமுடையவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம். தன்னைப் பற்றின ஸத்புருஷர்களின் பாபங்களைப் போக்குமவனும் துஷ்டர்களை அழிக்கும் பொருட்டு சுத்த ஸத்வமயமான சரீரங்களை அங்கீகரிப்பவனும் (இயற்கையில் தான் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவனாயினும் ஸௌலப்யத்தின் மிகுதியால் நல்லோர்களைக் காப்பதற்காகத் தீயோர்களை அழிப்பது முதலியன செய்பவனாகி ராமக்ருஷ்ணாதி அவதாரங்க

ளால் ஸகல ஜனங்களின் கண்களுக்கும் புலப்படுமவனும்) பரமஹம்ஸர் ஆதரிப்பதும் மோக்ஷாஶ்ரமமெனப்படுவது மாகிய நான்காவது ஆஶ்ரமத்தில் நிலைநின்றவர்களுக்கும் (இல்லறத்திலிருந்தும் மோக்ஷத்தில் விருப்பம் உண்டாகி அனைத்திலும் பற்றற்றுத் துறவறந்தொட்டாற் போலிருக்கும் மஹானுபாவர்களுக்கும் மோக்ஷத்தில் விருப்பமுடைய அனைவர்க்கும்) வேண்டியவற்றை யெல்லாங்கொடுக்குந் தன்மையனுமாகிய பகவானுக்கு மீளவும் நமஸ்காரம். தன்னைப்பற்றினாரிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் யதுகுலத்தில் பிறந்து யாதவர்களனைவரிலும் சிறப்புற்றவனும், வழிதப்பி நின்ற குத்ஸிதயோகிகளுக்கு (தன்னிடத்தில் பக்தி யோகமில்லாத கேவல யோக நிஷ்டர்களுக்கு)த் தானிருக்குந்திசை அடிக்கடி வெகுதூரமாயிருக்கப் பெற்றவனும், தன்னை நிகர்த்ததும் தனக்கு மேற்பட்டது மில்லாததான தேஜஸ்ஸுடன் கூடின தனது ஸ்வரூபத்தில் நின்று மனக்களிப்புற்றிருப்பவனுமாகிய உனக்கு அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன். எவனை வாயார வாழ்த்துவதும் நெஞ்சார நினைப்பதும் கண்ணாரக் காண்பதும் தலையார வணங்குவதும் செவியாரக் கேட்பதும் கைகளாரப் பூசிப்பதும் ஆகிய இவற்றில் ஒவ்வொன்றும் உலகத்தின் பாபங்களை உடனே ஒழிக்குமோ, அத்தகையனும் மிகுதியும் மங்களகரமான புகழுடையவனுமாகிய உனக்கு அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன். எவனுடைய பாதாரவிந்தங்களைப் பணிவதனால் இஹலோகஸுகங்களும் ஸ்வர்க்காதியான பரலோகங்களில் விளையும் ஸுகங்களும் ஆகிய இரண்டு வகையான ஸுகங்களிலும் மனப்பற்றைத் துறந்து ஸம்ஸார தாபங்களெல்லாம் தீரப்பெற்றுப் பரப்ரஹ்மமாகிற பெருங்கதியை அடைந்து

வாழ்வார்களோ, அத்தகையனும் மிகுதியும் மங்கள கரமான புகழுடையவனுமாகிய உனக்கு அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன். சாந்த்ராயணம் முதலிய தவங் களில் நிலைநின்றவரும் மனம் முதலிய இந்த்ரியங்களை ஜயஞ் செய்பவரும் மங்களமான ஆசாரத்தில் ஊற்ற முடையவரும் ஆகிய இவர்கள் அனைவரும் தாம்செய்யும் தவம் முதலியவற்றை எவனிடத்தில் அர்ப்பணஞ்செய்யா விடின் அந்தத்தவம் முதலியவற்றின் பலனான க்ஷேமத் தைப் பெறமாட்டார்களோ, அப்படிப்பட்டவனும் மிக வும் மங்களகரமான புகழுடையவனுமாகிய உனக்கு (ஸ்ரீக்ருஷ்ணு!) அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன். ஹூணர் ஆந்த்ரர் இருளர் புலையர் இடையர் கங்கர் துலுக்கர்கஷர் முதலிய ஹீனஜாதியர்களும் மற்றுமுள்ள பலஜாதியர்களும் எந்தப் பரமபுருஷனைப் பற்றின பெரி யோர்களைப் பணிந்தால் சுத்தி அடைவர்களோ, அத் தகையனும் கூடாதவையும் கூடும்படியான திறமையே சீலமாகப்பெற்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். அத்த கைய புகழுடையவனும் கேவலபக்தியோக நிஷ்டர்களு க்கு அவர்கள்விரும்பின பலன்களைக்கொடுப்பவனும் வேத த்தின் பூர்வ பாகத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களால் ஆராதிக்கப்பெற்று அவற்றின் பலன்களைக் கொடுப்பவ னும் ஸ்ம்ருதிகளில் விதித்த தானுதிதர்மங்களால்ஆரா திக்கப் பெற்று அவற்றின்பலன்களைக் கொடுப்பவனும், வேதாந்த பாகத்தில் விதிக்கப்பட்ட உபாஸனுரூபமான ஜ்ஞானத்திற்கு விஷயமாயிருப்பவனும் அவ்வுபாஸனை யின் பலனைக் கொடுப்பவனும் ப்ரஹ்மருத்ராதிகள் மனக் கலக்கமற்று எவ்வளவு வருந்தி விசாரிக்கிலும் அறிய முடியாத ஸ்வரூபமுடையவனும் அனைவர்க்கும் அந்த ராத்மாவுமாகிய பகவான் எனக்கு அருள்புரிவானுக.

ஸ்ரீமஹா லக்ஷ்மிக்கு பர்த்தாவும் வைதிக தர்ம மர்யா தைகளை நிலைநிறுத்துமவனும் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சிப் புழு வரையிலுமுள்ள ஸமஸ்தப்ராணி ஜாலங் களையும் பாதுகாப்பவனும் வேதாந்தங்களில் விதிக்கப் பட்ட உபாஸனாரூபஜ்ஞானங்களுக்கு விஷயமாயிருப்பவ னும் அவற்றின் மர்யாதைகளை அழியவொட்டாமல் நிலைப்படுத்துபவனும் உலகங்களையெல்லாம் ரக்ஷிப்பவ னும் அதர்மம் நிறைந்த பூலோகத்தைப் பரிபாலனஞ் செய்பவனும் (ராமக்ருஷ்ணாதியான அவதாரங்களைப் பண்ணி அதர்மிஷ்டர்களை அழித்து பூலோகத்தினு டைய தர்மமர்யாதைகளை விசேஷமாக நிலைநிறுத்து மவனும்) அந்தகர் வ்ருஷ்ணிகள் முதலிய யாதவர்களுக் கும் அக்ரூரன் உத்தவன் முதலிய ஸாதுக்களுக்கும் ரக்ஷ கனும் தேடிப்புகுங்கதியும் மற்றுமுள்ள ஸத்புருஷர் களுக்கும் ரக்ஷகனும் கதியுமாகிய பகவான் எனக்கு அருள் புரிவானாக. எவனுடைய பாதாரவிந்தங்களை த்யானஞ் செய்கையாகிற ஸமாதியால் மலங்கள் தீர்ந்து பரிசுத்தமாயிருக்கின்ற புத்தியால் பண்டிதர்கள் ஆத்மா வின் உண்மையைத் தாமே காண்கின்றார்களோ (அறி கிறார்களோ), தாம் அறிந்தபடியே பிறர்க்கும் உபதேசஞ் செய்வார்களோ, போகமோக்ஷங்களைக் கொடுப்பவனாகிய அப்படிப்பட்ட பகவான் எனக்கு அருள் புரிவானாக. மற்றும், முன்பு கல்பாதியில் ப்ரஹ்மதேவன் ஸ்ருஷ்டிக்க முயன்று வஸ்துக்களின் உருவங்களும் அவற்றின் பேர் களும் தெரியாமல் வேதங்களை மறந்து தடுமாற்றமுற்றுத் தன்னைத் துதிக்கையில், எவன் அருள் புரிந்து அவனு க்கு ஸ்ருஷ்டியைப் பற்றின அறிவை அளிக்கமுயன்று வேதரூபமான ஸரஸ்வதியைத் தூண்டி ஸ்வரம் முதலிய தனது லக்ஷணங்களோடு அவனது முகத்தில் தானே தோற்றும்படி செய்தானோ, அத்தகையனும் ஜ்ஞான ப்ரதானஞ் செய்பவர்களில் சிறந்தவனுமாகிய பகவான்

எனக்கு அருள் புரிவானாக. மஹத்து முதலாக பூமி வரையிலுமுள்ள பூதங்களால் இந்தச் சரீரங்களை நிர்மித்துத் தான் அந்தந்த ஜீவாத்மாக்களின் உள்ளே நுழைந்து நிற்கும் தன்மையனாகி இந்தச் சரீரங்களில் சயனித்துப் புருஷனென்னும் பேர்பெற்றுப் பதினொரு இந்த்ரியங்களும் ஐந்து பூதங்களும் ஆகிய பதினாறுக்கும் நியாமகனாயிருந்து சப்தாதி விஷயங்கள் ஐந்தும் வாக்கு முதலிய வ்யாபாரங்கள் ஐந்தும் ப்ராணன் முதலிய வாயுக்கள் ஐந்தும் மனதொன்றும் ஆகிய பதினாறுகுணங்களையும் லீலையே ப்ரயோஜனமாகப் பெற்று எவன் அனுபவிக்கின்றானோ, அப்படிப்பட்ட பகவான் எனது மொழிகளுக்கெல்லாம விஷயமாகி அவற்றை அலங்கரிப்பானாக. எல்லாம் உணர்ந்தவரும் வாஸுதேவனுடைய அவதாரமும் அஷ்டாதசபுராணங்களைச் செய்து மஹோபகாரஞ் செய்து 'அவர் அவர்' என்னும்படி பெரும்புகழ் பெற்றவரும் பகவானுமாகிய வ்யாஸ மஹர்ஷிக்கு நமஸ்காரம். நல்லியற்கையுடைய சிஷ்யர்கள் தாமரைமலர்போன்ற அவரது முகத்தினின்று பெருகின ஜ்ஞானோபதேசமாகிற அம்ருதத்தைப் பருகி உஜ்ஜீவித்தார்களல்லவா? மன்னவனே சொல்லுகிறேன் கேள்! நீ வினவின இவ்விஷயத்தையே முன்பு நாரதர் ப்ரஹ்ம தேவனைப் பார்த்து வினவினார். அந்த ப்ரஹ்மதேவனும் தனக்கு பகவான் மொழிந்தபடியே நாரதருக்கு இவ்விஷயத்தை மொழிந்தான். அதை நான் உனக்குச்சொல்லுகிறேன் கேட்பாயாக. முன்பு பகவானை நான்முகன் இவ்விஷயத்தைப் பற்றி வினவ, அவன் அந்நான்முகனுக்கு மொழிந்தான். அதையே இப்பொழுது நான் உனக்குச்சொல்லுகிறேன் கேட்பாயாக' என்றார். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

{நாரதர் ப்ரபஞ்சத்தின் ப்ரகாரத்தைப்பற்றி ப்ரஹ்மதேவனை வினவுதல்.}

நாரதர் சொல்லுகிறார்:—தேவர்களுக்குந் தேவரே! பூதங்களைப் படைப்பவரே! ஆனதுபற்றியே அனைவர்க்கும் ஆதியில் உண்டானவரே! மிகுந்த மனத்தெளிவைக் கொடுக்கும்படியான அறிவை எனக்கு விளைப்பீராக. இதோ புலப்படுகிற இந்த ப்ரபஞ்சமெல்லாம் எந்த நிமித்த காரணத்தினால் உண்டானது? எதை உபாதானமாகக் கொண்டு ஸ்ருஷ்டிக்கப் பெற்றது? எதை ஆதாரமாக வுடையது? எதில் சேர்ந்து லயத்தை அடையுந் தன்மையது? எவனுக்கு உட்பட்டிருப்பது? இவ்விஷயங்களையும், இதைப்பற்றி மற்றும் ஏதேதுண்டோ, அதையும் உண்மையாக எனக்குச் சொல்லவேண்டும். நான் கேட்ட இவ்விஷயமெல்லாம் உமக்கு நன்றாகத் தெரியும். ஏனென்னில், நீர் வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாகிற மூன்று காலங்களிலுமுள்ள வஸ்துக்களையெல்லாம் படைப்பவரல்லவா? மற்றும், நீர் இந்த ஜகத்தையெல்லாம் பகவானுடைய அனுக்ரஹத்தினால் சிறந்த அறிவு நேரப்பெற்று அதனால் கையிலங்கு நெல்லிக்கனி போல் நன்றாக நிச்சயித்திருப்பவர். இதெல்லாம் இருக்கட்டும். உமது உண்மையை எனக்குச் சொல்வீராக. உமது அறிவு எந்த வஸ்துவில் நிலைநின்றிருக்கின்றது? உமக்கு இத்தகைய அறிவை அளித்தவன் எவன்? உமக்கு எவன் ஆதாரம்? உமக்கு மேற்பட்டவன் எவன்? உமக்கு அந்தராத்மாவாயிருப்பவன் எவன்? எனக்கு நீரே ஸ்வதந்த்ரனை பரமேஸ்வரனென்று தோற்றுகிறது. நீர் தவஞ்செய்வது கண்டால் உமக்கு மேற்பட்டவன் ஒருவன் இருக்கவேண்டுமென்று சங்கை உண்டாகின்றது. ஆகையால் வினவுகின்றேன். நீர் ஸஹாயமில்லாமலே உமது ஸங்கல்பத்தினால் பூமி முதலிய

பூதங்களைக் கொண்டு தேவாதி ஜந்துக்களைப்படைக்கின்றீர். நீர் வீணுகாத விருப்பங்களை யுடையவராகி உம்மை எவ்விதத்திலும் பரிபவப்படுத்திக்கொள்ளாமல், அங்ஙனம் படைத்த பூதங்களை உம்மிடத்தில் வைத்துப் பாதுகாக்கின்றீர். நீர் நூல் பூச்சிபோல், உமது சக்தியைக் கொண்டு சிறிதும் வருத்தமின்றி ப்ரபஞ்சத்தைப் படைப்பதும் பாதுகாப்பதும் அழிப்பதும் செய்கின்றீர். 'புலப்படுகிற ப்ரபஞ்சத்திற்கெல்லாம் காரணவஸ்து எதுவாயிருக்கலாம்' என்று நான் எவ்வளவு தூரம் ஆலோசித்துப் பார்க்கிலும், சிறந்ததும் தாழ்ந்ததும் நடுத்தரமாயிருப்பதும் தேவமனுஷ்யாதி நாம ரூபங்களையுடையதும் வெண்மை கருமை முதலிய குணங்கள் அமைந்ததும் சேதனுசேதனஸ்வரூபமுமாயிருக்கிற இந்த ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களில் ஒன்றாயினும் உம்மைத் தவிர மற்றொருவனிடத்தினின்று உண்டாவதாக எனக்குத் தெரியவில்லை. எல்லாம் உம்மிடத்தினின்றே உண்டாவதாகக் காண்கின்றேன். மற்றும், மஹானுபாவராகிய நீர் மிகுந்த மனவூக்கத்துடன் கூடிப்பிறரால் செய்ய முடியாத கோரமான பெருந்தவத்தைச் செய்கின்றீர். அதனால் 'இவரைக் காட்டிலும் மேற்பட்ட வஸ்து உண்டோ? என்னவோ?" என்ற சங்கையைக் கொடுக்கின்றீர். ஆகையால் நீர் இங்ஙனம் ஸந்தேஹத்தை விளைத்து எங்களை வருந்தச் செய்கின்றீர். எல்லாம் அறிந்தவரே! அனைத்தையும் படைத்த ப்ரபுவே! உம்மால் கற்பிக்கப் பெற்று இதையெல்லாம் எப்படி அறிவேனே, அங்ஙனம் எல்லாவற்றையும் எனக்கு விசதமாக அறிவிக்கவேண்டும்' என்றார்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—பிள்ளாய்! நீ என்னிடத்தில் கருணை செய்து இதை நன்றாக அறிய விரும்

பினும். இது நல்ல கார்யம். ஏனென்னில், பகவானு டைய மஹிமையை அறிவிக்கையாகிற தர்மத்தில் என் னைத் தூண்டினுயல்லவா? ஆகையால் இதை அறிய விரும்பினது என் பாக்யமே. ஓ நாரதனே! என்னைப் பற்றி எங்ஙனம் மொழிகின்றனையோ அதுவும், இன் னம் என்ன வினவினையோ அதுவும் ஆகிய உன்வசன மெல்லாம் அவ்வளவு பொய்யன்று. எனக்கு மேற்பட்ட பகவானை அறியாமல் சொல்லுகின்றாய். எனக்கு இத் தகைய மஹிமையெல்லாம் எவனிடத்தினின்று உண்டா கின்றதோ அப்படிப்பட்ட பரமகாரண வஸ்துவும் எனக்கு மேற்பட்டவனுமாகிய பகவானை அறிந்திலை. ஸூர்யன் அக்நி சந்த்ரன் இவர்களும் அஸ்வினி முதலிய மற்றை க்ரஹங்களும் மற்றுமுள்ள ஸாதாரண நக்ஷத்ரங்களும் பகவானுடைய தேஜஸ்ஸினால் விளக்கமுற்ற இந்த ப்ர பஞ்சத்தை யெல்லாம், அவனுடைய தேஜஸ்ஸின் கோடி கோடியில் ஒரு பாகத்தைக் கொண்டு 'நானே விளங்கச் செய்கிறேன்' என்று தாமே விளங்கச் செய்வதாக நினைக்கின்றார்கள். இப்படியே நானும் அவனது தேஜஸ்ஸினால் விளங்கப்பெற்ற உலகத்தை யெல்லாம் நானே விளங்கச் செய்வதாகப் பிறர் நினைக்கும்படி நடக் கின்றேன். வெல்லமுடியாத எந்த பகவானுடைய மாயை யால் மதிமயங்கப் பெற்று ஜனங்களெல்லாம் என்னை ஜகத்குரு (உலகங்களையெல்லாம் படைத்து அவற்றிற்குப் பிதாவாயிருப்பவன்) என்று சொல்லுகிறார்களோ, அப் படிப்பட்ட வாஸுதேவனுக்கு நமஸ்காரஞ் செய்வோ மாக. பகவானுடைய கண்ணோக்கம் படுமிடத்தில் நிற்க வெட்கமுறுகின்ற மாயையால் மதிமயங்கப் பெற்று ஜனங் கள் கெடுமதியராகி 'நான், என்னுடையது' என்று பிதற்றுகிறார்கள். இம்மாயை பகவானிடத்தில் தன் கார்யம் சிறிதும் நிறைவேறப் பெறுமல் அவன் கண்ணில்

படவும் வெட்கமுறுகின்றது. சிலர் பூமி முதலிய பூதமே காரணமென்றும், சிலர் கர்மமே காரணமென்றும், சிலர் காலமே காரணமென்றும், சிலர் வஸ்துக்களின் ஸ்வபாவமே காரணமென்றும், சிலர் ஜீவனே காரணமென்றும், பகவானுடைய மாயையால் மதி மயங்கிப் பிதற்றுகிறார்கள். அந்தணர் தலைவனே! அவர்கள் ஸ்வதந்த்ரமாக நினைத்த த்ரவ்யம் (பூதம்) முதலிய பொருள்களில் வாஸுதேவனுக்கு உட்படாமல் மேற்பட்டதும் வேறுபட்டதுமாகிய பொருள் ஒன்றுமே இல்லை. எல்லாப் பொருட்களும் வாஸுதேவனுக்கு உட்பட்டவைகளே. எல்லாம் அவனால் படைக்கப்பட்டு நியமிக்கப் பெற்றிருப்பவை யாகையால் 'அவனே இவை' என்னும்படி வாஸுதேவ ஸ்வரூபங்களாகவேயிருக்கும். வேதங்கள் நாராயணனெனப்படுகிற பகவானையே காரணமாக வுடையவைகள். மற்றும், அவனையே முக்யமாக எடுத்துரைக்குந் தன்மையவை. இந்த்ரன் முதலிய தேவதைகள் அனைவரும் நாராயணனுடைய சரீரத்தினின்று உண்டானவர்கள். அவனுக்குச் சரீரமாயிருப்பவர்கள். உலகங்களெல்லாம் நாராயணனையே ப்ரபுவாக வுடையவை. யாகங்கள் நாராயணனுடைய ஆராதனங்களாகையால் அவனையே முக்யமாகப் பெற்றவைகள். (யாகஞ் செய்கிறவர் உண்மை தெரியாமல் இந்த்ராதி தேவதைகளைக் குறிக்கினும் அவ்விந்த்ராதிகளுக்கு அந்தராத்மாவான நாராயணனே அவைகளால் ஆராதிக்கப் பெற்று அவரவர் விரும்பும் பலன்களைக் கொடுப்பவன்.) விவேகாதிகளால் விளையும் உபாஸன ரூப யோகமும் நாராயணனைப் பற்றினதே. ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாகச்செய்யும் கர்மமும் நாராயணனிடத்தில் சேருமதே. சாஸ்த்ரங்களால் விளையும் ஜ்ஞானமும் நாராயண

னையே த்யானாலம்பனமாகவுடையது. யோகத்தின் பல னான அர்ச்சிராதி கதியும் நாராயணனிடம் கொண்டு போய்ச் சேர்ப்பதாகையால் அவனையே முக்யமாக வுடையது. உள்ளதெல்லாம் நாராயணனுக்கு உட்பட்ட தே. ஆகையால், 'உம்மைக் காட்டிலும் மேற்பட்ட வஸ்து எனக்கு எதுவும் புலப்படவில்லை' என்றே, அம் மதியை மாற்றிக்கொள்வாயாக. 'ஆனால் நீர் செய்வ தென்?' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். அனை வர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் எல்லாம் அறிந் தவனும் எல்லாவற்றையும் வசப்படுத்திக்கொண்டு நிய மிப்பவனும் நிர்விகாரனுமாகிய அந்த பகவானுடைய ஸங்கல்ப ரூப ஜ்ஞானத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பெற்ற நான் அவனால் தூண்டப்பெற்று ஸ்ருஷ்டிக்கவேண்டியதை ஸ்ருஷ்டித்துக்கொண்டிருக்கின்றேன். என்னைக்கொ ண்டு கார்யஞ் செய்விப்பவன் அவனே. அவனுக்கு நான் கையாளாயிருந்து கார்யஞ் செய்பவன். ஹேயகுணங் கள் எவையுமில்லாதவனும் வ்யாபகனுமாகிய பகவான் ப்ரக்ருதியின் மூலமாய் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்வதற்காக ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற இம்மூன்று குணங்களைக் கைக்கொண்டிருக்கிறான். ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதும் அதைக் காப்பதும் அதை அழிப்பதும் ஈஶ்வரனுக்கு லீலையே (விளையாடலே). ஸத்வாதிகுணங்களை அந்த லீலைக்காகவே கைப்பற்று கிறான். மதிமயங்கச் செய்வதும் அறிவைக்கொடுப்ப தும் செயல்களைச் செய்விப்பதும் தன்மையாகப் பெற்ற தமஸ்ஸு ஸத்வம் ரஜஸ்ஸு ஆகிய இம்மூன்று குணங் களும், இயற்கையில் எவ்வகை விகாரங்களுமின்றி அழிவற்றவனாயினும் அநாதிகர்மத்தினால் ப்ரக்ருதிக்கு வசப்பட்ட ஜீவனை, சரீரம் இந்த்ரியங்கள் இவற்றின் மூலமாய் புண்யபாபகர்மங்களைச் செய்யும்படி ஸர்வ

காலமும் பந்திக்கின்றன. (ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற இக்குணங்கள் ப்ரக்ருதியினின்று உண்டானவை. எவ்வகை விகாரமுமில்லாத ஜீவனை இவை தேஹத்தில் கட்டுகின்றன. அவற்றில் ஸத்வகுணம் நிர்மலமாகையால் மதிவிளக்கங் கொடுப்பதும் ரோகமில்லாமையைக் கொடுத்துச் சரீரசுத்தியை விளைப்பதுமாகி ஸுகத்திலும் ஜ்ஞானத்திலும் பற்றுதலையுண்டாக்கி ஜீவனைக் கட்டும். ரஜஸ்ஸு ஸ்த்ரீக்கும் புருஷனுக்கும் ஒருவர்மேலொருவர்க்கு உண்டாகும் ப்ரீதியாகிற ராகத்தையும் ஶப்தாதி விஷயங்களிலும் புத்ர மித்ர களத்ராதிகளிடத்திலும் பற்றுதலையும் விளைக்குந் தன்மையது. அது வ்யாபாரங்களில் ஆசை மூட்டி ஜீவனைக் கட்டும். வ்யாபாரங்களில் விருப்பத்தினால் எந்தக் கார்யங்களைச் செய்யத் தொடங்குவானோ, அவை புண்ய பாப ரூபங்களாயிருக்கும். ஆகையால் அவை அவற்றின் பலன்களை அனுபவிப்பதற்கு ஸாதனங்களான சரீரங்களில் பிறத்தலைவிளைக்கும். தமோகுணம் ப்ராணிகளுக்கு மதிமயக்கத்தை விளைக்கும்; மற்றும், அனவதானம் சோம்பல் நித்ரை ஆகிய இவைகளுக்குக் காரணமாயிருக்கும்; இவைகளை விளைவித்து ஜீவனைக் கட்டும்.) தனக்குச் சரீரமான ப்ரக்ருதியின் குணங்களாகிய இந்த ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களோடு கூடினவனும் பிறனை எதிர்பாராமல் எவ்வகையிலும் தடைபடாத கதியுடையவனுமாகிய பகவான் உலகத்திலுள்ளவர் அனைவர்க்கும் எனக்கும் நியாமகன். மாயையெனப்படுகிற ப்ரக்ருதிக்கு அதிபதியான ஈஶ்வரன் தன் ஸங்கல்பஜ்ஞானத்தினால் தனக்குச் சரீரமான ப்ரக்ருதியின் மூலமாய் பலவகை நாமங்களையும் உருவங்களையும் அடைய விரும்பி நிஷ்காரணமாகவே பிறனுடைய தூண்டுதலின்றித் தன்னிடத்

தில் ஸம்பந்தித்திருக்கிறகாலம் கர்மம் ஸ்வபாவம் இவைகளைக்கைப்பற்றினான். (ஈஶ்வரன் பலவகை நாமங்களையுடைய உருவங்கள் அமைந்த ப்ரபஞ்சத்தைப் படைக்க விரும்பி ஏற்றக்குறைவின்றி ஸமமாயிருக்கிற ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் கலக்கத்திற்கு ஹேதுவான காலத்தையும் ஜீவாத்மாக்களின் அத்ருஷ்டத்தையும் ப்ரக்ருதிக்குள்ள பரிணாமஸ்வபாவத்தையும் (ஒன்று மற்றொன்றாக மாறும் ஸ்வபாவத்தையும்) ஸ்ருஷ்டிக்கு உபயோகப்படும்படி எடுத்துக்கொண்டான். பலவகை உருவங்களைப் படைத்து அவையெல்லாவற்றிலும் தான் உட்புகுந்து அவற்றிற்குப் பற்பல நாமங்களையிட்டு அந்நாமங்களால் அவற்றின் மூலமாய்த் தானே சொல்லப்படுகின்றானாகையால் அவன் பலஉருவங்களையும் நாமங்களையும்பெற விரும்பி அங்ஙனம் பலவாறு நாமரூபங்களைப் பெறுகிறானென்பதில் ஐயமில்லை). ஸமமாயிருந்த ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் வைஷம்யத்திற்கு ஹேதுவானது காலம். இவ்விஷயத்தை முன்னமே மொழிந்தேன். அங்ஙனம் காலத்தினுண்டாகிற ஸத்வாதி குணங்களின் வைஷம்யத்தினாலும் ப்ரக்ருதியின் பரிணாம ஸ்வபாவத்தினாலும் ஜீவாத்மாக்களின் அத்ருஷ்டத்தினாலும் பரம புருஷனால் தூண்டப்பெற்ற அவ்யக்தத்தினின்று (ப்ரக்ருதியினின்று) மஹத்தத்வம் உண்டாயிற்று. பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தினால் விகாரம் அடைவதும் (மாறுவதும்) செயல் ஜ்ஞானம் இவைகளை முக்யமாக வுடையதாகையால் ஸத்வகுணமும் ரஜோகுணமும் நிறைந்ததுமாகிய மஹத்தத்வத்தினின்று, மதிமயக்கம் மதிவிளக்கம் செயல்களில் முயற்சி ஆகிய இவற்றைத் தன்மையாக வுடையதும் தமோகுணமே முக்யமாகப்பெற்றதுமாகிய ஓர் தத்வம் உண்டாயிற்று. அதுவே அஹங்காரமென்று கூறப்படுவது. அது மூன்றுவிதமாக விகரிக்கத்

தொடங்கி வைகாரிகாஹங்காரம் தைஜஸாஹங்காரம் தாமஸாஹங்காரமென்று மூன்றுவகையாகப் பிரிந்தது. அவற்றில் தாமஸாஹங்காரம் மஹா பூதங்களாகிற த்ரவ்யங்களை உண்டுபண்ணுந் திறமையுடையது. தைஜஸமெனப்படுகிற ராஜஸாஹங்காரம் செயல்களில்முயற்சியை விளைக்குந்திறமை யுடையது. ஸாத்விகாஹங்காரம் ஶப்தாதி விஷயங்களை அறிவிக்கும்படியான இந்த்ரியங்களை உண்டுபண்ணுந் திறமையுடையது. பூதாதியென்னும் பேருடையதும் பரமபுருஷனுடைய தூண்டுதலால் விகாரம் அடைவதுமாகிய தாமஸாஹங்காரத்தினின்று ஆகாசம் உண்டாயிற்று. அறிவதும் அறியத்தகுந்ததும் காண்பதும் காணத்தகுந்ததுமாகிய சேதனுசேதனங்களுக்கு ப்ரமாணமும் (சாஸ்த்ரமூலமாய்ச் சேதனுசேதனங்களின் ஸ்வரூபத்தை அறிவிப்பதும்) அந்த ஆகாயத்தின் ஸூக்ஷ்மரூபமும் மற்ற பூதங்களைக் காட்டிலும் அதைப்பிரித்துக்காட்டுகிற அஸாதாரணதர்மமுமாகிய சப்தம் முதலில் உண்டாகி அதினின்று ஆகாயம் உண்டாயிற்று. விகாரத்தை அடைகின்ற அந்த ஆகாயத்தினின்று ஸ்பர்ஶத்தை குணமாகவுடையவாயு உண்டாயிற்று. வாயு (காற்று) தனக்குக் காரணமான ஆகாயத்தின் குணமாகிய சப்தத்தையுமுடையதாயிருந்தது. அவ்வாயுவே ப்ராணன். அது இந்த்ரியங்களை விஷயங்களில் புகச்செய்யுந்திறமையும் மனோவேகத்தையும் சரீர பலத்தையும் விளைக்குந்தன்மையது. காலத்தினாலும் ஜீவனுடைய அத்ருஷ்டத்தினாலும் ப்ரக்ருதியின் ஸ்வபாவத்தினாலும் விகாரத்தை (வேறு உருவத்தை) அடைகின்ற வாயுவிடத்தினின்று ரூபம் ஸ்பர்சம் ஶப்தம் ஆகிய இம்மூன்று குணங்களையுடையதேஜஸ்ஸு உண்டாயிற்று. கால கர்மஸ்வபாவங்களால் விகாரத்தை அடைகின்ற தேஜஸ்ஸினின்று ரஸத்தையுடையதும் காரணத்

தின் குணங்களான ரூபம் ஸ்பர்சம் மப்தம் இவைகளை யுடையதுமாகிய ஜலம் உண்டாயிற்று. விகாரத்தை அடைகின்ற ஜலத்தினின்று கந்தத்தையுடையதும் காரண குணங்களான ரஸம் ஸ்பர்சம் மப்தம் ரூபம் இவைகளையுடையதுமான பூமிஉண்டாயிற்று. வைகாரிக மென்கிற ஸாத்விகாஹங்காரத்தினின்று, திசைகள் வாயு ஸூர்யன் வருணன் அஶ்விதேவதைகள் இவர்களை அதிஷ்டானதேவதையாக உடைய காது த்வக்கு கண் நாக்கு மூக்கு இவைகளும்,அக்னி இந்த்ரன் உபேந்த்ரன் ப்ரஹ்மா இவர்களை அதிஷ்டான தேவதையாக வுடைய வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் இவைகளும்ஆகப் பத்து இந்த்ரியங்களும் சந்த்ரனை அதிஷ்டான தேவதை யாக வுடைய பதினொன்றாவதான மனதும் உண்டாயின. செவி வாய் கண் மூக்கு உடல் என்கிற ஐந்து ஜ்ஞானேந் த்ரியங்களும் வாக் பாணி பாத பாயு உபஸ்தங்களென் கிற ஐந்து கர்மேந்த்ரியங்களும் ஆக இந்தப்பத்து இந்த் ரியங்களும் மனதும் தைஜஸமென்கிற ராஜஸாஹங்காரத் தினால் உதவி செய்யப்பெற்றதும் விகாரத்தை அடை கின்றதுமாகிய ஸாத்விகாஹங்காரத்தினின்று உண்டா யின. ஆகையால் இவ்விந்த்ரியங்களுக்கு ராஜஸாஹங் காரத்தின் குணமும் உண்டு. இந்த ஆகாசாதி பூதங் களும் ஜ்ஞான கர்மேந்த்ரியங்களும் மனதும் ஒன்றோ டொன்றுசேராதிருக்கும் பொழுது ப்ரஹ்மாண்டத்தைப் படைக்கவல்லமையற்றிருந்தன. அப்பொழுது பகவானு டைய சக்தியால் தூண்டப்பெற்றுப் [1]பஞ்சீகரண ப்ரகா ரத்தின்படி ஒன்றோடொன்று கலந்து ஸூக்ஷ்மங்களும் ஸ்தூலங்களுமாகிக் காலகர்ம ஸ்வபாவங்களைக் கொண்டு இந்த ப்ரஹ்மாண்டத்தைப் படைத்தன. இவ்வண்டம்,

---

1 பஞ்சீகரணமாவது—ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டு பாகமாகப் பிரித்து அவற்றில் ஒவ்வொரு பாகத்தையும் ஐந்து

பூதங்கள் இந்த்ரியங்கள் இவற்றின் கலப்பினால் உண்டானதாயினும் ஆகாயத்தினின்று உண்டானவாயுவைப் போல் வேறொரு தத்வமன்று; வேறொரு தத்வத்தை உண்டாக்குந்தன்மையதுமன்று. இங்ஙனம் ஒன்றின் கார்யமுமாகாமல் ஒன்றுக்குக் காரணமுமாகாமையால் கார்யமாயிருக்கை காரணமாயிருக்கை ஆகிய இவ்விரண்டு தன்மையு மற்றிருக்கும். அநேகமாயிரம் வர்ஷங்கள் ப்ரளயமாயிருந்து அதன்முடிவில் ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மாவைச் சரீரமாகக் கொண்டு அவனுக்கு அந்தராத்மாவாயிருக்கிற பரமபுருஷன் காலம் கர்மம் ஸ்வபாவம் ஆகிய இவற்றைக் கொண்டு, ஜலத்தில்மிதப்பதும் அசேதனமுமாகிய அவ்வண்டத்தின் உட்புகுந்து தேவாதி ஸ்ருஷ்டியைப் பண்ணி அதைப் பிழைப்பித்தான். ப்ரஹ்மாவைச் சரீரமாகவுடையவனும் அத்தகையனுமாகிய இந்தப் பரமபுருஷன் அவ்வண்டத்தைப் பிளந்துகொண்டு வெளித்தோற்றினான். ப்ரஹ்மதேவனுக்கு உள்ளே புகுந்திருக்கும் இவன், ஆயிரம் துடைகளும் ஆயிரம் கால்களும் ஆயிரம் கைகளும் ஆயிரங் கண்களும் ஆயிரம் முகங்களும் ஆயிரம் தலைகளுமுடைய அந்தப் பரமபுருஷனே. இவனே முன்பு சொல்லப்பட்ட வைராஜபுருஷன். பண்டிதர்கள், பாதாளம் முதலிய லோகங்களை இந்தப் பரமபுருஷனுடைய உள்ளங்கால் முதலிய அவயவங்களாக த்யானிக்கின்றார்கள். பாதாதி

---

பாகமாகப் பிரித்து அவற்றில் நான்கு பாகங்களைத் தன்னைத் தவிர மற்ற நான்கு பூதங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருபாகமாகச் சேர்த்துக் கலக்கையே, மஹத்தையும் அஹங்காரத்தையுஞ் சேர்த்து ஸப்தீகரணமென்றுஞ் சொல்லுவர். அதுவும் இப்படியே. அதாவது—ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு பாகமாகப் பிரித்து அவ்விரண்டில் ஒவ்வொரு பாகத்தையும் ஏழுபாகங்களாகப் பிரித்து அவற்றில் ஆறு பாகங்களைத் தன்னை யொழிந்த மற்ற ஆறு பூதங்களிலும் ஒவ்வொன்றில் ஒவ்வொரு பாகமாகச் சேர்த்துக்கலக்கையே.

அவயவங்களினின்று உண்டானலோகங்களை அந்தந்த அவயவங்களாக த்யானிப்பது யுக்தமே. இடையின் பின்புறம் முதலிய அவயவங்களால் கீழுள்ள ஏழுலோகங்களையும், இடையின் முன்புறம் முதலிய அவயவங்களால் மேலேழுலோகங்களையும் கற்பிக்கின்றார்கள். இந்தப் பரமபுருஷனுடைய முகத்தினின்று ப்ராஹ்மண வர்ணமும் புஜங்களினின்று க்ஷத்ரியவர்ணமும் இந்த பகவானுடைய துடைகளினின்று வைஸ்ய வர்ணமும், பாதங்களினின்று சூத்ரவர்ணமும் உண்டாயின. பூர்லோகம் இந்தப் பரமபுருஷனுடைய பாதங்களால் கற்பிக்கப்பெற்றது. மஹானுபாவனாகிய பரமபுருஷனுடைய நாபியினின்று புவர்லோகமும், கமலாகாரமான ஹ்ருதயத்தினின்று ஸுவர்லோகமும், மார்பினின்று மஹர்லோகமும், கழுத்தினின்று ஜனலோகமும், ஸ்தனங்களினின்று தபோலோகமும், சிரஸ்ஸினின்று பூர்லோகாதிகளைக் காட்டிலும் வெகுகாலம் அழியாதிருப்பதும் ப்ரஹ்மாவின் லோகமுமாகிய ஸத்யலோகமும் உண்டாயின. பரமபுருஷனுடைய லோகமாகிய பரமபதமோவென்றால், இவற்றைப்போல் உண்டானதன்று; நித்யமாயிருப்பது; என்றும் அழியாதது. அந்தப் பரமபுருஷனுடைய இடையின் பின்புறத்தினால் அதலமும், துடைகளால் விதலமும், அறிவின் வல்லமையமைந்தவனே! நாரதா! முழந்தாள்களால் ஸுதலமும், கணைக்கால்களால் தலாதலமும், கால்கரடுகளால் மஹாதலமும், நுனிக்கால்களால் ரஸாதலமும், உள்ளங்கால்களால் பாதாளமும் படைக்கப்பெற்றன. இங்ஙனம் பரமபுருஷன் லோகஸ்வரூபனாயிருப்பான். உள்ளங்கால் முதல் நாபிவரையிலுமுள்ள அவயவங்களால் பூர்லோகமும், நாபிமுதல் சிரஸ்ஸு வரையிலுமுள்ள அவயவங்களால் புவர்லோக

மும், சிரஸ்ஸினால் ஸுவர்லோகமும் படைக்கப்பெற்றன வென்று இங்ஙனம் லோகஸ்ருஷ்டியைச் சுருக்கியும் சொல்லுவதுண்டு. ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

கீழ்ச்சொன்ன வைராஜ புருஷனே ஜகத்தெல்லாமென்றுரைத்து, இவனே புருஷஸூக்தத்திலும் கூறப்படும் பரம புருஷனென்று விரித்துக் கூறுதல்

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான் :— வாக்கென்னும் இந்த்ரியத்திற்கும் அதற்கு அதிஷ்டான தேவதையான அக்னிக்கும் பகவானுடைய முகம் ஸ்தானம். காயத்ரி உஷ்ணிக் ப்ருஹதி பங்க்தி ஜகதி த்ரிஷ்டுப் அனுஷ்டுப் என்கிற ஏழுசந்தஸ்ஸுக்களுக்கும் பகவானுடைய சரீரத்திலுள்ள த்வக்கு முதலிய ஏழு தாதுக்களின் ஸ்தானங்களைச் சேர்ந்த அவயவங்களே இருப்பிடம். தேவதைகளின் ஆஹாரமாகிய ஹவ்யம் பித்ருக்களின் ஆஹாரமாகிய கவ்யம் அவ்விருவரும் புசித்து மிகுந்த அம்ருதம் ஆகிய இவ்வகை அன்னங்களின் மதுரம் முதலிய அறுவகை ரஸங்களுக்கும் நமது நாக்கிலுள்ள ரஸனேந்த்ரியத்திற்கும் அதற்கு அதிஷ்டானதேவதையான வருணனுக்கும் அந்த பகவானுடைய நாக்கு ஸ்தானம். ஸமஸ்த ப்ராணிகளின் ப்ராணன்களுக்கும் அவற்றின் அதிஷ்டான தேவதையான வாயுவுக்கும் அவனுடைய மூக்குகள் மேலான இருப்பிடம். ஓஷதிகளுக்கும் அஸ்வினி தேவதைகளுக்கும் மோதம் (அனுகூல வஸ்துவைக் காண்பதனால் உண்டாகும் ஸுகம்) ப்ரமோதம் (அனுகூலவஸ்துவில் தன்னுடையதென்னும் புத்தியாலுண்டாகும் ஸுகம்) இவைகளுக்கும் அந்தப் பரம புருஷனுடைய க்ராணேந்த்ரியம் ஸ்தானம். வெளுப்பு கறுப்பு முதலிய நிறங்களுக்கும் அவற்றை ப்ரகாசிப்பிக்கிற தேஜஸ்ஸுக்களுக்கும் பகவானுடைய சக்ஷுரிந்த்ரியம்

ஸ்தானம். த்யுலோகத்திற்கும் ஸூர்யனுக்கும் அவனுடைய கண்கள் ஸ்தானம். திசைகளுக்கும் தீர்த்தங்களுக்கும் அவனுடைய காதுகள் இருப்பிடம். ஆகாயத்திற்கும் அதன் குணமான ஶப்தத்திற்கும் அவனுடைய ஶ்ரவணேந்த்ரியம் இருப்பிடம். வஸ்துக்களின் ஸாராம்சங்களுக்கும் அவற்றின் அழகுக்கும் அவனுடைய சரீரம் இருப்பிடம். ஸ்பர்ஶத்திற்கும் வாயுவுக்கும் இவனுடைய உடல் இருப்பிடம். ஸமஸ்த வ்ருக்ஷங்களுக்கும் எவைகளால் யஜ்ஞம் நிறைவேறுமோ அத்தகைய வ்ருக்ஷங்களுக்கும் அவனுடைய சரீரத்திலுள்ள ரோமங்கள் (மயிர்கள்) இருப்பிடம். சிலை (கல்) இரும்பு மேகம் மின்னல் இவைகளுக்கு இவனுடைய தலைமயிர் மீசை தாடிகள் நகங்கள் இவை இருப்பிடம். பெரும்பாலும் உலகங்களுக்கு க்ஷேமத்தைச் செய்கின்ற இந்த்ராதிலோகபாலர்களுக்கு இவனுடைய புஜங்கள் இருப்பிடம். பூர்லோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் இவைகளுக்கு இவனுடைய மூன்று வகையான அடிவைப்புகள் இருப்பிடம். கிடைத்ததைக் காப்பாற்றுவதற்கும் அனிஷ்டத்தைப் போக்குவதற்கும் எல்லா விருப்பங்களிலும் சிறந்த விருப்பம் எதுவோ அதற்கும் தன்னைப்பற்றினருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனான இந்த பகவானுடைய பாதம் இருப்பிடம். ஜலத்தின்வீர்யமான சுக்லத்திற்கும் ஸ்ருஷ்டிக்கும் பர்ஜன்யனுக்கும் ப்ரஜாபதிக்கும் பகவானுடைய ஆண்குறி இருப்பிடம். ஸந்தானத்திற்காகச் செய்யும் ஸம்போகத்தினால் விளைகிற ஆனந்தத்திற்கு அவனுடைய உபஸ்தேந்த்ரியம் இருப்பிடம். நாரதனே! யமன் மித்ரன் இவர்களுக்கும் மலத்யாகத்திற்கும் (மலத்தை விடுதற்கும்) அவனுடைய பாயுவென்கிற இந்த்ரியம் இருப்பிடம். ஹிம்ஸை நிருதி ம்ருத்யு நரகம்

இவைகளுக்கு அவனுடைய அபானம் இருப்பிடம். அலக்ஷ்மி அதர்மம் அஜ்ஞானம் இவைகளுக்கு அவனுடைய பின்புறம் (முதுகு) இருப்பிடம். மேற்கே பெருகுந் தன்மையுடைய நதங்களுக்கு அவனுடைய நரம்புகள் இருப்பிடம். பர்வதங்களுக்கு அவனுடைய எலும்பின் வரிசை இருப்பிடம். ப்ரக்ருதி அன்னாதிகளின் ரஸம் ஸமுத்ரங்கள் ப்ராணிகளின் மரணம் இவற்றிற்கு அவனுடைய உதரம் இருப்பிடம். ஸமஸ்த ப்ராணிகளின் மனஸ்தத்வத்திற்கும் பரமபுருஷனுடைய ஹ்ருதயம் இருப்பிடம். தர்மத்திற்கும் எனக்கும் உனக்கும் குமாரர்களான ஸனகாதிகளுக்கும் ருத்ரனுக்கும் மஹத்தத்வத்திற்கும் பரமாத்மாவின் மனது மேலான இருப்பிடம். இங்ஙனம் பரமாத்மாவினிடத்தினின்று உண்டான ஜகத்தெல்லாம் அவனுடைய விபூதியாகி அவனுக்குச் சரீரமாயிருக்குமாகையால் அவனைக்காட்டிலும் வேறுபட்டதன்று. நான்முகனாகிய நானும் நாரதனெனப்படுகிற நீயும் ருத்ரனும் அனைவர்க்கும் முன்னமே உண்டான இந்த ஸனகாதி முனிவர்களும் தேவதைகளும் அஸுரர்களும் பர்வதங்களும் நாகங்களும் பக்ஷிகளும் ம்ருகங்களும் ஸர்ப்பங்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்ஸுக்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பூதகணங்களும் உரகர்களும் பசுக்களும் பித்ருக்களும் ஸித்தர்களும் வித்யாதரர்களும் சாரணர்களும் வ்ருக்ஷங்களும் ஜலம் ஸ்தலம் ஆகாயம் இவைகளை வாஸஸ்தானமாகவுடைய மற்றும் பலவகை ஜீவராசிகளும் ஸூர்யன் சந்த்ரன் முதலிய க்ரஹங்களும் அஶ்வினி முதலிய முக்ய நக்ஷத்ரங்களும் கேதுவைப்போன்ற நக்ஷத்ரங்களும் மற்ற ஸாதாரண நக்ஷத்ரங்களும் மின்னல்களும் மேகங்களும், மற்றதும் போனதும் வரப்போகிறதும் இருப்பதும் ஆகிய இவையெல்லாம் பரமபுருஷனே.

வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாகிய மூன்று காலங்களிலுமுள்ள ஸமஸ்த வஸ்துக்களையும் சரீரமாகவுடையவனாகையால் அந்தப் பரம புருஷனுக்குச் சரீரமாகாமல் ஸ்வதந்த்ரமாயிருக்கும் வஸ்து ஒன்றுமே இல்லை. நாபிக்கு மேல் ஒரு சாணளவுடைய ப்ரதேசத்தின் நுனியிலிருக்கின்ற ஹ்ருதயத்தில் வஸிப்பவனாகிய அந்தப் பரமாத்மாவால் இந்த ஜகத்தெல்லாம் சூழப்பெற்றிருக்கும். இங்ஙனம் ஹ்ருதயத்தினுள்ளே இருக்கின்ற அந்தப் பரமபுருஷன் தனது வாஸஸ்தானமாகிய சரீரத்தை உள்ளே முழுவதும் நிறைந்து தனது ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டு தனது வாஸஸ்தானத்திற்கு வெளிப்பட்ட வஸ்து ஸமூஹத்தையும் தனது ஆட்சிக்கு உட்படுத்திக் கொள்வதுபோல், விராட்புருஷனாகிய அநிருத்தனால் படைக்கப்பெற்ற ப்ரஹ்மாண்டம் முழுவதையும் உள்ளும் புறமும் தனது ஆட்சிக்கு உட்படுத்திக் கொள்கின்றான். அந்த பகவான், அநித்யமாயிருப்பதும் அனுபவித்துக் கழிக்கத்தகுந்ததுமான கர்ம பலனைக் கடந்தவனாகையால், பயத்திற்கிடமில்லாத மோக்ஷத்தைக் கொடுப்பவன் அவனே. சேதனாசேதனஸ்வரூபமான ஸமஸ்த ஜகத்திலும் உள்ளும் புறமும் நிறைந்து எல்லாவற்றையும் தனது ஆட்சிக்கு உட்படுத்திக்கொண்டிருக்கிற பரமாத்மாவினுடைய இம்மஹிமை எல்லையில்லாதது. ஸமஸ்த ப்ரபஞ்ச ஸ்வரூபனாயிருக்கையும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுமையும், மோக்ஷங் கொடுக்குந் திறமையும் ஓரிடத்தில் பொருந்தாதவையாயினும் அந்த பகவானுடைய மஹிமையால் பொருந்துகின்றன. அவன் மனுஷ்யாதிகளுக்கு ஆதாரமான பூர்லோகம் முதலிய லோகங்களெல்லாம் தனக்கு அம்சமாயிருக்கப்பெற்றவனென்று முன்னமே மொழிந்தேன். அத்தகைய பரமபுருஷனுடைய அம்சமாகிய

லோகங்களில் தேவ மனுஷ்யாதியான ஸமஸ்த ப்ராணிகளும் அடங்கினவையென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். மரணாதி விகாரங்களில்லாமையும் அந்த மரணாதிகளால் விளையக்கூடிய பயமில்லாமையும் அனைவரும் விரும்பத்தகுந்த மஹாநந்தத்தைப் பெறுகையும் ஆகிய இம்மூன்றுவகையான ஐஸ்வர்யமும், ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்புறத்திலுள்ளதும் அந்தப் பரம புருஷனது லோகமுமாகிய பரமபதத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் அந்தப் பரமபுருஷனுடைய லோகமாகிய அந்த வைகுண்டலோகஞ் சென்றவர்களுக்கே அவை விளையக்கூடியவை. இந்த லோகங்களிலுள்ளவர் அனைவரும் மரணாதி விகாரங்களும் அவற்றால் விளையும் பயமும் துக்கமும் சிறிதுங் கலக்கப்பெறாத மஹாநந்தமின்மையும் மாறப்பெறாதவர்களே. அந்த வைகுண்டலோகம் பகவானுடைய மூன்று பாகங்களாம். அது ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளிப்பட்டது. அங்குப் பிறத்தலில்லாத முக்தர்களும் நித்யர்களும் வாஸஞ் செய்வார்கள். மற்றொரு பாகம் இம்மூன்று லோகங்களுக்குட்பட்டது. இது ஸம்ஸாரிகளான ஜீவராசிகள் இருக்கும் இடம்; அஹங்காரமமகாராதிகளும் வர்ண ஆஸ்ரம நிலைமைகளும் உடையதாகிப் புண்ய பாப ரூபமான கர்மங்களின் பலனை அனுபவிக்கும் ஸ்தானங்கள் அமைந்ததுமாயிருக்கும். இவ்வுலகத்தில் பிறப்பதும் சாவதுமாகி ஸம்ஸரிக்கின்ற ஜீவாத்மாக்கள் போகத்தில் விருப்பமுடையவரும் மோக்ஷத்தில் விருப்பமுடையவருமாகி இருவகைப்பட்டிருப்பர். அவ்விருவகையரில் போகத்தில் விருப்பமுடையவர் தாம் செய்த கர்மங்களால் விளையும் போகங்களை அனுபவிப்பதற்கிடமான ஸ்வர்க்காதி லோகங்களைப் பெறுதற்கு ஒரு வழி உண்டு. அது தூமாதிமார்க்கமென்று கூறப்படும். மோக்ஷலோக

மான வைகுண்டம் போவதற்கு ஓர் வழி உண்டு. அது அர்ச்சிராதி மார்க்கமெனப்படும். தூமாதிமார்க்கம் அவரவர் செய்த கர்மங்களுக்குத் தகுந்த பலன்களை அனுபவிக்குமிடமான ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் போகும் வழி. கர்மங்களைத் துறந்து ப்ராக்ருதி ஸம்பந்த மற்று அப்ராக்ருதமான திவ்யமங்களவிக்ரஹமுடைய வராகி பகவானை அனுபவிக்கும் நித்யர்களும் முக்தர்களும் இருக்குமிடமாகிய வைகுண்ட லோகத்திற்குப் போகும் வழி அர்ச்சிராதிமார்க்கம். தூமாதி மார்க்கத்தினால் ஸ்வர்க்காதி லோகங்களைப் பெறுதற்கு யாகாதி கர்மங்கள் ஸாதனம் (உபாயம்). அர்ச்சிராதி மார்க்கத்தினால் வைகுண்டலோகம் போவதற்கு ஸாதனம் பரம புருஷனைப் பணிகையே. ஜீவனுக்கு யாகாதி கர்மங்களைச் செய்கை பரமபுருஷனைப் பணிகை ஆகிய இவ்விரண்டு உபாயங்களிலும் திறமை (அதிகாரம்) உள்ளதே. ஆயினும் அவனவன் ருசிக்குத் தகுந்தபடி அந்தந்த உபாயத்தில் முயற்சி கொள்வான். பரமபுருஷன் இந்த ப்ரபஞ்சங்களை ஸ்ருஷ்டிக்க முயன்று முதலில் அண்டத்தைப் படைக்கத் தொடங்கி விராட்புருஷனென்றும் அநிருத்தனென்றும் பேர்பூண்டு ப்ரபஞ்சத்திற்கு உபாதானகாரணமும் தனக்குச் சரீரமாயிருப்பதுமாகிய ப்ரக்ருதியினின்று மஹத்து அஹங்காரம் சப்ததன்மாத்ரம் ஸ்பர்ஶதன்மாத்ரம் ரூபதன்மாத்ரம் ரஸதன்மாத்ரம் கந்ததன்மாத்ரம் என்கிற ஐந்து தன்மாத்ரங்களும் ஐந்து பூதங்களும் ஆகிய இவற்றைப் படைத்து [1] ஸப்தீகரணமென்னும் க்ரமத்தில் இவற்றை ஒன்றோடொன்று கலந்து அண்டத்தைப் படைத்துத் தானும், ஐந்து பூதங்கள்

1. ஆவது பக்கத்தில் அடிக்குறிப்பில் இது விசதமாகக் கூறப்பட்டது.

பதினொரு இந்த்ரியங்கள் ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் ஆகிய இவைகளால் தேவமனுஷ்யாதி ரூபமான ப்ரபஞ்சத்தைப் படைக்க முயன்று அந்த அண்டத்திற்குள் அவற்றைப் படைப்பதற்குரிய உருவத்துடன் உண்டாகி, ஸூர்யன், குடம் முதலிய வஸ்துக்களில் தன் கிரணங்களால் உள் புகுந்து அதில் உள்ளடங்காமல் வெளியிலும் நிறைந்திருப்பதுபோல், அவ்வண்டத்திற்குள்ளடங்காமல் அதற்கு வெளியிலும் நிறைந்து நின்றான். அப்பால் மிகுந்த மஹிமை அமைந்த இந்த விராட்புருஷனுடைய நாபிகமலத்தினின்று நான்முகனாகிய நான் உண்டானேன். அப்பொழுது எனக்கு அந்தப் பரமபுருஷனுடைய அவயவங்கள் தவிர மற்ற யாகத்திற்கு வேண்டிய கருவிகள் எவையும் புலப்படவில்லை. அனந்தரம் அந்தப் புருஷனுடைய அவயவங்களில் யாகத்திற்கு வேண்டும் கருவிகள் உண்டாயின. அழகிய பசுக்களும் யூபஸ்தம்பம் முதலியவற்றிற்கு உபயோகப்படக்கூடிய வ்ருக்ஷங்களும் இந்த யாகபூமியும் பலவகைக் குணங்கள் அமைந்த வஸந்தம் முதலிய காலமும் புரோடாசம் முதலிய வஸ்துக்களும் அதற்கு வேண்டிய நெல்லு முதலிய ஓஷதிகளும் நெய் முதலியதும் ஸோமரஸம் முதலிய ரஸமும் ஸ்வர்ணம் முதலிய லோஹமும் கபாலம் முதலியவற்றிற்கு வேண்டிய மண்ணும் ஜலமும் ருக்கு யஜுஸ்ஸாம ஸாமம் என்கிற வேதங்களும் சாதுர்ஹோத்ரமந்த்ரங்களால் வெளியிடப்படுகிற கர்மமும், நல்லோர்களிற் சிறந்தவனே! நாரதா! ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களும் ஸ்வாஹாகாரம் முதலிய மந்த்ரங்களும் தக்ஷிணைகளும் பால் பருகியிருப்பது முதலிய வ்ரதங்களும், தேவதைகளின் வரிசையும், ப்ரயோக விதியும், ஸங்கல்பமும், க்ரியாகலாபமும்

விஷ்ணுக்ரமம் முதலிய கதிகளும், தேவதாத்யானங்களும் செய்ய வேண்டிய கார்யங்களில் த்வரையாகிற ப்ரத்தையும், செய்யுங் கார்யங்களில் வருங்குறைகளுக்குரிய ப்ராயச்சித்தங்களும் செய்த கார்யங்களை தேவதையிடத்தில் ஸமர்ப்பித்தலும் ஆகிய இந்த யாக ஸம்பாரங்களை யெல்லாம் நான் அந்தப் பரமபுருஷனுடைய அவயவங்களால் ஸம்பாதித்துக்கொண்டேன். இங்ஙனம் பரமபுருஷனுடைய அவயவங்களால் யாகத்திற்குவேண்டிய கருவிகளை யெல்லாம ஸித்தப்படுத்திக்கொண்டநான், அத்தகைய ஸம்பாரங்களெல்லாம் அமையப்பெற்ற யாகத்தினுல் அந்தப் பரமபுருஷனை ஆராதித்தேன். அப்பால் உனது உடன் பிறந்தவர்களாகிய மரீசி முதலிய இந்த ஒன்பது ப்ரஜாபதிகளும் மிகுந்த மனவூக்கத்துடன் இந்த்ராதி உருவத்தினுல் கண்ணுக்குப் புலப்படுகின்றவனும் இயற்கையில் கண்ணுக்குப் புலப்படாதவனுமாகிய பரமபுருஷனை யாகங்களால் பூஜித்தார்கள். அதன் பிறகு மனுக்களும் தந்தமக்குரிய காலத்தில் யாகங்களால் எங்கும் நிறைந்தவனுகிய பரமபுருஷனைப் பூஜித்தார்கள். அத்தகையதான இந்த ப்ரபஞ்சமெல்லாம் நாராயணனெனப்படுகிற பகவானிடத்தில் நிலைபெற்றிருக்கின்றது. அவன் இந்த ப்ரபஞ்சம் முழுவதிலும் உட்புகுந்து இதைத் தரித்துக் கொண்டிருக்கின்றான். இயற்கையில் ஸத்வாதி குணங்கள் எவையுமில்லாதவனாயினும் மாயையினுல் பல குணங்களைக் கைப்பற்றி ஸ்ருஷ்டிக்கு முதலில் எனக்கு அந்தராத்மாவான அந்தப் பரமாத்மாவால் தூண்டப்பட்டவனுகி இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் நான் படைக்கின்றேன். ருத்ரன் அந்தப் பரமபுருஷனுக்கு உட்பட்டு இந்த ப்ரபஞ்சத்தை ஸம்ஹரிக்கின்றான். அந்த பகவான் தானே விஷ்ணுவாக அவதரித்து இந்த ப்ரபஞ்சத்தைப் பாதுகாத்து வரு

கின்றான். ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை ப்ரஹ்ம ருத்ரர்களுக்கு அந்தர்யாமியாயிருந்தும், பாதுகாத்தலைத் தானேயாகவும் அந்தப் பரமபுருஷனே நடத்துகிறான். இங்ஙனம் படைப்பது காப்பது கெடுப்பது ஆகிய இம் மூன்று செயல்களையும் நிறைவேற்றுந்திறமைகளாகிற மூன்று சக்திகள் அமைந்தவன் அவனொருவனே. அப்பனே! நீ இந்த ப்ரபஞ்சத்தைப் பற்றி என்னென்ன வினவினையோ, அந்தக் கேள்விகளுக்கெல்லாம் உனக்கு இங்ஙனம் மறுமொழி கூறினேன். ஆகையால் சேதநாசேதன ஸ்வரூபமாகிய ப்ரபஞ்சம் முழுவதிலும் எதையும் பகவானைக் காட்டிலும் வேறுபட்டதாக நினைக்கலாகாது. (அத்தகைய பரமபுருஷனை அறியாமையால் நீ என்னையே அனைத்திற்கும் மேலாக நினைத்தனை. எனக்கும் அவனே ப்ரபு. அவனே எனக்கு அந்தராத்மாவாயிருந்து என்னைத் தூண்டுகிறான்). எனது வாக்கு பொய்யாகிறதில்லை. என் மனத்தின் போக்கும் பொய்யாயிராது. எனது இந்த்ரியங்கள் கெட்ட வழியில் போகிறதில்லை. இதற்கெல்லாம் காரணம், ஓ நாரதனே! சொல்லுகிறேன்; கேள். நான் ஆசையுற்ற மனத்துடன் பகவானை த்யானித்துக்கொண்டிருக்கையே. ஆகையால் என் வாக்கு மனம் இந்த்ரியங்கள் ஆகிய இவற்றின் போக்குகள் உண்மையாகவே இருக்கின்றனவன்றி எப்பொழுதும் வேறுவிதமாய் மாறுகிறதில்லை. இதெல்லாம் பகவானுடைய அனுக்ரஹத்தினாலன்றி என் சக்தியாலன்று. வேதங்களை ஓதி உணர்ந்தவனும் பலதவங்கள் செய்தவனும் மரீசி முதலிய ப்ரஜாபதிகளால் வணங்கப்பெற்றவனும் அவர்களுக்கு ப்ரபுவும் பரமாத்மாவினிடத்தினின்று உண்டானவனும் அவனது அருளால் ஜ்ஞானம் உண்டாகப் பெற்றவனுமாகிய நான் மனஆக்

கத்துடன் தடையில்லாத யோகமார்க்கத்தில் நிலை நின்றும், தனது மாயையின் மஹிமையால் பிறர்க்கு உள்ளபடி தோற்றாத அந்தப் பரமாத்மாவை உண்மையாக அறியப் பெற்றிலேன். ஆகையால் சரணம் அடைந்தவர்களின் ஸம்ஸாரபந்தத்தை ஒழிப்பதும் மங்களங்களுக்கு இருப்பிடமும் நன்கு பணியத்தகுந்ததும் வாயுவைப்போல் க்ரஹிக்க முடியாததுமாகிய அவனது பாதாரவிந்தத்தை வெறுமனே பணிந்து நின்றேன். இங்ஙனம் அவனிடத்தினின்று பிறந்து அவனுடைய அருளால் அறிவு நேரப்பெற்ற நான்முகனாகிய நானே அவனை அறிய முடியாதிருப்பேனாயின், மற்ற ஜீவாத்மாக்கள் அவனை எந்தக் காரணத்தினால் அறியவல்லராவார்கள்? நானும் அந்தப் பரமாத்மாவின் உண்மையான கதியை அறிய வல்லனல்லேன். ஸனகாதிகளான நீங்களும் அங்ஙனமே அவனது உண்மையை அறியவல்லரல்லீர். மஹாயோகியாகிய வாமதேவரிஷியும் சங்கரனும் அவனது உண்மையை அறியவல்லரல்லர். இப்படி ஜ்ஞானிகர்களாகிய நாமே தடுமாற்ற முறுவோமாயின், மற்ற தேவதைகள் அவனை எங்ஙனம் அறிவார்கள்? நாம் அந்த பகவானுடைய மாயையால் மதி மயங்கப் பெற்றவராகையால் அவனது உண்மையை அறிய நமக்குத் தரமன்று. அவனால் நிர்மிக்கப்பட்ட அசேதனமான இந்தச் சரீரத்தை ஆத்மாவோடொத்ததாகவே நினைக்கின்றோம். நாம் ஆத்மாவை தேஹத்தின் உருவமுடையதாகவே ப்ரமிக்கின்றோம். தேஹத்தையும் ஆத்மாவையும் பிரித்தறியாத நமக்குப் பரமாத்மாவை அறிதல் எங்ஙனம் நேரும்? 'ஆனால் அவனுடைய மாயையைக் கடக்க என்ன உபாயம்?' என்கிறாயோ சொல்லுகிறேன் கேள். என்னை முதலாகக் கொண்ட அனைவரும் அந்த பகவானுடைய அவதார சரித்ரங்களைப் பாடிக்

கடைத்தேறவேண்டுமேயன்றி, அவனை உள்ளபடி அறிந்து உஜ்ஜீவிக்க முடியாது. அவனுடைய அவதாரசரித்ரங்களை பக்தியுடன் பாடிக்கொண்டிருப்போமாயின், அவ்வளவில் அவனுடைய மாயையை வெல்லலாமன்றி வேறு உபாயமில்லை. அத்தகைய பகவானுக்கு நமஸ்காரம். ஜகத்திற்கெல்லாம் காரணமாகிய பரமபுருஷன் கல்பந்தோறும் இந்த ஜகத்தின் க்ஷேமத்திற்காகத் தன்னிடத்தில் தன்னால் தானே தன்னைப்படைப்பதும் கெடுப்பதும் காப்பதுமாயிருப்பான். (பிறனுடைய தூண்டுதலும் ஸஹாயமுமின்றி அந்தப் பரமபுருஷன் கல்பந்தோறும் ஜகத்தின் க்ஷேமத்திற்காக ராம க்ருஷ்ணாதி அவதாரங்களைச் செய்கின்றான்) பரமாத்மா புண்யபாபரூபமான கர்மங்களற்றவன்; ஜ்ஞானமே உருவமாகப் பெற்றவன்; தனக்குத் தான் தோற்றுந் தன்மையன்; மற்றொரு பொருளையும் எதிர்பாராமல் நிலைநின்றிருப்பவன்; ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் விகாரமில்லாதவன்; விருப்பங்களெல்லாம் கைகூடப்பெற்றவன்; ஸத்வாதி குணங்களால் தீண்டப்பெறாதவன்; பிறத்தல் சாதல் ஆகிய இவை என்றுமில்லாதவன்; ஆனது பற்றியே காலத்திற்குட்படாமல் நித்யமாயிருப்பவன்; தன்னோடொத்ததும் தனக்கு மேற்பட்டதுமாகிய வஸ்து எதுவும் இல்லாதவன். அறிஞனாகிய நாரதனே! மனத்தை அடக்கி இந்த்ரியங்களை வென்று வாஸனையை அறுத்து நிலைபெற்ற பேரறிஞராகிய பண்டிதர்கள் அத்தகைய பரமாத்மாவின் ஸ்வரூபத்தை ந்யாயத்திற்கு இணங்கின ஊஹங்களால் சேதனாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமென்று தெரிந்துகொள்கின்றார்கள். ந்யாயத்திற் கிணங்காத கெட்டயுக்திகளால் அந்தப்பரமாத்மஸ்வரூபத்தை உணரப்புகுந்து உபத்ரவப்படுத்துவார்களாயின், அது அவர்களுக்குத் தெரியாமல் மறை

யும். இனி அந்தப்பரமபுருஷனுடைய அவதாரங்களைச் சொல்லுகிறேன் கேள். விராட் புருஷன் அந்தப் பரமாத்மாவின் முதல் அவதாரம். காலம் ப்ரக்ருதியின் பரிணமஸ்வபாவம் சேதனன் அசேதனம் ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள த்ரவ்யம் பூமி முதலிய ப்ரக்ருதியின் விக்ருதிகள் ஸத்வாதி குணங்கள் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்கள் ஆகாயம் ஸ்வர்க்கம் ஸ்தாவரம் ஜங்கமம் ஆகிய இவைகளெல்லாம் எல்லையில்லாத மஹிமை அமைந்த அந்த விராட் புருஷனுடைய சரீரமே. ஆயிரஞ் சொல்லி என்? சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். ப்ரஹ்மாவாகிய நானும் ருத்ரனும் விஷ்ணுவும் தக்ஷர் முதலிய இந்த ப்ரஜாபதிகளும் உன்னை முதலாகவுடைய மஹரிஷிகளும் ஸ்வர்க்கலோகத்தை ஆள்கின்ற தேவதைகளும் பக்ஷிஸ்ரேஷ்டர்களும் பூலோகத்தைப் பாதுகாத்து வரும் மன்னவர் தலைவரும் பாதாள லோகத்தை ஆள்பவர்களும் கந்தர்வர் வித்யாதரர் சாரணர் ஆகிய இவர்களில் தலைமையுள்ளவரும் யக்ஷர் ராக்ஷஸர் உரகர் யானைகள் இவர்களில் சிறந்தவரும் ரிஷிகளில் மேன்மையுடையவரும் பித்ருக்களில் முக்யர்களும் திதிபுத்ரர்களில் தலைமையுடையவரும் ஸித்த ஸ்ரேஷ்டர்களும் அஸுரஸ்ரேஷ்டர்களும் ப்ரேதம் பிசாசம் பூதம் கூஸ்மாண்ட பூதம் ஜலஜந்து ம்ருகம் பசுக்கள் ஆகிய இவற்றில் சிறப்புற்றவைகளும் அந்த விராட்புருஷனுடைய விபூதியே. இது தான் அதிகமே. இன்னம் சுருக்கமாகச் சொல்லுகிறேன். கேட்பாயாக. உலகத்தில் ஐஸ்வர்யமுடையதும், தேஜஸ்ஸையுடையதும், உத்ஸாஹமுடையதும், வேகமுடையதும், தைர்யமுடையதும், பலமுடையதும், பொறுமையுடையதும், சோபையுடையதும், லஜ்ஜையுடையதும், விபூதியுடையதும் தனக்கு உட்பட்டிருக்கப் பெற்றதும்), சிறந்த புத்தி

யுடையதும், ஆச்சர்யமாயிருப்பதும் எது எது உண்டோ அதுவெல்லாம், கர்மத்தைப் பற்றியல்லாமல் கேவலம் தனது ஸங்கல்பத்தினால் திவ்ய மங்கள விக்ரஹங்களைக் கொள்ளும் பகவானாகிய விராட் புருஷனுடைய விபூதியே. இத்தகைய உருவமுடைய விராட்புருஷன் முதலவதாரம். மற்றை அவதாரங்களுக்கு முடிவில்லாமையால் அவற்றில் ப்ரஸித்தமான அவதாரங்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. பாபகதைகளைக் கேட்பதனால் செவிகளுக்குண்டான அழுக்குகளை யெல்லாம் போக்குமவைகளும் மிக இனியவைகளும் எல்லையில்லாத கல்யாண குணங்களையுடைய பரமபுருஷன் லீலைக்காகக் கொண்டவைகளுமான அவதாரங்களில் எவ்வெவை முக்யாவதாரங்களென்று ரிஷிகள் சொல்லுகிறார்களோ, அறிஞனே! அவற்றை, நான் உனக்குச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஆறாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ப்ரஹ்மதேவன் நாரதனுக்கு பகவானுடைய அவதாரங்களைக் கூறுதல். }

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான் :—அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடைய பகவான் பூமண்டலத்தை உத்தரிக்கும் பொருட்டு முயன்று ஸமஸ்த யாகஸ்வரூபமான வராஹ உருவத்தைக் கொண்டு மஹா ஸமுத்ரத்தினிடையில் வந்தவனும் ஹிரண்யாக்ஷனென்று ப்ரஸித்தி பெற்றவனும் திதியின் முதற்பிள்ளையுமாகிய அஸுரனை, இந்த்ரன வஜ்ராயுதத்தினால் பர்வதத்தைப் பிளப்பது போல், தனது கோரைப்பல்லினால் பிளந்தான். பிறகு ருசி யென்னும் ப்ரஜாபதிக்கு ஆகூதியென்னும் பார்யையிடத்தில் ஸுயஜ்ஞனென்னும் பிள்ளையாகப் பிறந்தான். அப்பால் அவன் தனது பார்யையாகிய தக்ஷிணை யென்பவளிடத்தில், இந்த்ரியங்

களை அடக்குகையாகிற யமமென்னும் குணமுடைய வராகையால் யமரென்னும் பேருடைய தேவதைகளைப் பிள்ளையாக பெற்றான். அவன் இந்த்ரனாகி உலகங்களின் மனவருத்தங்களைப் போக்கினானாகையால், முன்பு ஸுயஜ்ஞனென்னும் பேருடையவனாயினும் பிறகு பாட்டனாகிய ஸ்வாயம்புவமனுவால் ஹரியென்று கூறப்பெற்றான். இங்ஙனம் பகவான் ஸுயஜ்ஞனாக அவதரித்து தேவதைகளைப் பிறப்பித்து மூன்று லோகங்களின் வருத்தங்களைப்போக்கினான். அந்தணனே! அனந்தரம் கர்த்தம ப்ரஜாபதிக்கு அவரது பார்யையாகிய தேவஹூதியிடத்தில் கபிலராகப் பிறந்தான். அந்தக் கபிலருடன் ஒன்பது பெண்பிள்ளைகளும் பிறந்தார்கள். அந்தக் கபிலர் தமது மாதாவான தேவஹூதிக்கு ஆத்மஜ்ஞானத்தை (மோக்ஷமார்க்கத்தை) உபதேசித்தார். அவளும், ஆத்மாவை அழுக்கடையச் செய்வதும் இந்த தேஹத்திலுண்டாவதும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் விளைவதுமாகிய மனப்பற்றாகிற அழுக்கைத் துறந்து அந்தக் கபிலர் மொழிந்த கதியைப்பெற்றாள். அத்ரி முனிவர் புதல்வனை விரும்பித் தவம் புரிகையில், அதற்கு பகவான் ஸந்தோஷம் அடைந்து 'நான் என்னையே உனக்குப் புதல்வனாகக் கொடுத்தேன்' என்று மொழிந்தானாகையால், அந்த பகவான் அம்முனிவர்க்குப் புதல்வனாகப் பிறந்து தத்தனென்னும் பேர் பூண்டான். அத்ரியின்புதல்வனாகையால் ஆத்ரேயனென்னும்பேர்பெற்றான்; உலகமெங்கும் தத்தாத்ரேயரென்று ப்ரஸித்தி அடைந்தான். ஹைஹயர் முதலியவர் பலரும் அவரது பாதாரவிந்தங்களைப் பணிந்து அவற்றின் பராகங்களால் (தூள்களால்) தேஹம் பரிசுத்தமாகப்பெற்று அணிமாதி அஷ்டைஶ்வர்யங்களாகிற இஹலோக ஸித்தியையும் மோக்ஷமாகிற பரலோக ஸித்தியையும் பெற்றார்கள். இது உலக

மெங்கும் ப்ரஸித்தமே. நான் பலவகை லோகங்களைப் படைக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் பெருந்தவஞ் செய்தது பற்றி அந்த பகவான் முதலில் ஸனத்தென்னும் பேருடையவனாக அவதரித்தான். பிறகு ஸநந்தனன் ஸனந்தனன் ஸனகன் என்னும் இம்மூவரைப் பிறப்பித்தான். முன் கல்பத்தின் முடிவில் ஒருவரும் இல்லாமல் அனைவரும் அழிந்தமையால் அடுத்த கல்பத்தில் ஆத்மஸ்வரூபத்தின் உண்மையைச் சொல்லுவாரில்லாமையால் அதன் மர்யாதையே அழிந்திருந்தது. அதை அந்த பகவான் அங்ஙனம் ஸனத்தென்றும் ஸநந்தனனென்றும் ஸனந்தனனென்றும் ஸனகனென்றும் நான்கு அவதாரங்கள் செய்து உபதேசித்தான். அதைக் கேட்டமாத்ரத்தில் முனிவர்கள் பரமபுருஷனை மனத்தில் ஸாக்ஷாத்கரித்துப் பிறர்க்கும் உபதேசித்தார்கள். இதைக்குமாராவதார மென்பர்கள். அந்த பகவான் தர்மனென்பவனுக்கு அவனது பார்யையும் தக்ஷனது புதல்வியுமாகிய மூர்த்தியென்பவளிடத்தில் நாராயணனென்றும் நரனென்றும் இரண்டு உருவமாக அவதரித்தான். அவன் தவங்கள் செய்து உபாஸிக்கத் தகுந்த தெய்வம் தன்னைக்காட்டிலும் மேற்பட்டது மற்றொன்று மில்லாமல் தானே அனைவர்க்கும் உபாஸிக்கத் தகுந்தவனாயிருந்தும் பிறர்க்குச்செய்ய முடியாத பெருந்தவஞ்செய்தான். அவன் அங்ஙனம் தவஞ்செலுத்திக்கொண்டிருக்கும் பொழுது மன்மத ஸைன்யங்கள்போல் அனைவரையும் மதிமயக்கி வெல்லுந்திறமையுடையவரான அப்ஸர மடந்தையர் அவனை மதிமயக்கி வெல்லமுயன்று மன்மத ஸைன்யங்களான தமது லீலாவிலாஸங்களைத் தொடுத்து அவனை வசப்படுத்தப் பார்த்தும் வல்லராகவில்லை. ஓ நாரதனே! ஸமர்த்தர்களான ருத்ராதிகள் கோபம் நிறைந்த கண்ணோக்கத்தினால் காமனைக் கொ

ளுத்துகிறார்கள். அவர்கள், தம்மைக்கொளுத்துவதும் ஸஹிக்கமுடியாததுமான கோபத்தைக் கொளுத்த வல்லராகவில்லை. உலகத்தில் காமனை அடக்கி நீறுசெய்பவர்களும் உண்டேயன்றிக் கோபத்தை அடக்கியாள்பவர் அகப்படமாட்டார்கள். காமனைக் கொளுத்தினவர்களும் கோபத்திற்கு உட்பட்டு அவமதிக்கிடமாகின்றார்கள். ருத்ரன் காமனுக்கு உட்படாமல் அவனை நீறு செய்தானாயினும், கோபத்தினால் அவனைக் கொளுத்திவிட்டானல்லவா? அவன் காமத்தை ஜயித்தவனாயினும் கோபத்தை அடக்கவல்லனாகவில்லை. அப்படி வெல்லமுடியாத கோபமும் எந்த பகவானுடைய மனத்தில் ப்ரவேசிப்பதற்கு மிகுதியும் பயப்படுகின்றதோ, அப்படிப்பட்ட இந்த பகவானுடைய மனத்தில் காமம் எப்படி நுழைய வல்லதாகும்? காமத்தை ஜயித்தவர்களுக்கும் ஜயிக்கமுடியாதது கோபம். அதையும் ஜயித்தவனுக்குக் காமத்தை ஜயிப்பது ஒரு பொருளோ? உத்தானபாதனென்னும் ராஜனுடைய புதல்வனாகிய த்ருவனென்பவன் தனது தந்தையாகிய அம்மன்னவனருகில் சக்களத்தித் தாயான ஸுருசியென்பவள் க்ரூரமாய் மொழிந்த வார்த்தைகளாகிற பாணங்களால் அடிக்கப்பட்டு இளைஞனாயினும் அதைப் பொறுக்கமுடியாமல் தவஞ்செய்யும் பொருட்டு வனத்திற்குச் சென்றான். அங்ஙனம் வனத்திற்குச் சென்று தவஞ்செய்கின்ற த்ருவனுக்கு பகவான் அருள் செய்து ஶாஶ்வதமான ஓர் பதவியைக் கொடுத்தான். அந்த த்ருவனுடைய ஸ்தானத்திற்குக் கீழும் மேலுமுள்ள திவ்ய முனிவர்கள் அந்தப் பதவியின் மஹிமையை ஸ்தோத்ரஞ்செய்கின்றார்கள். இங்ஙனம் த்ருவனுக்குப் பதவி கொடுத்த அவதாரம் ஒன்று. அந்த பகவான் ரிஷிகளால் வேண்டப்பெற்று வேனனென்பவனுக்குப் பிள்ளையாகப்பிறந்து அவனைப் புத்தென்கிற

நரகத்தினின்று ரக்ஷித்தான். அந்த வேனன் துர்மார்க்கத்தில் முயன்று அந்தணர் தலைவரான முனிவர்களால் சாபம் இடப்பெற்று அதனால் பௌருஷமும் ஐஶ்வர்யமும் அழிந்து வருந்திக்கொண்டிருக்கையில், ரிஷிகள் பகவானை ப்ரார்த்தித்தார்கள். பகவானும் அந்த வேனனுக்குப் பிள்ளையாகப்பிறந்து அவன் செய்த பாபங்களுக்குப் பலனாகநேரக்கூடிய நரகத்தினின்று அவனைப் பாதுகாத்தான். அவன் ப்ருது சக்ரவர்த்தி யென்னும் பேர் பெற்றான். அந்த ப்ருது சக்ரவர்த்தி பூமியினின்று அன்னம் முதலிய பலவகை த்ரவ்யங்களைக் கறந்து ப்ரஜைகளுக்கு மஹோபகாரஞ் செய்தான். இது ஓரவதாரம். வேதங்கள் எவனுடைய ஸ்வரூபத்தைப் பரமஹம்ஸர்களான மஹாயோகிகளுக்கு மாத்ரமே அறியக்கூடியதென்று சொல்லுகின்றனவோ, அப்படிப்பட்ட பகவான் கபிலாதிகளைப்போல் தனது அம்சத்தினால், ஆக்னீத்ரனுடைய குமாரனாகிய நாபி யென்பவனுக்கு மேருதேவி யென்னும் பேருடைய ஸுதேவியிடத்தில் ருஷபனென்னும் புதல்வனாகப் பிறந்தான். அவன் ஒன்றுந்தெரியாத மூடன்போல் தோற்றியோகமார்க்கத்தை ஆசரித்தான். அவன் எல்லாம் தானே யென்னும்படி எங்கும் நிறைந்திருப்பவனாகையால் எல்லாவற்றிலும் பேசமில்லாத மதியுடையவனாயிருந்தான். அவன் தனது மஹிமையில் தான் நிலைநின்றிருப்பவனே யன்றித் தனது நிலைமைக்கு ஒருவனை எதிர்பார்ப்பவனல்லன். அவன் இந்த்ரியங்களெல்லாம் தன்னிஷ்டப்படி அடங்கப்பெற்றவனும் ஆனது பற்றியே சப்தாதிவிஷயங்களில் மனப்பற்றில்லாதவனுமாயிருந்தான். இது ருஷபாவதாரம். அந்த பகவானே நேராக முன்பு என்னுடைய யாகபூமியில் ஹயக்ரீவனாகத் தோன்றினான். அவன் பொன்னிற

முடையவனும் வேதஸ்வரூபனும் யாகங்களால் ஆராதிக்கத் தகுந்தவனும் ஸமஸ்த தேவதைகளுக்கும் உள்ளேயிருந்து நியமிப்பவனுமாயிருப்பவன். இந்த ஹயக்ரீவன் மூச்சு விடும்பொழுது இவனது மூக்கிலிருந்து பரிசுத்தங்களான வேதவாக்குக்கள் உண்டாயின. அந்த பகவான் ப்ரளய ஸமயத்தில் மத்ஸ்யமாக அவதரித்து எனது முகத்தினின்று நழுவின வேதமார்க்கங்களை எனக்குக் கொடுத்து மிகுதியும் பயங்கரமான அந்த ப்ரளயார்ணவத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். இவன், மேல்வரும் ஸ்ருஷ்டிக்கு வேண்டியவைகளும் பூமியின் விகுதியுமான த்ரவ்யங்களெல்லாம் உருவமாயிருக்கப்பெற்றவன். அன்றியும், இவன் ஸமஸ்த ஜீவ ஸமூஹங்களுக்கும் ஆதாரமுமாயிருப்பவன். இவன் மேல்வரப்போகிற வைவஸ்வதமனுவால் காணப்படுவான். க்ஷீரஸமுத்ரத்தில் அம்ருதம் பெறுவதற்காக தேவக்கூட்டத்தலைவரும் அஸுரக்கூட்டத்தலைவரும் கடைந்து கொண்டிருக்கையில் ஆதிதேவனாகிய பகவான் கூர்மத்தின் (ஆமையின்) உருவங்கொண்டு பின்பாகத்தினால் மந்தர பர்வதத்தைத் தரித்தான். அந்தக் கூர்மரூபியான பகவான் அப்பொழுது நித்ரையில் விருப்புற்றிருந்தான். (பகவானுக்கு நித்ரையாவது ப்ரஜைகளின் க்ஷேமத்தைச் சிந்தித்துக்கொண்டு உறங்குவதுபோல் சயனித்துக்கொண்டிருக்கையே. இல்லையாயின், ப்ராக்ருத ஜனங்களுக்கு விளையக்கூடிய தமோகுணத்தின் கார்யமாகிய நித்ரையானது அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹமுடையவனும் ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் தீண்டப்பெறாதவனுமாகிய பகவானுக்குப் பொருந்தாது). அப்பொழுது அவன் முதுகில் மந்தர பர்வதம் சுழன்று கொண்டிருக்கையில், அது அவனுக்குத் தினவு சொரிவது போல் ஹிதமாயிருந்ததேயன்றிச் சிறிதும் வருத்தம் விளைவிக்கவில்லை.

(ந்ருஸிம்ஹாவதாரம்.)

அந்த பகவான் ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகளுக்குண்டான பெரும் பயத்தைப் போக்குவதும் சுழலமிடுகின்ற புருவநெரிப்புகள் அமைந்து கோரைப் பற்களும் விளங்கப்பெற்று பயங்கரமான முகமுடையதுமாகிய ந்ருஸிம்ஹ உருவம் (நரன்கலந்த சிங்கத்தின் உருவம்) தரித்து, ஸமீபத்தில் எதிர்முகமாக வருகின்றவனும் கதையோடு கூடினவனும் அஸுரஶ்ரேஷ்டனுமாகிற ஹிரண்யகசிபுவைத் தொடைகளில் விழத்தள்ளி அவன் துடித்துக்கொண்டிருக்கையில், அவனை நகங்களால் பிளந்தான்.

(கஜேந்த்ரனைக்காத்த ஹரியென்னும் அவதாரம்.)

யானைக் கூட்டத்தில் தலைமையுடைய ஓர் சிறந்த யானையானது தாமரைக்குளத்தினிடையில் மிகுந்த பலமுடைய முதலையால் பாதத்தில் பிடியுண்டு வருந்தித்தாமரை மலரோடுகூடின துதிக்கையை உயரத் தூக்கிக் கொண்டு இங்ஙனம் முறையிட்டது. 'ஆதி புருஷனே! ஜகத்காரணவஸ்துவே! பரிசுத்தமான புகழுடையவனே! கேட்ட மாத்ரத்தில் மங்களத்தைக் கொடுக்கவல்ல நாமங்களையுடையவனே! இப்படிப்பட்ட நீ என்னைப்பாதுகாப்பாயாக' என்றது. அளவிடமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களை யுடையவனும் சக்ரத்தை ஆயுதமாகக் கொண்டவனும் தன்னைப் பற்றினருடைய துக்கங்களைப் போக்குமவனுமாகிய பகவான் அப்பொழுது அந்த கஜேந்த்ரத்தின் கூக்குரலைக்கேட்டுப் பக்ஷிராஜனாகிய கருடனுடைய புஜங்களில் ஏறிக்கொண்டு வந்து ஸுதர்ஶனமென்னும் பேர்பூண்ட தனது சக்ராயுதத்தினால்

அந்த முதலையின் வாயைப் பிளந்து தன்னைப் பாதுகாக்கும்படி வேண்டுகிற அந்த யானையின் துதிக்கையைப் பிடித்துக் கருணையால் அந்த முதலையினிடத்தினின்று விடுவித்தான்.

(வாமனவதாரம்.)

யஜ்ஞாதிபதியான (யாகங்களால் ஆராதிக்கப்படுபவனாகிய) பகவான் அதிதியின் புதல்வர்களான பன்னிரண்டு ஆதித்யர்களில் எல்லோர்க்கும் கடைசியில் பிறந்தவனாயினும் குணங்களால் அனைவர்க்கும் மூத்தவனாயிருந்தான். அவன் இவ்வுலகங்களையெல்லாம் தனது பாதத்தினால் இரண்டடி வைப்புக்களால் அளந்தான். அது எப்படியென்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. பலியென்னும் அஸுரன் இந்த்ரனை ஜயித்து மூன்று லோகங்களையும் தன் வசப்படுத்திக்கொண்டிருக்கையில், பகவான் வாமன உருவங்கொண்டு (ஓர் குறளுருவங்கொண்டு) அந்த பலி யாகஞ்செய்யும் ஸமயத்தில் யாகபூமியில் சென்று, மூன்றடியளவு பூமிவேண்டுமென்று யாசித்தான். அவன் அப்படியே அளந்துகொள்வாயென்கையில், பேருருவங்கொண்டு ஓரடியால் பூமியையெல்லாம் அளந்து ஓரடியால் ஆகாயம் முழுவதும் அளந்து மூன்றாவது அடிக்கு இடங் கொடுப்பாயென்றான். அவனும் தன் தலையைக் காண்பிக்கையில், பகவான் அவன் தலையில் பாதத்தையிட்டு அவனைப் பாதாளத்தில் அழுத்தி மூன்று லோகங்களையும் இந்த்ரனுக்கு மீட்டுக் கொடுத்தான். இங்ஙனம் மூன்றடிகளை யாசிக்கும் வ்யாஜத்தினால் பூமியையெல்லாம் கைப்பற்றினான். 'ஆனால் பரமபுருஷன் தான் ஸர்வேச்வரனாயிருந்தும் துர்ப்பலன் போல் ஏன் அப்படி செய்தான்' என்னில், தர்மமார்க்கத்தில் தவறாது நடப்பவனை

ஐச்வர்யத்தினின்று நழுவச் செய்யவேண்டுமாயின், எப்படிப்பட்ட வல்லவர்க்கும் யாசிப்பதை யொழிய மற்ற எவ்வழியாலும் அங்ஙனஞ் செய்யமுடியாது, ஆகையால் இங்ஙனஞ் செய்தான். 'ஆனால் யாசிப்பதனாலும அவனை அங்ஙனம் ஐச்வர்யத்தினின்று நழுவச் செய்வது யுக்தமன்றே' என்னில், சொல்லுகிறேன். கேட்பாயாக. பெரிய அடிவைப்புகள் அமைந்த பகவானுடைய பாதாரவிந்தங்களை அலம்புவதற்கு உபயோகப்பட்ட ஜலங்களைத் தன் தலையில் முழுவதும் படும்படி தரித்த மஹானுபாவனுக்கு தேவாதிபத்யம் (தேவதைகளுக்கு ப்ரபுவாயிருத்தல்) ஒரு பொருளோ? அது அவன் விரும்பத்தகுந்த ப்ரயோஜனமன்று. அந்த பலி ப்ரதிஜ்ஞைசெய்த கார்யத்தை யொழிய மற்ற எதையும் செய்ய விரும்பவில்லை. ஓ நாரதனே! அவன் பகவானுக்குத் தலைவணங்கி நமஸ்காரஞ் செய்து தன்னையே அவனுக்கு ஸமர்ப்பித்தான். சுக்ரன், பகவானுடைய உண்மையை அறிந்து பலியைப் பார்த்து வேண்டாமென்று தடைசெய்தும், அவன் தான் ப்ரதிஜ்ஞை செய்ததற்கு விபரீதமாகச் செய்ய விருப்பமுறவில்லை. மூன்றாவது அடியிடங் கொடுப்பதற்காகத் தன்னையே தலையால் ஸமர்ப்பித்தான். (ஆகையால் அவனை ஐச்வர்யத்தினின்று நழுவச்செய்தது, அவனுக்கு ப்ரியமும் ஹிதமும் செய்ததாமேயன்றி அப்ரியமும் அஹிதமும் செய்ததாகா.)

(ஹம்ஸாவதாரம்.)

ஓ நாரதா! நீ மிகுதியும் ஸ்னேஹம் வளர்ந்துவரப்பெற்று முழுவதும் வினவுகையில், பகவான் ஹம்ஸாவதாரஞ் செய்து (அன்னப் பறவையாகத் தோன்றி) கர்மயோகத்தையும், ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட

ஆத்மாக்களின் உண்மையை அறிவிப்பதான ஜ்ஞான யோகத்தையும் உனக்கு நன்றாக உபதேசித்தான். அந்த ஹம்ஸரூபியான பகவான் உபதேசித்த ஜ்ஞானத்தைக் கொண்டே அவ்வாஸுதேவனைச் சரணம் அடைந்த மஹானுபாவர்கள் அதை ஸுகமாக உணர்ந்து அனுஷ்டிக்கின்றார்கள்.

## அந்தந்த மன்வந்தரங்களிற் செய்யும் அவதாரங்கள்.

பகவான் அந்தந்த மன்வந்தரங்களில் அந்தந்த மனுக்களின் வம்சங்களைப் பாதுகாக்க முயன்று பத்துத் திசைகளிலும் எவர்க்கும் எதிர்க்க முடியாத தன் ப்ரதாபத்தினால் வளர்ந்து ஜ்வலிக்கின்ற தனது ஆஜ்ஞாரூபமான சக்ரத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றான். மற்றும், அவன் மூன்றாவதுலோகமாகிய ஸத்ய லோகம் வரையிலும் அழகான கீர்த்தியை நிரம்பச் செய்து கொண்டு அவ்வப்பொழுது செருக்குற்ற ராஜாக்களை தண்டித்துக்கொண்டிருக்கிறான்.

## (தன்வந்தரியவதாரம்.)

பகவான் உலகத்தில் தன்வந்தரியென்னும் பேர் பூண்டு அவதரித்துப் பெருப்பெரிய ரோகங்களால் வருந்துகின்ற மனிதர்களுடைய ரோகங்களைத் தனது நாமத்தைச் சொன்ன மாத்ரத்திலேயே போக்குகின்றான். அவன் தன்வந்தரி யென்று பெரும் புகழ் பெற்றான். புகழே ஒரு வடிவங் கொண்டு வந்ததோ என்னும்படி இருந்தான். மரணமில்லாத ஆயுளைக் கொடுக்குந் திறமையன். அவன் முன்பு யஜ்ஞத்தில் 'உனக்கு ஹவிர்ப்பாகம் இல்லை' யென்று அஸுரர்களால் தடுக்கப்பட்ட ஹவிர்ப்பாகத்தைப் பெற்றான். அவன் ஆயுர்வேதத்தையும் (வைத்யசாஸ்த்ரத்தையும்) உலகத்தில் வெளியிட்டான்.

பரசுராமாவதாரம்.

மஹானுபாவனாகிய இந்த பகவான் ப்ருகுவுக்குப் புதல்வனாக அவதரித்துப்பரசுராமனென்னும்பேர் பூண்டு எத்தகையர்க்கும் ஸஹிக்க முடியாத வீர்யமுடையவனாகி நீண்ட கூருடைய பரசுவினால் (கண்டக் கோடாலியால்) இருபத்தொரு தடவைகள் க்ஷத்ரிய குலத்தையெல்லாம் வேருடன் அறுத்தான். ஏனென்னில், அந்த க்ஷத்ரியர்கள் இயற்கையாகவே ஜன்மாந்தர கர்மத்தினால் மரணம் நேரப்பெற்றிருந்தது மாத்ரமேயன்றி, ப்ராஹ்மணர்களுக்கு த்ரோஹம் செய்வதும் வேதமார்க்கத்தை அழிப்பதுமாகி நரகதுக்கங்களை அனுபவிக்க வேண்டியவராயிருந்தார்கள். ஆகையால் அவன் தன் பரசுவினால் அவர்களை வேருடன் அறுத்தான்.

ஸ்ரீராமாவதாரம்.

ஸமஸ்த சேதனாசேதனங்களுக்கும் ப்ரபுவாகிய இந்த பகவான் என்னை அனுக்ரஹிப்பதில் ஸுமுகனாகி (நான் ராவணனுக்குக்கொடுத்த வரத்திற்கு விரோதம் வாராதபடி அழகிய முகமுடைய ஓர் மானிடனாக) பரதன் முதலிய அம்சங்களோடு இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்து, தந்தையாகிய தசரத சக்ரவர்த்தியின் ஆஜ்ஞையில் நிலைநின்று அன்பிற்கிடமான மனைவியாகிய ஸீதையோடும் அத்தகைய பின்றோன்றலாகிய லக்ஷ்மணனோடும் கூடி வனத்தில் புகுவான். இந்த ராமனிடத்தில் விரோதம் வைத்துக்கொண்டல்லவா பத்துத் தலையனாகிய ராவணன் பாழாவது? இந்த ராமன் த்ரிபுரத்தைக் கொளுத்த முயன்ற ருத்ரன்போல், சத்ரு பட்டணமாகிய லங்கையைக்கொளுத்த விரும்பி அவ்விடம் போக ஸமுத்ரராஜனை வழி கேட்கையில், அவன் வழிகொடாமையால், வெகு தூரத்தில் அகப்பட்டு தன்

மனத்துடன் தன்னையே சிந்தித்து வருந்துகின்ற ஸீதையை நினைத்துக்கொண்டு மனங்கலங்கி அந்த ஸமுத்ரராஜன்மேல் மிகுதியும் கோபங்கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று அத்தகைய கண்ணோக்கத்துடன் பாணங்களை விடுத்து அவனை எரிக்கையில், அவனும் பயந்து சரீரம் நடுங்கவும், மகரமீன்களும் ஸர்ப்பங்களும் முதலைகளும் தாபத்தைப் பொறுக்க முடியாமல் கூட்டங்கூட்டமாக வருந்தவும் பெற்று, உடனே இந்த ராமனுக்கு வழி கொடுப்பான். ராவணன் ஐராவதம் முதலிய திக்கஜங்களோடு சண்டை செய்யும் பொழுது அவற்றின் தந்தங்கள் தன் மார்பில் பட்டு முறிந்து பொடியாகி அந்தந்த திக்குக்களில் விழுந்திருக்கும் துணுக்கைளால் தான் செய்த திக்விஜயமெல்லாம் வெளியாகப் பெற்று 'எனக்கு நிகரான சூரன் எவன் இருக்கிறான்' என்னும் கர்வத்தினால் செய்யும் அட்டஹாஸங்களை இந்த ஸ்ரீராமன், தன் பார்யையாகிய ஸீதையை அபஹரித்தவனும் ஸைன்யத்தினிடையில் மேன்மையுடன் உலாவுகின்றவனுமாகிய அந்த ராவணனுடைய ப்ராணன்களோடுகூட வெகு சீக்ரத்தில் தன் தனுஸ்ஸினின்று கிளம்பிப் புறப்படுகின்ற பாணங்களால் அழிக்கப்போகின்றான்.

## ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம்.

அஸுரஸ்வபாவத்துடன் பிறந்த துஷ்டராஜாக்களின் ஸைன்ய பாரங்களால் பீடிக்கப்பட்ட பூமியின் பாரமாகிற வருத்தத்தைப் போக்கும் பொருட்டு, வெளுப்பும் கறுப்புமான தலைமயிர்களையுடைய பகவான் தனது அம்சமாகிய பலராமனுடன் ஜனங்களால் அறிய முடியாத கதியுடையவனாகித் தனது மஹிமையை வெளியிடும்படியான பல சரித்ரங்களை நடத்தப் போகின்றான்.

அவன் குழந்தையாயிருக்கும் பொழுதே பூதனையின் ப்ராணன்களைப் போக்குவதும், மூன்று மாதங்கள் சென்றவனாகிச் சகடாஸுரனை உதைத்தெறிவதும், முழந்தாள்களால் தவழ்ந்து போகும்பொழுது ஆகாயத்தை அளாவின மருதமரங்களை வேரோடு விழுந்தள்ளுவதும் செய்யப்போகிறான். இவையெல்லாம் திவ்யசரித்ரங்களே. கேவல மனுஷ்யரால் செய்யக்கூடியவையல்ல. மற்றும் அவன் இடைச்சேரியில் வஸித்திருக்கும்பொழுது காளியமடுவில் விஷஜலத்தைப் பருகின பசுக்களையும் அவற்றை மேய்க்கும் இடையர்களையும் கருணையமைந்த கண்ணோக்கமாகிற அம்ருதத்தைப் பெய்து பிழைப்பிப்பதும், யமுனையில் விளையாடிக்கொண்டிருந்து அதை விஷமில்லாமல் சுத்திசெய்யும் பொருட்டு மிகுந்த விஷவீர்யத்தினால் துடிக்கின்ற நாக்குக்களையுடைய காளியனென்னும் ஸர்ப்பத்தை ஓட்டுவிப்பதுஞ் செய்யப்போகிறான். இவையும் திவ்யசரித்ரங்களே. மற்றொரு ஸமயத்தில் வனத்தில் மரங்கள் பட்டுப்போய் உலர்ந்திருக்கையால் காட்டுத் தீ பற்றி எரிகின்றபோது, அந்தக் காட்டுத்தீயில் அகப்பட்டு நிச்சயமாகவே மரண காலம் நேரப்பெற்றதும் உடம்பு தெரியாமல் உறங்குவதுமாகிய இடைச்சேரி முழுவதும் திடீலென்று கண்விழித்துக்கொண்டு காட்டுத்தீயைப் பார்த்து பயந்து வருந்துகையில், எல்லோரையும் கண்ணை மூடிக்கொள்ளச் செய்து, பிறரால் இந்தகையதென்று அறிய முடியாத மஹாவீர்யமுடைய இந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் பலராமனுடன் அந்தக் காட்டுத்தீயைப் பானஞ்செய்து இடைச்சேரியை அவ்வாபத்தினின்று கரையேற்றப்போகிறான். இந்தச்செயல் அமானுஷமேயன்றி மானிடவரால் செய்யக்கூடியதன்று. மற்றும், இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாயாகிய யசோதை இவனைக் கட்டும்பொருட்டு

எத்தனை கயிறுகளைக் கொண்டுவந்தபோதிலும் அவை யெல்லாம் இவனுடைய இடைக்குப் போதாமலே யிருக்கப்போகின்றன. மற்றும், இவன் கொட்டாவி விடும்பொழுது இவனுடைய வாயில் பதினன்கு லோகங்களையும் கண்டு இடைச்சியான யசோதை மனத்தில் சங்கை உண்டாகப்பெற்றுப் பின்பு இது இவனுடைய ஐஶ்வர்யமென்று தெரிந்துகொள்ளப் போகின்றாள். இதுவும் திவ்ய சரித்ரமேயன்றி மானிடச்செயலன்று. அன்றியும் இவன் தனது தந்தையாகிய நந்தனை வருணனுடைய பாசத்தினின்றுண்டான பயத்தினின்று விடுவிக்கப் போகிறான். மயனது புதல்வனாகிய வ்யோமாஸுரனால் குகைகளில் கொண்டுபோய் அடைத்து மறைக்கப்பட்ட இடையர்களையும் அவ்வாபத்தினின்று விடுவிக்கப்போகிறான். அன்றியும், பகலில் பலவகை வ்யாபாரங்களால் இளைப்புற்று ராத்ரியில் உடம்பு தெரியாமல் படுத்துறங்குகின்ற கோகுலஜனங்களை யெல்லாம் ஒன்றையும் எதிர்பாராமல் கருணைகூருந் தன்மையனாகையால் எல்லையில்லாத ஆநந்தத்தைக் கொடுப்பதும் என்றும் அழியாததுமாகிய வைகுண்ட லோகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கப்போகின்றான். என்ன ஆச்சர்யம். இப்படியும் ஒருவன் செய்வதே. ஒருக்கால், இந்த்ரனுக்காக ப்ரதிவர்ஷம் நடத்திவருவதாகிய ஓர் யாகத்தை இடையர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வசனத்தின்படி நிறுத்தித் தமக்குப் புல் ஜலம் முதலியவற்றால் உதவிசெய்கிற கோவர்த்தன பர்வதத்தைக் குறித்து யாகம் செய்கையில், அதைத் தடுக்கும்பொருட்டு இந்த்ரன் பெருமழை பெய்ய, ஏழுவயதுள்ள பாலனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கருணைகூர்ந்து பசுக்களைப் பாதுகாக்க விரும்பி ஒற்றைக்கையால் சிறிதும் வருத்தமில்லாமல், பாப மற்றவனே! நாரதா! அவ லீலையாகவே அந்த கோவர்த்தன பர்வதத்தை எழு

நாள் வரையிலும் நாய்க்குடையைப்போல் தரிக்கப்போகின்றான். மற்றொரு ஸமயத்தில் சந்த்ரனுடைய கிரணங்களால் வெளுத்து அழகாயிருக்கின்ற ராத்ரியில் அரண்யத்தில் வாஸஞ்செய்ய விருப்பமுற்று விளையாடிக்கொண்டே செவிக்கினிய பதங்களையுடையதும் மிக நீண்டதும் அற்புதமான ஆலாபனைகள் அமைந்ததுமாகிய கானத்தினால் கோபஸ்த்ரீகளுக்குக் காமவிகாரமாகிற நோயை வளரச்செய்து அவ்வருத்தம் தீரும்படி அவர்களுடன் ஸ்ரீக்ருஷ்ணன் க்ரீடித்துக் கொண்டிருக்கையில், குபேரனுடைய ப்ருத்யனாகிய சங்கசூடனென்பவன் அந்த கோபஸ்த்ரீகளைத் திருடிக்கொண்டு போவது கண்டு, அவன் தலையை அறுக்கப்போகிறான். மற்றும், ப்ரலம்பன் தேனுகன் பகன் கேசி அரிஷ்டன் மல்லர் குவலயாபீடம் கம்ஸன் யவனன் நரகன் பௌண்ட்ரகன் முதலியவர்களும், ஸால்வன் த்விவிதன் பல்வலன் தந்தவக்த்ரன் ஏழு எருதுகள் சம்பரன் விதூரதன் ருக்மி முதலான மற்றவர்களும், கையில் வில்லேந்தினவர்களும் யுத்தத்தைப்புகழுந் தன்மையர்களுமாகிய கம்போஜன் மத்ஸ்யன் குரு கேகயன் ஸஞ்சயன் முதலாக யுத்தத்தில் முயன்றவர் எவரெவர் உண்டோ அவர்களும் ஸ்ரீக்ருஷ்ணனால் அடியுண்டு மாண்டு ப்ராக்ருதமான இந்த்ரியங்களுக்குத் தோற்றாததும் அழிவில்லாததும் அவனுடைய இருப்பிடமுமாகிய வைகுண்டலோகம் பெறுவார்கள். ஆனால் ப்ரலம்பாதிகளை பலராமனும் கம்போஜாதிகளை பீமார்ஜுனாதிகளும் சம்பரனை ப்ரத்யும்னனும் பாணனை முசுகுந்தனும் வதிக்கப்போகிறார்களேயன்றி ஸ்ரீக்ருஷ்ணன் தானே வதிக்கப்போகிறதில்லை. ஆயினும், பலராமன் பீமஸேனன் அர்ஜுனன் முதலியவர்களை வ்யாஜமாகக் கொண்டு அவர்களை வதித்தவனும் இந்த ஸ்ரீக்ருஷ்ணனேயன்றி மற்றெவனுமல்லன். வ்ருஷபங்களை

மையும் கொழுப்படக்கப் போகிறானேயன்றி வதிக்கப் போகிறதில்லையாயினும், அவைகள் மரணம் அடையும் பொழுது அவனுடைய ஸ்பர்சம்பெற்ற மஹிமையால் அவனுடைய லோகத்தையே பெறப்போகின்றன. இந் தக்கார்யங்களெல்லாம் திவ்யசரித்ரங்களேயன்றி மானி டவர் செய்யக் கூடியவையல்ல.

வ்யாஸாவதாரம்.

மானிடவர்கள் காலக்ரமத்தில் மதி குறையப்பெற்ற வர்களும் ஆயுள் க்ஷீணிக்கப் பெற்றவர்களுமா யிருப்ப தைக்கண்டு, தான் வெளியிட்ட வேதசாஸ்த்ரம் கரையற் றிருப்பதையும் அறியமுடியா திருப்பதையும் ஆலோ சித்து அந்த பகவான் ஸத்யவதியிடத்தில் அவதரித்து யுகத்திற்குத் தகுந்தபடி வேதமாகிற வ்ருக்ஷத்தைக் கிளைகிளையாகப் பிரித்து ஜனங்கள் ஸுகமாக ஓதி உண ரும்படி செய்யப்போகிறான்.

புத்தாவதாரம்.

தேவத்வேஷிகளான அஸுரர்கள், வைதிகமார்க் கத்தில் மிகுந்த மனவூக்கத்துடன் நிலைநின்று, மயன் நிர் மித்துக் கொடுத்தவைகளும் கண்டறிய முடியாத மஹா வேகமுடையவைகளுமான பட்டணங்களால் உலகங்களை நாசஞ் செய்கையில், அவர்களை மதி மயக்கி, வஞ்சிப்ப தான பாஷண்டவேஷம் பூண்டு தர்மாபாஸமாகிய (முக்ய தர்மமல்லாத) பாஷண்டதர்மத்தை அவர்களுக்கு அதிக மாக உபதேசிக்கப் போகிறான்.

கல்கி அவதாரம்.

எப்பொழுது ஸத்புருஷர்களின் க்ருஹங்களிலும் ஹரிகதைகள் (தன்பேரைச் சொன்னவர்களின் பாபங் களைப்போக்குந் தன்மையுள்ள பகவானுடையகதைகள்)

நடக்காமற்போகுமோ, எப்பொழுது ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களும் பாஷண்டதர்மத்தை அவலம்பித்துப் பாழடைவார்களோ, மற்றும், எப்பொழுது சூத்ரர்களே ராஜாக்களாயிருப்பார்களோ, அன்றியும்,ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களின க்ருஹங்களில் 'ஸ்வாஹா ஸ்வதா வஷட்' என்னும் சப்தங்கள் நடக்காவோ, (தேவகார்யங்களும் பித்ருகார்யங்களும் நடக்காமல் பாழாயிருக்குமோ), அப்படிப்பட்ட கலியுகத்தின் முடிவில் பகவான் கலியை அடக்கும் பொருட்டு அவதரிக்கப் போகின்ருன்.

ஸ்ருஷ்டி விஷயத்தில் பகவானுக்கு ப்ரஹ்மாவாகிய நானும் ப்ரஜாபதிகள் ஒன்பதின்மரும் மரீசி முதலிய ரிஷிகளும் ஆச்சர்யமான விபூதிகள் (அவனுக்கு உட்பட்டுக் கருவியாயிருப்பவர்கள் அங்ஙனம் ஸ்ருஷ்டித்த உலகங்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் தர்மமும் யாகமும் மனுக்களும் இந்த்ரன் முதலிய தேவதைகளும் ராஜாக்களும் ஆச்சர்யமான விபூதிகள். உலகங்களை ஸம்ஹரிக்கும் விஷயத்தில் அதர்மமும் ருத்ரனும் கோபமுற்ற ஸர்ப்பங்களும் அஸுரர் முதலியவர்களும் எல்லையில்லாத ஆச்சர்ய சக்திகள் அமைந்த பகவானுக்கு அற்புதமான விபூதிகள். பூமியின் தூள்களையெல்லாம் ஒவ்வொன்ருக எண்ணிக்கணக்கிடுந் திறமையுடையவனாயினும், மிகுந்த மதியுடையவனாயினும், எந்தப் புருஷன்தான் விஷ்ணுவின் வீரச்செயல்களைக் கணக்கிடவல்லனுவான்? இந்த பகவான் எங்கும் தடையில்லாத தனது அடியைப் பின் வேகத்தினுல் தந்தமது இடங்களெல்லாம் நடுங்கப் பெற்று அவற்றினின்று தேவதைகள் முதலிய ப்ராணிகள் நழுவி வருந்துவதைக் கண்டு அவர்களுக்கு வாஸஸ்தானமாகிய ஸத்யலோகத்தை நடுங்கவொட்டாமல் அப்படியே நிலை நிற்கச்செய்தான். அந்த பகவான் இத்த

னைய சக்திகள் பலவும் உடையவன். அவனுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் அளவிடமுடியாது. அவனுடைய வீரச்செயல்களுக்கு எல்லையே இல்லை. ஆகையால் அவற்றை முழுவதும் எடுத்துரைக்க எவன்தான் வல்லவனாவான்? மாயையெனப்படுவதும் ஆச்சர்ய சக்தியுமாகிய ப்ரக்ருதியே ஸைன்யமாகப்பெற்ற பரம புருஷனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களின் எல்லையை, நான்முகனாகிய நான் அறியேன். உனக்கு மூத்தவரும் ஸனகாதிகளுமாகிய இம்முனிவர்களும் அறியார்கள். இனி மற்றவர்கள் எங்ஙனம் அறியப் போகிறார்கள்? ஆயிரஞ் சொல்லியென்? ஆயிரம் முகங்களுடையவனும் (இரண்டாயிரம் நாக்குகளுடையவனும்) நித்யஸூரிகளில் தலைவனுமாகிய ஆதிசேஷன் இந்த பகவானுடைய குணங்களைப் பாடத் தொடங்கி இன்னமும் கரை அறியவில்லை. 'இப்படி இவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களின் எல்லை ஒருவர்க்கும் தெரியாததாயின், அவனை எங்ஙனம் பணிந்து மோக்ஷம் பெறுவார்கள்?' என்று சங்கிக்கவேண்டாம். அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களுக்கு எல்லையில்லை யென்பது உண்மையே. ஆயினும் அவனை அங்ஙனம் அறிபவர் (எல்லையில்லாத ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையவனென்றறிபவர்) தப்பாமல் மோக்ஷம் பெறுவார்கள். அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்கள் இவ்வளவேயென்று அளவிட்டறிபவர்க்கு மோக்ஷம் நேராது. அவர்கள் அவனை உள்ளபடி, அறிந்தவரல்லர். எல்லையில்லாத வஸ்துவை அங்ஙனம் எல்லையில்லாததென்றறிதலே அறிதலாமன்றி வேறுவிதமாக அறிவது விபரீதஜ்ஞானமேயாம். சிறிதும் ஸம்சயமின்றி 'நமக்கு அடையத் தகுந்த வஸ்துவும் அவ்வஸ்துவை அடைவதற்கு வேண்டிய உபாயமும் இவனே' என்று திட

மான புத்தியுடன் எல்லாவிதத்திலும் அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களையே பற்றுவார்களாயின், அத்தகையர் விஷயத்தில் அவன் தானே தயைசெய்வான். அங்ஙனம் பகவானால் அருள்புரியப்பெற்ற அவர்கள் பிறரால் தாண்டமுடியாததான அந்த பகவானுடைய மாயையை ஆயாஸமின்றியே தாண்டுவார்கள்; அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களையும் உள்ளபடி அறியப்பெறுவார்கள். இங்ஙனம் எல்லாவிதத்திலும் பகவானையே பற்றியிருக்கிற இந்த மஹானுபாவர்களுக்கு, நாய் நரி முதலியவை பக்ஷிக்கும் படியான தேஹத்தில் என்னுடையதென்னும் புத்தியும் நானென்னும் புத்தியும் உண்டாகிறதில்லை. ஓ நாரதனே! நான் பகவானை உள்ளபடி அறிவேன். பரமபுருஷனாகிய அந்த பகவானுடைய யோகமாயையையும் நான் அவனது அனுக்ரஹத்தினால் தாண்டுவேன். நீங்களும் பேரறிஞனாகிய ருத்ரனும் ப்ரஹ்லாதனும் மனுவின் பத்னியாகிய சதரூபையும் அந்த ஸ்வாயம்புவமனுவும் உத்தானபாதன் ப்ரியவ்ரதன் என்ற அவன் பிள்ளைகளிருவரும் தேவஹூதி முதலிய அவரது பெண்களும் இந்த்ரனும் ருபுவும் த்ருவனும் இக்ஷ்வாகுவும் முசுகுந்தனும் விதேஹராஜனும் காதியும் ரகுவும் அம்பரீஷனும் ஸகரனும் கயன் நாஹுஷன் முதலியவர்களும், மாந்தாதா அலர்க்கன் சகதன்வன் ரந்திதேவன் பீஷ்மன் பலிசக்ரவர்த்தி அமூர்த்திரயன் திலீபன் ஸௌபரி உதங்கன் சிபி தேவலன் பிப்பலாதன் ஸாரஸ்வதோத்பவன் பராசரன் பூரிஷேணன் இவர்களும், விபீஷணன் ஹனுமான் உபேந்த்ரதத்தன் அர்ஜுனன் ஆர்ஷ்டிஷேணன் விதுரன் ச்ருதஸேனன் இவர்களை முக்யமாகவுடைய மற்றுமுள்ளவரும் பரமாத்மாவின் உண்மையை அறிவார்கள். அவனுடைய மாயையையும் தாண்டுகிறார்கள். ஆச்சர்யமான அடிவைப்

புகளால் உலகங்களை அளந்து த்ரிவிக்ரமாவதாரஞ் செய்த பகவானையே சிறந்த ப்ராப்யமாகவும் (அடையத் தகுந்த வஸ்துவாகவும்) ப்ராபகமாகவும் (அவ்வஸ்துவை அடைவதற்குவேண்டிய உபாயமாகவும்) ஆதாரமாகவும் பற்றின மஹானுபாவர்களான பாகவதர்களின் சீலத்தில் வாஸனை உண்டாகப் பெற்றிருக்குமாயின், திர்யக் ஜந்துக்களாகிய பசு பக்ஷி முதலியவைகளும் ஸ்த்ரீகள் ஶூத்ரர் ஹூணர் வேடர் முதலிய ஜீவர்களும் எவ்வளவு பாபிஷ்டராயினும் பகவானுடைய உண்மையை உணர்ந்து அவனுடைய மாயையைக் கடப்பராயின், கேட்ட அர்த்தங்களை நெஞ்சில் தரிக்குந் திறமையுடைய ப்ராஹ்மணாதிகளைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நாங்கள் அந்த பகவானை எவ்வண்ணம் அறிந்தோமோ, அவ்வண்ணமே அந்த பகவானுடைய ஸ்வரூபத்தை உனக்குச் சொல்லுகிறேன், கேட்பாயாக. வேதாந்தங்கள், துக்கம் முதலிய விகாரங்கள் எவையும் தீண்டப் பெறாததென்றும் நித்யாநந்த ஸ்வரூபமென்றும் பரப்ரஹ்மமென்றும், எதைக்கூறுகின்றனவோ, அதுவே பரமபுருஷனாகிய பகவானுடைய ஸ்வரூபம். 'ஆனால் வேதாந்தங்களால் அறியவேண்டுமேயன்றி மற்ற ப்ரமாணங்களால் அறியமுடியாதோ' என்னில், அறிய முடியாது. ஜடஸ்வரூபமாகிய ப்ரக்ருதி அவனெதிரில் நிற்க வெட்கமுற்று மறைகின்றது. 'அதுவென்' என்கிறாயோ? சொல்லுகிறேன், கேள். ப்ரக்ருதியின் கார்யங்களாகிய மனம் முதலிய இந்த்ரியங்கள் அவனுடைய ஸ்வரூபத்தை அறியுந் திறமையற்றவைகள். ஆகையால் அவன் ஸ்வரூபத்தை வேதாந்தங்களால் அறியவேண்டுமேயன்றி, உலகத்தில் வழங்கிவருகிற ப்ரத்யக்ஷம் முதலிய மற்ற ப்ரமாணங்களால் அறியமுடியாது. இது மாத்ரமே அன்று; வேதத்திலும் பூர்வபாகங்களால் அவனை

உள்ளபடி அறியமுடியாது. கர்த்தா கர்மம் கரணம் என்கிற பலகாரகங்கள் அடங்கியதும் க்ரியைகளை எடுத்துரைப்பதுமாகிய வேதத்தின் பூர்வபாகம் அவனை நேரே அறிவிக்க வல்லதன்று. இந்தப் பரமாத்மாவின் ஸ்வரூபம் என்றும் ஸுகரூபமாயிருக்கும். இங்ஙனம் ஸுகரூபமாயிருத்தல் ஜீவனுக்கும் உண்டேயாயினும், துக்கத்தின் ஸம்பந்தமில்லாமல் எல்லையில்லாத ஆனந்தமே வடிவாகப் பெற்றிருக்கை பரமபுருஷனுக்கேயன்றி ஜீவனுக்குக் கிடையாது. அவனுக்கு ஸம்ஸார தசையில் துக்க ஸம்பந்தம் உண்டு. ஜீவனைப்போல் இவனும் கர்மத்தினால் விளையும் ஸுகதுக்கங்களையுடையவனாகக் கூடுமோவென்னில், அது கூடாது. இவன் கர்மத்திற்கு உட்பட்டவனல்லன். கர்மத்தின் தீண்டுதலின்றி என்றும் பரிசுத்தனாயிருக்குந் தன்மையன். கர்மமாவது பகவானுடைய நிக்ரஹானுக்ரஹங்களே. ஜீவனுடைய ஜன்மாந்தர புண்யபாபங்களால் அவை உண்டாகின்றன. ஆகையால் அந்தக் கர்மம் பரமபுருஷனுக்குக் கிடையாது. பரமபுருஷனுக்கு மேற்பட்ட வஸ்து எதுவுமே இல்லையென்று முன்னமே மொழிந்தேன். அவனை நிக்ரஹிக்கவும் அனுக்ரஹிக்கவும் வல்லவன் எவனும் இல்லையாகையால் அவனுக்கு அத்தகைய கர்மத்தின் ப்ரஸக்தியே இல்லை. மற்றும், அவனுக்குப் புண்ய பாப ப்ரஸக்தியும் இல்லை. அவன் சேதனாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன்; என்றும் மாறாமல் ஒரே ரீதியாயிருக்குந் தன்மையன்; சேதனாசேதனங்களுக்கு உள்ளே புகுந்திருப்பவனாயினும், அந்தந்த வஸ்துக்களின் தோஷங்கள் தீண்டப்பெறாதவன். ஆகையால் அவன் கர்மத்திற்கு உட்பட்டவனல்லன். அவன் ஜ்ஞானமே வடிவமாயிருக்கப் பெற்றவன்; ஜ்ஞானமில்லாத பாகம் சிறிதும் கிடையாது. இவனைப் பற்றின

வர்க்கு ஸம்ஸார பயம் உண்டாகாது. ஸம்ஸாரத்தை வேரோடறுத்து அபயங்கொடுக்குந்தன்மையன்; பசி தாஹம் முதலிய விகாரங்கள் என்றும் உண்டாகப்பெறாதவன். அவன் தன்னைப்பற்றினவர்க்கும் அங்ஙனம் விகாரங்களில்லாமையை விளைக்குந்திறமை யுடையவன். இத்தகையதான பகவானுடைய உருவத்தை த்யானஞ் செய்ய முயன்றவர் பகவானிடத்தில் மனத்தை நிலை நிறுத்தி, மழை பெய்யுந்திறமையுடைய தேவேந்த்ரனின்று வெட்டுங் கருவியாகிய மண்வெட்டி முதலியவற்றைத் துறப்பதுபோல், ஸ்வர்க்காதி பலன்களை நிறைவேற்றிக் கொடுக்கிற கர்மத்தைத் துறப்பார்கள். பரம புருஷனைப் பெறுதற்கு அவனே உபாயமன்றி மற்றவை அன்றென்று நினைத்து அவனையே சரணமாகப் பற்றிக் கர்மயோகம் முதலிய மற்ற உபாயங்களைப் பெரியோர்கள் ஆதரிக்கமாட்டார்கள். அவன் தன்னையே உபாயமாகப் பற்றினார்க்கு எதையும் எதிர்பாராமல் தன்னைக் கொடுக்குந் தன்மையன். ப்ராஹ்மண க்ஷத்ரியாதி வர்ணங்களுக்கும் ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தன் முதலிய ஆஶ்ரமங்களுக்கும் தகுந்தபடி கர்மங்களின் பலன்கள் எவனால் ஸித்திக்கவேண்டுமோ அப்படிப்பட்ட பகவான் தானே ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளெல்லாவற்றையுங் கொடுக்கவல்ல ப்ரபு. ஆகையால் ஸ்வர்க்கம் முதலிய மற்ற பலன்களை விரும்புவோர்களும் அவற்றிற்கு வேண்டிய கர்மங்களைச் செய்யவேண்டிய அவஶ்யமில்லை. அவன் திருவடிகளைப் பற்றினால் அவை தாமே கைகூடும். ஆகையால் ஸ்வர்க்காதி பலன்களை விரும்புவோர்க்கும் உபாஸிக்கத் தகுந்தவன் அவனே. இந்த்ராதி தேவதைகளை உபாஸிக்கினும் பலன் கொடுப்பவன் அவர்க்கு அந்தராத்மாவாயிருக்கிற பரமபுருஷனே. இந்த்ராதிகள் பலன் கொடுக்க வல்ல

மையற்றவர்களே. அவர்கள் சித்திரதில் எழுதின பொம்மை போன்றவர்களே. அவர்களுக்கு உள்ள திறமைகளெல்லாம் அவர்க்கு அந்தராத்மாவான பரமபுருஷனுடையவைகளே. இப்படி பரமபுருஷன் அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருக்கில், அவர்களுக்குள்ள ஸுகதுக்காதியான தோஷங்கள் இவனுக்கும் ஸம்பந்திக்குமோவென்று சங்கிக்கவேண்டாம். அவன் அனைத்திற்கும் அந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்களெவையும் தீண்டப்பெறுதவன்; தேஹத்தை விளைவிக்கும்படியான பூதஸூக்ஷ்மங்கள் பிரிந்துபோய் தேஹம் நசிக்கினும் அதிலிருக்கும் பரமபுருஷன் நாசம் அடைபவனல்லன். அவனுக்குக் கர்மத்தைப் பற்றின உற்பத்தி முதலிவை கிடையாது. அங்ஙனமே ஜீவாத்மாக்களுக்கு உள்ளே புகுந்திருப்பினும் அவருடைய புண்ய பாபரூபங்களான தோஷங்கள் தன்மேல் தீண்டப் பெறுதவன்.

அப்பா! நாரதனே! அத்தகையனும் ஜகத்திற்கெல்லாம் காரணமாயிருப்பவனும் ஜ்ஞானம் சக்தி பலம் ஐஶ்வர்யம் முதலிய குணங்கள் நிறைந்தவனுமாகிய இந்த வாஸுதேவனது உண்மையை உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். சேதநசேதனஸ்வரூபமாகி ஸ்வதந்த்ரம் போல் தோற்றுகிற வஸ்துஎதுவெது உண்டோ அதெல்லாம் பரமபுருஷனுக்கு உட்பட்டதேயன்றி அவனைக் காட்டிலும் வேறுபட்டதன்று. எல்லாம் பரமபுருஷனேயென்னும்படி அவனுல் படைக்கப் பெற்றுப் பாதுகாக்கவும் பெற்று அவனை உட்கொண்டதுமாகவேயிருக்கும். இங்ஙனம் பகவானுடைய மஹிமையை அறிவிப்பதாகையாலும் பகவானே மொழிந்ததாகையாலும் பாகவதமென்னும் பேருடையது இந்தப் புராணம். இதை எனக்குபக

வானே மொழிந்தான். இந்த பாகவதத்தை நீ ஓர்பெரிய ப்ரபந்தமாகச் செய்வாயாக. அனைவர்க்கும் அந்தராத்மாவாகி அனைத்துக்கும் ஆதாரமாயிருப்பவனும் தன்னைப்பற்றினருடைய பாபங்களைப் போக்குமவனுமாகிய பகவானிடத்தில் ப்ராணிகளுக்கு பக்தி உண்டாகும்படி வர்ணிக்கவேண்டுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு இதை ஓர் ப்ரபந்தஞ் செய்வாயாக. ஜீவன் மனுஷ்யஜன்மம் எடுத்துச்செய்யுங் கார்யத்தினால் பகவான் ஸந்தோஷம் அடையானாயின், அழியவையான தர்ம அர்த்த காமங்களால் என்ன ப்ரயோஜனம்? தர்ம அர்த்த காமங்களால் ப்ரயோஜனமொன்றும் இல்லை. பகவான் ஸந்தோஷிக்கும்படியான கார்யம் எதுவோ அதையே செய்யவேண்டும். மனுஷ்யனாகப் பிறந்தவன் பகவானை மனக்களிப்புறச் செய்யாமல் மற்ற தர்ம அர்த்த காமங்களை எவ்வளவு ஸம்பாதிக்கினும் ப்ரயோஜனம் இல்லை. அவை சீக்ரத்தில் அழிந்துபோகும். பரமபுருஷன் களிப்புறுவானாயின், அழியாத ஸுகரூபமான மோக்ஷத்தைக் கொடுப்பான். ஆகையால் மனுஷ்யனாகப் பிறந்தவன் பகவானை ஸந்தோஷப்படுத்துவதொன்றையே முக்யமாகப் பார்க்க வேண்டும். மோக்ஷத்தைக் கொடுக்கும் ப்ரபுவாக ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் என்றும் மாறாத பக்தி உண்டாகப் பெறுவானாயின் வர்ணாஸ்ரம தர்மங்களைக் குறைவற நடத்துவதனாலும் தான தர்மங்களாலும் தவங்களாலும் ஶாஸ்த்ரங்களைக் கற்பதனாலும் ஸாதிக்கவேண்டிய கார்யம் என்னிருக்கின்றது? பகவானிடத்தில் விளைந்த பக்தியால் ஆகாத கார்யம் இவற்றால் ஆகவேண்டியது ஒன்றுமே இல்லை. ஸமஸ்த பாபங்களையும் போக்குந் தன்மையனும் அனைவரினும் சிறந்த ப்ரஹ்மாதிகளால் புகழப்பெற்றவனும் சிறந்த புகழுடையவனும் இந்த்ரியங்களுக்கு விஷய

மாகாதவனுமாகிய பரமபுருஷனிடத்தில் பக்தியில்லாமல் வெறுமனே செய்கிற வர்ணாஶ்ரம தர்மங்களும் ஶாஸ்த்ராப்யாஸங்களும் பஸ்மத்தில் செய்த ஆஹுதி போல் எதற்கும் உபயோகப்படாதவைகளே. ஸர்வேஶ்வரனை இந்த பகவானுடைய ப்ரக்ருதியின் பரிணாமமான ஜகத்தின் ஸ்ருஷ்டி முதலிய ப்ரகாரத்தை வர்ணிப்பதும் ஈஶ்வரனிடத்தில் விசித்ர சக்தியைக் கண்டு மனக்களிப்புறுவதும் ஶ்ரத்தையுடன் கேட்பதுமாயிருப்பவனுடைய மனம் ப்ரக்ருதியின் குணமான தமஸ்ஸு முதலியவற்றால் மயங்குகிறதில்லை. பகவானுடைய லீலையாகிய ஸ்ருஷ்டி முதலியவற்றை வாயால் சொல்லி ஸந்தோஷிப்பவனும் செவிகளால் கேட்டு ஸந்தோஷிப்பவனும் ப்ரக்ருதியின் கார்யமான ஸத்வாதி குணங்களால் மனம் கலங்கப்பெறாமல் ஸுகமாயிருப்பான். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து சுகரை வினவுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— அந்தணர் தலைவரே! பரமாத்மாவின் உண்மையை அறிந்த நாரதமுனிவர் ப்ரஹ்மதேவனால் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ராக்ருதகுணங்களின் பற்றில்லாதபகவானுடைய குணங்களைச் சொல்லும்படி தூண்டப்பெற்று எவரெவர்க்குளங்கெங்ஙனம் மறுமொழி கூறினரோ, அதையெல்லாம் நான் அறிய விரும்புகிறேன். வேதங்களை உணர்ந்தவர்களில் தலைவரே! அற்புதமான வீரச்செயல்களையுடைய பகவானைப்பற்றினவைகளும் உலகங்களுக்கு மங்களத்தை விளைப்பவைகளுமான கதைகளைச் சொல்வீராக. மிகுந்த பாக்யமுடையவரே! சிறந்த மதி அமைந்தவரே! அனைவர்க்கும் அந்தராத்மாவான

ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனத்தை மற்றெதிலும் பற்றில்லாதபடி நிலை நிறுத்தி இந்தச் சரீரத்தை விட விரும்புகிறேன். பகவானுடைய கதைகளைக்கேட்டுக்கொண்டே அவனையே நெஞ்சில் நினைப்பவனாகி தேஹத்தை விட விரும்புகிறேன். ஆகையால் எனக்கு அவனது கதைகளைச் சொல்வீராக. பகவான், தன் சரித்ரத்தை ப்ரீதியுடன் தினந்தோறும் சொல்லுவோரிடம் கேட்பதும், அவர் நேராவிடின் தானே வாயாரக் கூறுவதுமாயிருப்பவனுடைய ஹ்ருதயத்தில்அற்பகாலத்திலேயே புகுந்திருப்பான். ஒருவன் பகவானுடைய சரித்ரத்தை ஓயாமல் கேட்பதும் சொல்லுவதுமாயிருப்பானாயின், அவன் மனது அந்த பகவானை நினைப்பதிலேயே விருப்பமுடையதாகும். அங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய கதைகளை மாறாமல் கேட்பார்களாயின், அந்த பகவான் காதுகளின் வழியால் மனத்தில் புகுந்து சரத்காலம் ஜலத்தின் அழுக்கைப் போக்குவதுபோல் ராகம் முதலிய மனமலங்களைப் போக்குவான். அங்ஙனம் மனம் தெளியப்பெற்ற புருஷன் ராக த்வேஷாதிகளால் வரும் வருத்தங்களெல்லாம் தீரப்பெற்று, நெடுநாள் தேசாந்தரங்களில் திரிந்துவந்த வழிப்போக்கன் தன்வீட்டைச் சேர்ந்து வழியில் விளைந்த வருத்தங்களெல்லாம் தீரப்பெற்றுத் தன் வீட்டை விடாதிருப்பதுபோல், ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதமூலத்தை நெஞ்சில் நிறுத்திக்கொண்டு மீளவும் அதை விடமாட்டாதிருப்பான். ஓ அந்தணரே! இயற்கையில் பூதஸூக்ஷ்மங்களால் விளையும் தோஷங்களற்றவனாகிய இந்தஜீவனுக்கு தேஹாரம்பம் பூதஸூக்ஷ்மங்களால் நடக்கிறதென்று நீர் சொல்லுவதால் தெரியவந்தது. அந்த தேஹாரம்பம் ஒரு காரணமும் இல்லாமல் உண்டாகின்றதா? அல்லது ஏதேனுமொருகாரணத்தைப்பற்றி உண்டாகின்றதா? நீர் இதை உள்ளபடி

அறிவீராகையால் எனக்குச் சொல்லவேண்டும். ஜகத்தின் ஸந்நிவேசத்தையே உருவமாகக் கொண்ட ஓர் தாமரைமலர் (ஜகத்தாகிறதாமரைமலர்) எவனுடைய உதரத்தினின்று உண்டாயிற்றோ, அவனைத் தனித்தனியே பிரித்து இவ்வளவேயென்று அளவிடக்கூடிய அவயவங்களுடையவனாக மொழிந்தீர். அந்த ஜகதாகாரனான புருஷன் (விராட்புருஷன்) எத்தகைய அளவுடையவனோ, அன்னவனே ஈய்வரனென்று ஏற்படுகின்றது. அதனால் ஈய்வரன் அளவிடக்கூடியவனென்றே தெரியவருகின்றது. இவ்வளவென்று அளவிடக்கூடிய அவயவங்களோடு ஸம்ஸாரத்திலிருக்கிற ஜீவனைப்போலவே ஈய்வரனும் ஒருவனென்று சொன்னாற்போல் தோற்றுகிறது. அப்பொழுது ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் என்ன விசேஷம்? இதை விசதமாக எனக்குச் சொல்லவேண்டும். தேவமனுஷ்யாதி பூதங்களை நியமிப்பவனும் பஞ்சபூதங்களால் விளைந்த சரீரமுடையவனும் பகவானுடைய நாபீகமலத்தில் பிறந்தவனும் அநிருத்தனென்னும் பேர்கொண்ட விராட்புருஷனுடைய உருவத்தை நேரே கண்டவனுமாகிய ப்ரஹ்மதேவன் எந்த பகவானுடைய அநுக்ரஹத்தினால் தேவமனுஷ்யாதி பூதங்களைப் படைக்கின்றானோ அத்தகையனும் ஜகத்தின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துபவனுமாகிய அநிருத்த பகவான், ப்ரக்ருதியை அடக்கி ஆள்பவனாகி அதற்குத் தான் உட்படாமல் அதன் கார்யங்களைக் கடந்து ஜகத்தின் வ்யாபாரத்தில் பற்றற்று ஜ்ஞான சக்தி பல ஐய்வர்யங்கள் முதலிய குணங்களெல்லாம் அமையப்பெற்று எவ்விடத்தில் சயனித்துக்கொண்டிருக்கிறானோ, அந்த இடத்தை எனக்குச் சொல்லவேண்டும். அன்றியும் லோகபாலர்களோடு கூடின லோகங்களெல்லாம் பரமபுருஷனுடைய பாதம் முதலிய

அவயவங்களால் கற்பிக்கப்பட்டனவென்று தெரிகிறது. இப்பொழுது லோகபாலர்களோடுகூடின லோகங்களால் பரமபுருஷனுடைய அவயவங்கள் கற்பிக்கப்பட்டன வென்று கேட்டோம். வேதம், 'ப்ரஹ்மதேவன், முன் கல்பத்தில் படைத்தாற்போலவே மேல் கல்பத்திலும் படைக்கிறான்' என்று சொல்லுகிறது. இவையெல்லாம் ஒன்றோடொன்று சேராதிருக்கின்றனவே. இந்த விரோதத்திற்குப் பரிஹாரம் எப்படி? மஹாகல்பத்தின் காலம் எவ்வளவு? அவாந்தரகல்பத்தின் காலம் எவ்வளவு? 'இருந்தது, இருக்கிறது, இருக்கப்போகிறது' என்பவை முதலிய சப்தங்களால் கூறப்படுகிற காலத்தை எங்ஙனம் அறியலாகும்? தேவதைகள் பித்ருக்கள் மனிதர் முதலிய ப்ராணிகளின் ஆயுஸ்ஸின் அளவு எத்தகையது? இவற்றையும் எனக்குச் சொல்லவேண்டும். அந்தணர் தலைவரே! காலத்தினுடைய நிமிஷம் முதலிய நுண்ணிய பிரிவுகளையும் ஸம்வத்ஸரம் முதலிய பெரிய பிரிவுகளையும், கர்மத்தினால் அடையக்கூடிய பலன்கள் எத்தனையோ எவ்வகைப் பட்டவைகளோ அதையும், எனக்குச் சொல்லவேண்டும். எந்த தேசத்தில் கர்மத்தினால் பலன் கைகூடுமோ அதையும், எந்த தேவதையால் எத்தகைய கர்மபலத்தை அடையலாமோ அதையும், ஸத்வாதிகுணங்களின் பரிணாமத்தையும், அவை தேவமனுஷ்யாதி ஶரீரமாக மாறும் விதத்தையும், ஜீவாத்மாக்கள் தேவாதி சரீரங்களைப் பெறுதற்குள்ள காரணத்தையும் விசதமாக எனக்குச்சொல்லவேண்டும். பூமி பாதாளம் திசைகள் ஆகாயம் ஸூர்ய சந்த்ராதி க்ரஹங்கள் அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்கள் பர்வதங்கள் நதிகள் ஸமுத்ரங்கள் தீவுகள் ஆகிய இவை உண்டாகும் விதத்தையும், இவற்றிலுள்ள ப்ராணிகளின் உற்பத்தி க்ரமத்தையும் சொல்வீராக. ப்ரஹ்மாண்டத்தின் அளவையும்

அதற்கு வெளியிலுள்ள ஆவரணங்களின் அளவையும் அதற்குள்ளே உள்ள வஸ்துக்களின் அளவையும் (ஸ்வரூபத்தையும்), மஹானுபாவர்களான பாகவதர்களின் சரித்ரத்தையும் வர்ணாஶ்ரமங்களின் ஸ்வபாவ நிச்சயத்தையும் சொல்வீராக. மிகுதியும் ஆச்சர்யங்களான பகவானுடைய அவதார சரித்ரங்களையும், யுகங்களையும், யுகங்களின் அளவையும், யுகந்தோறுமுள்ள தர்மத்தையும் மொழிவீராக. மனுஷ்யர்கள் அனைவர்க்கும் பொதுவாயுள்ள தர்மத்தையும், வர்ணாஶ்ரம விசேஷங்களைப் பற்றின விசேஷ தர்மத்தையும், அந்தந்தத் தொழில்களைப் பற்றி ஜீவிப்பவர்களின் தர்மத்தையும், ப்ரஜைகளைப் பாதுகாக்கையாகிற அதிகாரத்திலிருக்கும் ராஜரிஷிகளின் தர்மத்தையும், ஆபத்காலங்களில் ஜீவிப்பவர்களின் தர்மத்தையும் மொழியவேண்டும். மஹத்து முதலிய தத்வங்களின் கணக்கையும், அவற்றின் ஸ்வரூபத்தையும், அவற்றின் காரணத்தினுடைய லக்ஷணத்தையும், பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும் ப்ரகாரத்தையும், ப்ரக்ருதியை விட்டுப் பிரிந்த ஆத்மவஸ்துவைப் பற்றின ஜ்ஞானயோகத்தின் ப்ரகாரத்தையும், யோகீஶ்வரர்களுக்குள்ள அணிமாதி ஐஶ்வர்யங்களின் ஸ்வரூபத்தையும், யோகிகள் சரீரத்தை விடும் ப்ரகாரத்தையும், ருக்கு முதலிய வேதங்கள் தனுர்வேதம் முதலிய உபவேதங்கள் அவற்றில் சொல்லப்பட்ட தர்மங்கள் இதிஹாஸம் புராணம் ஆகிய இவற்றின் ஸ்வரூபத்தையும் மொழிவீராக. ஸமஸ்த ப்ராணிகளின் அவாந்தர ப்ரளயத்தையும் அவற்றின் உற்பத்தியையும், ஸ்திதியையும் (உற்பத்திக்கும் ப்ரளயத்திற்கும் இடையிலுள்ள அவற்றின் நிலைமையையும்), மஹா ப்ரளயத்தையும், யாகம் முதலிய வைதிக கர்மம் குளம் கிணறு வெட்டுவிப்பது

முதலிய ஸ்மார்த்த கர்மம் காம்ய கர்மம் தர்மம் அர்த்தம் காமம் ஆகிய இவற்றின் ப்ரகாரத்தையும் உள்ளபடி உரைப்பீராக. அனுபவித்து மிகுந்த கர்மத்துடன் பரலோகத்தினின்று நழுவின ப்ராணிகளின் ஸ்ருஷ்டி ப்ரகாரத்தையும், பாஷண்ட தர்மத்தின் உற்பத்தியையும், ஜீவாத்மாவுக்கு பந்தமோக்ஷங்கள் (ஸம்ஸாரமும் ஸம்ஸார நிவ்ருத்தியும்) உண்டாகும் விதத்தையும், அந்த ஜீவாத்மாக்கள் மோக்ஷ தசையில் ஸ்வரூபத்துடன் இருக்கும் விதத்தையும் விசதமாக மொழியவேண்டும். பிறர்க்கு உட்படாமல் ஸ்வதந்த்ரனுயிருப்பவனும் அனைவர்க்கும் அந்தராத்மாவுமாகிய பகவான் தனது ஆள்கைக்கு உட்பட்ட மாயையினுல் விளையாடும் விதத்தையும், மீளவும் மாயையைத் துறந்து பார்த்துக்கொண்டிருப்பவன்போல் உதாஸீனனுயிருக்கும் ப்ரகாரத்தையும் பகர்வீராக. இவையெல்லாவற்றையும் மற்றுமுள்ள ரஹஸ்யமான விஷயங்களையும், உமது பாதங்களைப் பணிந்து உம்மையே நம்பி வினவுகின்ற எனக்கு உள்ளபடி மொழிவீராக. நீர் மிகுந்த மஹிமையும் சிறந்த மதியும் அமைந்தவர். ஆகையால் நீர் இவற்றையும் மற்றுமுள்ள ரஹஸ்யங்களையும் உரைப்பதற்குரிய வல்லமையுடையவர். ப்ராணிகளின் உற்பத்தி விநாசம் வருதல் போதல் வித்யை அவித்யை இவையெல்லாவற்றையும் அறிந்தவர். வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாகிய மூன்று காலங்களிலுமுள்ள ஸமஸ்த வஸ்துக்களின் உண்மையும் உமக்கு நன்றாகத் தெரியும். நான் இங்ஙனம் வினவின இந்த அர்த்தங்களில் நீர் ப்ரமாணம் (நன்றாக அறிந்தவர்). இவ்விஷயத்தில் நீர் ப்ரஹ்மதேவனேடொத்தவர். முன்புள்ளவர்க்கும் முன்புள்ளவர் செய்ததைப் பின்புள்ளவர் ஆசரித்து வருவது வழக்கமல்லவா? ப்ரஹ்மா நாரதருக்கும் நாரதர் வ்யாஸமுனிவர்க்கும்

வ்யாஸமுனிவர் உமக்கும் சொன்னாற்போல் நீர் எனக்குச் சொல்லவேண்டும். 'நீ உபவாஸத்தினாலும் ப்ராஹ்மண கோபத்தினாலும் மனம் கலங்கப்பெற்றிருக்கின்றாயே. உனக்கு நான் சொல்லுவதைக் கேட்பதற்குரிய மனவூக்கம் உண்டோ' என்று சங்கிக்கவேண்டாம். உம்முடைய இந்த ஸந்நிதானத்தில் பகவானுடைய புகழாகிற அம்ருதத்தைப் பானஞ்செய்கிற என்னுடைய இந்த ப்ராணன்கள் கோபமுற்ற அந்தணரைப் பற்றியாவது உபவாஸத்தைப்பற்றியாவது வ்யாகுலப்படவில்லை' என்றான்

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—பரப்ரஹ்ம விஷயமான ஜ்ஞானத்தை உபதேசிக்குந் திறமையுடைய சுகமுனிவர், இங்ஙனம் ஸத்புருஷர்களுக்கு நாதனாகிய பகவானுடைய கதையைப்பற்றி மன்னவனாகிய விஷ்ணுராதனென்னும் பரீக்ஷித்தினால் வினவப்பெற்று மிகுதியும் ஸந்தோஷமுற்று அந்த ஸபையில் வேதத்தை நிகர்த்த பாகவதமென்னும் புராணத்தைச் சொல்லத்தொடங்கினார். முன்பு ஸ்ருஷ்டியின் தொடக்கம் நேர்ந்திருக்கும் பொழுது நான்முகனுக்கு பகவான் உபதேசித்த பாகவதமென்னும் புராணத்தை விஸ்தாரமாக மொழியத் தொடங்கினார். பாண்டுவின் வம்சத்தில் பிறந்த அரசர்களில் சிறந்த பரீக்ஷித்து மன்னவன் ஏதேது வினவுகிறானோ, அதற்கெல்லாம் பாகவதமென்னும் புராணத்தைக் கொண்டே அதன் க்ரமப்படி மறுமொழி கூறத் தொடங்கினார். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ஸ்ரீசுகர் பரீக்ஷித்தின் கேள்விகளில் சிலவற்றிற்கு மறுமொழி கூறுதல்.}

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—ஜ்ஞானஸ்வரூபனும் ஆனதுபற்றியே தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்

வனுமாகிய ஜீவனுக்கு போக்யங்களான சப்தாதி விஷயங்களில் அவற்றை அனுபவிக்கையாகிற ஸம்பந்தமானது பரமபுருஷனுடைய மாயையைத் தவிர மற்றெவ்விதத்தினாலும் நன்றாகப் பொருந்தாது. ஸ்வப்னங்காண்கிறவன் அவ்விடத்தில் இல்லாத வஸ்துக்களை அனுபவிப்பது பகவானுடைய மாயையைத் தவிர மற்றெவ்விதத்தினாலும் பொருந்தாதாப்போலவே இதுவும் பொருந்தாது. ஜீவாத்மாக்களின் புண்யபாபங்களுக்குத் தகுந்தபடி அந்தந்தக்காலங்களில் அனுபவிக்கும்படியான வஸ்துக்களைப் பரமபுருஷன் தனது மாயையினால் ஸ்ருஷ்டித்து ஜீவாத்மாக்களுக்குக் கொடுத்து ஸ்வப்னத்தில் அனுபவிப்பிக்கிறான். அங்ஙனமே அந்தப் பரமபுருஷன் ஜீவராசிகளுக்கு அவரவருடைய புண்ய பாபங்களுக்குத் தகுந்தபடி தேவ மனுஷ்யாதி சரீரங்களைத் தனதுமாயையினால் படைத்துக் கொடுக்கிறான். அவனது மாயையைத்தவிர மற்றெவ்விதத்திலும் இது சேராது. ஆகையால் ஜீவாத்மா ஜ்ஞானஸ்வரூபனாயினும் மாயையினால் ஸ்வரூபம் மறையப்பெற்று தேஹத்தைப் பெறுகிறான். ஜீவனுடைய தேஹாரம்பத்திற்குக் காரணம் பகவானுடைய மாயையே. ஆச்சர்யமான பற்பல விதங்களில் மாறுந்தன்மையுடைய பகவன் மாயையால் ஜ்ஞானானந்தங்களாகிற ஸ்வரூபம் மறையப்பெற்று ஜீவன் தேவ மனுஷ்யாதியான உருவத்தை ஆத்மாவில் ஏறிட்டுக் கொண்டு பல உருவங்களுடையவன்போல் தோற்றுகிறான். இந்த மாயையின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் கார்யங்களாகிய ஶப்தாதி விஷயங்களில் மனக்களிப்புற்று 'நான், என்னுடையது' என்ற அஹங்கார மமகாரங்களால் பந்தத்தை அடைகிறான். இவன், தனக்கு இயற்கையில் ஏற்பட்டதும் காலம் ப்ரக்ருதி இவற்றிற்கு உட்படாததும் பாபங்களற்றிருக்கை கிழத்தனம் மரணம் சோகம் பசி தாஹம் இவை யில்லா

திருக்கை ஸத்ய ஸங்கல்பனுகை (நினைத்தபடி நிறை வேற்றுந் தன்மை,) முதலிய குணங்கள் அமைந்திருப் பதுமாகிய தனது மஹிமையில் அஹங்கார மமகாரங்க ளால் வரும் மதிமயக்கம் தீரப்பெற்று எப்பொழுது மனக் களிப்புறுவாரோ, அப்பொழுது ப்ரக்ருதி காலம் இவை களுக்கு உட்பட்டிருக்கையாகிற இரண்டையும் துறந்து சப்தாதி விஷயங்களில் உதாஸீனனுயிருப்பான். (அன்றி யும், காலம் ப்ரக்ருதி இவைகளுக்கு உட்படாமல் இவற் றிற்கு நியாமகனுயிருப்பவனும் ஸத்யகாமனுயிருக்கை ஸத்ய ஸங்கல்பனுகை முதலிய குணங்கள் அமைந்தவனு மாகிய பரமாத்மாவின் மஹிமையில், ஜீவன் அஹங்கார மமகாரங்களற்று எப்பொழுது மனக்களிப்புறுவாரோ, அப்பொழுது காலம் ப்ரக்ருதி இவை யிரண்டுக்கும் உட் படாமல் ஶப்தாதி விஷயங்களில் விருப்பம் தொலையப் பெற்று அவற்றை அனுபவிப்பதற்கு வேண்டிய ப்ரயத் னங்களை யெல்லாம் துறந்து உதாஸீனனுயிருப்பான்). பாபமற்றிருக்கை முதலிய ஸ்வாபாவிகமான குணங்கள் தோன்றப்பெறுகையே மோக்ஷதசையிலிருக்கும் இருப்பு. அத்தகையனுன ஆத்மாவுக்கு மஹாநந்த ஸ்வரூபனுன பரமாத்மாவை' அனுபவிக்கையும் அந்தப் பரமாத்மா வுக்குச் சரீரமான தன் ஸ்வரூபத்தை அனுபவிக்கையும் ஆகிய இவை சப்தாதி விஷயங்களிலுள்ள விருப்பத் தைப் போக்கும். மோக்ஷதசையில் ஜீவன் எப்படியிருப் பானென்று வினவினேயே, அதைப்பற்றி மொழிந்தேன். 'ஜீவனைப்போலவே பகவானும் அளவிடக்கூடிய சரீர முடையவனுகையால் அவனைப் பணிவதனுல் எப்படி மோ க்ஷம் உண்டாகும்?' என்று வினவினேயே, அதற்கு மறு மொழி கூறுகிறேன், கேட்பாயாக. ஏதமில்லாத வ்ரதங் களை அனுஷ்டிக்கும் பெரியோர்களால் ஆராதிக்கப்படுக்

தன்மையனுன பகவான் முன்பு ப்ரஹ்மதேவனுக்குத் தன்னுடைய அப்ராக்ருதமான உருவத்தை ஸாக்ஷாத்காரஞ் செய்வித்து ஜீவனைக் காட்டிலும் விலக்ஷணனுன பரமாத்மாவாகிய தன்னுடைய உண்மையைத்தெளிய அறிவிக்க முயன்று ஸத்யமாக மொழிந்த வசனத்தை உனக்குச் சொல்லுகிறேன், கேட்பாயாக. தேவமனுஷ்யாதி பூதங்களுக்கு மேலான ப்ரபுவும் தர்மோபதேசஞ் செய்பவனும் ஆதி தேவனுமாகிய நான்முகன் பகவானுடைய நாபீகமலமாகிற தனது இருப்பிடத்தைத் தேடிப்பார்க்கும் பொருட்டு முதலில் ஜலத்தில் மூழ்கி மேற்கிளம்பி மீளவும் தனது இருப்பிடஞ் சேர்ந்து அதில் இருந்து கொண்டே உலகங்களைப் படைக்கவிரும்பி, எங்ஙனம் படைக்கவேண்டுமென்று ஆலோசித்தான். அங்ஙனம் ஆலோசிக்கத் தொடங்கின அந்த ப்ரஹ்மதேவன் எத்தகைய அறிவினுல் ப்ரபஞ்சத்தைப் படைக்கும் ப்ரகாரம் தெரியுமோ, அத்தகைய அறிவு நேரப்பெருதிருந்தான். (அவன் உலகங்களைப் படைக்க விரும்பியும் இவ்விதமாகப் படைக்கவேண்டுமென்று தெரியாமல் அறிவற்றிருந்தான்). அவன் உலகங்களைப் படைப்பதற்குரிய அறிவை எவ்வகையில் பெறலாமென்று அதன் உபாயத்தை ஆலோசித்துக்கொண்டிருக்கையில், ஒருக்கால் இரண்டுதரம் சொல்லப்பட்டதும் இரண்டு எழுத்துக்களடங்கியதுமாகிய ஓர் வசனத்தை ஜலத்தின் ஸமீபத்தில் செவியுற்றுன். அவ்வசனத்தில், ககரம் முதல் மகரம் வரையிலும் உள்ள இருபத்தைந்து அக்ஷரங்களில் பதினுருவது அக்ஷரமும் இருபத்தொன்ருவது அக்ஷரமும் அடங்கியிருந்தன. மன்னவனே! கைம்முதலில்லாத ஏழைகளுக்கு தனமாகப் பெரியோர்கள் எதை நினைக்கின்ருர்களோ, (எதனுல் தபோதனர்களென்று ப்ரஸித்தி

பெறுகிறார்களோ) அதுவே அவ்வசனத்தின் பொருள். (தபதப-தவஞ்செய் தவஞ்செய் என்று இரண்டு தரஞ் சொல்லக் கேட்டான்). 'தப தப' என்னும் அவ்வசனத்தைக் கேட்டு அவ்வசனத்தை மொழிந்தவன் எவனென்று பார்க்கவிரும்பித் தனது இடத்தினின்று சலித்துத் திசைகளையெல்லாம் பார்த்து அத்திசைகளில் எங்கும் மற்ற எந்த வஸ்துவையும் காணமல் மீளவும் தனது இருப்பிடமே சேர்ந்து ஒருவனால் நேரே தூண்டப்பெற்றவன்போல் அதைத் தனக்கு ஹிதமாக நினைத்துத் தவத்தில் மனத்தை நிலைநிறுத்தினன். அப்பால் அந்த ப்ரஹ்மதேவன், தவஞ்செய்பவர்களில் இவனைக்காட்டிலும் சிறந்தவன் மற்றெவனும் இல்லையென்னும்படி மிகுந்த தவமுடையவனும் தான் செய்யவேண்டிய தவத்தில் வீணாகாத ஸங்கல்பமுடையவனும் ப்ராணவாயுவையும் மனத்தையும் ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் ஆகிய இருவகை இந்த்ரியங்களையும் அடக்கி வென்றவனுமாகி தேவமானத்தினல் ஆயிரம் வர்ஷங்கள் வரையிலும், உலகங்களை யெல்லாம் தெளிவுற அறிவிக்கும்படியான தவத்தைச் செலுத்தினன். அங்ஙனம் தவத்தினல் நன்கு ஆராதிக்கப்பெற்ற பகவான் மனுஷ்யலோகத்தையும் பரமபதமென்கிற தனது லோகத்தையுங் காட்டினன். அந்தப் பரமபதம் தன்னைக் காட்டிலும் சிறந்த லோகம் மற்றொன்றும் இல்லாதபடி மிகுந்தமேன்மையுடையது. அவ்விடத்தில் அவித்யை கர்மம் வாஸனை ருசி ப்ரக்ருதி ஸம்பந்தம் ஆகிய இவ்வருத்தங்களும் அஹங்கார மமகாரங்களால் வரும் மதிமயக்கமும் பயமும் உண்டாகாது. தம்மைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை நேரே கண்டனுபவிப்பவர்களும் மிகுந்த ஜ்ஞானமுடையவர்களுமாகிய நித்யர்களும் முக்தர்களும் அங்கு வாஸஞ்செய்வார்கள். அந்தப் பரமபதமென்கிற

வைகுண்டலோகத்தில் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் அவற்றின் கலப்புடையதான ஸத்வமும் நடையாடா. ராகத்வேஷாதிகளும் அஹங்கார மமகாரங்களால் வரும் மதிமயக்கமும் ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகிய இவ்விரண்டு குணங்களால் விளையுமவை. ஒருக்கால் தெளிவுண்டாகப் பெறுகை மிஸ்ரஸத்வத்தின் கார்யம். அக்குணங்களின் நடையாட்டமே இல்லாமையால் அவற்றின் கார்யமான ராகத்வேஷாதிகளும் அங்கு நடையாடமாட்டா. அது முழுவதும் சுத்த ஸத்வமயமாயிருக்கும். காலத்தின் பராக்ரமம் அங்கு உபயோகப்படாது. காலத்தினால் வரும் விகாரங்கள் எவையும் அவ்விடத்தில் உண்டாகமாட்டா. ஸத்வ ரஜஸ் தமோகுணங்களுக்கிடமான ப்ரக்ருதியின் பேச்சே அவ்விடத்தில் கிடையாது. அது அப்ராக்ருதமாயிருக்கும். இனி அந்த ப்ரக்ருதியைப் பற்றி வரும் மற்ற தோஷங்கள் இல்லையென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? பகவானைத் தொடர்ந்திருப்பவரும் தேவாஸுரர்களால் பூஜிக்கப்படுமவர்களுமாகிய மஹானுபாவர்களே அவ்விடத்தில் புலப்படுவார்கள். அவர்கள் கறுத்துப் பளபளவென்று ஜ்வலிப்பவர்களும் தாமரை யிதழ்போன்ற கண்கள் அமைந்தவர்களும் பீதாம்பரம் உடுத்தவர்களும் மிகுந்த ஒளியும் மென்மையும் உடையவர்களும் எல்லோரும் நான்கு புஜமுடையவர்களுமாகி ஜ்வலிக்கின்ற ரத்னங்கள் இழைக்கப்பெற்றுச்சிறந்தவைகளும் ஸ்வர்ணத்தினால் இயற்றினவைகளுமான ஆபரணங்களை அணிந்து மிகுந்த லாவண்யத்துடன் (திருசிருப்புடன்) ப்ரகாசித்துக் கொண்டிருப்பார்கள். அன்றியும், பவழம் வைடூர்யம் தாமரைக்கிழங்கு இவற்றின் நிறமுடையவர்களும் குண்டலங்கள் கிரீடம் மாலை இவை விளங்கப் பெற்றவர்களுமாயிருப்பார்கள்.

பளபளவென்று ப்ரகாசிப்பவைகளும் மஹாநுபாவர்களாகிய நித்யமுக்தர்கள் ஏறி வீற்றிருக்கப் பெற்றவைகளுமான அழகிய விமானங்கள் வரிசை வரிசையாக நாற்புறத்திலும் அங்குத் திகழ்வுற்றிருக்கும். சிறந்த மாதரார்மணிகளின் தேஹகாந்திகளால் விளக்கமுற்று மின்னலோடுகூடின மேகங்களின் வரிசைகள் சூழ்ந்த ஆகாயம்போல் அவ்வுலகம் மிகவும் அழகாயிருக்கும். மாதரார்மணிகள் மின்னல்கள் போலும், விமானங்களின் வரிசைகள் மேகங்களின் வரிசைகள் போலும், அவ்வுலகம் ஆகாயம் போலும் விளக்கமுற்றிருக்கும். அங்கு மிகுந்த அறிவுடைய ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் சிறந்த உருவமுடையவளாகித் தனது பரிஜனங்கள்போல் அடங்கின பூமி நீளை முதலியவர்களோடு பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பூஜித்துக்கொண்டிருப்பாள். அம்மலர் மாது சில காலங்களில் ஊசலில் உட்கார்ந்து வஸந்தருதுவைத் தொடர்ந்து வருமவைகளான குயில் கிளி வண்டு முதலியவற்றால் பாடப்பெற்றுத் தானும் பகவானுடைய சரித்ரங்களை இனிதாகப் பாடிக்கொண்டிருப்பாள். இத்தகையதான அந்த ஸ்ரீவைகுண்ட லோகத்தில், தவம் முதலிய யஜ்ஞங்களை நடத்துமவனும் அவற்றால் ஆராதிக்கப் படுமவனும் அவற்றிற்குப் பலன் கொடுப்பவனும் சேதநாசேதன ரூபமான ஜகத்திற்கு நாதனும் பஞ்சராத்ர தர்மத்தில் நிலைநின்ற பக்தர்களனைவர்க்கும் தனது லோகத்தைக் கொடுத்து அவர்களை ரக்ஷிப்பவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய பரமபுருஷனை ப்ரஹ்மதேவன் கண்டான். ஸுநந்தர் நந்தர் ப்ரபகர் அர்ஹணர் முதலிய முக்யர்களான அநுசரர்களால் (ப்ருத்யர்களால்) நாற்புறத்திலும் பணியப்பெற்று எல்லோரிலும் சிறப்புற்று ப்ருத்யர்களுக்கு அநுக்ரஹஞ் செய்வதில் ஊக்கமுடையவனும் அம்ருதம் போன்ற

கடைக்கண்ணோக்கமும் தெளிந்த புன்னகையும் செய்ய தாமரைக்கண்களும் திருச்செய்யமுகமும் அமைந்து விளங்குகின்றவனுமாகிய பரமபுருஷனைக் கண்டான். மற்றும், திருமார்பில் திகழ்கின்ற ஸ்ரீமஹா லக்ஷ்மியால் அலங்கார முற்றவனும் பூஜிக்கத்தகுந்ததும் சிறப்புடையதுமான ஆஸனத்தில் உட்கார்ந்திருப்பவனும் இருபத்து நான்கு தத்வங்களால் சூழப்பட்டவனும், தனக்கு இயற்கையில் ஏற்பட்டவைகளும் மற்ற ஸம்ஸாரிகளிடத்தில் அவரவர் கர்மத்திற்குத் தகுந்தபடி நிலையின்றி நிற்பவைகளுமாகிய ஐஶ்வர்யம் வீர்யம் யஶஸ்ஸு ஶோபை ஜ்ஞானம் வைராக்யம் இவற்றின் அதிஷ்டான தேவதைகளோடு கூடினவனும் தனது ஸ்தானமாகிய க்ஷேத்ரஜ்ஞனிடத்தில் விளையாடலுற்றிருப்பவனும் அந்த க்ஷேத்ரஜ்ஞனை நியமிப்பவனுமாகிய பரமபுருஷனைக் கண்டான். ப்ரஹ்மதேவன் அந்தப் பரமபுருஷனைக் கண்ட ஸந்தோஷத்தினால் மனம் நிறைந்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று ப்ரீதியின் மிகுதியால் கண்களில் ஆநந்த நீர் பெருகப்பெற்றவனுமாகி, பரமஹம்ஸர்கள் அனுஷ்டிக்கிற பக்தி மார்க்கத்தினால் அடையக்கூடியதான அந்த பகவானுடைய பாதாரவிந்தத்தை நமஸ்கரித்தான். ப்ரஜைகளைப் படைக்கையாகிற கார்யத்தில் முயன்றவனும் தனது ஆஜ்ஞைக்கு உரியவனும் தன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுமாகிய அந்த ப்ரஹ்மதேவனைக் கையில் பிடித்துக்கொண்டு அவனிடத்தில் மிகுந்த மனவிருப்பமுடைய பகவான் புன்னகையின் சோபையால் திகழ்கின்ற உரையுடன் இங்ஙனம் இனிதாக மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— வேதங்களை ஓதி உணர்ந்து நெஞ்சிற்கொண்ட நான்முகனே! நீ உலகங்களைப் படைக்கவேண்டுமென்று விரும்பி நெடுநாள் தவஞ்

செலுத்தி என்னை ஸந்தோஷப்படுத்தினாய். ஐம்பத்திற்காகக் கபடதவஞ்செய்கிற குத்ஸிதயோகிகளுக்கு என்னை ஸந்தோஷப்படுத்த முடியாது. ஸரியான தவஞ் செய்தாயாகையால் உன்னுடைய தவத்திற்கு நான் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தேன். வேண்டின வரங்களை யெல்லாம் கொடுக்கவல்லனாகிய என்னிடத்தில் உனக்கு இஷ்டமான வரத்தை வேண்டுவாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. ஓ ப்ரஹ்மதேவனே! ப்ராணிகள் தாம் விரும்பின நன்மைகளை ஸாதிக்கும்பொருட்டுச் செய்கிற ப்ராயாஸமெல்லாம் என்னைக் காணும் வரையிலுமே. என்னைக் கண்டபின்பு அந்த ப்ரயாஸங்கள் எவையும் வேண்டியதில்லை. பிறகு விருப்பங்களெல்லாம் தானே கைகூடும். என்னுடைய ஸங்கல்பத்தின் ப்ரபாவத்தினால்தான் உனக்கு இந்த வைகுண்ட லோகத்தைப் பார்க்கும்படி நேரிட்டது. நீ இங்ஙனம் இந்த வைகுண்ட லோகத்தைக் காண்கின்றனையே, இது என்னுடைய ஸங்கல்பத்தின் ப்ரபாவமே. 'என்னுடைய தவமஹிமையாலன்றோ, நான் இந்த லோகத்தைக் காண நேரிட்டது,' என்று நினையாதே. ஒருவருமில்லாத ஏகாந்த ஸ்தலத்தில் 'தபதப' என்னும் வசனத்தைக் கேட்டல்லவோ நீ தவஞ்செய்யத் தொடங்கினது? நீ கர்மத்தினால் மதிமயக்கமுற்று ஒன்றுந்தெரியாமல் சிந்தித்துக் கொண்டிருக்கையில், உன்மீது அருள் புரிந்து நானே உனக்குத் தவஞ்செய்யும்படி சொன்னேன். ஆகையால் நீ இந்த வைகுண்ட லோகத்தைக் காணப்பெற்றது என்னுடைய ப்ரபாவமே. தவமே என்னுடைய ஹ்ருதயம். பாபமற்றவனே! தவத்தினாலேயே நான் என்னை இவ்வுலகங்களாகப் படைக்கின்றேன். அந்தத் தவத்தினாலேயே இதையெல்லாம் ஸம்ஹாரஞ் செய்கின்றேன். இவ்வுலகத்தைப் பாதுகாப்பதும் அந்தத் தவத்தினாலேயே. பிறர்க்கு

எள்ளளவும் ஆசரிக்கமுடியாத தவமே என்னுடைய வீர்யம் '(ப்ரபாவம்)' என்றான். இங்ஙனம் பகவானால் அனுக்ரஹஞ் செய்யப்பெற்ற ப்ரஹ்மதேவன் தான் அறியவிரும்பின இரண்டு அர்த்தங்களை விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ஓ பகவானே! நீ ஸமஸ்த ப்ராணிகளின் ஹ்ருதயத்திலும் புகுந்திருக்கின்றவன்; ஆனதுபற்றியே அவருடைய ஸமஸ்த இந்த்ரியங்களின் வ்யாபாரத்தையும், நேரே காண்கின்றவன். ஆனதுபற்றியே எவ்விதத்திலும் தடைபடாத அறிவினால் அவரவர் செய்ய விரும்புவதையெல்லாம் நீ நன்றாக அறிவாய். இது ப்ரஸித்தமே. ஆயினும், நாதனே! நான் வேண்டுகின்றேன். என் ப்ரார்த்தனையைத் தலைக்கட்டுவாயாக. கர்மத்தினால் விளையும் ப்ராக்ருத உருவமில்லாத உன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையும், நீ சேதனாசேதனங்களில் உட்புகுந்து அதுவே நீ என்னும்படியிருக்கிற உன்னுடைய மற்றொரு உருவத்தையும் உள்ளபடி அறியுமாறு எனக்கு புத்தியைக் கொடுப்பாயாக.பலவகைச் சக்திகள் நிறைந்த நீ இருபத்தைந்து தத்வங்களாகிற சக்திகளால் தோற்றுவித்த லோக ஸ்வரூபனாகிய உன்னை உனது ஆச்சர்ய சக்தியால் நீயே அழிப்பதும் படைத்தநாள் முதல் அழித்த நாள் வரையிலும் அத்தகையனான தன்னைப் பாதுகாப்பதும் செய்துகொண்டு எவ்விதத்திலும் வீணாகாத ஸங்கல்பம் உடையவனாகி, நூல்பூச்சி நூல் கூடுகளைப் பிணைப்பதுபோல் விளையாடுகின்றனை. அங்ஙனம் நீ செய்கிற ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நான் உள்ளபடி அறியுமாறு எனக்கு புத்தியைக் கொடுப்பாயாக. மாதவனே! இவ்விரண்டுப்ரார்த்தனைகளையும் தலைக்கட்டவேண்டும். ஜ்ஞா

ஞாதிகுணங்கள் நிறைந்த பகவானே! நீ காண்பித்த ப்ரகாரம் நான் சோம்பலின்றி ப்ரஜைகளைப்படைக்குங்கார்யத்தை நடத்திக்கொண்டு வருவேனாக. இங்ஙனம் ஸ்ருஷ்டிவ்யாபாரத்தில் முயன்ற அஹங்கார மமகாரங்களால் கட்டுண்டு அழியாதிருக்குமாறு நீ என்மீது அருள்புரியவேண்டும். மஹாநுபாவனே! நாதா! உலகத்தில் நண்பனாகிய ஒருவன் தனது நண்பனை வெகுமதிப்பதுபோல், உன்னால் வெகுமதி செய்யப்பெற்று ப்ரஜைகளைப் படைக்கையாகிற உனது பணிவிடையில் நான் தழுதழுப்பின்றி தைர்யத்துடன் ப்ராணிகளை உத்தமம் மத்யமம் அதமம் என்கிற பிரிவுகளுடன் ஸ்ருஷ்டித்துக்கொண்டு வருவேனாயின், அப்பொழுது எனக்கு 'நாம் உலகங்களை யெல்லாம் படைக்கின்றோம். எல்லாம் நமக்கு உட்பட்டவைகளே. நமக்கு எல்லாத்திறமைகளும் உண்டு. நமக்கு அழிவே இல்லை, என்று இங்ஙனம் மனத்தில் பெரிய கர்வம் ஒன்று உண்டாகும். அது உண்டாகாதிருக்கும்படி எனக்கு அருள்புரியவேண்டும்' என்றான். இங்ஙனம் ப்ரஹ்மதேவனால் ப்ரார்த்திக்கப் பட்ட பகவான் அவனை அனுக்ரஹிக்க முயன்று தனது பராவரஸ்வரூபத்தைத் தெளிவுற அறிவிப்பவனாகி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— முக்யமாக அறிய வேண்டிய பகவத்ஸ்வரூபத்தைப் பற்றின ஜ்ஞானத்தையும் அதற்கு அங்கமாக அறியவேண்டிய சேதநாசேதன ஸ்வரூபத்தைப் பற்றின ஜ்ஞானத்தையும் ஶாஸ்த்ரத்தையும் அதனால் விளையக்கூடிய கர்மயோக ஜ்ஞான யோகாதி யோகத்தையும் அவற்றின் ரஹஸ்ய மந்த்ரங்களையும் உனக்கு நான் சொல்லுகிறேன். அவற்றை என்னிடத்தினின்று தெரிந்துகொள்வாயாக. அதைத் தெரிந்து கொண்டு நிதியைப்போல் மறைத்துப் பாதுகாத்து

வர வேண்டும். பதறி எவர்க்கும் வெளியிடலாகாது. 'நீ சொல்லுவதை யெல்லாம் நான் தெரிந்துகொள்ள வல்லனல்லனோ' என்று சங்கிக்கவேண்டாம். நான் எவ்வளவினனோ, எத்தகைய ஸ்வபாவமுடையவனோ, என்னுடைய உருவமும் குணமும் செயலும் எத்தகையதோ, அப்படிப்பட்ட என் ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி ஆகிய அவற்றை யெல்லாம் அங்ஙனமே எனது அனுக்ரஹத்தினால் நீ உள்ளபடி நன்றாக அறியப் பெறுவாய். சேதநாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதான யாதொரு வஸ்து உண்டோ, அவ்வஸ்து நானே. ஸ்ருஷ்டிக்கு முன்பு நானொருவனே இருந்தேன். ஆகையால் ஸ்ருஷ்டிக்கு முன்பிருந்த வஸ்துவும் நானே. பின்பு ஸ்ருஷ்டிகாலத்தில் பிறந்த நீயும் மற்ற கார்ய ஸமூஹங்களும் நானே. கார்யமான சேதநாசேதனங்களும் நானே. மீளவும் ஸம்ஹாரகாலத்தில் எவன் மிகுந்திருப்பானோ அவனும் நானே. ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டு அவ்விரண்டையும் சரீரமாகக் கொண்டு ஸர்வஜ்ஞனும் (எல்லாமறிந்தவனும்) ஸர்வசக்தியும் ஸர்வேஸ்வரனுமாகிய நான் ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரித்துச் சொல்லவும் அறியவும் முடியாத நாமரூபங்களையுடைய ஸூக்ஷ்மமான ப்ரக்ருதியையும் புருஷனையும்சரீரமாகக் கொண்டிருந்து, ஸ்ருஷ்டிகாலத்தில் பிரித்தறியக்கூடிய நாமரூபங்களையுடைய ஸ்தூலமான ப்ரக்ருதியையும் புருஷனையும் சரீரமாகக் கொண்டு அவற்றின் நாமரூபங்கள் அனைத்தும் என்னளவில் வந்து முடியப்பெற்றிருந்தேன். அங்ஙனம் ஸூக்ஷ்மமான ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய நானே காரணம். ஸ்தூலமான ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய நானே கார்யம். பிரித்துச் சொல்லக்கூடிய பேர்களும் உருவங்களும்

அமைந்த சேதனுசேதன ஸ்வரூபமான இவ்வுலகங்களெல்லாம் நானே. இவற்றை ஸ்ருஷ்டிப்பதற்கு முன்பு இவையெல்லாம் பிரித்துச் சொல்லமுடியாத பேர்களும் உருவங்களும் உடையவையாகி என்னிடத்தில் அடங்கியிருந்தன. இப்படி நான் கார்யமாயிருக்கும் பொழுதும் காரணமா யிருக்கும்பொழுதும் சேதனுசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருப்பினும், அவற்றில் சேதனனுக்குள்ள அறிவின்மை வருத்தம் கர்மத்திற்கு உட்பட்டிருக்கை முதலிய தோஷங்களும், அசேதனத்திற்குள்ள மாறுந்தன்மை ஜடமாயிருக்கை முதலிய விகாரங்களும் என்னிடத்தில் ஸம்பந்திக்கமாட்டா. சரீரத்தின் கார்யமான பால்யம் யௌவனம் சிறுமை பெருமை முதலிய விகாரங்கள் ஜீவனுக்கு ஸம்பந்திக்க மாட்டாதாப்போல் அந்தச் சேதனுசேதனங்களிரண்டிற்கும் உள்ள தோஷங்கள் எவையும் எனக்கு ஸம்பந்திக்கமாட்டா. நான் கார்யமா யிருத்தலும் காரணமாயிருத்தலும் எனக்குச் சரீரமான சேதனுசேதனங்களின் மூலமாய்ப் பொருந்துகின்றன. இங்ஙனம் சேதனுசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருப்பினும் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொன்னேன். இனி அதற்கு அங்கமாக அறியவேண்டிய சேதன அசேதனங்களின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஆத்மா ஜ்ஞானுநந்த ஸ்வரூபனுயிருப்பான். அனைவரும் ஆசைப்படத்தகுந்தபுருஷார்த்தம் ஜ்ஞானுநந்தங்களே. அங்ஙனம் ஜ்ஞானுநந்த ஸ்வரூபனுகையால் சிறந்த புருஷார்த்தமாகிய சேதனதத்வத்தை யொழிய அசேதனமான ப்ரக்ருதி தனியே தோற்றும். ப்ரக்ருதியின் தோற்றத்தில் சேதன தத்வம் தோற்றுது. அங்ஙனமே சேதனதத்வம் தோற்றும் பொழுது ப்ரக்ரு

திதத்வம் தோற்றுது. இங்ஙனம் ப்ரக்ருதியின் தோற்றத்தில் ஆத்மதத்வம் தோற்றுமையும், ஆத்மதத்வம்தோற்றும் பொழுது ப்ரக்ருதிதத்வம் தோற்றுமையும் பரமாத்மாவினுடைய மாயையின் கார்யமே. இங்ஙனம் ஒன்று தோற்றும் பொழுது மற்றொன்று தோற்றுமைக்குக் காரணம் இரண்டும் ஒன்றோடொன்று பொருந்தாத ஸ்வபாவமுடையவைகளாயிருக்கையே. இதற்கு இருட்டையும் வெளிச்சத்தையும் த்ருஷ்டாந்தமாகக் காண்க. வெளிச்சத்தில் இருட்டு தோற்றுது. இருட்டிலும் வெளிச்சம் தோற்றுது. அங்ஙனமே சேதனுசேதனங்களிரண்டும் ஒன்று தோற்றும் பொழுது மற்றொன்று தோற்றுதிருக்குந் தன்மையுடையவை. சேதனமான ஆத்மதத்வம் அணுவாய் நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கும். அசேதனமான ப்ரக்ருதிதத்வம் ஸ்தூலமாய் அநித்யமாய் ஜடமாயிருக்கும். ஆகையால் இவற்றின் ஸ்வபாவங்கள் ஒன்றோடொன்று பொருந்துமவையல்ல. இங்ஙனம் ஒன்றோடொன்று பொருந்தாமல் விலக்ஷணமாயிருக்கின்ற சேதனுசேதனங்களின் ஸ்வரூபத்தை மொழிந்தேன். மேல், நான் அந்தச் சேதனுசேதனங்களில் புகுந்து அவற்றைப் பாதுகாப்பவனுகி அவற்றின் தோஷங்களால் தீண்டப்படாதிருக்கும் விதத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஆகாயம் வாயு தேஜஸ்ஸு என்கிற இம்மஹா பூதங்கள் குடம் முதலிய நானுவிதமான வஸ்துக்களில் புகுந்திருப்பினும், உடைதல் முறிதல் சுக்கலாதல் முதலிய அவற்றின் விகாரங்களில் பற்றற்றவைகளாகையால் எங்ஙனம் அவற்றில் புகாதவைபோலிருக்கின்றனவோ, அங்ஙனமே நானும் அந்தச் சேதனுசேதனங்களில் அந்தராத்மாவாய் உள்ளே புகுந்திருப்பினும், உட்புகாதவன்போல் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெருதிருப்பேன். மற்றும், அந்த ஆகாசம் முதலிய

மஹா பூதங்கள் குடம் முதலிய வஸ்துக்களில் உட்புகுந்து அவ்வளவோடு முடியாமல் வெளியிலும் எப்படி நிறைந்திருக்கின்றனவோ, அப்படியே நானும் சேதனுசேதனங்களில் உட்புகுந்து அவ்வளவில் அடங்காமல் வெளியிலும் வ்யாபித்திருப்பேன். ஆகையால் நான் எவ்வகையிலும் அளவிடமுடியாதவன். நான்முகனே! இங்ஙனம் அளவில்லாமையாகிற என்னுடைய ஸ்வரூபத்தையும், ஸர்வஜ்ஞனுகை ஸர்வசக்தியாயிருக்கை முதலிய என்ஸ்வபாவத்தையும், சேதனுசேதனங்களாகிற எனது உருவத்தையும், நான் அவற்றில் புகுந்து அவற்றின் தர்மங்கள் எவையும் தீண்டப் பெருதிருக்கைமுதலிய என் குணத்தையும், உலகங்களைப் படைத்தல் பாதுகாத்தல் ஸம்ஹரித்தல் ஆகிய என்செயலையும் உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். அப்பா! நான்முகனே! பரமாத்மாவின் ஸ்வரூபத்தை அறியவேண்டுமென்னும் விருப்பமுடையவன், ஒன்ருெடொன்று விலக்ஷணமான சேதனுசேதனங்களுக்கு அந்தராத்மாவாயிருக்கின்ற பரமாத்மாவின் ஸ்வரூபம் ஒன்றே உள்ளதென்றும் அதையொழிய மற்றெதுவும் இல்லையென்றும் இவ்வளவே அறியவேண்டும். இது அவம்யமாய் அறிந்துகொள்ளவேண்டியதே. இதையொழிய அறியவேண்டியது மற்ருென்றும் இல்லை. இங்ஙனம் ஒன்றுக்கொன்று விலக்ஷணமான சேதனுசேதனங்களைக் காட்டிலும் என் ஸ்வரூபம் விலக்ஷணமாயிருக்கும். அசேதனமான ப்ரக்ருதிதத்வம் எங்கும் நிறைந்திருக்குமேயாயினும் க்ஷணந்தோறும் மாறுந்தன்மையது. முதலில் உருண்டையாயிருப்பதும் பிறகு குடமாவதும் பிறகு உடைந்து இரண்டு ஓடாவதும் பிறகு சுக்கல் சுக்கலாவதும் பிறகு பொடியாவதும் பிறகு தூளாவதுமாகி முன்னிருந்த உருவம் பின்பிருக்கமாட்டாதாகையால் அசேதனம் மாறுந்தன்மையதாயி

ருக்கும். சேதன தத்வம் அங்ஙனம் மாறுந்தன்மையதன்றேயாயினும் அணுவாயிருக்கும். என்னுடைய ஸ்வரூபம் என்றும் மாறாமல் ஒரே ரீதியாயிருக்குமாகையால் அசேதனமான ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதும், எங்கும் நிறைந்து விபுவாயிருக்கையால் சேதனமான ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதுமாயிருக்கும். இங்ஙனம் பராவரஸ்வரூபங்களை உனக்கு மொழிந்தேன். இனி, உலகங்களைப் படைக்கும்பொழுது உனக்கு அஹங்கார மமகாரங்களால் மதிமயக்கம் உண்டாகாதிருப்பதற்கு ஓர் உபாயஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக. 'சேதனுசேதனங்கள் அனைத்தும் எனக்குச் சரீரமாகி எனக்கு உட்பட்டிருக்கும். என்னையொழிய ஸ்வதந்த்ரமாயிருக்கும் வஸ்து எதுவுமே இல்லை' என்று மொழிந்தேனே. இந்த என் மதத்தை மிகுந்த மனவூக்கத்துடன் எப்பொழுதும் மறக்காமல் மனத்தில் பாவித்துக் கொண்டு வருவாயாயின், ஸ்ருஷ்டி காலங்களில் உனக்கு மதிமயக்கம் உண்டாகாது. இங்ஙனமே ஸம்ஹார காலங்களில் ருத்ரனும் நான் சொன்ன மதத்தை மறவாமல் அனுஸந்தித்துக்கொண்டு வருவானாயின், அவனும் அக்காலங்களில் மதிமயக்கம் உண்டாகப் பெறுதிருப்பான்' என்றான். கர்மத்தினால் விளையும் உற்பத்தி இல்லாதவனும் தன்னைப்பற்றினாருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவான் வ்யஷ்டி பூதங்களான தேவாதி பூதங்களுக்கு மேலான அதிபதியாகிய ப்ரஹ்மதேவனைக் குறித்து இங்ஙனம் உபதேசித்து, அவன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவனுக்குக் காண்பித்த தனது உருவத்தை அந்தர்த்தானஞ் செய்தான் (மறைத்துவிட்டான்). ஸ்ருஷ்டிக்கவேண்டிய தேவ மனுஷ்யாதியான ஸமஸ்த ப்ராணிகளையும் நெஞ்சில்

நினைத்து அவ்வவற்றின் கர்மங்களை மனத்தில் ஆராய்ந்துகொண்டிருக்கையால் ஸமஸ்த பூதஸ்வரூபனாகிய அந்த ப்ரஹ்மதேவன், அப்பொழுது தன் கண்ணுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்த உருவத்துடன் மறைந்த பகவானுக்கு அஞ்சலிசெய்து இவ்வுலகத்தையெல்லாம் முன் கல்பத்தில் ஸ்ருஷ்டித்தாற்போலவே ஸ்ருஷ்டித்தான். அனந்தரம், பகவானிடத்தில் ஆசரிக்கும் தர்மங்களை உபதேசித்து உலகங்களை வாழ்விக்குந் தன்மையுடைய ப்ராஜாபதி (ப்ரஹ்மதேவன்) ப்ரஜைகளுக்கு எதைச்செய்தால் நன்மை உண்டாகுமென்று ஆலோசித்துத் தன்னுடைய ப்ரயோஜனமாக எதையும் எதிர்பாராமல் ஒருக்கால் யமநியமங்களை அனுஷ்டித்தான். மன்னவனே! அங்ஙனம் யமநியமாதிகளை அனுஷ்டித்துக் கொண்டிருக்கையில், அவனது புத்ரர்களாகிய மரீசி முதலியவர்களில் அவனுக்கு மிகுதியும் ப்ரீதிக்கிடமாயிருப்பவரும் அவனை அனுஸரித்துப் பணிவிடைசெய்பவரும முனிவர்களில் சிறந்தவரும் பகவானிடத்தில் பக்தியுடையவர்களில் பெருமை பெற்றவருமாகிய நாரதர், மாயைக்கு ப்ரபுவாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மாயையை (ஆஸ்சர்ய சக்தியை) அறிய விரும்பினவராகி ஸ்வபாவம் விநயம் வெளியிந்த்ரியங்களை அடக்கி வெல்லுகையாகிற தமம் உள்ளிந்த்ரியத்தை (மனத்தை) அடக்கி வெல்லுகையாகிற ஶமம் ஆகிய இவற்றால் தந்தையை மிகுதியும் ஸந்தோஷப்படுத்தினார். உலகங்களுக்கு முப்பாட்டனும் தனக்குத் தந்தையுமாகிய அந்த ப்ரஹ்மதேவன் தனது ஶுஶ்ருஷையால் ஸந்தோஷமுற்றிருக்கக் கண்டு தேவர்ஷியாகிய நாரதர், அந்த ப்ரஹ்மதேவனைப் பார்த்து, நீ இப்பொழுது என்னைக் குறித்து எதை வினவினையோ, அதையே வினவினார் அங்ஙனம் வினவப்பெற்ற ப்ரஹ்மதேவன் தனக்கு பகவான் சுருக்கமாகச் சொன்னதும் பத்து லக்ஷணங்கள்

அமைந்ததுமாகிய இந்த பாகவதமென்னும் புராணத்தைத் தனது புதல்வராகிய அந்த நாரதருக்கு ப்ரீதியுடன் மொழிந்தான். அந்த நாரதர், ஸரஸ்வதி நதியின் கரையில் பரப்ரஹ்மத்தை த்யானித்துக் கொண்டிருப்பவரும் மஹா தேஜஸ்வியும் வேதார்த்தங்களின் உண்மையை உணர்ந்தவருமாகிய வ்யாஸமுனிவர்க்குச்சொன்னார். நான் அந்த வ்யாஸமுனிவரிடத்தினின்று இந்தப் புராணத்தைக் கலியுகத்தின் முதலில் அத்யயனஞ் செய்தேனென்பதை உனக்கு முன்னமே மொழிந்தேன். அப்படி சுத்த ஸம்ப்ரதாய வழியில் வந்த இந்த ஸ்ரீபாகவத மஹா புராணத்தை நான் சொல்லிக்கொண்டு வருகையில் உன்னுடைய கேள்விகள் அனைத்திற்கும் உத்தரம் வரும். 'இவ்வுலகமெல்லாம் வைராஜனென்னும் பேருடைய அநிருத்தனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ப்ரஹ்மாவிடத்தினின்று எப்படி உண்டாயிற்றோ அதை எனக்குச் சொல்லவேண்டும்' என்று வினவினையே, அதற்கு முதலில் மறுமொழி கூறுகிறேன். மற்ற கேள்விகள் அனைத்திற்கும் க்ரமமாக உத்திரம் சொல்லிக்கொண்டு வருகிறேன், கேட்பாயாக. ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீ சுகர் பரீக்ஷித்தின் கேள்விகளுக்கு மறுமொழி கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இந்த ஸ்ரீ பாகவத புராணத்திற்குப் பத்து லக்ஷணங்கள் உண்டென்றேனே. அவற்றை முதலில் சொல்லுகிறேன், கேட்பாயாக. பிறகு உன்கேள்விகளுக்கு மறுமொழி கூறுகின்றேன். இந்தப் புராணத்தில்-ஸர்க்கம் விஸர்க்கம் ஸ்தானம் போஷணம் ஊதிகள் மன்வந்தரகதை ஈச்வரகதை நிரோதம் முக்தி ஆச்ரயம் ஆகிய இந்தப் பத்து அர்த்தங்கள் கூறப்படுகின்றன. இவையே பத்துலக்ஷணங்கள்.

இந்தப் பத்து லக்ஷணங்களும் இந்த பாகவதத்தில் அமைந்திருக்கையால் இது புராணமென்னும் பேர்பெற்றது. இந்தப்பத்து லக்ஷணங்களில் ஆஶ்ரயமென்கிற பத்தாவது லக்ஷணமே முக்யம். ஆஶ்ரயமென்பது பரப்ரஹ்மமே. அந்தப் பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் நன்றாகத் தெரியும் பொருட்டுப் பராவரவஸ்துக்களின் உண்மையை அறிந்த பெரியோர்கள் ஸர்க்கம் முதலிய மற்ற ஒன்பது லக்ஷணங்களையும் தாங்கள் கேட்டபடி ஸாக்ஷாத்மாக வர்ணிக்கின்றார்கள். இங்ஙனம் பத்தாவதான ஆஶ்ரயமென்கிற லக்ஷணமே முக்யமாகி மற்ற ஒன்பதும் அதன் ஸ்வரூபத்தை விசதப் படுத்த வக்தவையாகையால் இந்த ப்ரபந்தம் முழுவதும் ஒன்றையே முக்யமாக எடுத்துரைப்பதாகி ஒரு சாஸ்த்ரமாகவே இருக்கும். பல அர்த்தங்களைச் சொல்லுகையால் வெவ்வேறு க்ரந்தங்களாமோ என்கிற சங்கைக்கு இடமில்லை. இந்தப் பத்து லக்ஷணங்களையும் தனித்தனியே விவரித்துச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஆகாயம்முதலியபஞ்ச பூதங்கள் சப்த தன்மாத்ரை முதலிய தன் மாத்ரைகள் ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் புத்தியெனப்படுகிற மஹத்தத்வம் ஆகிய இவற்றின் உற்பத்தியே ஸர்க்கமென்று கூறப்படும். நான்முகன் பரமபுருஷனுடைய தூண்டுதலால் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் வைஷம்யத்தை அடைந்து (ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களில் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்று) நடத்தும் வ்யஷ்டி ஸ்ருஷ்டியை (தேவமனுஷ்யாதி ஸ்ருஷ்டியை) விஸர்க்கமென்பர்கள். என்றும் எங்கும் தடைபடாத பகவான் சத்ருக்களை வென்று அனைவரிலும் மேன்மையுற்றிருக்கையே ஸ்தானமாம். அந்த பகவான் ஜகத்தைப் பாதுகாத்து அனுக்ரஹஞ் செய்கையேபோஷணமெனப்படும். பரமபுருஷனால் அனுக்ரஹஞ் செய்யப்பெற்ற ஸத்புருஷர்

களானமன்வந்தர அதிபதிகளின் தர்மப்ரஸங்கமே மன்வந்தர கதையாம். கர்மவாஸனைகளே ஊதிகளென்று கூறப்படுகின்றன. ஸ்ரீ பகவானுடைய அவதார சரித்ரங்களும், அவனைப் பணியும் ஸத்புருஷர்களைப்பற்றின பல வகை உபாக்யானங்களோடுகூடின ஸத்கதைகளும் ஈச்வர கதையாம். இந்த ஜீவாத்மா கர்ம சக்திகளுடன் ஸூக்ஷ்ம ப்ரக்ருதியில் மழுங்கி யிருக்கையே நிரோதமெனப்படும். இந்த ஜீவன் தேவாதி உருவங்களைப் பெற்று வெவ்வேருகத் தோற்றுந் தன்மையைத் துறந்து பாபங்களற்றிருக்கை முதலிய எட்டுக் குணங்கள் அமைந்த ஸ்வரூபத்தைப் பெறுகையே முக்தியெனப்படும். ஜகத்தின் உற்பத்தியும் ப்ரளயமும் எவனிடத்தினின்று உண்டாகின்றன வென்று சாஸ்த்ரங்களால் தெரியவருகின்றதோ, மற்றும், எவன் பரப்ரஹ்மமென்றும் பரமாத்மாவென்றும் சொல்லப்படுகிருனே, அவனே ஆச்ரயமெனப்படுவான். இந்தப் பரமபுருஷன், ஜீவனிடத்தில் உட்புகுந்து அவனுக்கு நியாமகனுயிருப்பான். ப்ரத்யக்ஷம் முதலிய ஜ்ஞானங்களுக்குக் காரணமான சக்ஷுராதி (கண் காது முதலிய) இந்த்ரியங்களுக்கு அபிமானி தேவதைகளாகிய ஸூர்யாதிகளுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும் இவனே. அறியுந்தன்மையுள்ள ஜீவன் அறிவுக்குக் காரணமான இந்த்ரியங்கள் ஆகிய இவ்விரண்டினும் விலக்ஷணங்களாகி ஆகாசாதி பூதங்களில் இருப்பவைகளுமான சப்தாதி விஷயங்களில் உட்புகுந்திருப்பவனும் இவனே. இவன் ஆத்மாவுக்கு அந்தராத்மாவாயிருக்கையால் ஆத்யாத்மிகனென்றும், இந்த்ரியாபிமானிகளான ஸூர்யன் முதலிய தேவதைகளுக்கு அந்தராத்மாவாயிருக்கையால்ஆதிதைவிகனென்றும், ஆகாசாதி பூதங்களின் குணங்களான சப்தாதிகளுக்கு அந்தராத்

மாவா யிருக்கையால் ஆதிபௌதிகனென்றும் கூறப்படுவான். ஜ்ஞாதாவான ஆத்மாவும் ஜ்ஞானகாரணமான இந்த்ரியங்களும் ஜ்ஞான விஷயங்களான சப்தாதிகளும் பகவத் ஸ்வரூபங்களே. கண் முதலிய இந்த்ரியங்கள் இல்லாவிடின் நாம் ஒரு விஷயத்தையும் அறிய வல்லரல்லோம். இந்த்ரியங்கள் இல்லாத பக்ஷத்தில் ஸமீபத்திலுள்ள வஸ்துவையும் நாம் அறியமாட்டோம். ஜீவாத்மாக்கள் கண் காது முதலிய இந்த்ரியங்களோடு ஸம்பந்தமுடைய வஸ்துக்களை அவ்விந்த்ரியங்கள் மூலமாகவே அறிய வல்லராவார்கள். இந்த்ரிய ஸம்பந்தத்திற்கிடமாகாத ஸூக்ஷ்ம வஸ்துக்களையும் இந்த்ரிய ஸம்பந்தத்திற்கு இடமாகக்கூடிய யோக்யதை யிருந்தும் மறைந்திருக்கையால் அதற்கிடமாகாத வஸ்துக்களையும் இந்த்ரியங்களைக் கொண்டும் அறிய வல்லரல்லர். மறையாத வஸ்துக்களையும் இந்த்ரியங்களின் உதவியில்லாமல் அறியவல்லரல்லர். பரமபுருஷனோவென்றால், இந்த்ரியங்களைக் கொண்டு அறிகிற ஆத்மாவையும் இந்த்ரியங்களையும் இந்த்ரியங்களால் அறியப்படுகிற வஸ்துக்களையும் ஸாக்ஷாத்காரஞ்செய்யும் திறமையுடையவன். அவன இந்த்ரியங்களின் உதவியில்லாமலே எல்லாவற்றையும் அறியவல்லவன். ஆகையால் இந்த்ரிய ஸம்பந்தத்திற்கு யோக்யமல்லாத ஸூக்ஷ்மவஸ்துக்களையும் அதற்கு யோக்யமாயிருந்தும் மறைந்திருக்கையால் அதற்கு இடமாகாத வஸ்துக்களையும் அவன் அறியவல்லவன. அந்தப் பரம புருஷன் அசேதனமான ப்ரக்ருதிக்கிடமான ஜீவாத்மாவுக்கும் ஆதாரமாயிருப்பவன். அவன் தனக்குத்தானே ஆதாரமாயிருப்பவன். அவனுக்கு மற்றொரு ஆதாரமில்லை. இங்ஙனம் புராண லக்ஷணங்களான ஸர்க்கம் முதல் ஆஶ்ரயம்வரையிலுள்ள பத்து அர்த்தங்களையும் உனக்கு விசதமாகச் சொன்னேன். இனி நான்முகன் தேவமனுஷ்யாதி

களைப் படைத்த விதஞ் சொல்லுகிறேன். கேட்பாயாக. பரமபுருஷன் அண்டத்தைப்படைத்து அதில் நான்முகனையும் படைத்து, அவனுக்கு அந்தராத்மாவாக உள்ளே புகுந்தான். அங்ஙனம் சதுர்முகஸ்வரூபனாகிய இந்தப் பரமாத்மா அண்டத்திற்குள்ளேயிருந்து அதைப் பிளந்துகொண்டு வெளியிலும் தடைபடாத ஸஞ்சாரமுடையவனாகி, அந்தப்பரமாத்மா தனக்கு ஓர் இருப்பிடம ஏற்படுத்திக்கொள்ள விரும்பித் தான் பரிசுத்தனாகையால் அங்ஙனம் பரிசுத்தமாகிய ஜலத்தை ஸ்ருஷ்டித்தான். தான் ஸ்ருஷ்டித்த அந்த ஜலத்தில் ஆயிரமாண்டுகள் வாஸஞ்செய்திருந்தான். ஆகையால் அந்தப் பரமபுருஷன் நாராயணனென்னும் ப்ரஸித்தி பெற்றான். நரனென்று பரமபுருஷனுக்குப் பேர். அவனிடத்தினின்று உண்டான ஜலம் நாரமென்று கூறப்படும். அந்த ஜலத்தை இருப்பிடமாகக் கொண்டிருந்தானாகையால் அவன் நாராயணனென்று பேர்பெற்றான். மஹத்தத்வம் முதல் பூமிவரையிலுமுள்ள த்ரவ்யமும் (பூதவர்க்கமும்)ஜீவனுடைய புண்ய பாபரூபமான கர்மமும் ஸத்வாதி குணங்களின் வைஷம்யத்திற்கு (ஏற்றக் குறைவுகளுக்கு)க் காரணமான காலமும் ப்ரக்ருதிக்குள்ள ஒன்று ஒன்றாக மாறுந்தன்மையும் அந்தப் பரமபுருஷனுடைய அனுக்ரஹத்தினால் இருக்கின்றன; அவன் உபேக்ஷிப்பானாயின் இருக்கமாட்டா. த்ரவ்யாதிகளின் ஸத்தை ஸ்திதி ப்ரவ்ருத்தி இவையெல்லாம் பகவானுடைய ஸங்கல்பத்தைப் பின்றொடர்ந்தவைகளே. இத்தகைய நாராயணன் ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரித்துச் சொல்லமுடியாத நாமரூபங்களுடையவைகளும் ஸூக்ஷ்மங்களுமான சேதனாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருக்கையால் ஒருவனேயாயிருந்தான். பிறகு தேவமனுஷ்யாதியான பல நாமரூபங்

களைப் பெற விரும்பித் தன்னைத் தான் அனுபவிக்கை யாகிற சயனத்தினின்று எழுந்து தனக்குச் சரீரமாயிருப்பதும் அழகியதும் சேதநாசேதன ஸ்வரூபமுமாகிய காரண த்ரவ்யத்தை, தன் ஸங்கல்பத்தால் மாயையெனப்படுகிற ப்ரக்ருதியின் குணமான ரஜோகுணம் நிறைந்த நான்முகனைப் படைத்து அவனுக்கு அந்தராத்மாவாயிருந்து மூன்றுவிதமாக (ஜ்ஞாதாவான ஆத்மா, ஜ்ஞான காரணமான இந்த்ரியங்கள், ஜ்ஞானத்திற்கு விஷயமான சப்தாதி விஷயங்கள் ஆகிய இம்மூன்று விதமாக)ப் படைத்தான். திக்கு முதலிய தேவதைகளால் தொடரப் பெற்ற பதினொரு இந்த்ரியங்களை அதிதெய்வமென்றும், ஜ்ஞாதாவான (அறியுந் தன்மையுடைய) ஆத்ம ஸமூஹத்தை அத்யாத்மமென்றும், பூமி முதலிய பூதங்களிலுள்ள கந்தம் முதலிய விஷயங்களை அதிபூதமென்றும் சொல்லுவார்கள். சேதநாசேதன ரூபமான காரணத்ரவ்யத்தை இங்ஙனம் அதிதெய்வமென்றும் அத்யாத்மமென்றும் அதிபூதமென்றும் மூன்றுவிதமாகப் படைத்தான். ஜ்ஞாதாவான ஆத்மாவைப் படைக்கையாவது ஆத்மாக்களுக்கு தேவாதிசரீரங்களை இயற்றிக் கொடுக்கையே. ஸமஷ்டி புருஷனாகிய நான்முகனுடைய தேஹத்திலிருப்பதும் பரமபுருஷனால் உட்புகுந்து தரிக்கப்பட்டதும் ஸமஷ்டி ரூபத்தினால் ஒன்றாயிருப்பதும் வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குக் காரணமுமான சேதநாசேதன த்ரவ்யத்தை, கரணங்கள் போக்தாக்கள் விஷயங்களென்று மூன்றுவிதமாகப் பிரித்து ஸ்ருஷ்டித்த விதத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸ்ருஷ்டி-ஸமஷ்டி ஸ்ருஷ்டியென்றும் வ்யஷ்டி ஸ்ருஷ்டியென்றும் இரண்டு வகைப் பட்டிருக்கும். ப்ரக்ருதி மஹத் அஹங்காரம் சப்த தன் மாத்ரை முதலிய தன்மாத்ரைகள் ஆகாசாதி பூதங்கள்

சப்தாதி விஷயங்கள் ஆகிய இவற்றை ஸ்ருஷ்டித்து ஆகாசம் முதலிய ஐந்து பூதங்கள் மஹத் அஹங்காரம் ஆகிய இவ்வேழையும் ஒன்றோடொன்று [1] ஒருவகையாகக் கூட்டி அண்டத்தைப் படைத்து அதில் ப்ரஹ்மதேவனை உண்டாக்கும் வரையிலுள்ள ஸ்ருஷ்டியை ஸமஷ்டி ஸ்ருஷ்டியென்பர்கள். இந்த ஸமஷ்டிஸ்ருஷ்டியைப் பரமபுருஷன் தானே நேரில் நடத்துகிறான். இதன் பிறகு ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாயிருந்து அவன் மூலமாய் நடத்தும் தேவமனுஷ்யாதி ஸ்ருஷ்டியை வ்யஷ்டி ஸ்ருஷ்டியென்பர்கள். அந்த ப்ரஹ்மாவுக்கு ஸமஷ்டி புருஷனென்றும் பேருண்டு. அந்த நான்முகன் ப்ராண வ்யாபாரத்தை (மூச்சு விடுவதையும் இழுப்பதையும்) நடத்திக்கொண்டிருக்கையில், அவனுடைய சரீரத்திற்குள்ளிருக்கிறதும் ஆகாயத்தின் கார்யமுமான வாயுவின் விசேஷமான ப்ராணனிடத்தினின்று ஓஜஸ் ஸஹஸ்ஸு பலம் என்கிற மூன்று தர்மங்கள் உண்டாயின. ஓஜஸ்ஸாவது ப்ரவ்ருத்தி ஸாமர்த்யம். ப்ரவ்ருத்தியாவது முயற்சி. ஸஹஸ்ஸாவது வேக ஸாமர்த்யம். பலமாவது தாரண ஸாமர்த்யம். இம்மூன்று தர்மங்களையுடையதும் அந்நான்முகனுடைய சரீரத்திலிருப்பதுமான ப்ராணனிடத்தினின்று ப்ராணிகள் அனைவரும் ஜீவித்திருப்பதற்கு ஹேதுவும் முக்யமுமாகிய ப்ராணன்கள் உண்டாயின. ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அந்த ப்ராணன் தன் வ்யாபாரத்தை நடத்திக்கொண்டிருக்கையில்தான் அதைத் தொடர்ந்தே மற்ற இந்த்ரியங்களும் தந்தமது வ்யாபாரத்தை நடத்திக் கொண்டிருக்கும்.

---

1. இதையே பஞ்சீகரணமென்று சொல்லுவர்கள். இவ்விஷயம் (290) ஆவது பக்கத்திலும் (ஸப்தீகரணமென்னும் க்ரமத்தில்) என்று கூறப்பட்டது. இதை (283) ஆவது பக்கத்தின் அடிக்குறிப்பில் விசதமாக விவரித்திருக்கிறோம். அங்குக் காண்க.

அந்த ப்ராணன் தன் வ்யாபாரத்தைத் துறந்து ஓய்கை யில் மற்ற இந்த்ரியங்களும் உடனே தந்தமது வ்யாபாரத் தைத் துறந்து ஓய்ந்து போய்விடும். மற்ற இந்த்ரியங்க ளெல்லாம் ராஜனைத் தொடர்ந்த ப்ருத்யர்கள் போல் ப்ராணனைத் தொடர்ந்திருக்கும். தேவமனுஷ்யாதி சரீ ரங்களிலுள்ள வ்யஷ்டி ப்ராணன்களும் நான்முகனு டைய சரீரத்திலுள்ள ஸமஷ்டி ப்ராணனுடைய ஸ்வபா வத்தை அனுஸரித்துத்தாமும் ஓஜஸ்ஸு ஸஹஸ்ஸு பலம் என்கிற மூன்று ஸாமர்த்யங்களும் அமையப்பெற்ற வைகளாகவே ப்ராணம் அபானம் முதலிய வ்யாபாரங்க ளைச் செய்கின்றன. தன் ஸாமர்த்யத்தை விளங்கச் செய் கின்ற முக்ய ப்ராணனால், நான்முகனுடைய ஜாடராக்னி ஜ்வலிக்கையில், பசி தாஹங்கள் உண்டாயின. அதனால் தண்ணீர் குடிக்கவேண்டுமென்னும் விருப்பமும் ஆஹா ரத்தை உட்கொள்ள வேண்டுமென்னும் விருப்பமும் உண்டாயின. பிறகு அந்த நான்முகனிடத்தினின்று வ்யஷ்டி சரீரங்களின் முகங்கள் உண்டாயின. அம்முகங் களினின்று தாலு (அடிநாக்கு) உண்டாயிற்று. அதில் ஜிஹ்வை (நாக்கு) உண்டாயிற்று. அதற்கு அதிஷ்டான தேவதையான வருணனும் ஜனித்தான. அந்நாக்கினால் அறியக்கூடிய காரம் புளிப்பு உப்பு முதலிய நாலுவித ரஸங்களும் அதினின்றே உண்டாயின. பிறகு எல்லையில் லாத மஹிமைகள் அமைந்த அந்தச் சதுர்முக ரூபியான பகவான் பேசவேண்டுமென்று இச்சை உண்டாகப் பெறு கையில், அவனுடைய முகத்தினின்று வாக்கென்கிற இந்த்ரியமும் அதற்கு அபிமானி தேவதையான அக்னி யும் அந்த வாகிந்த்ரியத்திற்கும் அதன் அதிஷ்டான தேவதையான அக்னிக்கும் வ்யாபாரமான சொற்களும் பிறந்தன. இந்த ப்ரஹ்மாவின் கண்டத்தில் வாயு நெடு

நேரம் தடைபட்டிருந்தது. அங்ஙனம் தடைபட்டிருந்த வாயு மிகுதியும் அசைந்துகொண்டிருக்கையில், அந்த ப்ரஹ்மாவினுடைய மூக்கின் த்வாரங்களினின்று நாஸிகைகள் (மூக்குகள்) உண்டாயின. அந்நான்முகன் வாஸனையைமோரவேண்டுமென்று இச்சிக்கையில், அந்த நாஸிகைகளினின்று க்ராணேந்த்ரியமும், அதன் அபிமானி தேவதையான வாயுவும் கந்தமும் ஸம்பவித்தன. தன்னிடத்தில் ப்ரகாசம் இல்லாதிருக்கையில், அப்பொழுது தன் தேஹத்தையும் மற்ற வஸ்துக்களையும் பார்க்க விரும்புகின்ற அந்தச் சதுர்முகனிடத்தினின்று கண்கள் உண்டாயின. அவற்றில் சக்ஷுஸ்ஸென்கிற இந்த்ரியமும் அதன் தேவதையான ஆதித்யனும் அக்கண்களால் அறியத்தகுந்த ரூபமென்கிற குணமும் தோற்றின. வேதங்களால் துதிசெய்யப்பெற்ற அந்தச் சதுர்முக ரூபியான விராட்புருஷன் அவ்வேதங்களின் சொற்களைக் கேட்க வேண்டுமென்று விரும்புகையில், அவனிடத்தினின்று ஆதாரமான காதுகளும் அபிமானி தேவதைகளான திசைகளும் ஶ்ரோத்ரமென்கிற இந்த்ரியமும் அதற்கு விஷயமான சப்தங்களும் உதித்தன. பின்பு வஸ்துக்களிலுள்ள மெதுவாயிருக்கை கடினமாயிருக்கை லேசாயிருக்கை பளுவாயிருக்கை உஷ்ணமாயிருக்கை குளிர்ந்திருக்கை ஆகிய இவைகளை அறியவேண்டுமென்று இச்சித்த வைராஜ புருஷனிடத்தினின்று த்வக்கென்னும் இந்த்ரியம் ஜனித்தது. அந்த த்வகிந்த்ரியத்திற்கு நுண்ணியதானமேல்தோலும்பருமனாகிய உள்தோலும் ஆதாரங்களாயின. அங்ஙனம்ஸ்தானபேதத்தினால் அந்தத்வகிந்த்ரியத்திற்கு விஷயங்களும் பேதித்தன. ஒன்றுக்குத் தினவும் மற்றொன்றுக்கு ஸ்பர்சமும் விஷயமாயின. விஷயம் பேதித்தமையால் அபிமானி தேவதைகளும்

பேதித்தன. ஒன்றுக்கு வ்ருக்ஷங்களும் மற்றொன்றுக்கு வாயுவும் அபிமானி தேவதைகளாயின. இங்ஙனம் ஒரே த்வகிந்த்ரியம் வெளித் தோலில் இருக்கும் ரோமங்களில் வ்யாபித்து ஓஷதிகளை (செடிகொடிகளை) தேவதையாகப்பெற்றுத் தினவை அறிவிப்பதாயிருக்கும். இதுவே உள்தோலில் இருந்துகொண்டு ஸ்பர்சத்தை அறிவிப்பதாகி வாயுவை அபிமானி தேவதையாகப் பெற்றிருக்கும். அத்தகைய த்வகிந்த்ரியம் உண்டாகையில் அதன் ஸ்தானமான ரோமங்களும் அதற்கு அபிமானி தேவதையான ஓஷதிகளும் உண்டாயின. அந்த த்வகிந்த்ரியத்தில் அதன் மற்றொரு அபிமானி தேவதையான வாயு உண்டாயிற்று. அவ்வாயு அவ்விந்த்ரியத்தின் மூலமாய் உள்ளும் வெளியிலும் ஸ்பர்சத்தை அறிவிக்குந் தன்மையது. பலவகைக் கார்யங்களைச் செய்ய விருப்பமுற்ற அந்த ப்ரஹ்மதேவனுடைய ஹஸ்தங்களினின்று கைகள் உண்டாயின. அந்தக் கைகளில் பாணியென்கிற இந்த்ரியமும் அதற்கு அபிமானி தேவதையான இந்த்ரனும் ஜனிக்கையில், அவ்விரண்டு கைகளிலும் இருப்பதான ஆதானமென்னும் (எடுக்கையென்னும்) கர்மமும் ஜனித்தது. நினைத்தபடி[1] கமனஞ் செய்ய இச்சித்த அந்தப்ப்ரஹ்மாவின் பாதங்களினின்று இரண்டு பாதங்கள் முளைத்தன. அந்தப் பாதங்களில் கமனசக்தியாகிற இந்த்ரியம் உண்டாயிற்று. அதற்கு ஸ்ரீவிஷ்ணுவே அதிஷ்டான தேவதையானான். மனிதர்கள் அந்தப் பாதத்திலுள்ள கமன சக்தியாகிற இந்த்ரியத்தின் அதிஷ்டான தேவதையான ஸ்ரீமஹாவிஷ்ணுவால் போதல் வருதல் முதலிய செயல்களைச் செய்து ஹவிஸ்ஸுக்கு வேண்டிய த்ரவ்யத்தை ஸம்பாதிக்கிறார்கள். பிறகு ப்ரஜையையும் (ஸந்ததியையும்) ஸ்த்ரீ

1. நடை.

ஸம்போகத்தினுலுண்டாகும் ஸுகத்தையும் ஸ்வர்க்காதி ஸ்தானங்களையும் விரும்புகின்ற அந்த ப்ரஹ்மாவினிடத்தினின்று ஆண்குறியும் பெண்குறியும் உண்டாயின. அதில் உபஸ்தமென்கிற இந்த்ரியம் உண்டாயிற்று. அதற்கு ப்ரஜாபதி அபிமானி தேவதையானுன். அதற்கு ஸம்போகமே செயல். ஆநந்தம் விஷயம். ஸ்த்ரீ ஸம்போகாதிகளால் விளையும் ஸுகம் அந்த உபஸ்தமென்கிற இந்த்ரியத்தையும் அதற்கு அபிமானி தேவதையான ப்ரஜாபதியையும் பற்றியிருக்கும். (அல்லது அந்த ஆண்குறி பெண்குறிகளைப் பற்றினதென்றுமாம். அன்றியே உபஸ்தமென்னும் இந்த்ரியம் அதன் ஸ்தானமான குறிகள் இவ்விரண்டையும் பற்றினதென்றுமாம்) புசித்த அன்னுதிகளின் அஸாரமான பாகத்தைவிட விரும்பின அந்த ப்ரஹ்மாவிடத்தினின்று குதம் (அபானம்) உண்டாயிற்று. அதில் பாயுவென்னும் இந்த்ரியம் தோற்றிற்று. அதற்கு அபிமானி தேவதையான மித்ரனும் உண்டானுன். மலங்களை வெளிப்படுத்தல் அந்தப்பாயுவென்னும் இந்த்ரியத்தையும் அதன் ஸ்தானமான குதத்தையும் பற்றினது. இந்த தேஹத்தைவிட்டு தேஹாந்தரத்தை வ்யாபிக்கவேண்டுமென்று இச்சித்த அந்த ப்ரஹ்மாவின் அபானஸ்தானமாகிய நாபியினின்று தேவமனுஷ்யாதிகளின் நாபித்வாரம் உண்டாயிற்று. அதில் அபானமென்கிற வாயு உண்டாயிற்று. அதற்கு அதிஷ்டான தேவதையான ம்ருத்யுவும் உண்டானுன். ப்ராணம் அபானம் ஆகிய இவ்விரண்டு வாயுக்களைப்பற்றின மரணமும் உண்டாயிற்று. (ப்ராண அபான வாயுக்களால்தான் தேஹம் தரித்திருக்கின்றது. அவ்விரண்டும் நீங்கும் பக்ஷத்தில் உடனே மரணம் உண்டாகுமென்று கூறுகிருர்கள்) அதன் பிறகு அன்னத்தையும் ஜலத்தையும் க்ரஹிக்கவேண்டுமென்று இச்சித்த

அந்த விராட்புருஷனுக்கு அன்னபானங்களை உட்கொள்ளுமிடமான குக்ஷியும் (வயிறும்)அன்னத்தை உட்கொள்ளுங் கருவியாகிய ஆந்த்ரமும் (குடலும்) ஜலத்தைப் பருகுங் கருவிகளாகியநாடிகளும் ஜனித்தன. அந்த நாடிகளில் நதிகளும் ஆந்த்ரத்தில் ஸமுத்ரங்களும் உதித்தன. பின்பு, ஆத்மஸ்வரூபத்தை மறைக்குந் தன்மையுள்ள ப்ரக்ருதியை நிரூபித்தறிய வேண்டுமென்று இச்சித்த அந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று கமலாகாரமான ஹ்ருதயமென்கிற அதிஷ்டானமும், அதில் மனமென்கிற இந்த்ரியமும்,அதன் அபிமானி தேவதையான சந்த்ரனும், ஸங்கல்பம் காமம் முதலிய அந்த மனத்தின் வ்யாபாரங்களும் உண்டாயின. த்வக்கென்று சொல்லப்படுவதும் உள்ளேயிருப்பதுமான கனத்த தோலும் அதற்குமேலிருக்கும் ஸூக்ஷ்மமான சர்மமென்கிற தோலும் மாம்ஸமும் உதிரமும் மேதஸ்ஸும் மஜ்ஜையும் எலும்பும் ஆகிய இவ்வேழு தாதுக்களும் பூமி ஜலம் தேஜஸ்ஸு ஆகிய இம்மூன்று பூதங்களால் ஏற்பட்டவை. ப்ராணன்களோவென்றால் ஆகாயம் ஜலம்காற்று இவைகளால் ஏற்பட்டவை. ஶப்தாதி குணங்கள் அஹங்காரத்தினின்று உண்டானவை. இந்த்ரியங்கள் அந்த ஶப்தாதி குணங்களினின்று உண்டானவை. காமம் ஸங்கல்பம் முதலிய ஸமஸ்த விகாரங்களுக்கும் மனமே இருப்பிடம். புத்தி விஜ்ஞானஸ்வரூபமாயிருக்கும் (மஹத்தத்த்வ ஸ்வரூபமாயிருக்கும்). இங்ஙனம் தேவமனுஷ்யாதியான சேதனுசேதனங்கள் உள்ளடங்கப்பெற்றதும் பூமி ஜலம் தேஜஸ்ஸு வாயு ஆகாயம் அஹங்காரம் மஹத்து அவ்யக்தம் ஆகிய எட்டு ஆவரணங்களால் வெளியில் சூழப்பட்டதுமான அண்டமாகிற பகவானுடைய ஸ்தூலரூபத்தை உனக்குச் சொன்னேன். இந்த பகவானுக்கு மற்றொரு உருவமும் உண்டு. அது, இந்த ஸ்தூலரூபத்தைக்

காட்டிலும் வேறுபட்டதும், மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பதும்,கண் முதலிய இந்த்ரியங்களால் க்ரஹிக்கமுடியாததும், ஶப்தம் ஸ்பர்ஶம் முதலிய குணங்களில்லாததும், தேவமனுஷ்யாதி ஶப்தங்களுக்கும் தேவமனுஷ்யாதி புத்திகளுக்கும் விஷயமாகாததும், உற்பத்தி நாசம், இவற்றின் இடையிலுள்ள நிலைமை ஆகிய இம்மூன்று அவஸ்தைகளற்றதும்,காலத்தினால் அளவிடக்கூடாமல் நித்யமாயிருப்பதுமாகிய முக்தாத்ம ஸ்வரூபமே. (முக்தாத்ம ஸ்வரூபமாவது பகவானுடைய அனுக்ரஹத்தினால் ஸம்ஸார ஸம்பந்தமற்று தேஹத்தைத் துறந்து ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்து பரமபதஞ் சேர்ந்த ஜீவாத்மாக்களின் ஸ்வரூபம். அது இத்தகையதாயிருக்கும். இதையே பகவானுடைய ஸூக்ஷ்மரூபமென்பர்கள். இதற்கு அமூர்த்தமென்றும் பரமென்றும் பேருண்டு. முன்சொன்ன ஸ்தூலரூபத்திற்கு மூர்த்தமென்றும் அபரமென்றும் பேருண்டு) இங்ஙனம் நான் பகவானுடைய ஸ்தூலரூபத்தையும் ஸூக்ஷ்மரூபத்தையும் நன்றாக விடுத்துச் சொன்னேன்.ஜ்ஞானிகள் இந்த ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபங்களிரண்டையும் த்யானிக்கத்தகுந்த ஶுபாஶ்ரயமாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். ஏனென்னில், இவ்விரண்டு ரூபங்களும் மாயாஸம்பந்தமுடையவைகள். மாயையாவது அசேதனமான ப்ரக்ருதி. இவ்வுருவங்களில் ஸ்தூலரூபம் தேவமனுஷ்யாதி சேதனாசேதன ஸ்வரூபமாகையால் ஹேயமான (தோஷங்களுக்கிடமான) ப்ரக்ருதியின் ஸம்பந்தமுடைய தென்பதில் ஸந்தேஹமில்லை. முக்தாத்ம ஸ்வரூபம் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றதேயாயினும் யோகத்தில் முயற்சி செய்யுமவர்களுடைய நெஞ்சுக்கு விஷயமாகாதது. யோகம் கைபுகுந்த யோகிகளால் த்யானிக்கத் தக்கதேயன்றி யோகத்தில் முயன்றவர்களால் அதை த்யானிக்கமுடியாது.

மற்றும், அப்பொழுது ப்ரக்ருதியின் ஸம்பந்தமறப் பெற்றிருப்பதேயாயினும் அதற்கு முன்பு ப்ரக்ருதி ஸம்பந்தத்தோடிருந்ததாகையால் அந்த முக்தாத்மாக்களுக்கு ஜ்ஞானம் நெடுநாள் மறைந்திருந்து அப்பொழுது பகவானுடைய அநுக்ரஹத்தினால் வந்ததேயன்றி என்றும் மாறாதிருப்பதன்று. ஆகையால் அந்த முக்தாத்ம ஸ்வரூபமும் யோகிகள் த்யானிக்கத்தகுந்த சுபாஶ்ரயமாகமாட்டாது. பகவானுடைய ஸ்வரூபத்தை உபாஸிக்கவேண்டுமென்னில், நெடுநாள் ஶப்தாதி விஷயங்களில் பழகின மனம் ஸ்வாதீனப்படாதாகையால் முதலில் பகவானுடைய உருவங்களை த்யானித்து அதை க்ரமத்தில் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு அதன்பிறகு பகவத் ஸ்வரூபத்தில் செலுத்தவேண்டும். பகவானுடைய உருவங்களோவென்னில், ஸ்தூலமென்றும் ஸூக்ஷ்மமென்றும் திவ்யமங்கள விக்ரஹமென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும். இம்மூன்று உருவங்களில் ஸ்தூல ஸூக்ஷ்ம உருவங்களிரண்டும் அசுபங்களாகையால் த்யானத்திற்கு ஆலம்பனமாக மாட்டாவென்று கூறப்பட்டன. ஆகையால் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹமே த்யானத்திற்கு ஆலம்பனமாம். இதுவே ஶுபாஶ்ரய மெனப்படும். ஶுபாஶ்ரயமாவது, மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்டாமல் இழுத்து அம்மனத்தின் மலங்களைப் போக்கிச் சுத்தப்படுத்துந் தன்மையுள்ள பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹமே. இது ராமக்ருஷ்ணாதி ரூபமாய்ப் பலவாறாயிருக்கும். மன்னவனே! ப்ரஹ்மதேவனால் படைக்கப்பெற்ற இந்த ப்ரஹ்மாண்டம் முழுவதும் பரமபுருஷனுடைய உருவம் எப்படியாமென்று நீ சங்கிக்கவேண்டாம். பரமபுருஷனே ப்ரஹ்மதேவனுக்கு அந்தர்யாமியாயிருந்து இதைப் படைத்தானென்று முன்னமே மொழிந்தேன். அவன்

இந்த ஜகத்தையெல்லாம் தனக்குச் சரீரமாகக்கொண்டவன். ஆகையால் இதிலுள்ள ஸமஸ்த வஸ்துக்களும் அவனே. இவற்றின் நாமங்களான சப்தங்களும் அவனே. அவன் ப்ரஹ்மதேவனுக்கு அந்தராத்மாவாகி அவனைச் சரீரமாகக்கொண்டு தேவ மனுஷ்யாதி நாமங்களையும் தேவ மனுஷ்யாதி உருவங்களையும் அவற்றின் செயல்களையும் படைக்கின்றான். அவன் ஜீவனைப்போல் கர்மத்திற்கு உட்பட்டு இங்ஙனம் செய்பவனல்லன். இந்த ஜகத்தை படைப்பதற்கு வேறொரு ஸஹாயத்தையும் எதிர்பார்ப்பவனல்லன். தன் ஸங்கல்பத்தினாலேயே இவையெல்லாவற்றையும் நடத்துந் திறமையுடையவன். அவன் தேவாதி ரூபங்களையும் அந்தந்த நாமங்களையும் அவரவர்க்குரிய செயல்களையும் தனித்தனியே படைத்த விதம் சொல்லுகிறேன் கேட்பாயாக. ப்ரஜாபதிகள் மனுக்கள் தேவர்கள் ரிஷிகள் பித்ருகணங்கள் ஸித்தர் சாரணர் கந்தர்வர் வித்யாதரர் அஸுரர் குஹ்யகர் கின்னரர் அப்ஸரமடந்தையர் யக்ஷர் கிம்புருஷர் ப்ராஹ்மி முதலிய மாத்ருகணங்கள் ராக்ஷஸர் பிசாசர் ப்ரேதங்கள் பூதங்கள் விநாயகர் கூஷ்மாண்டகணங்கள் உன்மாதகணங்கள் பேதாளங்கள் யாதுதானர் க்ரஹங்கள் பக்ஷிகள் ம்ருகங்கள் பசுக்கள் வ்ருக்ஷங்கள் மலைகள் ஸர்ப்பங்களாகிய இவற்றையெல்லாம் தனித்தனியேபடைத்து அவற்றிற்குத் தனித்தனியே நாமங்களையும் செயல்களையும் கற்பித்தான். மற்றும், ஜங்கம ஸ்தாவரங்களென்று இருவகைப்பட்டவைகளும் ஜராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்ஜம் என்று நான்கு வகைப்பட்டவைகளும் ஜலம் நிலம் ஆகாயம் இவற்றில் வாஸஞ் செய்பவைகளுமாகிய பற்பல வஸ்துக்களையும் அவற்றின் நாமங்களையும் செயல்களையும் படைத்தான். எல்லாவற்றையும் ஒரே விதமாக ஏன் படைக்க

வில்லையென்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. க்ஷேத்ரஜ்ஞர்களின் புண்ய பாபரூபமான கர்மங்களின் பலன்கள் உத்தமங்களாயும் அதமங்களாயும் மத்யமங்களாயுமிருக்கையால், இங்ஙனம் பலவாறு ஸ்ருஷ்டிக்க வேண்டிவந்ததேயன்றி வேறில்லை. ஆத்மாக்களின் கர்மங்கள் விசித்ரமாயிருக்கையாலே அவற்றின் பலன்களும் விசித்ரமாயின. ஆத்மாக்கள் தாம் செய்த கர்மங்களுக்குத் தகுந்தபடி தேவ மனுஷ்யாதியான பலவித உருவங்களையும் நாமங்களையும் செயல்களையும் பெறுகிறார்களன்றி, ஈச்வரன் பக்ஷபாதத்தினால் பலவாறு படைக்கிறானல்லன்; ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற இம்மூன்று குணங்களாலும் கர்மங்களின் கதிகளும் மூன்று வகைப் பட்டிருக்கும். அவற்றில் ஸாத்த்விக கர்மத்தின் பலன், தேவனாகப் பிறத்தல். இது உத்தம கர்மத்தின் கதி. ஸத்த்வகுணம் ஸுகத்தை விளைக்குந் தன்மையதாகையால்ஸுகானுபவத்திற்கிடமானதேவஜன்மம்ஸாத்த்விகமான கர்மத்தின் பலன். ராஜஸ கர்மத்தின் பலன், மனுஷ்யனாகப் பிறத்தல். தாமஸ கர்மத்தினால் பசுபக்ஷிகளாகவும் ஸர்ப்பம் பூச்சி புழு முதலியவைகளாகவும் ஸ்தாவரங்களாகவும் பிறத்தல். இந்த மூன்று ஸ்வபாவங்களில் ஒவ்வொன்றும் மற்ற இரண்டு ஸ்வபாவங்களால் தொடரப்பெற்று மூன்று வகைப்பட்டிருக்கும். ரஜோ குணமுடைய மனிதர்களே கேவல ரஜோ குணமுடையவரென்றும், ஸத்த்வங் கலந்த ரஜோகுணமுடையவரென்றும் தமஸ்ஸு கலந்த ரஜோகுணமுடையவரென்றும் மூன்று வகைப்பட்டிருப்பர். இங்ஙனமே ஸாத்த்விகராம் தேவர்களும் தாமஸங்களான பசு பக்ஷ்யாதிகளும்ஸ்தாவரங்களும் மூன்றுவகைப்பட்டிருக்கு மென்றுணர்க கர்மங்களின் பலன் எவ்வகைப்பட்டிருக்குமோ அதையும் உனக்கு மொழிந்தேன். இங்ஙனம் பரமபுருஷன் ப்ரஹ்

மாவுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டிக்கும் விதத்தைச் சொன்னேன்; இனி அங்ஙனம் படைத்த ஜகத்தையெல்லாம் அவன் நேரே பாதுகாக்கும் விதத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. உலகங்களைப் படைக்குந் தன்மையுள்ள அந்த பகவான் திர்யக் ஜாதிகளில் பன்றி மீன் ஆமை அன்னம் முதலிய அவதாரங்களாலும் மனிதர்களில் ராம க்ருஷ்ணாதி அவதாரங்களாலும் தேவதைகளில் வாமனன், ஸுயஜ்ஞன் முதலிய அவதாரங்களாலும் இந்த ஜகத்தையெல்லாம் பரிபாலனஞ் செய்து தர்மத்தைச் சரீரமாகக்கொண்டு இதை வளர்க்கின்றான். இந்த பகவான் காலாக்னிருத்ரனுக்கு அந்தர்யாமியாகி அவனைச் சரீரமாகக் கொண்டு தான் படைத்த இந்த ஜகத்து முழுவதையும் கல்பத்தின் முடிவில், காற்று மேகங்களின் வரிசையை யழிப்பதுபோல், ஸம்ஹாரஞ்செய்கிறான். இங்ஙனம் படைக்கை முதலிய ஸ்வபாவங்களோடுகூடி ஜ்ஞானாதி குணங்கள் மிகுதியும் நிறைந்தவனுமாகிய பகவானுடைய உண்மையை உனக்கு நன்றாக உரைத்தேன். ப்ரஹ்மஜ்ஞானிகள் அவனை அங்ஙனம் சேதனாசேதனஸ்வரூபனாகப் பார்க்கமாட்டார்கள்; ஆனால் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனாக அறியுந்திறமையுடையவர். ஜீவனுக்கு ஜ்ஞானாதி குணங்களின் நிறைவு இல்லாமையால் அவனுடைய செயலெல்லாம் கர்மத்தைப்பற்றியிருக்கும். பரமாத்மாவின் கார்யமெல்லாம் கர்மத்தைப் பற்றினதல்லாமல் கேவலம் ஸங்கல்பத்தைப் பற்றினதாயிருக்கும். 'ஸ்ருஷ்டிக்கப்படுபொருளும் அவனே' ஸ்ருஷ்டிகர்த்தாவும் அவனே யென்கிறாய். அவன் உற்பத்தியில்லாதவனென்றும் ஆதியந்தமில்லாதவனென்றும், அவன் ஜகத்தைப் படைப்பவனாயினும் ஸ்ருஷ்டிக்கு அவன் கர்த்தாவல்லனென்றும் ஒன்றோடொன்று பொருந்தாமல்சொல்லுகிறாய். இதுவென்?'

என்கிறாயோ? சொல்லுகிறேன் கேட்பாயாக. பரமாத்மா ஜகத்தைப் படைப்பதும் வளர்ப்பதும் அழிப்பதுமாகிய இந்த வ்யாபாரங்களைச் செய்யும்பொழுது, பிறத்தல் வளர்தல் அழிதல் ஆகிய இவை அந்தப் பரமாத்மாவுக்கும் உள்ளவைகளே. ஆயினும், அவை அவனுக்கு இயற்கையில் ஏற்பட்டவையல்ல. ஆனால், எப்படியென்னில், ஸ்ருஷ்டிக்கப்படுவதும் பாதுகாக்கப்டுவதும் அழிக்கப்படுவதுமாகிய உலகங்களுக்கு அவன் அந்தராத்மாவாயிருக்கையால் அவற்றின் மூலமாய் அவனுக்கும் உண்டென்கிறோமன்றி அவை அவனுக்கு ஸ்வாபாவிகங்களல்ல. அவன் இயற்கையில் உற்பத்தியில்லாதவனே. தேவ மனுஷ்யாதி பூதங்களுக்கு அந்தராத்மாவாயிருக்கையால் அவற்றின் மூலமாய் அவனும் பிறக்கிறானென்பர்கள். ப்ரக்ருதியினால் ஜீவாத்மாக்களிடத்தில் ஏறிடப்பெற்றதும் ப்ரக்ருதியின் பரிணாமத்தினாலேற்பட்ட இந்த்ரியங்கள் சரீரம் ஆகிய இவற்றை எதிர்பார்ப்பதுமாகிய ஜீவாத்மாக்களுக்குள்ள கர்த்ருத்வம் (கர்த்தாவாயிருத்தல்) பரமாத்மாவுக்கில்லை. இதைப் பற்றியே 'அவன் கர்த்தாவன்று' என்பது பொருந்துகின்றது. ஜீவனைப்போல் ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தினால் வந்த கர்த்ருத்வம் இல்லையென்னும் கருத்தினால் 'அவன் கர்த்தா அல்லன்' என்கிறார்கள். ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களைச் செய்கிறானென்னுங் கருத்தினால் அவனே ஸ்ருஷ்டிகர்த்தாவென்றும ஸம்ஹாரகர்த்தாவென்றும் சொல்லுகிறார்கள். ஆகையால் இரண்டும் அவனிடத்தில் உண்டு. இங்ஙனம் விரோதமில்லை. ப்ரபஞ்சத்தைப்போல் கர்மத்தினால் விளையும் ஜன்மாதிகள் பரமாத்மாவுக்குக் கிடையா; அவனுடைய ஸங்கல்ப ஜ்ஞானத்தினால் விளையு மவைகளே.

கர்மத்தினால் வருகிற கர்த்ருத்வம் தனக்கில்லை யென்று காண்பிக்கும் பொருட்டே தனது ஸங்கல்பத்தினால் தேவ மனுஷ்யாதி ஜன்மங்களையும் அவரவர் செயல்களையும் ஏற்றிட்டுக்கொண்டு அவதாரங்களைச் செய்து அமானுஷ கார்யங்களால் தான் பரமபுருஷனென்பதை வெளியிடுகிறான். இப்பொழுது உனக்கு ப்ரஹ்மாவினுடைய மஹா கல்பத்தையும் அவாந்தர கல்பத்தையும் ஸூசனையாகச் சொன்னேன். மஹத்தத்த்வம் முதல் பூமி வரையிலுமுள்ள ப்ராக்ருத ஸ்ருஷ்டிகளும், பூமி முதலியவற்றின் விக்ருதிகளால் ஏற்பட்ட வைக்ருத ஸ்ருஷ்டியின் ப்ரகாரங்களும் ஆகிய இவையெல்லாம் இந்த மஹா கல்பத்தில் போல் மற்ற மஹா கல்பங்களிலும் ஒத்திருப்பவைகளே. இனிமேல், காலத்தின் ஸூக்ஷ்ம ஸ்தூல பரிமாணங்களையும் கல்பத்தின் லக்ஷணத்தையும் அவாந்தர கல்பத்தையும் மன்வந்தராதி ஸ்வரூபத்தையும் உள்ளபடி விவரித்துச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

சௌனகர் சொல்லுகிறார் :—ஓ ஸூதரே! பகவானிடத்தில் பக்தியுடையவர்களில் சிறந்தவரும் ப்ராணிகளின் உற்பத்தி ப்ரளயம் வருதல் போதல் முதலியவற்றையெல்லாம் நன்குணர்ந்தவருமாகிய இந்த விதுரர், மிகுதியும் துறக்கமுடியாத பந்துக்களையும் துறந்து பூமியிலுள்ள தீர்த்தங்கள் முழுவதும் திரிந்தாரல்லவா? அத்தகையரான விதுரருக்கும் மைத்ரேய முனிவர்களுக்கும் எவ்விடத்தில் இந்த வேதாந்த விஷயமான ஸம்வாதம் நடந்தது? விதுரரால் வினவப்பெற்ற அந்த மைத்ரேய பகவான் அவ் விதுரருக்கு எதைது மொழிந்தாரோ அந்தத் தத்த்வத்தையும், நல்லியற்கையுடைய ஸூதரே! மற்றுமுள்ள அந்த விதுரருடைய வ்ருத்தாந்தத்தையும், அவர் பந்துக்களைத் துறந்தமைக்குக் காரணம் என்னவோ அதையும், அவர் மீண்டு வந்ததையும் எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்றார்.

ஸூதர் சொல்லுகிறார்:—ராஜாவான பரீக்ஷித்தினால் வினவப்பெற்ற சுக மா முனிவர் என்னென்ன மொழிந்தாரோ, அதையெல்லாம் மன்னவனுடைய கேள்விகளைத் தொடர்ந்து நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் கேட்பீர்களாக. நீங்கள் வினவினதையே பரீக்ஷித்து மன்னவனும் சுகரைக் குறித்துக் கேட்டான். ஆகையால் அந்தச் சுகர் சொல்லும் ஸமாதானமே உங்கள் கேள்விகளுக்கும் ஸமாதானமாகும். அதைச் சொல்லுகிறேன், கேட்பீர்களாக. பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

த்விதீய ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

